த.பா.நி. (க.வெ.) வரிசை எண்—293

# ஆங்கிலப் பாராளுமன்றம்

(பட்டப்படிப்புக்குரியது)

(திருத்தப்பட்ட பாடத் திட்டத்தின்படி வெளியிடப்படுகிறது)

ஆசிரியர்
வீ. கண்ணையா, எம்.ஏ.,
அரசியல் பேராசிரியர்,
அரசினர் கலைக் கல்லூரி,
கோயம்புத்தூர்.






தமிழ்நாட்டுப் பாடநூல்
நிறுவனம்

*First Edition — March, 1972*

T.N.T.B.S. (C.P.) No. 293



**ENGLISH PARLIAMENT**

V. KANNIAH

**Net Price Rs.**

(No discount)

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University Level, of Government of India in the Ministry of Education and Social Welfare.'

*Printed by*

M/s. INIYAN PRINTERS,
9. Rundals Road,
MADRAS—7.

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி-உள்ளாட்சித்துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினேராண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது. இவ் வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெரு முயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், பௌதிகம், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'ஆங்கிலப் பாராளுமன்றம்' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 293ஆவது வெளியீடாகும். இதுவரை 328 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின் உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

பக்கம்

# 1. பாராளுமன்றத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

## முன்னுரை

பிரிட்டிஷ் அரசியலமைப்பு முன் கூட்டியே வரைந்துகொண்ட ஒரு திட்டப்படி உருவாகியதன்று. மாறிவரும் தேவைகளுக்கும் சூழ்நிலைகளுக்கும் ஏற்ப உருவாகிய ஓர் அரசியலமைப்பாகும். இருப்பினும், சாக்சானிய காலத்திய மக்களாலும் அரசராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட இரு கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு இவ்வரசியலமைப்பு உருவாயிற்றெனலாம். இவை :

(1) சட்டங்களை இயற்றுதல், வரிகளை விதித்தல் போன்ற முக்கியமானவைகளில், முதலில் அறிவுரை பெறுமல் அரசர் செயல்படலாகாது.

(2) இவ்வறிவுரை அளிப்பவர்களை அழைப்பதற்கான செயல் தொடக்க உரிமை அரசரிடமே நிலைபெறவேண்டும்.

முதல் கருத்தை ஏற்றுக்கொண்டதன் பயனுக இங்கிலாந்தில் வல்லாட்சி தவிர்க்கப்பட்டது. மக்களின் இசைவின்றி வரி விதிக்கலாகாதென்பதும், இதையொட்டி வளர்ச்சி பெற்ற பாராளுமன்றச் சட்ட இறைமையும் இக் கருத்தின் அடிப்படையில் வளர்ச்சி பெற்றனவேயாகும். அரசருக்கு அறிவுரை அளிக்கும் பொறுப்பை இரண்டாவது கருத்து முற்றிலும் அரசாங்கத்திற்குரியதாக ஆக்குகிறது. அரசாங்கத்தின் இப் பணியைப் பாராளுமன்றம் கவனிக்கவேண்டும்; ஆராயவேண்டும்; கட்டுப்படுத்தவும் வேண்டும். இவ்விரண்டு கருத்துகளும் எவ்வாறு வளர்ச்சியடைந்தனவென்பதைப் பார்க்கலாம்.

முக்கியமானவைகளைப்பற்றிச் சாக்சானிய அரசர்கள் மூதறிஞர்களைக் கலந்து கொண்டார்கள். முதலாம் வில்லியம் தம் படை

மானிய அமைப்பைப் பயன்படுத்திக்கொண்டு இவ் வழக்கத்தை வளர்த்தார். இங்கிலாந்தில் இருந்தபொழுது வில்லியம் ஓர் ஆண்டில் மூன்று சமயங்களில் மூன்று இடங்களில் முடி சூட்டிக் கொள்வது வழக்கம். இச் சமயங்களிலும் இடங்களிலும் அதி மேற்றிராணியார்களும் (Archbishops), மேற்றிராணியார்களும் (Bishops), குருமட முதல்வர்களும் (Abbots), கோமக்களும் (Earls), குத்தகைக்காரர்களும், வீரத்திருத்தகைகளும் (Kinghts) அரச ருடன் இருந்தனர். இருப்பினும், சிலரை அரசர் தனித்தனியாக அழைப்பதும் வழக்கமாக இருந்ததை மகா சாசனத் (Magna Carta) திலிருந்து அறிய முடிகிறது. மற்றவர்களையும் கலந்துகொண்டு அரசர் செயல்படவேண்டுமென்னும் முறையை இக் கூட்டங்கள் வலியுறுத்தின வென்பதைத் தவிர இதில் சிறப்பொன்றுமில்லை. சில சமயங்களில், இரண்டாம் ஹென்றி செய்ததுபோல், பேரவை யைக் கூட்டினாலும் சமயத்திற்கேற்ப, இடத்திற்கேற்ப, செய்து முடிக்கவேண்டிய வேலைக்கேற்ப, அறிவுரையாளர்களைத் தெரிவு செய்துகொண்டு அரசர்கள் செயல்பட்டு வந்திருக்கிறார்கள்.

நாடு முழுவதற்கும் பிரதிநிதிகளாகப் பெரும் நிலக் குத்தகைக் காரர்கள் இப் பேரவையில் இடம் பெற்றனர் என்று சொல்வதற் கில்லை. அடுத்தடுத்து வந்த அரசர்கள் போர்ச்செலவை ஈடு செய்யப் புதிய வருவாயைத் தேடவேண்டிய கட்டாயம் ஏற் பட்டது. பெருமக்களிடமிருந்து புதிய வரிகள் விதிக்கப்பட்ட தோடன்றிச் சுயேச்சைக் குடியானவர்களையும் பாதிக்கும் வகையில் வரிவிதிப்பு முறை விரிவாக்கப்பட்டிருந்தது. இச் செயல் சட்ட முரணாகும். குடிமக்களின் இசைவின்றி வரம்பு மீறிய நிலமானிய உதவித் தொகைகளை அரசர் திரட்டுகிறார் என்பதைப் பெருமக்க ளின் குறைபாடுகளில் ஒன்றாக மகா சாசனம் குறிப்பிட்டுள்ளது. வரி விதிப்பை விரிவுபடுத்தப் பிரதிநிதித்துவ முறை தேவை யாயிற்று.

இதற்கொப்பான ஒரு செயலை இரண்டாம் ஹென்றி செய் தார். மூன்றாவது சிலுவைப் போரின் செலவுகளை ஈடு செய்ய 1188-ல் தனிப்பட்ட உடைமைகளின்மீது ஒரு வரி (Saladin tithe) விதித்தார். வரிவிதிப்பின் மதிப்பீட்டை ஏற்க மறுத்தோரின் குறைகளை தலத்தில் உள்ளவர்களில் இருந்து தெரிவு செய்யப்பட்ட ஓர் அறங்கூறும் அவை முடிவு செய்தது. வரி செலுத்துவோரின் பிரதிநிதிகளைப் பேரவைக்கு அனுப்பிவைக்கும் முயற்சியில் இதை முதல் நடவடிக்கையாகக் கொள்ளலாம். கோட்ட நீதிமன்றத்தில் (Shire Court) தெரிவு செய்யப்பெற்ற நான்கு வீரத்திருத்தகைகள் ஒவ்வொரு மாவட்டத்திலிருந்து வெஸ்ட்மின்ஸ்டருக்குச் (West- minster) சென்றனர். 1254-ல் மூன்றாம் ஹென்றி காஸ்கெனியில்

ஃபிரெஞ்சுக்காரர்களோடு போரிட்டுக்கொண்டிருக்கையில் மக்களிடமிருந்து உதவிப் பணம் கேட்டபொழுது நிலை உறுதியாயிற்று. அரசருக்கு உதவப் பெருமக்கள் உறுதியளித்தனர். ஆனால் பேருரிமைச் சாசனத்தை அரசர் பற்றி நிற்கவேண்டுமென்பதையும் மேலதிக வரிவிதிப்பிற்கு மக்களின் இசைவைப் பெறவேண்டுமென்பதையும் இவர்கள் அரசருக்கு அறிவுறுத்தினார்கள். அரசருக்குப் பண உதவியளிக்க அதிமேற்றிராணியார், சமயக் குருமார்களின் கூட்டத்தை அழைத்தார். 'நம் பெரும் தேவைக்கு இவர்கள் எவ்வித உதவித் தொகையை அளிக்க விரும்புகிறார்கள் என்பதை, இன்று கூடுமாறு நம்மால் அழைக்கப்பட்டுள்ள வீரத்திருத்தகைகளோடு (Knights) கூடி ஆராய', ஒவ்வொரு கோட்டத்திலிருந்தும், தலத்திலேயே தேர்ந்தெடுக்கப்பெற்ற தனிப்பட்ட வீரத்திருத்தகைகளை மாவட்ட முதன்மை அதிகாரி (Sheriff) அனுப்பவேண்டும். 'கோட்டங்களின் சார்பில், குறிப்பிட்ட நாளில் நம் பேரவைக்குத் தெளிவாக விடையளிக்க வசதியாக வீரத் திருத்தகைகளுக்கும் குடியானவர்களுக்கும் அரசருடைய தேவைகளைப் பற்றி மாவட்ட முதன்மை அதிகாரி விளக்கவேண்டும். பேரவையில் வீரத்திருத்தகைகள் கலந்துகொண்டது ஒரு தாற்காலிகக் கூட்டமாதலால் இது பாராளுமன்றமாகாது. இருப்பினும், நிதிக் காரணங்களுக்காகக் கோட்டத்தின் பிரதிநிதிகள் அழைக்கப்பட்டது மட்டுமன்றி, இத்தகைய கூட்டங்களுக்கு இது ஒரு முன் நிகழ்வை ஏற்படுத்தியுள்ளதென்பது சிறப்பாகும். பதினான்காம் நூற்றாண்டுவரையில் இத்தகைய பிரதிநிதிகள் கூட்டப்படவில்லை.

### தோற்றம்

'பார்லர்' (Parler) என்ற ஃபிரெஞ்சுச் சொல்லில் இருந்து பார்லிமென்ட் (Parliament) என்ற ஆங்கிலச் சொல் வழக்கில் வந்தது என்பர். இச் சொல் ஃபிரெஞ்சு மொழியில் 'பேசுதல்' என்னும் பொருளைத்தான் குறிப்பிட்டது. பதினோராம் நூற்றாண்டுவரை பாராளுமன்றம் பிரதிநிதித்துவத்தோடு எவ்விதத் தொடர்பும் கொண்டிருக்கவில்லை. சிறிது காலத்திற்குப் பின், 1245-ல் ஃபிரான்சு நாட்டின் அரசர் ஒன்பதாம் லூயிக்கும் போப்பாண்டவர் நான்காம் இன்னொசென்ட் (Innocent IV)-க்கும் இடையில் நடைபெற்ற பெருமிதமான மாநாடுகளை விவரிக்கும் வகையில் இச் சொல் பயன்படுத்தப்பட்டது. முதலாம் எட்வர்டு (Edward I) காலத்தில் இச் சொல் ஒரு செயலைக் குறிப்பிட்டதேயன்றி ஒரு குழுவினரைக் குறிப்பிடவில்லை. அரசர் ஓர் ஆயத்தோடு நடத்திவந்த ஒருவகையான 'பேச்சை'த்தான் முதலில் இச் சொல் குறிப்பிட்டது. இவ்வாறு, படிப்படியாகத்தான் இச் சொல்லுக்கு அரசர் ஆணையால் ஒன்றாகக் கூடுகின்ற ஒரு குழுவினர்

என்ற பெயர் ஏற்பட்டது. 14ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் பொதுவான அலுவல்களுக்காக அரசரால் முறைப்படி கூட்டப் பட்ட அரசவை (King's Council) பாராளுமன்றமாக இருந்திருக்க வேண்டுமெனத் தெரிகிறது. சட்டமியற்ற மக்களின் பிரதிநிதிகள் அக் காலத்தில் பாராளுமன்றத்தில் இருக்கவேண்டுமென்பதில்லை. பாராளுமன்றத்திற்கழைக்கப்பட்ட வீரத்திருத்தகைகள் (Knights) வந்து கூடுவதற்குமுன் அரசரின் அழைப்புக் கட்டளை பிறப்பிக்கப் பெற்றது. 1305-ல் அழைக்கப்பட்ட பேரவை தொடர்ந்து பாராளுமன்றமாக மட்டுமன்றி முழுப் பாராளுமன்றமாகவும் இருந்ததெனலாம். ஏனெனில், அரசவையில் இடம் பெருத உறுப் பினர்களைத் தவிர அரசகுமாரர்கள், பெருமக்கள், மேற்றிராணி யார்கள், கோட்டத்திலிருந்து வந்த வீரத் திருத்தகைகள், நகரி னர்கள் (Burgesses) ஆகியோர் இப் பேரவையில் இடம் பெற் றிருந்தனர். பாராளுமன்றமில்லாமல் அவைகள் (Councils) இருந் திருக்கின்றன; ஆனுல், அவைகள் இல்லாத பாராளுமன்றங்கள் இருந்ததில்லை. 11ஆம் நூற்றுண்டில் அரசரும் அவரது கவுன்சிலர் களும் பாராளுமன்றமாக அமர்ந்துகொள்ளலாம். ஆனுல், இவ் வவைக் (Council) கூட்டங்களில் கோட்ட, நகரப் பிரதிநிதிகள் கலந்துகொண்டால் அப்படிக் கூடும் அப் பேரவை பாராளுமன்ற மாகிவிடும். கோட்டம், நகரம் ஆகியவைகளின் பிரதிநிதிகள் இதில் கலந்துகொள்ளவில்லை யென்ருலும் அவைக் கூட்டத்தைப் பாராளுமன்றமாகக் கருதி வந்தனர்.

## பிரதிநிதித்துவக் கருத்தின் வளர்ச்சி

பாராளுமன்ற உயர்நீதிமன்றம் (The High Court of Parlia- ment) என்பது பார்லிமென்டின் முழுப் பெயராகும். பாராளு மன்றத்தின் அரசவைக் கூட்டத்தை உயர் நீதிமன்றமென்பர். கோட்டம், நகரத்தொகுதி ஆகியவற்றிலிருந்து தகவலைப்பெற இவற்றின் பிரதிநிதிகள் நீதிமன்றத்திற்கு வருமாறு அழைக்கப் பட்டனர். இப் பகுதிகளின் சமூகங்களின் சார்பில் இவர்கள் பேசினர். 13ஆம் நூற்றுண்டில் பிரதிநிதித்துவம், தேர்தல் போன்ற முறைகள் பழக்கத்தில் இருந்தவைகளேயாகும். ஆங்கிலோ-சாக்சானியர் காலத்தில் பிரதிநிதித்துவ முறைகள் குறைந்த அளவில்தான் பயன்படுத்தப்பட்டன. 13ஆம் நூற் றுண்டில் நாடு முழுவதும் பரவியிருந்த டொமினிகன் குழுவினர் திருச்சபை அமைப்பில் பிரதிநிதித்துவக் கருத்தைப் பெருமளவு பயன்படுத்தினர். வரிவிதிப்பிற்காகத் தனியுடைமைகளின் மதிப் பைக் கணக்கிட மதிப்பீட்டாளர்களைத் தேர்ந்தெடுக்கும் முறை இருந்து வந்துள்ளது. இதைப்போல் குற்றவியல் வழக்குகளில்

நீதிபதிகளுக்குதவ அறங்கூறுநர்கள் (Jurors) தேர்ந்தெடுத்து அனுப்பப்பெற்றனர்.

இரண்டாம் ஹென்றியின் காலத்தில் சுற்றி வரும் நீதிபதிகளைக் கோட்டங்களுக்கு அனுப்புகின்ற முறை வழக்கில் இருந்தது. அரச நீதிபதிகளைச் சந்திக்கும்பொருட்டு கோட்ட நீதிமன்றங்கள் கூட்டப்பெற்றன. கோட்ட நீதிமன்றத்தின் இச் சிறப்புக் கூட்டத்திற்கு வழக்காடுகின்றவர்கள் மட்டுமன்றி ஒவ்வொரு கிராமத்திலிருந்தும் அரசரின் (மாவட்ட) பகராள் (Bailiff) ஒருவரும் மற்றும் நால்வரும், நகரத்தொகுதி (Boroughs) யிலிருந்து பன்னிரண்டு நகரினர்களும் வரவேண்டும். பொதுநடை இயல் (civil), குற்றவியல் வழக்குகளுக்காகவும், தனிச்சொத்துகளின்மீதான வரிவிதிப்பைக் கணக்கிடவும் கோட்ட நீதிமன்றங்களில் மதிப்பீட்டாளர்கள் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். கோட்ட நீதிமன்றம் ஒரு சிறிய அளவிலான பாராளுமன்றத்தைப் போல் இருந்ததெனலாம்.

கோட்ட நீதிமன்றத்தின் முடிவுகளை ஆதரிக்க அல்லது மெய்ப்பிக்க சில வேளைகளில் கோட்ட நீதிபதிகள் அரச நீதிமன்றத்திற்கு வரவேண்டியிருந்தது. இவர்கள் தனிப்பட்ட முறையில் பிரதிநிதிகளாக வராமல் நகர், கோட்டம் ஆகியவைகளின் பிரதிநிதிகளாக வந்தனர். அரசப் பேராளருக்கு (Sheriff) எதிராகக் குறைகளை எடுத்துரைக்க எட்டுக் குறிப்பிட்ட கோட்டங்களிலிருந்து நான்கு வீரத் திருத்தகைகள் அரசவைக்கு வருமாறு அழைக்கப்படுவதற்கு முன்னரே இம் முறை இருந்துவந்துள்ளது நினைவில் கொள்ளத் தக்கதாகும். ஹென்றி, சைமன் டி மான்ட்போர்ட் (Simon de Montfort), எட்வர்டு ஆகியோர் பிரதிநிதிகளை அனுப்புமாறு மாவட்டங்களுக்கு (County) கட்டளையிட்டது பழைய முறையின் புதிய செயல்பாட்டைத்தான் உணர்த்துகிறது. சைமன், எட்வர்டு ஆகியோர் பிறப்பித்த கட்டளைகள் வெறுமையில் தோன்றிய புதிய கட்டளைகளாகா. இவை பழைய அரசவையில் தோன்றிய அரும்புகளே. 'பேரவையின் மரபுவழி உயிர்ச் சான்றிலிருந்து வளர்ந்து மலர்ந்த நிறுவனம் இடைக் காலத்திய பாராளுப் மன்றமாகும்.'

1213-ல் ஜான் மன்னர் அரசவைக்குப் பெருமக்களையும் கோட்டத்திலிருந்து நான்கு தனிப்பட்ட வீரத் திருத்தகைகளையும் அழைத்ததைக் காலத்தால் முற்பட்ட நிகழ்ச்சியாகக் குறிப்பிடலாம். ஆயினும் இவர்கள் கூடியதற்கான சான்று கிடையா. மூன்றும் ஹென்றி ஃபிரான்சு நாட்டில் காஸ்கெனியில் போரிட்டுக்

கொண்டிருந்தபொழுது இவருடைய மனைவியாரும் கார்ன்வால் கோமகனும், பணஉதவி பெறுவதற்காக ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் இரண்டு வீரத் திருத்தகைகளை அழைத்தனர். இதையொட்டி 1254-ல் கூடிய பிரதிநிதிகளின் கூட்டத்தை அதிகார முறையிலான முதல் நிகழ்ச்சியாகச் சொல்லலாம். ஏனெனில், இவ் வீரத் திருத்தகைகள், தலைமைக் குத்தகைகாரர்களை மட்டுமன்றி இவர்களுடைய மாவட்டத்தின் எல்லாச் சுயேச்சையான பண்ணைக் குடிமக்களையும் பிரதிபலித்தனர். இவர்கள் மாவட்டப் பிரதிநிதிகளாவர். 1261-ல் மறுபடியும் வீரத் திருத்தகைகள் அரசவைக்கு அழைக்கப்பட்டனர். உள்நாட்டுக் கலகச் சூழ்நிலையில் இக் கூட்டம் அழைக்கப்பட்டது. தன் சொந்தப் பேரவையைக் கூட்டப் புரட்சியாளர்கள் முடிவு செய்து ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் மூன்று வீரத் திருத்தகைகளை செயின்ட் ஆல்பன்ஸ் (St. Albans) என்னுமிடத்தில் கூடுமாறு அழைத்தார்கள். இதே நாளில் அரசர் தம் பேரவையை வின்ட்சோரில் (Windsor) கூட அழைப்பாணை விடுத்தார். எல்லா வீரத் திருத்தகைகளும் வின்ட்சோரில் கூடும் அரசவையில் கலந்துகொள்ள வேண்டுமென்பதை அறிவுறுத்த அரசப் பேராட்களுக்கு அரசர் கட்டளையிட்டார்.

உள்நாட்டுக் கலகம் அரசரின் தோல்வியில் முடிந்தது. புரட்சிக்காரப் பெருமக்களில் ஒருவராகிய சைமன் டி மான்ட்போர்ட் பெரும் வலிமை பெற்றார். அரசரின் பெயரில் சைமன் பேரவையைக் கூட்டினார். நாட்டில் ஒரு குழப்பநிலையைப் போர் உருவாக்கியது. தோல்வி கண்ட அரசரின் அலுவலர்களாகிய பேராட்களை நம்பாமல், 'புதிய அமைதிக் காவலர்களை' சைமன் மாவட்டங்களில் அமர்த்தினார். 1264-ல் லண்டனில் கூடவிருக்கும் பேரவையில் கலந்துகொள்ளும் பொருட்டு ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் நான்கு வீரத் திருத்தகைகளைத் தேர்ந்தெடுப்பதைக் கண்காணிக்கும் அதிகாரத்தை இவர்கள் பெற்றார்கள்.

1265-ல் கூடிய மற்றொரு பாராளுமன்றத்தில் கலந்துகொள்ள மாவட்டங்களின் பிரதிநிதிகள் மட்டுமன்றி, 'தனிப்பட்ட, சட்ட ஒப்புதல் பெற்ற, நேர்மையான' நகரத்தினர்களும் நகர உறுப்பினர்களும் அழைக்கப்பெற்றனர். இவ்வாறு அழைக்கப்பட்டவர்களில் பெரும்பாலோர் சைமனின் ஆதரவாளர்கள். இவர்களின் அதிகரிப்பு சைமனின் நிலைக்கு வலிமையூட்டியது. சைமன் கூட்டிய இப் 'புகழ்பெற்ற பாராளுமன்றத்தில்' வரலாற்றிலேயே முதன்முறையாக நகரத் தொகுதியின் பிரதிநிதிகள் மாவட்டப்பிரதிநிதிகளாகிய வீரத் திருத்தகைகளுடன் அடுத்தடுத்து இருந்தனர்.

## முதலாம் எட்வர்டின் பாராளுமன்றம்

சைமனின் பாராளுமன்றம் ஒரு கட்சிக் கூட்டத்தின் தோற்றத்தைப் பெற்றிருந்தது. கீழ்நிலை குருமார் தொகுதியின் பிரதிநிதிகள் இதில் இடம் பெறவில்லை. பண்ணைப் பெருங்குடி மக்களும் இதில் இடம் பெறவில்லை. பேரவைக் கூட்டம் முடியு முன்னரே மாவட்ட வீரத் திருத்தகைகளையும் நகரினர்களையும் பேரவையில் சேர்க்க சைமன் கருதினார் என்ற கருத்தை ஏற்பதற்கில்லை. ஏனெனில், பிரதிநிதிகளாக வந்தமர்ந்த உறுப்பினர்கள் நீக்கப்பட்ட பின்னும் பேரவை தொடர்ந்திருந்து வந்துள்ளது. எனவே பொது மக்கள் சபையை (House of Commons) சைமன் உருவாக்கினாரென்பது பொருத்தமாகத் தோன்றவில்லை. ஆயினும் பேரவையின் வழக்கமான உறுப்பினர்களோடு மாவட்ட, நகரப் பிரதிநிதிகளையும் ஒரே சமயத்தில் கூடுமாறு அழைத்த பெருமை சைமனைச் சேரும்.

சைமனின் முன் நிகழ்வுகளை எட்வர்டு உடனடியாகப் பின்பற்றவில்லை. பலவகையான சபைகளைப் பல சமயங்களில் இவர் கூட்டினார். சில சமயத்தில் பெருங்குடி மக்களின் பேரவையையும் சில வேளைகளில் மாவட்ட வீரத் திருத்தகைகளை மட்டும் இவர் கலந்தாராய்ந்தார். எப்பொழுதாவது ஒரு சமயம் இவர்களோடு நகரினர்களும் சேர்ந்துகொண்டனர். உயர் குருமார் தொகுதியினரை மட்டும் ஒரு சமயம் இவர் அழைத்தார். ஒரு சமயத்தில் வடக்கில் ஒன்றும் தெற்கில் ஒன்றுமாக இவர் இரு சபைகளைக் கூட்டினார். 1273-ல் அரசருக்குப் பற்றுறுதி தெரிவிக்கும் பிரமாணம் எடுத்துக்கொண்டபொழுது பெருமக்களோடு ஒவ்வொரு மாவட்டத்திலிருந்து வந்த நான்கு வீரத் திருத்தகைகளும் ஒவ்வொரு நகரிலுமிருந்து வந்த நகரினர்களும் சேர்ந்து கொண்டனர். 1275-ல் எல்லா வகுப்பினரையும் அழைத்தார். இவர்களில் கீழ்நிலை குருமார்களைத் தவிர மற்றவர்கள் பிற்காலத்திய 1295ஆம் ஆண்டின் மாதிரிப் பாராளுமன்றத்தில் இடம் பெற்றனர். இவைகளைக் கருத்தில் கொண்டு எட்வர்டு, பாராளுமன்ற அமைப்பில் சில சோதனைகளைச் செய்து பார்த்தார் என்று கூறுவது தவறாகும். 1288-ல் குருமார்களின் பிரதிநிதிகளையும் பொதுமக்களின் பிரதிநிதிகளையும் யார்க் (York), நார்த்தாம்டன் ஆகிய இரண்டு இடங்களில் கூடுமாறு அரசர் அழைத்தார். இதே ஆண்டின் இறுதியில் வேல்ஸ் இளவரசர் டேவிட் (David) விசாரிக்கப்படுவதைப் பார்க்கப் பெருங்குடி மக்களையும் ஒவ்வொரு மாவட்டத்திலிருந்து இரண்டு வீரத் திருத்தகைகளையும் ஒவ்வொரு நகரத்தொகுதியிலிருந்து இரண்டு

நகரினர் என்ற கணக்கில் 20 நகரங்களின் பிரதிநிதிகளையும் எட்வர்டு அழைத்திருந்தார். 1290, 1294ஆம் ஆண்டின் பாராளுமன்றங்களுக்கு நகரப் பிரதிநிதிகள் அழைக்கப்படவில்லை. 1294-ல் கூடிய பேரவையின் சிறப்புக் கூட்டத்திற்குக் கீழ்நிலை குருமார்கள் மட்டுமே அழைக்கப்பட்டிருந்தனர்.

1294-ல் முதலாம் எட்வர்டு, பெரிய, சிறிய நிலக்கிழார்களையும் வீரத் திருத்தகைகளையும் நகரினர்களையும், மேல்நிலை, கீழ்நிலை குருமார் தொகுதிகளின் பிரதிநிதிகளையும் ஒரு பேரவைக் கூட்டத்தில் ஒருங்கிருக்கச் செய்தார். இரண்டு அதிமேற்றிராணியார்களையும், எல்லா மேற்றிராணியார்களையும், மூன்று சமயப் பிரிவினரையும், 48 பெரிய மடங்களின் தலைவர்களையும், ஏழு கோமான்களையும், 41 பெருமக்களையும் சிறப்புக் கட்டளையால் அழைத்தார். பொதுக் கட்டளையால் ஒவ்வொரு மாவட்டத்திலிருந்து இரண்டு வீரத் திருத்தகைகளையும் நகரிலிருந்து இரண்டு நகரினர்களையும் எட்வர்டு அழைத்தார். இருப்பினும் பேரவையின் இக் கூட்டத்தை இக்கால விளக்கத்தின்படி பாராளுமன்றக் கூட்டமெனக் கொள்ளவியலாது. இக்கூட்டத்திற்கு குருமார்களின் வகையாட்களும், நீதிபதிகளும், அமைச்சர்களும் அழைக்கப்படடிருந்தனர். மொத்தத்தில் இவ்வவையில் 400-க்கு மேற்பட்டவர்கள் இடம் பெற்றனர். நிலமானியப் பெருமக்களைக் கொண்ட பேரவை புதிய பிரதிநிதித்துவ நிறுவனத்தோடு இணைந்தது. பெரும் நிலக்கிழார்களின் கூட்டத்தோடு நகரப் பிரதிநிதிகளின் இணைப்புதான் எட்வர்டுக்கு, 'மாதிரிப் பாராளுமன்றத்தைப் படைத்தவர்' என்ற பெயரினை அளித்தது. 1295ஆம் ஆண்டின் மாதிரிப் பாராளுமன்றத்தை 1296, 1300, 1305, 1307ஆம் ஆண்டு பாராளுமன்றங்கள் பின்பற்றின. இதை மாதிரிப் பாராளுமன்றமாக ஏற்க நாற்பதாண்டாயிற்று. இருப்பினும், பொதுமக்கள் சபையைத் தோற்றுவித்தவரென நாம் முதலாம் எட்வர்டைக் கருத முடியாது. ஏனெனில் பாராளுமன்றமெனும் நிறுவனம் ஒரு தனி மனிதரால் உருவாக்கப்படவில்லை; திட்டமிட்டு வளர்க்கப்படவுமில்லை. ஆனால் இது காலப்போக்கில் உருவாகியதாகும்.

விரைவில் கீழ்நிலை குருமார்கள் பாராளுமன்றத்திலிருந்து விலகிக்கொண்டனர். திருச்சபைக் கூட்டங்களின் இசைவோடு பண உதவியளிக்க குருமார்கள் விரும்பினார்கள். மாதிப் பாராளுமன்றம் ஒரே சமயத்தில்தான் கூடியது. அந் நூற்றாண்டில்தான் இப் பாராளுமன்றம் இரு சபைகளைக் கொண்டதாக அமைந்தது. மாதிரிப் பாராளுமன்றம் கூட்டப்பெற்றபொழுது அல்லது

முதலாம் எட்வர்டின் ஆட்சிக்காலத்தின் இறுதியில் பேரவைக்கும் இதற்கும் வேறுபாடுகள் இருக்கவில்லையென்பது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். மேலும் மக்கள் பிரதிநிதிகளின் இசைவோடு அல்லது இசைவின்றி எதைச் செய்யலாம் அல்லது செய்யக் கூடாதென்பதும் இக்காலத்தில் தெளிவாகவில்லை. வரிவிதிப்பைப் பொறுத்தவரையில் பிரதிநிதிகள் என்ன செய்யமுடியுமென்பதைத் தெரிவிக்க மட்டுமே இவர்கள் அழைக்கப்பட்டனர். நாட்டின் பிரச்சினைகளை விவாதிக்கும்பொருட்டு இவர்கள் அழைக்கப்படவில்லை. எவ்வாறுயினும், 'குருமார்கள், பெருமக்கள், பொது மக்கள்' ஆகிய மூன்று வகுப்பினரின் பிரதிநிதிகள் இந் நிலமானியப் பேரவையில் இடம்பெற்றதால் இச் சபை ஒரு தேசியச் சபையின் குண இயல்பை விரைந்து வளர்த்துக்கொண்டதென்பது தெளிவாகும். 1295-ல் முதலாம் எட்வர்டு மேற்றிராணியார்களுக்கு விடுத்திருந்த அழைப்பாணையில்,' 'நம்மைப் பாதிக்கின்றவைகள் நம்மால் ஏற்கப்படவேண்டும்' என்னும், பேரரசர் ஜஸ்டீனியன் என்பாரின் சட்டத் தொகுப்பில் இருக்கும் கருத்துக் குறிப்பிடப்பட்டிருந்தது. சமூகங்களின் பிரதிநிதிளாக வீரத் திருத்தகைகள், குடிமக்கள், நகரினர் ஆகியோர் அவைகளின் சார்பில் செயலாற்ற 'முழுமையான, போதுமான' அதிகாரம் பெற்றிருக்கவேண்டுமென்பது தெளிவாகிற்று. இதைக் கருத்தில் கொண்டு சில வரலாற்றுசிரியர்கள், மக்கள் சார்புடைய அரசாங்கத்தை எட்வர்டு குறிக்கோளாகக் கொண்டிருந்தாரெனக் கருதினர். இது உண்மையாக இருந்தால், மக்கள் பிரதிநிதிகளை அனுப்பிவிட்டுப் பேரவையில் முக்கியமான சட்டங்களை இவர் இயற்றியிருக்கமாட்டார். மக்கள் கருத்தை அறிய வேண்டுமென இவர் அக்கறை கொண்டிருந்தால் மகா சாசனத்தை மதித்து நடப்பதாகக் கொடுத்திருந்த வாக்குறுதியிலிருந்து தம்மை விடுவித்துக்கொள்ளப் போப்பாண்டவரின் இசைவாணையைப் பெற்றிருக்கமாட்டார். இரண்டொரு சட்டங்களை மட்டுமே இவர் பொதுமக்கள் முன்னிலையில் வரைந்துகொண்டதும் மற்றச் சட்டங்களைப் பேரவையில் வரைந்துகொண்டதிலிருந்தும் இவர் மக்களைக் கலந்து கொள்ள விரும்பவில்லை என்பது வெளியாகிறது.

பெருகிக் கொண்டிருக்கும் தனி உடைமைமீது வரி விதிக்கும் நோக்கத்தோடுதான் அரசர்கள் பாராளுமன்றத்தைக் கூட்டினார்கள். அரச காரியங்களை நடத்த அரசரின் வருவாயிலிருந்து கிடைத்த பணத்தைவிட மேலும் அதிகமாகப் பணம் தேவைப்பட்டதாலும், மக்களின் ஒப்புதலோடுதான் வரிகள் விதிக்கப்படவேண்டுமென்றிருந்ததாலும் அரசர்கள் பாராளுமன்றத்தைக் கூட்டவேண்டிய தேவை ஏற்பட்டது. மேலும், பல்வேறு வகுப்பு

களுடன் தனித்தனியாகப் பேச்சுவார்த்தைகள் நடத்துவதென்பது இயலாதென அரசர் கருதினார். அப்படியே இவைகளைக் கலந் தாராய வேண்டுமெனில் நிலமானியப் பேரவையையும் குருமார் களின் இரண்டு திருக்கூட்டங்களையும், 37 மாவட்டங்களையும், 100 நகரத்தொகுதிகளையும் இவர் கூட்டிக் கருத்தறிந்து கொள்ள வேண்டும். இவ் வகுப்பினரைப் பாராளுமன்றத்தில் ஒன்றாகத் திரட்டுவது அரசருக்கு எளிதாகத் தோன்றியது. ஆயினும், 1298, 1300, 1302, 1305, 1307ஆம் ஆண்டுகளின் பாராளுமன்றங் களிடமிருந்து அரசர் நிதி உதவியெதையும் கேட்டார் என்ப தற்குச் சான்றுகளில்லை.

நிலமானியப் பெருங்குடி மக்களின் சிறு குழுவாட்சியைப் பாராளுமன்றம் தடுக்கவேண்டுமென முதலாம் எட்வர்டு விரும் பினார். நிலமானியப் பெருமக்களின் செல்வாக்கைக் குறைக்கச் சொத்துரிமையற்ற வகுப்பினரையும் அரசர் அழைத்தார். 1295-ல், பேரவையில் கலந்து கொள்ளுமாறு பிரதிநிதிகளை அழைத்துத் தம் ஆட்சியை உறுதிப்படுத்திக்கொள்ள அரசர் விரும்பினார். பாராளுமன்றம் ஓர் உயர் நீதிமன்றமாகவும் இருந்ததால் தனிப்பட்டவர்களும் இதற்கு விண்ணப்பித்துக் கொண்டனர். மாவட்டத் தலைமை அதிகாரியின் செயல்கள் பற்றியும் மற்றவர்களின் செயல்கள் பற்றியும் விரிவான தகவலை இவ் விண்ணப்பங்களிலிருந்து அறியலாமென்பதை அரசர் கண்டார். பாராளுமன்றக் கூட்டத்திற்கான அழைப்பு ஒரு பற் றாணையைப் போல் செயற்படுத்தப்பட்டது. பல நூற்றாண்டுகளுக்கு முன் பாராளுமன்ற உறுப்பினர்கள் சபைக்கூட்டங்களுக்குப்பிடித்து வரப் பெற்றனர். வரத் தவறியவர்கள் தண்டிக்கப்பட்டனர். ஒரு சமயத்தில், ஆக்ஸ்ஃபோர்டு மாவட்ட வீரத்திருத்தகைகள் இருவர் தாம் பாராளுமன்றத்திற்குத் தெரிவு செய்யப்பட்டிருப்பது கேட்டு நாட்டை விட்டு வெளியேறிவிட்டனர். இவர்கள் குற்ற வாளிகளென அறிவிக்கப்பட்டார்கள். பாராளுமன்ற உறுப்பினர் களும் தம்மைப் பலியாடுகளாகக் கருதிக்கொண்டுதான் கூட்டத் திற்குச் சென்றனர்.

1295ஆம் ஆண்டு பாராளுமன்றம் நிலமானிய நீதிமன்ற மன்று; அரசரின் குத்தகைக்காரர்களின் கூட்டமுமன்று; இது ஒரு தேசியச் சபையாகும். இதில் 'குருமார்கள், பெருமக்கள், பொதுமக்கள்' ஆகியோரின் பிரதிநிதிகள் இடம் பெற்றனர்.

மேலும் தொடர்ந்திருந்து வரும் அரசரின் பேரவையின் விரிவாக்கம்தான் பாராளுமன்றம். அரசர் பேரவைகளைக் கூட்டிய

போது, இவரைச் சுற்றியிருப்பவர்களின் அறிவுரையையும் நிதி உதவியையும் இவர் நம்பி இருக்கவேண்டியதாயிற்று. எனவே, பெயரைக் குறிப்பிட்டுப் பெருமக்களையும் நீதிபதிகளையும் அரசர் அழைத்தார். இன்றும் தலைமை நீதிமன்ற நீதிபதிகள் பாராளுமன்றத்தின் மேல் சபையில் இடம் பெறுகின்றனர்.

### 14ஆம் நூற்றாண்டில் பாராளுமன்றத்தின் வளர்ச்சி

13ஆம் நூற்றாண்டில் பாராளுமன்றம் தோன்றியதென்றால் 14ஆம் நூற்றாண்டைப் பாராளுமன்ற வளர்ச்சிக் காலமெனலாம். வரி விதிப்பின்மீதான கட்டுப்பாடு, அரசரோடு இருந்து சட்டமியற்றும் உரிமை, அரசாங்கத்தைக் கண்டித்து ஆட்சியை இயக்கும் உரிமை ஆகியவற்றைப் பாராளுமன்றம் சிறிது சிறிதாகப் பெற்றது. பாராளுமன்றம் முக்கியமான உரிமைகளைப் பெற்றதற்கு அரசரின் நிதித்தேவை ஒரு காரணமாகும். அரசருக்குத் தேவையான நிதியளித்துத் தன் உரிமைகளைப் பாராளுமன்றம் விலைக்கு வாங்கியதென்றும் சொல்லலாம்.

பாராளுமன்றத்தின் நிதி அளிப்பும் வருவாய் வளங்களில் ஒன்றாகும். இவை அரசருக்குரிய பணமாகும். தம் நிலமானிய வருவாயை வைத்துக்கொண்டு அரசர் வாழவேண்டும். முதல் மூன்று எட்வர்டு அரசர்கள் இவ்வருவாய்களை வைத்துக்கொண்டுதான் ஃபிரான்ஸோடும் ஸ்காட்லாந்தோடும் போர் நடத்த வேண்டியிருந்ததால் இவர்களுக்குப் பண நெருக்கடி ஏற்பட்டுக் கொண்டிருந்தது. ஆகவேதான், அரசர்கள் அடிக்கடி பணத்திற்காகப் பாராளுமன்றத்தை நாடவேண்டியிருந்தது. குறைபாடுகள் அகற்றப்பட வேண்டுமெனும் நிபந்தனையில் அரசருக்குப் பாராளுமன்றம் பண உதவியளித்தது. படிப்படியாக, எல்லா வருவாய் வளங்களையும் அரசரிடமிருந்து பாராளுமன்றம் பற்றிக்கொண்டது.

வழக்கமாகப் பெற்றுவந்த உதவித் தொகைகளையும் பணிகளையும் தவிர, வேறு எதையும் மக்களின் ஒப்பிசைவின்றி அரசர்கள் விதிக்கலாகாது என்னும் கருத்தை முதலாம் எட்வர்டு 1297-ல் ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. நேர்முக வரி விதிப்பெதையும் மேற்கொள்ளலாகாதெனினும் அரசருக்குரிய பண்ணை மனைகளைச் சார்ந்த நிலங்களிலிருந்து ஒரு சிறிய வரியை விதித்தார். 1340-ல், பாராளுமன்றம் ஒரு சட்டத்தால் இதை நிறுத்தியது. இதற்குப்பின், பாராளுமன்றத்தில் கூடியுள்ள 'சமயத்துறைப் பெருமக்கள், கோமான்கள், பெருமக்கள், பொது மக்கள் ஆகியோரின் பொது இசைவினாலன்றிப் பொருளுதவி கோரி

வரி விதிக்கக்கூடா'தெனச் சட்டமியற்றப்பட்டது. மக்கள் மீதான நேர்முக வரிவிதிப்பு அதிகாரத்தை அரசர் இழந்த இந்த 1340ஆம் ஆண்டு வரலாற்றில் ஒரு திருப்பமாகும்.

தொடர்ந்து அரசர் மறைமுக வரிகளைக் கம்பள வணிகர்கள் மீது விதித்துப் பணம் திரட்டி வந்தார். 1362-ல், இவ் வரிவிதிப்பைக் கட்டுப்படுத்த பாராளுமன்றம் முயன்றது. பிற் காலத்தில் சட்டங்களால் கம்பளத்தின்மீது விதிக்கப்பட்ட தீர்வை பாராளுமன்றத்தின் அதிகாரத்திற்குள் வந்தது. 1373-ல் இறக்குமதி, ஏற்றுமதி செய்யப்படும் பொருள்கள்மீது வரி விதித் துக் கொள்ளும் அதிகாரத்தைப் பாராளுமன்றம் அரசருக்கு அளித்தது. மக்களைக் கலந்துகொள்ளாமல் எந்த வரியையும் அரசர் விதிக்கலாதென்பது 14ஆம் நூற்றுண்டில் தெளிவாயிற்று. அரச ருக்கும் பெருமக்களுக்கும் இடையில் இடையறுது நடைபெற்று வந்த சச்சரவுகளில் பொதுமக்கள் (சபையினர்) நடுவர்களாக இருந்தார்கள். நிதியளிக்கும் அதிகாரம் பொதுமக்கள் சபையி லிருந்துதான் எழவேண்டுமென்பதை உறுதிப்படுத்த பொது மக்கள் முயன்றனர். குறிப்பிடப்பட்ட நோக்கத்திற்கு நிதி ஒதுக்குவதைப் பாராளுமன்றம் மேற்கொள்ளவும், கணக்குகளைத் தணிக்கை செய்யவும், நிதி ஒதுக்கீடு முறையாகச் செயல்படு கிறதாவென்பதையும் பாராளுமன்றம் கவனிக்கத் தொடங்கியது. 'உலகியற் பெருமக்கள், சமயத்துறை சார்ந்த பெருமக்கள் ஆகி யோரின் இசைவோடு பொதுமக்களால்' அரசருக்குப் பொருளதி காரம் அளிக்கப்பட்டதென்ற சொற்ருெடர் 1395-ல் காணப் பட்டது. 1407ஆம் ஆண்டில், 'பொதுமக்கள் சபையால் அளிக்கப் பெற்றுப் பெருமக்கள் சபையால் இசைவு பெற்ற எப் பண உதவியையும் பொதுமக்கள் சபையின் சபாநாயகர்தான் அறிவிக்க வேண்டுமெனும் கருத்து நான்காம் ஹென்றியால் ஏற்றுக்கொள் ளப் பெற்றபொழுது பொதுமக்கள் சபையின் தனி முதன்மை உறுதியாயிற்று. இக்காலத்திய பாராளுமன்ற நடைமுறையிலும் இக் கருத்துத் தொடர்ந்து செயல்பட்டு வருவதைக் காணலாம்.

குறைபாடுகளை நீக்கிக்கொள்ள பொதுமக்கள் சபையினர் முதலில் இந்த அதிகாரத்தைப் பயன்படுத்திக் காலப்போக்கில் பெருமக்கள் சபையினரோடு சேர்ந்து சட்டமியற்றுநர்களாக மாறினர். பாராளுமன்றம் கூடியிருக்கும்பொழுது பணத்தேவைக் கான காரணத்தை அரசர் தம் அமைச்சர்களைக் கொண்டு விளக்கு வது வழக்கமாயினும் மற்ற விவகாரங்களைப் பற்றியும் அரசர் சபையின் அறிவுரையைக் கேட்கலாம். தீர்க்கப்படவேண்டிய குறைபாடுகளும் குடிமக்களிடம் இருந்தன. சமூகத்தைப் பாதிக்

கிற குறைபாடுகளைப்பற்றிப் பொதுமக்கள் சபை கூட்டாக அரச ருக்கு விண்ணப்பிக்கத் தொடங்கியது. போர்ச் செலவிற்காக அரசருக்குப் பணம் தேவையானபோது குறைபாடுகள் அகற்றப் பட வேண்டுமென்ற நிபந்தனையில் பொதுமக்கள் சபை பண உதவி யளித்தது.

இவ்வாறு கொடுக்கப்பட்ட விண்ணப்பங்கள் இறுதியில் சட்டமியற்றுதற்கான நடைமுறையாகிவிட்டது. பாராளு மன்றம் பொதுமக்கள் சார்ந்த ஒரு பேரவையன்று. பெரும் பாலான உறுப்பினர் ஊரில் தங்கியிராமல் சபைக் கூட்டங்களுக்கு வர விரும்பவில்லை. பிரதிநிதிகளைச் சபைக்கனுப்பி வைக்கும் கடமைப் பொறுப்பிலிருந்து விலக்களிக்குமாறு நகரத்தொகுதிகள் வேண்டிக்கொண்டன. எனவே, முடிவுகளைச் செய்தபின் இவை களைச் செயற்படுத்தும் வழிமுறைகளை ஆராயும் பொறுப்பை அர சருக்கும் அவருடைய நிலையான ஆலோசகர்களுக்கும் விட்டு விட்டுப் பொதுமக்களும் பெருமக்களும் கலைந்து சென்றனர். பாராளுமன்றத்தின் முடிவுகளைச் செயற்படுத்த சட்டம் தேவையா யிற்று. பாராளுமன்றம் கலைந்த பின்னரே சட்டங்கள் வரையப் பட்டதால் அரசருடைய விருப்பிற்கேற்றவாறு சட்டங்கள் மாற்றி வரையப்பட்டன. இதைப் பொதுமக்கள் குறை கூறினர். 'பொதுமக்கள் சபையினரின் விண்ணப்பங்களுக்கு முரணாக எச் சட்டமும் இயற்றப்படலாகாதென்றும், இவர்களின் இசைவில் லாமல் இவர்கள் கட்டுப்படுத்தப்படலாகா'தென்பதை 1414-ல் ஐந்தாம் ஹென்றி ஏற்றுக்கொண்டார். நடைமுறையில் வளர்ச்சி காணும் வரையில் இந்நிலையில் மாற்றம் உண்டாகவில்லை. திரளான விண்ணப்பங்களுக்குப் பதிலாகத் தனித்தனியே மசோதாக்கள் கொண்டு வரப்பெற்றபொழுது புதிய நிலை உருவா யிற்று. 16ஆம் நூற்றுண்டுவரை, இந் நடைமுறை பின்பற்றப்பட வில்லையாயினும் மசோதா உருவில் சட்டமியற்றுதல் ஒரு விதி ஆயிற்று,

சட்டமியற்றும் பணியில் பொதுமக்கள் சபை பெற்றிருந்த தாழ்ந்த நிலையை இன்னும் இது சரி செய்துகொள்ளவில்லை, எனவே ஒரு புதிய விதிமுறை கையாளப்பெற்றது. இதன்படி. உலகியற் பெருமக்கள், சமயம் சார்ந்த பெருமக்கள், பொது மக்கள் ஆகியோரின் ஆலோசனையாலும் இசைவாலும் சட்டங்கள் இயற்றப்பட்டன. 15ஆம் நூற்றுண்டின் நடுப்பகுதியில் 'இவர் களின் அதிகாரத்தால்' என்னும் சொற்கள் சேர்க்கப்பட்டன. அதாவது, முழுப் பாராளுமன்றத்தின் அதிகாரத்தைச் சட்டம் பெற்றது என்பதை இது குறிப்பிடுகிறது. இனிமேல், பொது

மக்கள் சபையின் மசோதாக்களுக்கு அரசர் இசைவளிக்க மறுப்ப தால் சட்டங்கள் பாதிக்கப்படலாம். இருப்பினும், அரசரின் மசோதாக்களைப் பொதுமக்கள் சபையினர் தள்ளி விடலாம். ஆனால் இத்தகைய நிகழ்ச்சியெதுவும் 16ஆம் நூற்றாண்டு வரை நடந்ததாகத் தெரிகிறது.

14ஆம் நூற்றாண்டில் அரசரே அரசாங்கத்தின் உண்மையான தலைவராக இருந்தார். பாராளுமன்றத்தின் பெயரால் பெருங் குடிமக்கள் நிருவாகத்தைக் கட்டுப்படுத்த முயன்றனர். அவர் அலு வலர்களையும் நீதிபதிகளையும் பாராளுமன்றத்தின் இசைவோடு அமர்த்த வேண்டுமென்று 1341-ல் பொதுமக்கள் கோரினர். ஆனால், இக் கோரிக்கை ஏற்கப்படவில்லை. மக்கள் விருப்பிற் கிசையா அமைச்சர்களைத் தண்டிக்கும் நோக்கத்தோடு பெரும் அரசியல் குற்றச்சாட்டு விசாரணை முறையொன்றைப் பெருங்குடி மக்கள் உருவாக்கினர். மூன்றாம் எட்வர்டு அரசரின் அமைச்சர்கள் பலரை 1376ஆம் ஆண்டின் நல்ல பாராளுமன்றம் இவ் விசாரணை முறையால் தண்டித்தது. 1388-ல் இரண்டாம் ரிச்சர்டின் அமைச்சர் சஃபோல்க் என்பாரும் இம் முறையால் தண்டிக்கப் பெற்றார்.

### பாராளுமன்றத்தின் அரசியல் அதிகார வளர்ச்சி

நிதியளிப்பதைப் பாராளுமன்றம் கட்டுப்படுத்தும் முறை நற் பயனளித்தது. குறைந்தகாலத் தேவைக்குத்தான் பண உதவி யளிக்கப்பட்டது. இதனால் பணம் தேவைப்படும்பொழுதெல் லாம் அடிக்கடி அரசர் பாராளுமன்றத்தைக் கூட்டினார். இதன் விளைவாக, 14ஆம் நூற்றாண்டில் பாராளுமன்றத்தின் அரசியல் அதிகாரம் வளர்ச்சியடைந்தது. இதற்கோர் எடுத்துக்காட்டாக இரண்டாம் ரிச்சர்டு கூட்டிய பாராளுமன்றம் 1399-ல் இவரையே பதவியிலிருந்து விலக்கியதைக் குறிப்பிடலாம். இதற்குப் பின் ஆங்கில அரசர்கள் அரச பதவி பெறப் பாராளுமன்றத்தின் இசை வாணையைப் பெறவேண்டியதாயிற்று. ஆனால் 15ஆம் நூற்றாண் டின் நடுப் பகுதியிலிருந்து பாராளுமன்றம் தன் அதிகாரத்தை இழக்கத்தொடங்கியது. போரிடும் பெருமக்கள் பாராளு மன்றத்தைக் கைப்பற்றிக்கொண்டனர். ஓர் அரசரின் வாழ்நாள் காலத்திற்கும் வரி திரட்டும் அதிகாரத்தைப் பாராளுமன்றம் அளித்ததால் ஆண்டுக் கொருமுறை பாராளுமன்றத்தைக் கூட்டும் வழக்கம் கைவிடப்பட்டது. இவ் வழக்கத்தை ஐந்தாம் ஹென்றி ஏற்படுத்தினார்.

### தொடக்க காலத்திய பாராளுமன்றங்களைப்பற்றிய தகவல்

தொடக்க காலத்திய பாராளுமன்றங்களைப்பற்றிய சில தகவல்கள் தெரியவருகின்றன. அரசருக்கு வசதியான இடங்களில் பாராளுமன்றக் கூட்டங்களை நடத்தினர். லண்டனில் கூட்டம் நடைபெறும்பொழுது வெஸ்டமின்ஸ்டரை அடுத்திருந்த அரண்மனையில் ஒரு பெரிய மன்றத்தில் நடைபெறுவது வழக்கம். அரசின் அலுவலர்கள் சூழ இருக்க அரசர் ஓரிடத்தில் அரியணையில் அமர்ந்திருப்பார். மேல் குத்தகைக்காரர்கள் அவரவரின் நிலைக்கேற்ப அரசரின் அருகில் இருப்பர். சற்றுத் தொலைவில் ஒரு கோடியில் சமூகங்களின் பிரதிநிதிகள் நிற்பர். பாராளுமன்றம் ஏன் கூட்டப்பட்டதென்பதை அரசர் விளக்கிக் கூறுவார். பின்னர், எடுத்துக் கொண்ட பொருளைப்பற்றிப் பெருமக்களும் தனியுரிமைக் குத்தகைக்காரர்களும் கலந்துரையாடத் தனித்தமர்வர். தம் முடிவுகளை அறிவிக்கும்பொருட்டு மறுபடியும் கூடுவர். பொதுமக்கள் சபை கூடுவதற்கான ஒரு தனிப்பட்ட இடம் கிடையாது. ஆனால் இவர்கள் குருமார் மடத்தின் ஒரு பகுதியிலோ வெஸ்ட்மின்ஸ்டரில் இருந்த அறையிலோ வழக்கமாகக் கூடியிருக்கலாமெனத் தெரிகிறது. 'வெஸ்ட்மின்ஸ்டர் திருமடத்தின் குருமார் கூடுமிடத்திற் சென்றிருந்து கலந்துரையாடித்' தமக்குள்ளே முடிவெடுத்துத் திரும்புமாறு சபையினருக்கு 1376-ல் அறிவிக்கப்பட்டதாகத் தெரியவருகிறது. சபை நிகழ்ச்சிகளை ஒழுங்குபடுத்த நிலையான கட்டளைகள் அல்லது நடைமுறை விதிகள் கிடையா. பாராளுமன்றத்தின் பார்வையில் இருப்பவைகளை மனந்திறந்து பேசவும், இவர்களுடைய ஆய்வுரையை இரகசியமாக வைத்திருக்கவும் தமக்குள் பற்றுறுதிப் பிரமாணம் எடுத்துக்கொள்ளவும் 1376-ல் சபையினர் கடன்பட்டனர். எண்கோணமான மன்றத்தைச் சுற்றி இவர்கள் அமர்ந்திருந்தனர். பேச விரும்புவோர் மன்றத்தின் ஒரு முனையில் இருந்த சொற்பொழிவு மேடைக்குச் சென்று பேசினர். இவர்களுடைய ஆழ்ந்தாராய்வு முடிந்தவுடன் இவர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுத்துச் சபையின் முடிவுகளை அரசருக்குத் தெரிவித்தனர்.

வீரத்திருத்தகைகள், நகரினர் ஆகியோரைப் பாராளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுத்த நடைமுறைபற்றி யொன்றும் தெளிவாகத் தெரியவில்லை; ஆயினும், மாவட்ட வீரத்திருத்தகைகள் பாராளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட முறையில் கண்ட முறையற்ற செயல்களைப் பாராளுமன்றம் 1406-ல் குறை கூறியது. இதன்படி, புதிய பாராளுமன்றக் கூட்டத்திற்கான அழைப்புக் கட்டளை, மன்றம் கூடவேண்டிய இடத்தையும் நாளையும் அறிவித்த

பின், மாவட்ட நிதிமன்றத்தின் முதற் கூட்டம் அழைக்கப்பட வேண்டுமென விதிக்கப்பட்டது. இதன் பின், அங்குக் கூடியுள்ள வர்கள் 'சுயேச்சையாகவும் நடுநிலை தவறுமலும்' "வீரத்திருத் தகைகளைத் தேர்ந்தெடுக்கத் தொடங்கவேண்டும்.

தேர்ந்தெடுக்கப்பட வேண்டியவர்கள், பாராளுமன்றக் கூட்டத்திற்கான அழைப்புக் கட்டளை வெளியான அந்நாளில் மாவட்டம், நகரம் ஆகிய இடங்களில் நிலையாகித் தங்கி வசிப்பவர் களாக இருக்கவேண்டுமென்பதை 1413-ல் நிறைவேறிய சட்டம் வலியுறுத்தியது. இதேபோல், வாக்காளர்களும் இதே இடங் களில் நிலையாகத் தங்கி வசிப்பவர்களாக இருக்கவேண்டும். சில ஆண்டுகளுக்குப் பின், 40 ஷில்லிங் ஆண்டு வருமானமாகப் பெற் றிருந்தவர்களுக்குமட்டுமே வாக்குரிமை அளிக்கப்படும் வகையில் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன.

15ஆம் நூற்றுண்டில் இயற்றப்பட்ட சட்டங்களைப் பார்க்கும் பொழுது இக்காலத்திய பாராளுமன்ற நடவடிக்கைகளில் மக்கள் பேரார்வம் காட்டியிருப்பதைக் குறிப்பிடலாம். பொதுமக்கள் சபையின் வளர்ச்சி வரலாற்றிற்கு 1375—1425-க்கும் இடைப் பட்ட அரைநூற்றுண்டு காலத்தில் சில சான்றுகள் கிடைக்கின்றன. 1376-ல் பொதுமக்கள் சபையினர் தம்மில் ஒருவரைத் தம் சார்பில் அரசரிடம் பேசத் தேர்ந்தெடுத்தனர். அடுத்த ஆண்டில் முறையாகச் சபாநாயகர் (Speaker) ஒருவர் அமர்த்தப்பெற்ற செய்தியை உறுப்பினர் பெயர் பட்டியலில் இருந்து தெரிந்து கொள்ளலாம். இச் சபையினரின் இசைவின்றிச் சட்டமெதுவும் இயற்றலாகாதென்பதும் 1414-ல் உறுதியாயிற்று. இத்துடன் இவர்கள் விண்ணப்பத்திற்கு மாருகச் சட்டம் எதுவும் இயற்றப் படலாகாதென்பதையும் அரசர் ஏற்றுக்கொண்டார்.

ரோசாமலர் போர்களின்போது (Wars of Roses) பாராளு மன்றம் செயலற்றிருந்தது. குழப்பமான இக்காலத்தில் வலிமை மிக்கதோர் அரசாங்கத்தை மக்களுக்கு அரசரால்தான் கொடுக்க முடிந்தது. எனவே, 24 ஆண்டு ஆட்சிக்காலத்தில் பாராளு மன்றத்தை ஏழாம் ஹென்றி ஏழு தடவைகள்தான் கூட்டினுர். இருப்பினும், தம்முடைய கொள்கைகளை நிறைவேற்ற எட்டாம் ஹென்றி பாராளுமன்றத்தைப் பயனுள்ள கருவியாகப் பயன் படுத்திக்கொண்டார். தாம் காத்தரினேடு செய்துகொண் டிருந்த திருமணத்தை 1533-ல் அரசர் விலக்கிக்கொண்டார். 1534-ல் இங்கிலாந்தின் திருச்சபையின் உயர் தலைவராகத் தம்மை ஆக்கிக்கொண்டார்.

எலிசபெத் அரசியாரும் பாராளுமன்றத்தைத் தொடர்ந்து பயன்படுத்திக்கொண்டார். தம் கொள்கைக்கு ஆதரவு திரட்டும் நோக்கத்துடன் பல பிரிவி கவுன்சிலர்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். தம் முன்னோர்களைப் போல் வேலைகள் முடிந்தவுடன் இவர் பாராளுமன்றத்தைக் கலைத்துவிடவில்லை. ஆகவே பாராளு மன்றம் நிலையானதாயிற்று. ஆனாலும் இதன் அதிகாரம் அரசி யாரின் கட்டுப்பாட்டில்தான் இருந்தது. அரசியாருக்கும் பாராளு மன்றத்திற்கும் கருத்து வேறுபாடு இருந்தது. பாராளுமன்றத் திற்குத் தொடர்பில்லாத வெளி விவகாரங்களில் இது அக்கறைக் காட்டிய பொழுது அரசியார் சபாநாயகரைக் கடிந்து கொண் டார். குறிப்பாக, பாராளுமன்றம் பிடிவாதம் செய்கிற பொழுது இவர் எடுத்துக் கொண்டதை நிறைவேற்றத் துணிச்ச லாக உடன்பாடுகள் செய்து கொண்டார்.

டியுடர் மன்னர்களின் காலத்தில் பாராளுமன்ற நடை முறைகள் உறுதிபடுத்தப்பட்டன. நிருவாகத்திற்கெதிராகப் பாராளுமன்றத்தைப் பாதுகாக்கவும், ஒரு பெரிய சபையின் விவாதங்களில் ஒழுங்கை நிலவச் செய்யவும் இவ்வளர்ச்சி அவசிய மாயிற்று. அதே சமயத்தில் இரு சபைகளின் அன்றாட நிகழ்ச்சிகள் வருங்காலத்தினருக்கு வசதியாக இருக்கும் பொருட்டு பதிவு செய்யப்பட்டன. 1547-இல் வெஸ்ட்மின்ஸ்டர் அரண்மனையின் செயிட் ஸ்டிபன் திருச்சபையில் பாராளுமன்றக் கட்டிடம் ஒன்று நிலையாக அமைந்தது. எலிசபெத் அரசியாரின் ஆட்சிக்காலத்தின் போது பாராளுமன்றக் குழு (Committee) முறை தொடக்கி வைக்கப்பட்டது.

### ஸ்டுவர்டுகள்

பாராளுமன்றத்தைப் பயன்படுத்தித் தம் விருப்பங்களை நிறை வேற்ற இதன் இசைவைப் பெறுவது எப்படியென்பதை டியுடர்கள் அறிந்திருந்ததைப் போல் ஸ்டுவர்டுகள் அறிந்திருக்கவில்லை. மேலும் பொருள்களின் விலையேற்றம் பாராளுமன்றத்தைக் கூட்டு மாறு இவர்களைத் தூண்டியது. பொருளுதவியளிக்கப் பாராளு மன்றங்கள் அடிக்கடி கூட்டப்பட்டன. தன்நிதிக் கட்டுப்பாட்டின் வழியாகப் பொதுமக்கள் சபை குறிப்பிட்ட சில உரிமைகளை ஏற் படுத்தியது. இவைகளை அடிப்படையானவைகளாகவும் சபை கருதியது. எனினும், சிறப்பதிகாரங்களின் அடிப்படையில் பொதுச்சட்டங்கள் வழியாக அரசர்கள் பல அதிகாரங்களைப் பெற்றிருந்தார்களென்பதும் மறுக்க முடியாத உண்மையாகும். பாராளுமன்றத்தைக் கூட்டுவதும் கலைப்பதும், சட்டங்களை விலக்கி

வைப்பதும் தள்ளி விடுதலும், படையை வைத்திருப்பதும், சட்டத் திறனுடைய பேரறிக்கைகளை வெளியிடுதலும், சில வரிகளை விதிப்பதும் இவைகளில் அடங்கும். ஆனால் முதலாம் ஜேம்ஸ் இவைகளோடு நிற்காமல் மேலும் மிகையான அதிகாரங்களை நாடினார். இவருடைய 'இறையுரிமைக் கோட்பாடு', இவரைச் சட்டத்திற்கும் பாராளுமன்றத்தின் அதிகாரத்திற்கும் அப்பாற்பட்டதாகச் செய்தது. அரசரே அரசாங்கத்தை நடத்த வேண்டுமா? அல்லது டியுடர்கள் காலத்தில் இருந்ததுபோல் அரசரும் பாராளுமன்றமும் (King-in-Parliament) அரசாங்கத்தை நடத்தவேண்டுமா? என்பது பிரச்சினையாக இருந்தது. உள்நாட்டுப் போர் பாராளுமன்றத்தின் சட்ட இறைமையை முடிவாகத் தீர்த்து வைத்ததெனினும், இக்கருத்து 1689-வரை இறுதியாகச் செயல்படுத்தப் படவில்லை.

கிராம்வெல்லின் காலத்தில் இங்கிலாந்து ஒரு குடியரசான போது கிராம்வெல்லும் பாராளுமன்றமும் இங்கிலாந்தை ஆட்சி செய்தனர். இதிலும் பாராளுமன்றத்தின் மேல்சபையாகிய பெருமக்கள் சபை இன்றிப் பொதுமக்கள் சபையே பாராளுமன்றமாக இருந்து ஆட்சியில் பங்கு பற்றியது. கிராம்வெல்லின் ஆட்சி தோல்வியுற்ற பொழுது 1660-ல் மீண்டும் முடியாட்சி நிறுவப்பட்டபொழுது பாராளுமன்றத்தின் துணையோடு அரசர் நடத்தும் பழைய அரசாங்க முறையே மிக நன்றாகச் செயல்பட்டதால் அம்முறையையே விரும்பினர்.

முன்னிலை மீட்சியை விரும்பியவர்கள் அரசருக்கும் பாராளுமன்றத்திற்குமிடையேயான அரசியலமைப்பு வழி உறவுமுறையினைச் சட்டமாக வரையக் கூட விரும்பவில்லை. இதற்காக ஓர் உள் நாட்டுப் போர் நடந்ததையே மக்கள் மறந்து விட்டனர். சட்டப்படி அரசரின் சிறப்பு அதிகாரங்கள் மாற்றப்படவுமில்லை இவைகளை இனிமேல் எப்படிச் செயல்படுத்த வேண்டும் என்பதற்கான மரபுகளும் நிறுவப்படவில்லை. ஆகையால், மறுபடியும் அரசருக்கும் பாராளுமன்றத்திற்கும் மோதல் ஏற்பட்டது. 1688-ல் இரண்டாம் ஜேம்ஸ் பதவியிலிருந்து நீக்கப் பெற்றார். நூறு ஆண்டுகளுக்கு முன் உறுதி செய்யப்பட்ட அரசரின் சிறப்பு அதிகாரங்கள் சட்ட உருவில் உரிமைகள் மசோதாவில் வரையறை செய்யப்பட்டன.

### 18-ஆம் நூற்றாண்டு

பாராளுமன்றத்தின் வரலாற்றில் அடுத்த இரண்டு நிலைகள் கேபினெட் அமைச்சவை முறையையும் பொதுமக்கள் சபையின்

சீர்திருத்தத்தையும் பொதுமக்கள் சபைக்கும் (House of Commons) பெருமக்கள் சபைக்கும் (House of Lords) இடையில் உள்ள உறவு முறையில் ஏற்பட்ட மாற்றங்களேயும் பற்றியவையாக இருந்தன. இவைகள் பின் வரும் அதிகாரங்களில் விரித்துரைக்கப்பட்டிருக்கின்றன.

18ஆம் நூற்றுண்டு முழுவதும் அரசர் பாராளுமன்றத்தைத் தமக்கு வசதியான போதுமட்டுமின்றித் தவறுமலும் கூட்டினர். ஏனென்னில் நிலேப்படையொன்றை ஓர் ஆண்டு வைத்துப் பேணுவதற்கு மட்டுமே பொருளுதவி பெற படைச்சட்டம் (Mutiny Act) வகை செய்தது. பாராளுமன்றத்தின் பதவிக்காலமும் மூன்றுண்டிலிருந்து ஏழாண்டிற்கு 1716-ல் உயர்த்தப்பட்டது. உள்நாட்டில் ஏற்பட்ட கட்சிச் சண்டைகளும், வாரிசுரிமைப் போர்களும், வெளியே நாட்டிற்கு ஃபிரான்ஸோடு ஏற்பட்ட போரும் நாட்டைக் குழப்பத்தில் ஆழ்த்திய பொழுது கடந்த நூற்றுண்டில் பெற்ற வெற்றியைப் பொதுமக்கள் சபையினர் உறுதிப்படுத்த வேண்டியது இப்பொழுது முதற் கடமையாக இருந்தது. அரசரின் சட்டப்படியிலான அதிகாரங்களேயும் பாராளுமன்றத்தின் தனி முதன்மையையும் இணக்கமாகச் செயல்படுத்தச் சபையினர் ஒரு முறையை உருவாக்க வேண்டியிருந்தது. பாராளுமன்றத்திற்குள் தோன்றிய கட்சிகள், பிரதம அமைச்சர், கேபினெட் ஆகிய புதிய நிறுவனங்களில் இதற்கான விளக்கம் காண வேண்டியிருந்தது. 1832-க்கு முன் இவைகளிலெல்லாம் முக்கியமான மாறுதல்கள் ஏற்பட்டு விட்டன. ஆனலும் பாராளுமன்றச் சீர்திருத்தம் ஏற்படும் வரையில், இப்போதைய பாராளுமன்ற முறை அரசாங்கத்தில் இவைகள் ஒன்ருக இணைக்கப்படவில்லே.

சீர்திருத்த இயக்கங்கள் 17 ஆம் நூற்றுண்டின் இறுதியில் தோன்றினலும் ஃபிரெஞ்சுப் புரட்சிக்குப் பின் ஏற்பட்ட எதிர் விளேவுகளின் பயனல் இவைகள் செயல் வேகம் பெறத் தவித்து தோல்வியுற்றன. இருந்தபோதிலும், ஒரு முக்கியமான முன்னேற்றம் காணப்பட்டது. ஜான் வில்கிஸ்(John Wilkes) என்பாரின் பெருமுயற்சியின் பயனக 1771-ல் பாராளுமன்ற விவாதங்களே வெளியிடப் பொதுமக்கள் சபை அனுமதியளித்தது. மக்களாட்சி முறையில் இது ஒரு முக்கியமான வளர்ச்சியாகும்.

1832-ல் இருந்து இன்று வரை அரசியல் இறைமையை வாக்காளர்களுக்கு அளித்ததால் 1832 ஆம் ஆண்டுச் சீர்திருத்தச் சட்டம் முக்கியமானதாகிறது. ஆனல் இந்த அரசியல் இறைமை

யோடு பாராளுமன்றத்தின் தனி முதன்மையை இணங்கிச் செயல் படுமாறு செய்ய வேண்டும். இது எவ்வாறு சாதிக்கப்பட்டதென் பதைப் பின்னர் பார்ப்போம்.

சுருங்கக் கூறின், பாராளுமன்றத்திலிருந்து கட்சி முறையை நாட்டிற்குக் கொண்டு செல்வதாலும் கேபினெட் முறை அரசாங் கத்தோடு கட்சிகளை இணைப்பதாலும் பாராளுமன்றத்தின் வழக்க மான அலுவல்களை எதிர் கட்சி ஏற்குமாறு செய்வதாலும் பொது மக்கள் சபைக்கும் பெருமக்கள் சபைக்கும் இடையேயான உறவு முறையை உருவாக்குவதாலும் உறுதியான தடையை எதிர்த்துத் திறமையான் அரசாங்கம் ஒன்று செயல்பட வசதியாகப் பாராளு மன்ற முறையை மாற்றியமைப்பதாலும் பெருகி வரும் அரசின் செயல்களுக்கேற்ப நேரத்தைச் சிக்கனப்படுத்துவதாலும் இதை நிறைவேற்றலாம்.

மேலும் படித்தற்குரிய சில நூல்கள்

G. E. A. Golliffe, 'Constitutional History of Meaievral England.' 1961.

Mackenzie, Kenneth, "The English Parliament.' Pollard, A. F. The Euolution of Parliament.

# 2. பெருமக்கள் சபை
## (House of Lords)

பிரிட்டிஷ் பாராளுமன்றம் இரு சபைகளைக் கொண்டதாகும். ஒன்றைப் பொதுமக்கள் சபையென்றும் (House of Commons) இன்னொன்றைப் பெருமக்கள் சபையென்றும் ஆங்கிலேயர்கள் குறிப்பிடுகிறார்கள். வழக்கமாகப் பெருமக்கள் சபை இரண்டாவது சபை (Second Chamber) அல்லது மேல்சபை (Upper House) என்று அழைக்கப்படுகிறது. ஆனால் வரலாற்று அடிப்படையில் இது முதல் சபையாகும். உலகில் உள்ள சட்ட மன்றங்களில் இது மிகத் தொன்மையானதாகும். தொடர்ந்து பத்து நூற்றாண்டுகளுக்கு மேல் இது செயல்பட்டு வந்துள்ளது. கிராம்வெல்லின் ஆட்சிக் காலத்தில்தான் இச் சபை பதவியில் இருக்கவில்லை. சாக்சானியர்களின் மூதறிஞர் (Wittan) அவையின் பின் தோன்றிய பேரவையின் (Great Council) வழி வந்ததுதான், இன்றைய பெருமக்கள் சபை. தொடக்கத்தில் நாட்டின் செல்வர்களும், பெருநிலக்கிழார்களும் மேற்றிராணியார்களும், பெருங்குடிமக்களும் இதன் உறுப்பினர்களாக இருந்தனர். இச்சபைக்கு அரசர் தலைவராக இருந்தார். 'நிலச் சொந்தக்காரர்கள்தான் ஆட்சி செய்ய வேண்டு'மென்னும் கருத்தின் அடிப்படையில் பாராளுமன்றத்தின் அதிகாரங்களையெல்லாம் இச்சபையினர் பெற்றுச் செயல்படுத்தி வந்தனர்.

14ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் நார்மானிய அரசர்களின் நிலமானியப் பேரவை (Magnum Councilium) பெரும் நிலக்கிழார்களைக் கொண்டிருந்தது. இதுவே, நாட்டின் பெருமக்கள். குருமார், பொதுமக்கள் ஆகிய மூன்று வகுப்புகளின் பிரதிநிதிகளைக் கொண்ட பாராளுமன்றமாக வளர்ச்சியடைந்தது.

அடுத்து, பாராளுமன்றம் இருசபைகளாகப் பிரிந்தது. ஆனால் எட்டாம் ஹென்றியின் காலம் வரை, பெருமக்கள், குருமார்கள்

ஆகியோரின் கூட்டம் 'பெருமக்கள் சபை' யென விவரிக்கப்படவில்லை, இச் சமயத்தில் பெருங்குடியினர் தொகுதி (Peerage) என்னும் கருத்தில் முற்றிலும் புதியதொரு வளர்ச்சி ஏற்பட்டது. உரிமைத் தகுதி பெற்றவர்களும், இவர்களின் வழி வந்தவர்களும், அரசரின் தனிமுறை அழைப்புக் கட்டளை பெற்றவர்களும், இரண்டாவது ரிச்சர்டு அரசராலும் இவருக்குப்பின் வந்தவர்களின் காப்புரிமைப் பட்டயத்தால் படைக்கப் பெற்ற மெருமக்களும் இச் சபையில் இருந்தனர்.

### 14, 15- ஆம் நூற்றுண்டில் பெருமக்கள் சபையின் அமைப்பு

இரண்டு அதிமேற்றிராணியார்களையும், 18 மேற்றிராணியார்களையும், 28 திருமடத் தலைவர்களையும் பல பெருமக்களையும் இச் சபை உறுப்பினராகக் கொண்டிருந்தது. நிலமானியக் குத்தகைப் பெருங்குடிகள் என்ற முறையில் இவர்கள் சபையில் கலந்து கொள்ளும் உரிமைப் பெற்றனர். மேல்நிலைப் பெருங்குடி மக்கள் பேரவைக் கூட்டத்தில் கலந்து கொள்ள தனிமுறை அழைப்புக் கட்டளையை அரசரிடமிருந்து பெறும் உரிமை பெற்றிருந்தனரென்பது மகாசாசனத்திலிருந்து தெரிய வருகிறது. இத்தகைய அழைப்புக் கட்டளை பெற்றவர்கள் தாமும் தம்வழி வந்தவர்களும் இதைப் பெறும் உரிமை பெற்றவர்களாகக் கருதிக் கொண்டனர்.

1295-க்கு பின், குருமார் தொகுதியின் பிரதிநிதிகள் பாராளுமன்றத்தில் கலந்து கொள்ள விரும்பவில்லை. ஏனெனில் சமயச் சார்பில்லா ஒரு குழுவில் பாமரர்களோடு கலக்க இவர்கள் விரும்பவில்லை. சமய குருமார்களின் கூட்டத்தின் வழியாகத் தேவையான உதவித் தொகையை அரசர் பெற்றதால் இவர்கள் பாராளுமன்றத்திற்கு வராததை அரசர் பொருட்படுத்தவில்லை. உயர்நிலைக் குருமாரான மேற்றிராணியார்களும் திருமடத் தலைவர்களும் சபைக்கு வந்தனரென்றால் குருமார் என்ற முறையில் வரவில்லை. ஆனல் அரசரின் நிலமானியப் பெருங்குடியினர் என்ற முறையில் சபைக்கு வந்தனர். ஆகவே, பெருங்குடிமக்களோடு சமயம் சார்ந்த பிரபுக்களும் சேர்ந்து பெருமக்கள் சபையில் அமர்ந்து கொண்டது இயல்பேயாகும்.

மாவட்ட வீரத்திருத்தகைகளும் மேல்நிலைப் பெருங்குடியினரின் வகுப்பைச் சேர்ந்தவர்களாக இருப்பினும் தனிமுறையில் இவர்களுக்கு அழைப்புக்கட்டளை அனுப்பும் அளவிற்கு முக்கியமானவர்களாகக் இவர்கள் கருதப்படவில்லை. மாவட்டங்களின் பிரதிநிதிகளால் மாவட்ட நீதிமன்றங்களில் இவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். எனவே, இவர்கள் மாநகர்ப் பிரதிநிதிகளோடும்

சேர்ந்து உட்கார்ந்து கொண்டார்கள். இச்சபை பொதுமக்கள் சபையாக அமைந்தது.

1295-ல் கூட்டப் பெற்ற 'மாதிரிப் பாராளுமன்றத்'தில் 90 சமயச்சார்புள்ள பெருமக்களும், 48 நிலமானியப் பெருமக்களும் இருந்தனர். சமயச் சீர்திருத்த இயக்கம் தோன்றும் வரையில் குருமார் தொகுதியினர் சபையில் பெருமளவில் இருந்தனர். ஒவ்வொரு மேல்நிலைக் குத்தகைக்காரரும் நார்மானியர்களின் காலத்தில் அரசரின் அவைக்குக் கடமைப் பொறுப்புள்ளவர்களாக இருந்தனர். ஆனால் இரண்டாவது ஹென்றியின் காலத்தில் மேல் நிலைக் குத்தகைக்காரர்கள் தனிமுறை அழைப்புக் கட்டளையைப் பயன்படுத்தி சபைக்கு அழைக்கப்பட்டார்கள். நிலக் குத்தகை அடிப்படையில் பெருங்குடியினர் அழைக்கப்பட்டது போக, இப் பொழுது அழைப்புக் கட்டளைகளால் அழைக்கப்பட்டனர், உயர் பெருங்குடியினராக யாரை அழைப்பதென்பதிலும், யாரைக் கீழ்நிலைப் பெருங்குடியினரோடு விடுதல் என்பதிலும் முதலில் சற்று குழப்பம் காணப்பட்டது. கட்டளையால் ஒரு முறை அழைக்கப் பட்ட பெருங்குடி மக்கள் பேரவையில் கலந்து கொள்ள உரிமை பெற்றதோடு இவர்களுடைய வழித் தோன்றல்களுக்கும் இதே உரிமை உண்டென்பது சிறிது சிறிதாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. காப்புரிமைப் பட்டயத்தால் பெருமக்கள் படைக்கப்படும் முறை 14 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இருந்தது. அழைப்புக்கட்டளை களால் பெருமக்கள் படைக்கப்படுவதை சிறிது சிறிதாக இது அகற்றியது. மூன்றும் எட்வர்டு, கோமான்களை முதலில் உண்டாக் கினார். 15 ஆம் நூற்றாண்டில் இவருக்குப்பின் வந்த அரசர்கள் மார்க்குவிஸ்களையும் (Marquis) வைகவுண்டுகளையும் (Viscount) உண்டாக்கினார்கள். மேற்றிராணியார், மடத்தலைவர்கள். இன்னும் மற்ற உலகியர் பெருமக்கள் ஆகியவர்களோடு அரசருக்குச் சட்டச் சார்புடையவைகளில் அறிவுரை அளிக்க நீதிபதிகளும் சட்ட அறிஞர்களும் இச் சபையில் அமர்த்தப் பட்டனர். இவர்கள் சபையில் இருப்பினும் வாக்கெடுப்பில் கலந்து கொள்வதில்லை.

இக் காலத்தில் இச் சபை வரி விதிப்பு, சட்டமியற்றல், விசா ரித்தல், நீதிவழங்குதல் ஆகிய நான்கு பணிகளைச் செய்து வந்தது. முதலில் பொதுமக்கள் சபையைப் போல் பெருமக்கள் சபையும் அரசருக்கு உதவித்தொகை அளித்தது. ஆனால் நூறாண்டுகளுக்குப் பின், உதவிப் பணம் அளிப்பதில் இரு சபைகளும் பங்கு பற்றுதல் வழக்கமாயிற்று. 1395-ல் ஒரு புதிய விதிமுறை பின்பற்றப் பட்டது. 'பெருமக்கள் சபையின் இசைவோடும் அறிவுரை

யோடும் பொதுமக்கள் சபை உதவித் தொகையளித்தது.' வரி விதிப்பை முதலில் கொண்டு வருவதை 1407-ல் பொதுமக்கள் சபை தன் முழு உரிமையாக்கிக் கொண்டது. இதன்பின், 'தேசிய நிதியின் மீதான கட்டுப்பாட்டில் பெருமக்கள் சபை கீழ்ப்படிந்து நடக்கத் தொடங்கியது.

சட்டமியற்றுவதில் முதலில் பொதுமக்கள் சபை பெருமக்கள் சபைக்கு கீழ்ப்பட்டதாக இருந்தது. 1322-வரையிலும் சட்டங் களுக்குப் பொதுமக்கள் சபையின் ஏற்பு தேவையெனக் கருதப் படவில்லை. இதற்குப் பின்னும் பாராளுமன்றத்தின் விண்ணப் பத்தையொட்டி அரசர் சட்டமியற்றி வந்தார். ஆறும் ஹென்றி யின் காலத்தில் தான் விண்ணப்பங்களையொட்டி சட்டமியற்று வதற்குப் பதிலாக மசோதா அடிப்படையில் சட்டமியற்றப் பட்டது. பின்னர் சட்டமியற்றுதலில் பொதுமக்கள் சபை பெருமக்கள் சபையோடு சமமான அதிகாரத்தைப் பெற்றது.

பொதுமக்கள் சபையைப் போல் பெருமக்கள் சபையும் பொதுக் கொள்கை பற்றி விவாதித்து அரசருக்கு அறிவுரை அளித்தது. இந்த அதிகாரம் இச் சபைக்கு இன்னும் இருந்து வருகிறது.

பாராளுமன்றம் தோன்றுவதற்கு முன், முறையீடுகளைக் கேட்பதில் பேரவை மிக உயர்ந்த நீதிமன்றமாக இருந்தது. பாராளுமன்றம் தோன்றியபின் இவ்வதிகாரம் இச் சபைக்கு மாற்றப்பட்டது.

### 16, 17ஆம் நூற்றுண்டில் இச் சபையின் வளர்ச்சி

16ஆம் நூற்றுண்டில் இச் சபை சில சிறப்புரிமைகளை ஏற்படுத் தியது. இவ்வுரிமைகள் பின்னர் உறுதி செய்யப்பட்டன. கைது செய்யப்படுவதிலிருந்து சுதந்திரம், பேச்சுரிமை, ஜுரிப் பணிகளி லிருந்து விடுவிப்பு, சபையை அவமதித்த குற்றத்திற்காகத் தண் டித்தல், தனித்து அரசரை அணுகுதல், பெரும்பான்மை முடிவு களுக்கெதிராக கருத்துகளை சபையின் ஏடுகளில் பதிவு செய்து கொள்ளுதல், சபை உறுப்பினர் பதவிக்கான தகுதி பெற்றிராத வர்களை சபையிலிருந்து அகற்றுதல் ஆகிய உரிமைகளை பொது மக்கள் சபையோடு இச் சபையும் பகிர்ந்து கொண்டது.

எட்டாம் ஹென்றியின் மடாலய ஒழிப்புத் திட்டத்தின் பயனாக பெருமக்கள் சபையின் அமைப்பில் பெரு மாற்றம் காணப் பட்டது. எட்டாம் ஹென்றி அரியணையேறியபோது சபையில்

இரண்டு அதிமேற்றிராணியார்களும் 19 மேற்றிராணியார்களும் 28 திருமடத் தலைவர்களும், அதாவது மொத்தத்தில் 49 குருமார்களும் 36 உலகியற் பெருமக்களும் சபையில் இருந்தனர். மடங்களின் ஒழிப்பினுல் மடத்தலைவர்கள் சபையில் தம் இடங்களை இழந்தனர். இதன் பயனுக சமயம் சார்ந்த பெருமக்களின் எண்ணிக்கை 26ஆகக் குறைந்தது. டியுடர் மன்னர்கள் சிலர் உலகியற் பெருமக்களைப் படைத்தனர். இதன் விளைவாக இவர்களின் ஆட்சியின் இறுதியில் உலகியற் பெருமக்களின் எண்ணிக்கை 80 ஆக உயர்ந்தது. எனவே, இப்பொழுது குருமார்களைவிட உலகியற் பெருமக்களே பேராதிக்கம் பெற்றிருந்தனர். குருமார்களும் மேற்றிராணியார்களும் இப்பொழுது அரசரால் அமர்த்தப் பெற்றவர்களாக இருந்தனர். ஆகவே பெருமக்கள் சபையின் அமைப்பில் இப்பொழுது அரசர் பெருமதிகாரம் பெற்று விளங்கினுர். முதலாம் ஜேம்ஸ் காலத்திலிருந்து உலகியற் பெருமக்கள் தாராளமாகப் படைக்கப்பட்டனர். விக்டோரியா அரசியார் காலத்தில் மட்டும் 300 பெருமக்கள் படைக்கப்பட்டனர். இப்பொழுது சபையில் பெருமக்களின் எண்ணிக்கை 790 ஆக இருந்தது. உலகியல் பெருமக்கள் மரபுரிமை வழி வந்தவர்களாக இருப்பதால் சபை பெருமளவு மரபுரிமை வழி அமைந்ததாக இருக்கிறது.

ஸ்காட்டிஷ் ஐக்கிய சட்டத்தின் (1707)படி, ஒரு பாராளுமன்றத்திற்கு ஸ்காட்டிஷ் பெருமக்களின் சார்பில் 16 பெருமக்களை தேர்ந்தெடுத்துச் சபைக்கனுப்ப வேண்டும். ஐரிஷ் ஐக்கியச் சட்டத்தின்படி (1800) அயர்லாந்தின் பெருமக்கள் தொகுதியினரின் சார்பில் 28 பிரதிநிதிகள் சபையில் கலந்து கொண்டனர். இவர்கள் உயிரோடு இருக்கும்வரை சபையின் உறுப்பினராக இருக்கலாம். இந்த ஸ்காட்டிஷ், ஐரிஷ் பெருமக்கள் சபையின் புதிய அம்சமாக இடம் பெற்றனர்.

உள் நாட்டுப் போர்கள் நடந்த காலம் வரையில் இரு சபைகளும் சேர்ந்தே ஸ்டுவர்டு மன்னர்களை எதிர்த்தன. 1642-ல் பெரும்அளவில் பெருமக்கள் அரசர் பக்கம் சென்றனர். 1642-ல் பொதுமக்கள் சபை, பெருமக்கள் சபை ஆங்கில மக்களுக்குப் 'பயனற்றது, ஆபத்தானது' என்று கூறி இதை அகற்றிவிட்டது. பின் 1660-ல் முன்னிலை மீட்பின்போது சபை மறுபடியும் நிறுவப் பெற்றது.

முன்னிலை மீட்புக்குப் பின் இரு சபைகளுக்குமிடையே வரி விதிப்பு, நீதிமன்றத்திற்குகந்த பணிகள் ஆகியவை பற்றி என்றும்

நிகழ்ந்திராவகையில் கடுமையான மோதல் ஏற்பட்டது. 1688-ல் ஸ்கின்னருக்கும் கிழக்கிந்தியக் கம்பெனிக்குமிடையில் (Skinner Vs East India Company) எழுந்த வழக்கொன்றில், பெருமக்கள் சபை தனி முதல் விசாரணை உரிமை தனக்கு உரியதென்றது. கம்பெனிக்கெதிராக ஸ்கின்னர் பெருமக்கள் சபைக்கு முறையிடுவதில் வெற்றி பெற்றார். இந்த வழக்கை விசாரிக்கப் பெருமக்கள் சபைக்கதிகாரமில்லையென பொதுமக்கள் சபை வாதித்தது. இரு சபைகளுக்குமிடையில் உருவான இக் கடுமையான மோதலை அரசர் தலையிட்டுத் தகர்த்தார். இக்காலத்திலிருந்து உரிமைகள் பற்றிய வழக்குகளில் பெருமக்கள் சபை தனி முதல் விசாரணை அதிகாரத்தைக் கைவிட்டது. மீண்டும் 1675-ல், செர்லிக்கும் ஃபாக்கிற்கும் (Shirely to Fagg) இடையில் எழுந்த வழக்கையொட்டி இரு சபைகளும் மோதிக் கொண்டன. சான்சரி (Chancery) நீதிமன்றத் தீர்ப்பை எதிர்த்துப் பெருமக்கள் சபையில் செர்லி முறையிட்டார். பெருமக்கள் சபைக்கு மேல் விசாரணை அதிகாரம் கிடையாதென பொதுமக்கள் சபை தெரிவித்தது. இத்தகராறில் மேல்சபை தன் அதிகாரத்தைத் தக்க வைத்துக் கொண்டது. பண மசோதாக்களைப் பெருமக்கள் சபை கொணர்வதை அல்லது திருத்துவதைப் பொது மக்கள் சபை எதிர்த்தது.

1688ஆம் ஆண்டுப் புரட்சிக்கும் 1832ஆம் ஆண்டு சீர்திருத்தச் சட்டத்திற்கும் இடைப்பட்ட காலத்தில் பெருமக்கள் சபை தன் அதிகாரத்தின் உச்ச நிலையை எட்டியது. விக் (Whigs) உயர் குடியினர் புரட்சிக்குக் காரணமாக இருந்தனர். எனவே, புரட்சிக்குப்பின் அதிகாரத்தை இவர்கள் முழுமையாகக் கைப்பற்றினர். 18ஆம் நூற்றாண்டில் பெருங்குடி மக்களுக்கு போட்டியாளராக இருந்தார். உட்ரெக்ட் உடன்படிக்கையை டோரிகள் செய்து முடிக்க வசதியாகப் பெருமக்கள் சபையின் முழு வல்லமையைக் குலைக்கும் வகையில் அரசர் 12 பெருமக்களைப் படைத்தார்.

முழுமொத்தமாகப் பெருமக்கள் படைக்கப்படுவதைத் தடுக்கவும் சபையின் உயர்குடிப் பண்பைப் பேணவும் 1719, 1722ஆம் ஆண்டுகளில் சண்டர்லண்டு கோமான் பெருமக்கள் தொகுதியினர் (Peerage) மசோதா ஒன்றைச் சபையில் கொணர்ந்தார். உலகியல் பெருமக்களின் எண்ணிக்கையை நிலையாக 200 ஆக் வரையறுப்பது தான் இம் மசோதாவின் நோக்கமாகும். விக்குகளின் முயற்சியால் மசோதா தோல்வி கண்டது. பெருமக்கள் சபை தன் சிறப்பு நிலையைத் தக்க வைத்துக் கொண்டதோடல்லாமல் பொதுமக்கள் சபையும் இணக்கமாய்ச் செயல்பட்டது.

இதற்குப் பல காரணங்கள் உண்டு. 18ஆம் நூற்றுண்டின் அரசாங்க முறை, உடைமைகளை அடிப்படையாகக் கொண்டியங்கி வந்தது. பெருமக்களும் பொதுமக்களும் நிலக்கிழாரின் நலங்களுக்கு பாடுபட்டு வந்தன. இரு தரப்பிலும் பெரிய ஆட்கள், பிரதம அமைச்சர் பதவியைப் போல் உயர் பதவிகளையெல்லாம் பெருமக்களே வகித்தனர். தேர்தல் முறையின் பயனுக பொது மக்கள் சபையினரில் பெரும்பாலோர் பெருமக்களால் அமர்த்தப் பெற்றவர்களாக இருந்தனர். ஆகவே இரு சபைகளிலும் இடம் பெற்றிருந்தவர்களில் வேறுபாடு காணப்படவில்லை. இரண்டு சபைகளையும் கட்டுப்படுத்த அரசாங்கம் வாடிக்கையாதரவு முறையைப் பயன்படுத்தியது. மூன்றும் ஜார்ஜ் மன்னர் பெருமக்களைப் படைக்கும் முறையைக் கையாண்டு சபையினரின் எண்ணிக்கையை இரட்டித்து 400 உறுப்பினரராக உயர்த்தினுர். இவர்களில் பலர் பிட்(Pitt) என்பாரின் பரிந்துரையின் பேரில் அமர்த்தப் பெற்றவர்கள். இவர்களில் 28 உறுப்பினர் ஐரிஷ் ஐக்கியச் சட்டத்தால் (1800) சபையில் இடம் பெற்றனர்.

19ஆம் நூற்றுண்டில் மக்களாட்சியின் வளர்ச்சி காரணமாக சட்டமியற்றும் பணியில் பெருமக்கள் சபை பின்னுக்குத் தள்ளப் பட்டது.

### 19ஆம் நூற்றுண்டில் பெருமக்கள் சபை

இந்நூற்றுண்டில் இரு சபைகளுக்கிடையேயான உறவு மோசமாயிற்று. பெருமக்கள் மாற்றத்தை எதிர்த்தனர். முதலில் அரசரின் எதிர்ப்பிலுைம் பின்னர் பெருமக்கள் சபையின் எதிர்ப்பிலுைம் ரோமன் கத்தோலிக்க விடுதலை தடைப்பட்டது. 1831-ல் கொண்டு வரப்பட்ட சீர்திருத்த மசோதாவை பெருமக்கள் சபை கடுமையாக எதிர்த்தது. ஏனெனில் முதலில் பெருமக்கள் பெற்றிருந்த கட்டுப்பாட்டை இம்மசோதா தகர்த்தது. ஆயினும் மிகப் பெரும்பான்மையான வாக்குகளால் பொதுமக்கள் சபை இச் சீர்திருத்த மசோதாவை நிறைவேற்றியது. பெருமக்கள் சபையிலும் இம் மசோதா நிறைவேறத் தேவையான பெருமக்களைப் படைக்கப் போவதாக அரசர் அச்சுறுத்தவே சபை இம் மசோதாவை நிறைவேற்றியது. மக்கள் விரும்பும் ஒரு சீர்திருத்தத்தைப் பெருமக்கள் எதிர்க்கப் போதிய அதிகாரம் இல்லாததை உணர்ந்தனர்.

சீர்திருத்தச் சட்டம் 1832-ல் நிறைவேறியது. இதன் விளைவாக, பொதுமக்கள் சபைக்குத் தேர்தலுக்கு உறுப்பினர்களை நியமிக்கும் அதிகாரத்தைப் பெருமக்கள் இழந்தனர். பொது மக்கள் சபையின் அமைப்பை இனிமேல் இச்சபை கட்டுப்படுத்த

இயலாது போயிற்று. சமய வேறுபாடு காரணமாக பிரிட்டிஷ் குடிமக்களுக்குப் பல்கலைக் கழகங்கள் பட்டமளிக்க வகை செய்த பல்கலைக் கழக சோதனை மசோதா (Univercity Test Bill) பெரு மக்கள் சபையின் எதிர்ப்புக்குள்ளாயிற்று. தானியச் சட்டம் (Corn Law) 1846-ல் தான் இச் சபையில் நிறைவேறியது.

நிலச் சொந்தக்காரர்களின் செல்வாக்குப் பொதுமக்கள் சபையில் குறைந்து கொண்டிருக்கையில், பெருமக்கள் சபையில் இது அதிகரித்து வந்தது. இரு சபைகளுக்கிடையே வேற்றுமை பெருகிய பொழுது சட்டம், திருமண ரத்து, திருச்சபை ஆகிய வற்றை பற்றிச் சீர்திருத்தங்களை இச்சபை எதிர்க்கத் தொடங் கியது. கடனுக்காகக் கைது செய்யப்படுவதை நீக்குவதற்கான மசோதாவை 1869–வரை இச் சபை எதிர்த்தது. மக்களின் கருத்தை ஆதரவாகக் கொண்டு பாராளுமன்றத்தின் மற்றேரு சபை செயல்படுவதைப் பெருமக்கள் சபை, 'உறுதியாகவும், விடாப்பிடியாகவும், வளைந்து கொடுக்காமலும்' எதிர்த்த பொழுது 1860-ல் காகிதத்தின் மீதான தீர்வைகளை நீக்கும் மசோதாவையொட்டி இரு சபைகளுக்கிடையேயும் ஒரு மோதல் ஏற்பட்டது.

மலிவான நூல்களும் பத்திரிகைகளும் மக்களுக்குக் கிடைக்கச் செய்வதற்குக் காகிதத்தின் மீது விதிக்கப்பட்டிருந்த தீர்வையை அகற்ற இம் மசோதா நாடியது. ஒரு வரியை நீக்கப் பெருமக்கள் சபை எதிர்ப்பு தெரிவித்ததெனினும் இது அரசாங்கத்திற்கு ஒரு இக் கட்டான நிலையை உண்டாக்கவில்லை. ஆனால் அப்பொழுது நீதியமைச்சராக இருந்த கிளாட்ஸ்டன் (Gladstone) ஒரு கமிட்டியை அமைத்து முன்னிகழ்வுகளை ஆராயச் செய்தார். பெருமக்கள் சபைக்குப் பணமசோதாவை திருத்தவோ ஏற்க மறுக்கவோ அதிகாரமில்லையென இக் குழு முடிவு செய்தது. இக் கருத்தை ஒரு தீர்மானமாக அமைத்து. பால்மர்ஸ்டன் (Palmerston) சபையில் நிறைவேற்றினர். ஆண்டு வரவு செலவுத் திட்டத்தோடு இணைத்து இதை கிளாட்ஸ்டன் நிறைவேறச் செய் தார்.

1867ஆம் ஆண்டுச் சீர்திருத்தச்சட்டம் 100,000 வாக்காளர் களைச் சேர்த்ததால் வாக்காளர் தொகுதி இருமடங்காகப் பெரு கிற்று. நகரங்களில் வசித்த பெரும்பான்மையான தொழிலாளர் களுக்கு இச் சட்டம் வாக்குரிமை பெற வசதி செய்தது. இம் மசோதாவை கன்சர்வெடிவ் அரசாங்கம் கொண்டு வந்திராவிட் டால் பெருமக்கள் சபையினர் இதை எதிர்த்திருக்கலாம். இதன்

விளைவாக, இரு சபைகளின் உறவுமுறை பெரிதும்பாதிக்கப்பட்டது. நிலச் சொந்தக்காரர்களிடமிருந்து பொது மக்கள் சபை இன்னும் விலகியே இருந்தது. ஆனால் கட்சிகளின் புதிய அமைப்பினால் இச் சபை நடுத்தர வகுப்பினரோடும் தொழிலாளர்களோடும் புதிய தொடர்பு ஏற்படுத்திக் கொண்டது. அரசியல் அதிகாரம் இப்பொழுது பொதுமக்கள் சபையில் மையம் கொண்டிருந்ததாலும் முக்கியமான அமைச்சர்கள் இச் சபையில் இடம் பெற்றிருந்ததாலும் பெருமக்கள் சபையின் எதிர்ப்பை அரசாங்கம் மிகைப் படுத்தவில்லை, முற்போக்குத் திட்டங்களை உருவாக்கிய லிபரல்களுக்கும் இது பொருந்தும். ஐரிஷ் திருச்சபையின் அரசாங்கத் தொடர்பை இழக்கச் செய்யும் திட்டத்தை மிகப் பயனுள்ள முறையில் பெருமக்கள் சபையில் எடுத்துரைக்க வசதியாக 12 முற்போக்குப் பெருமக்களைப் படைக்கும் அனுமதியை கிளாட்ஸ்டன் பெற்றார். இரகசிய வாக்களிப்பு முறையை சபை எதிர்த்ததெனினும். இரு மசோதாக்களும் 1869, 1872ஆம் ஆண்டுகளில் சட்டமாயின.

டிஸ்ராலியின் (Disraeli) மறைவிற்குப் பின் இரு சபைகளின் உறவு முறை மேலும் மோசமாயிற்று. கிளாட்ஸ்டனின் இரண்டாவது அமைச்சின் போது கொணரப்பெற்ற மூன்றாவது சீர்திருத்த மசோதாவையொட்டிப் (1884) பொதுமக்கள் சபையைக் கலைக்கும்படி பெருமக்கள் சபை தூண்டியது. இம் மசோதா கிராமப் புறத் தொழிலாளர்களுக்கு வாக்குரிமையளிக்க வசதி செய்தது. பெருமக்கள் சபைக்கு இதையெதிர்க்கத் துணிவில்லையென்றாலும், இடங்களை மறு ஒதுக்கீடு செய்யும் திட்டத்தோடு இது இணைக்கப் படும் வரையில் இம் மசோதாவைச் சபை முடக்கி வைத்தது. அயர்லாந்தின் தன்னாட்சி பற்றிய கருத்தையொட்டி தகராறு நிலையை மோசமாக்கியது. பெருமக்கள் சபையில் பேராதிக்கம் பெற்றிருந்த பழமைவாதிகள் இதை முரட்டுத்தனமாக எதிர்த்தனர். இதன் விளைவாக, மேல் சபையின் அதிகாரத்தைக் குறைக்கும் வகையில் ஜான்பிரைட் (John Bright) ஒரு திட்டத்தை வெளியிட்டார்.

சிறப்புரிமைகளுக்கும் சீர்திருத்தத்திற்கும் இடையே எழும் எப் பிரச்சினையையும் வெளிப்படையாக மோதவிடுமளவிற்கு பெருமக்கள் சபை நுட்பம் உடையதாக இருக்கவில்லை. மேலும் இந் நூற்றாண்டின் இறுதியில், பிற்போக்காளர்கள் உயர் செல்வாக்குப் பெற்றிருந்ததாலும் விக்டோரியா அரசியாரின் தலையீட்டால் மோதல் தவிர்க்கப்பட்டது. தாராளக் கொள்கையினர் (Liberals) பதவியிலிருந்த காலமாகிய 1886-க்கும் 1906-க்கும்

இடைப்பட்ட காலத்தில் தொடர்ந்து பெருமக்கள் சபையோடு மோதல் இருந்து வந்தது. சில முற்போக்கு மசோதாக்களைப் பெருமக்கள் சபை எதிர்த்துத் தோல்வியுறச் செய்தது.

**1911-ஆம் ஆண்டு பாராளுமன்றச் சட்டம் நிறைவேறுவதற்கான நிகழ்ச்சிகள்**

1895-ல் லிபரல் கட்சியினர் தோல்வியுற்றனர். அடுத்த பதினொரு ஆண்டும் கன்சர்வெடிவ் கட்சிதான் பதவியில் இருந்தது. 1906-ல் லிபரல் கட்சி வெற்றி பெற்றுப் பதவிக்கு வந்தபோது பெருமக்கள் சபை இதற்குமுன் பின்பற்றிய போக்கைத் தொடருவதில் உள்ள தவறை உணர்ந்தது.

பெருமக்கள் சபையைப் பயன்படுத்தி ஆட்சி செய்யப் போவதாக பால்ஃபர் (Balfour) குறிப்பிட்டார். லிபரல் கட்சிச் சார்புடைய பொதுமக்கள் சபை நாட்டைப் பாழ்படுத்தி விடுமென இவர் கருதினர். 1906-க்கும் 1910-க்கும் இடைப்பட்ட காலத்தில் 210 மசோதாக்களில் (அரசாங்க) 18 மசோதாக்கள் பெருமக்கள் சபையினல் ஏற்கப்படவில்லை அல்லது பெருமளவில் திருத்தப்பட்டன. இவைகளில் 5 மசோதாக்கள் முதல் முக்கியத்துவம் பெற்றவைகளாகும். இவை : கல்வி மசோதா (1906), பன்மை வாக்குரிமையகற்றும் மசோதா (1906), ஸ்காட்லாந்து நிலவுடைமை மசோதா (1907), லைசென்சிங் மசோதா (1908), நிதி மசோதா (1909).

பெருமக்கள் சபையின் அதிகாரங்கள் வரையறுக்கப்பட வேண்டுமென்பது இப்பொழுது தெளிவாயிற்று. ஏனெனில், 'பெருமக்கள் சபை அரசியலமைப்பின் அரணுக அமையாது பால்ஃபரின் அணிகலனுகவே இருக்கிற' தெனும் பொருள்படுமாறு லாயிட் ஜார்ஜ் கூறினர். 'தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் உள்ள இச் சபையின் (பொதுமக்கள் சபையின்) கருத்தை நிலவச் செய்வதற்கு ஒருவழி காண வேண்டும். அவ்வழி காணப்படு' மென பிரதமர் காம்பெல் பானர்மென் (Campbell Bannerman) 1907-ல் அறிவித்தார். இதையொட்டிப் பொதுமக்கள் சபையில் நிறைவேறிய தீர்மானம், ஒரு மசோதாவை ஏற்க மறுக்கும் அல்லது திருத்தும் பெருமக்கள் சபையின் அதிகாரத்தை ஒரு சட்டத்தால் பாராளுமன்றத்தின் வரையறைக்குள் கொண்டு வரவும், பொதுமக்கள் சபையின் இறுதியான முடிவை நிலவச் செய்யும் வகையில் பெருமக்கள் சபையின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்தவும் முடிவு செய்தது.

1909-ல் லிபரல் அமைச்சவையில் நிதியமைச்சராக இருந்த லாயிட் ஜார்ஜ், நிலத்தின் மீதான ஒரு புதிய வரியோடு பல வரி விதிப்புகளைக் கொண்ட ஒரு நிதி மசோதாவைக் கொண்டு வந்தார். பெரும் நிலக்கிழார்களை இவ் வரிவிதிப்புகள் பாதிக்கு மாகையால் பெருமக்கள் சபை இம் மசோதாவைத் தள்ளிவிட்ட தோடு பொதுமக்கள் சபையில் பெரும்பான்மையான வாக்கு களோடு நிறைவேறிய மசோதாக்களை இச்சபை தோல்வியுறச் செய்தது. பெருமக்கள் சபையின் செயல் அரசியலமைப்பிற்கு முரணானதென்றும் பொதுமக்கள் சபையின் சிறப்புரிமைகளை மேல். சபை கவர்ந்து கொள்ள முற்படுகிறதென ஒரு தீர்மானத்தை நிறைவேற்றித் தன் வெஞ்சினத்தை சபை வெளிப்படுத்தியது. ஆனால் பெருமக்கள் சபை அதன் நிலையைப் பற்றி நின்றது. பிரதம ரும் வாக்காளர்களின் கருத்தை அறிவதென முடிவு செய்தார். இதன்படி 1910-ல் ஒரு பொதுத் தேர்தல் நடைபெற்றது. தேர்தல் போராட்டத்தின் போது பெருமக்கள் சபையின் அதிகாரத்தைக் குறைக்கும் பிரச்சினை முதன்மையாக இருந்தது. தேர்தலில் லிபரல்கள் வெற்றி பெற்றுப் பொதுமக்கள் சபையில் மறுபடியும் நிதி மசோதாவை நிறைவேற்றிப் (இரண்டாம் முறையாக) பெரு மக்கள் சபையின் இசைவைப் பெற அனுப்பினர். சபை நாட்டு மக்களின் தீர்ப்பை ஏற்று மசோதாவிற்கு இசைவு அளித்தது.

ஆனால் இரு சபைகளுக்குமிடையேயான உறவு முறைகளை தேர்தலின்றி லிபரல்கள் வரையறை செய்ய உறுதி கொண்டனர். ஆகவே அதிகாரங்களைக் குறைக்கும் வகையில் பொதுமக்கள் சபை யில் அமைச்சர்கள் ஒரு மசோதாவைக் கொண்டு வந்தனர். இம் மசோதா நான்கு முக்கிய பிரிவுகளைக் கொண்டிருந்தது. இவை:

1. பொதுமக்கள் சபையால் நிறைவேற்றப் பெற்ற நிதி மசோ தாக்கள், பெருமக்கள் சபையின் ஒப்பிசைவைப் பெறவில்லையென் றாலும் கீழ்சபையில் மசோதா நிறைவேறிய ஒரு மாதத்திற்குப் பின் சட்டமாக வேண்டும்.

2. நிதி மசோதாக்களுக்கு இச் சட்டம் (1911) ஒரு வரைவறை செய்தது. ஒரு மசோதா இவ்வரையறைக்குட்பட்டிருப்பதை யொட்டி எழுகின்ற கருத்து வேறுபாடுகளை முடிவு செய்யும் அதிகாரம் பொதுமக்கள் சபையின் சபாநாயகருக்கு அளிக்க வகை செய்யப்பட்டுள்ளது.

3. அடுத்தடுத்து மூன்று கூட்டத் தொடர்களில் ஒரு பொது மசோதாவை பொதுமக்கள் சபை முதலில் நிறைவேற்றியதற்கும் இறுதியாக நிறைவேற்றியதற்கும் இடைப்பட்ட காலம் குறைந்

தது இரண்டாண்டாக இருந்து இம்மசோதாவைப் பெருமக்கள் சபை ஏற்கத் தவறியிருப்பினும் அரசரின் இசைவு பெற்றபின் இம் மசோதா சட்டமாக வேண்டுமென வழி செய்துள்ளது.

4. பாராளுமன்றத்தின் உயர் அளவுப் பதவிக்காலத்தை இனி மேல் ஏழாண்டிற்குப் பதிலாக ஐந்தாண்டாக இருக்க வேண்டு மென வகை செய்தது. இருப்பினும் ஒரு நெருக்கடி நிலையைச் சமாளிக்க வேண்டுமென்றால், பாராளுமன்றம் இதன் பதவிக் காலத்தை ஐந்தாண்டிற்கு மேலாக நீட்டித்துக் கொள்ளலாம். இச் சட்டத்தை இயற்றிய இதே பாராளுமன்றம் முதல் உலகப் போரின் போது இதன் பதவிக் காலத்தை ஏறத்தாழ எட்டாண் டாக நீட்டித்துக் கொண்டது. இச் செயல் அரசியலமைப்பிற் கொவ்வாதெனச் சொல்ல முடியாத வகையில் பிரிட்டிஷ் பாராளு மன்றம் நடந்து கொண்டதற்கு இது நல்ல எடுத்துக் காட்டாகும்.

மேல்சபையின் அதிகாரங்களைக் குறைக்கும் நோக்கத்தோடு 'பாராளுமன்ற மசோதா'வைப் பொதுமக்கள் சபையில் நிறை வேற்றிப் பெருமக்கள் சபைக்கு அனுப்பியது. இதை ஏற்கத் துணியாத மேல்சபை இதற்குப் பதிலாகச் சில ஆக்கக் கருத்து களைக் கொண்ட மாற்றுத் திட்டமொன்றை சபை எடுத்து உரைத்தது. இம் மசோதாவைப் பெருமக்கள் சபை ஏற்காவிடில் மற்றொரு தேர்தலை நடத்தவேண்டியிருக்குமென அமைச்சவை அச்சுறுத்தியது. தேர்தலை நடத்தி இவ் வச்சுறுத்தலை அமைச்சவை நிறைவேற்றியது. மறுபடியும் லிபரல் கட்சியினரை மக்கள் பெரு மளவில் தேர்ந்தெடுத்து மசோதாவின் நிறைவேற்றத்திற்கு உறுதி யளித்தனர். மறுபடியும் சிறிது எதிர்ப்பைத் தெரிவித்த மேல் சபையை ஒடுக்கும் நோக்கத்தோடு, மசோதா சபையில் நிறை வேறத் தேவையான பிரபுக்களைப் படைக்கப் போவதாக அமைச் சவை மிரட்டியது. மசோதாவை எதிர்த்த பெருமக்கள் சபைக்கு வாராதிருந்ததால் குறைந்த பெரும்பான்மையோடு பெருத்த பரபரப்புக்கிடையில் இம் மசோதா நிறைவேறியது. 1911ஆம் ஆண்டின் பாராளுமன்றச் சட்டத்தின் நிறைவேற்றம் வரலாற்றுச் சிறப்புமிக்க நிகழ்ச்சியாகும்.

இச் சட்டத்தின் பயனாகப் பெருமக்கள் சபை வலிமையற்றதாகி விட்டது. 1949ஆம் ஆண்டின் பாராளுமன்றச் சட்டம் இச் சபையின் அதிகாரத்தை மேலும் குறைத்துவிட்டதெனலாம். இச் சட்டத்தின் விளைவாகப் பெருமக்கள் சபை பணமசோதாக்கள் நீங்கலாக மற்ற மசோதாக்களை ஓராண்டிற்கு முடக்கிவைக்கலாம். 1911ஆம் ஆண்டுச் சட்டத்தின்படி இரண்டாண்டிற்கு முடக்கி வைக்கலாம்.

**1911ஆம் ஆண்டிற்குப்பின் பெருமக்கள் சபையின் அமைப்பு**

**இச் சபை ஆறு வகையான உறுப்பினர்களைக் கொண்டிருக்கிறது;**

1. வயதுவந்த இரண்டு அல்லது மூன்று அரச குமாரர்கள்.

2. மரபுரிமை வழிவந்த பெருமக்கள் சபையின் மொத்த உறுப்பினரில் இவர்களின் எண்ணிக்கை 90% ஆக இருந்தது.

3. ஸ்காட்லாந்தின் பெருமக்களாக 16 ஸ்காட்டிஷ் பெருமக்கள் சபையில் இருந்தனர். ஸ்காட்லாந்தின் பெருமக்கள் ஒவ்வொரு பாராளுமன்றத்தின் தொடக்கத்தின் போது இவர்களைத் தேர்ந்தெடுக்கிறார்கள்.

4. அயர்லாந்து பெருமக்களின் பிரதிநிதிகளாக 28 பிரபுக்கள் சபையில் இடம் பெறுகின்றனர். இவர்கள் உயிர் உள்ளவரை சபையின் உறுப்பினர்களாக இருக்கின்றனர். சுதந்திர ஐரிஷ் அரசு ஏற்பட்ட பின் சபையில் இவ் வகைப் பெருமக்களின் இடம் காலியாகும்போது இவ்விடங்களை நிரப்புவதில்லையென உடன்பாடு செய்துகொள்ளப்பட்டிருக்கிறது.

5. சபையின் நீதி வழங்கும் பணியைக் கவனிக்க இப்பொழுது ஒன்பது சட்டப் பிரபுக்கள் இருக்கின்றனர். இவர்கள் இறக்கும் வரையில் உறுப்பினர்களாக இருக்கலாம். இவர்கள் மேற்கொள்ளும் நீதி வழங்கும் பணிகளுக்காக ஊதியம் பெறுகிறார்கள்.

6. காண்டர்பரி, யார்க் ஆகிய திருச்சபைகளின் அதிமேற்றிராணியார்களும், லண்டன், டர்ஹாம், வின்செஸ்டர் ஆகிய திருச்சபைகளின் மேற்றிராணியார்களும் தம் சொந்த உரிமையையொட்டிச் சபைக்கு அரசரால் அழைக்கப்படுகிறார்கள். எஞ்சியுள்ள 28 மேற்றிராணியார்களில் சேவைக்குப்பின் அடிப்படையில் 21 பேர் அழைக்கப்படுகின்றனர்.

ஏழாம் ஹென்றி இறந்தபொழுது இச் சபையில் 80 உறுப்பினர்களே இருந்தனர். ஆனால் 1936–ல் சபையில் 746 உறுப்பினர் இருந்தனர். 1509,ல் ஏழாம் ஹென்றி இறந்தபொழுது 80 ஆக இருந்த உறுப்பினர் தொகை மூன்றும் வில்லியம் காலத்தில் 192ஆக உயர்ந்தது. ஆன் அரசியாரின் ஆட்சிக்கால இறுதியில் இத் தொகை 309 ஆயிற்று. மூன்றும் ஜார்ஜ் மன்னர் பதவிக்கு வந்தபோது 339ஆக இருந்த உறுப்பினர் எண்ணிக்கை 1837-ல் 456ஆகவும், 1938-ல் 783 ஆகவும், 1952-ல் 842

ஆகவும் உயர்ந்தது. அஸ்குவித்தின் எட்டாண்டு ஆட்சிக் காலத்தில் 108 பிரபுக்களை சபையின் உறுப்பினராக அமர்த்த இவர் அரசருக்குப் பரிந்துரை செய்தார். லாயிட் ஜார்ஜின் ஆறுண்டு ஆட்சிக் காலத்தில் 115 பிரபுக்களை சபையில் அமர்த்த அரசருக்கு அறிவுரை அளித்தார். பிரதம அமைச்சரின் அறிவுரையின் பேரில் அரசர் பிரபுக்களைப் படைத்து சபையில் அமர்த்துகிருர். இவ் வகைப் பிரபுக்கள் இறக்கும் வரை சபையின் உறுப்பினராக இருக்கின்றனர்.

உலகப் போர்களின் இடைப்பட்ட காலத்தில் சபையின் நிலை: இரு சபைகளுக்குமிடையிலான சர்ச்சைகள் 1914-ல் முடிவிற்கு வந்தன. அடுத்து வந்த முப்பதாண்டில் குறிப்பிடத்தக்க பெரும் சர்ச்சைகள் ஏற்படவில்லையாயினும் சிறு கருத்து வேறுபாடுகள் இருந்தன. இக் கருத்து வேறுபாடுகளையொட்டி எழுந்த மோதல்களில் பெருமக்கள் சபை பழைமைவாதிகளின் நலன்களை ஆதரித்தனர்.

பிரதம அமைச்சர் பொதுமக்கள் சபையின் உறுப்பினராக இருக்கவேண்டுமெனும் மரபு 1923-ல் ஏற்பட்டபொழுது சபையின் தனி மதிப்பு நிலை தாழ்வுற்றது. 1963-ல் ஹோம் பிரபு பிரதம அமைச்சரானபொழுது இம் மரபையொட்டிக் கீழ்ச் சபையில் அமரும்பொருட்டு தம் மேல்சபை உறுப்பினர் பதவியைத் துறக்கவேண்டியதாயிற்று. மிக முக்கியத் துறைப் பொறுப்புக்களை ஏற்றுக்கொண்டிருக்கும் அமைச்சர்களும் இப்பொழுது கீழ்ச்சபையில் இருந்து மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள உறுப்பினர்களுக்கு மறுமொழி கூறத்தக்கவர்களாக இருக்கவேண்டுமென்பது அவசியம் எனக் கருதப்படுகிறது.

### 1949ஆம் ஆண்டு பாராளுமன்றச் சட்டம்

இரண்டாம் உலகப் போருக்குப் பின் மக்களின் மிகப்பெரும்பான்மை ஆதரவோடு தொழிற்கட்சி அதிகாரத்தைக் கைப்பற்றி அரசாங்கத்தை அமைத்தது. பெரும் சர்ச்சைக்குரிய திட்டங்களைச் சட்டமாக்கத் தொழில்கட்சி உறுதியளித்திருந்தது. இப் புதிய நிலையை பெருமக்கள் சபை எப்படிச் சமாளிக்கப் போகிறதென்பதை மக்கள் அக்கறையுடன் கவனித்தனர். 1911-க்கு பிறகு இரு சபைகளின் உறவு சமுகமாகவே இருந்து வந்தது. இக் காலத்தில் மிக முக்கியமான பொருளாதார, சமூக மாற்றங்கள் பெருமக்கள் சபையின் குறுக்கீடு இல்லாமலே நிறைவேறின. ஆனல் 1945-ல் விரிவான நாட்டுடைமை ஆக்கம், சமூக மாற்றம் போன்ற முற்போக்கான திட்டங்களைத் தொழில் கட்சி அரசாங்கம் நிறைவேற்ற விரும்பியபொழுதுதான் மேல்சபையோடு மோதல் ஏற்பட்டது.

1924-லும் 1929-லும் தொழில் கட்சி லிபரல் கட்சியின் ஆதரவோடு ஆட்சி செய்ததாலும், இதன் பதவிக் காலமும் மிகக் குறுகியதாக இருந்ததாலும் தொழில் கட்சி அரசாங்கம் பெருமக்கள் சபையோடு எவ்வாறு நடந்துகொள்ளும் என்பதற்குப் போதிய சான்றுகள் இல்லாமல் இருந்தன.

அரசாங்கத்திற்குப் பெருமக்கள் சபையிடமிருந்து உறுதியான எதிர்ப்பு ஏற்படவில்லை. இருப்பினும் இரும்பு, எஃகு தொழில் சாலை நாட்டுடைமையாக்கப்படும்பொழுது குறிப்பாக எத்தகைய எதிர்ப்பையும் தொழிற்கட்சித் தலைவர்கள் எதிர்நோக்கத் தயாராகவில்லை. எனவே, இத்தகைய சட்டம் தடையின்றி விரைவில் நிறைவேற வசதியாக 1911ஆம் ஆண்டுச் சட்டப்படி மேல்சபையின் தாமதப்படுத்தும் அதிகாரத்தை இன்னும் குறைக்க 1947ல் ஒரு மசோதா கொண்டுவரப்பட்டது. இச் சட்டத்தின்படி தாமதப்படுத்தும் காலம் இரண்டிலிருந்து ஓராண்டிற்கும் குறைக்கப்பட்டது. அதாவது இரண்டு கூட்டத்தொடர்களில், முதல் கூட்டத்தொடரில் இரண்டாவது வாசிப்பையும், இரண்டாவது கூட்டத்தொடரில் மூன்றாவது வாசிப்பையும் முடிக்கும் கால வரையறை ஓர் ஆண்டிற்கு மேலாகக் கூடாது. 1911ஆம் ஆண்டுச் சட்டத்தின் பிரிவுகள் தொடர்ந்து அப்படியே இருந்தன. பழைமைவாதிகள் நிறைந்த மேல்சபை முற்போக்கு அரசாங்கத்திற்கு முட்டுக்கட்டையாக இருப்பதை இச் சட்டம் நீக்கியது. ஆனால், 1945--51-க்கும் இடைப்பட்ட காலத்திய நிகழ்ச்சிகள் ஒரு புதிய ஜனநாயக சமூகத்தில் பெருமக்களின் நிலை மாற்றியமைவதை உணர்த்தின.

### பெருமக்கள் சபையின் பணிகள்

பெரும்பாலான நாடுகளில் ஈரங்கச் சட்டமன்றங்கள் இருக்கின்றன. நியூசிலாந்து, இஸ்ரேல், லெபனான், கானா போன்ற நாடுகளில் ஓரங்கச் சட்டமன்றங்களே உள்ளன. இங்கிலாந்தின் மேல்சபை பல முக்கியமான பணிகளைச் செய்கிறது. சட்டமியற்றல், விவாதித்தல், நீதிவழங்குதல், அரசியலமைப்புச் சார்ந்த அதிகாரங்களென இவைகளைப் பிரித்துக் கொள்ளலாம்.

இக் கால அரசாங்கத்தின் செயற்பாடு பெருமளவிலான சட்டமியற்றுதலோடு தொடர்புடையதாக உள்ளது. நல்ல சட்டங்களைப் படைத்தல் ஒரு நீண்ட கடினமான செயல்முறையாகும். சட்டங்களின் நோக்கங்கள் விரும்பத்தக்கவைதானா என்பதை நன்றாக விவாதிக்க வேண்டியதோடு இடர்களை விலக்க முன்னேக்கி விரிவாகச் செயல்படவேண்டும். சட்டத்தில் காணப்படும்

சொற்களின் முரண்பாடுகளை அகற்றவேண்டும். பொதுமக்கள் சபை மட்டும் இச்சபையின் உதவி இன்றி இதைச் செய்ய முடியாது. சபையின் நடைமுறை விதிகளை மாற்றியமைப்பதாலும் இது நிறைவேறிவிடாது. பொதுச் சபையினர் தம் கடமைகளைப் புறக்கணித்துவிட்டுச் சபையின் இப் பணியில் நேரத்தைச் செலவிட முடியாது. எனவேதான் சட்ட ஆக்கத்தின் பெரும்பகுதிப் பணிகளை மேல்சபை ஏற்றுச் செயல்படுத்துகிறது.

பண மசோதாக்கள் பொதுமக்கள் சபையில்தான் கொண்டு வரப்படுகின்றன. அரசாங்கத்தின் முக்கியமான கொள்கைகளைப் பற்றிய மசோதாக்களும் இச் சபையில்தான் கொணரப்படுகின் றன. குறிப்பாக, கட்சி உணர்ச்சிகளை தூண்டுகின்ற சட்டங்களை மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சபை கொண்டுவருவதுதான் சிறப்பாகக் கருதப்படுகிறது. ஆனல் சர்ச்சைக்குட்படாத மசோதாக்கள் பெருமக்கள் சபையில் கொண்டு வரப்படலாம். ஏனெனில் இவைகள் பொதுமக்கள் சபையை எட்டுமுன் இவை களின் முக்கியமான கருத்துக்களை பெருமக்கள் சபை ஆராயவும் நேரத்தை மிச்சப்படுத்தவும் வசதியாக இருக்கும். 1947ஆம் ஆண்டு அரசாங்க நடவடிக்கைகள் சட்டம் குடிமக்கள் அரசாங்கத் திடம் இழப்பீடு கோர இச் சட்டம் வழி செய்தது. 1948ஆம் ஆண்டு கம்பெனி சட்டத்தில் சிக்கலான 400 பிரிவுகள் இடம் பெற் றிருந்தன. இத்தகைய மசோதாக்கள் முக்கியமானவைகளாகும். மக்களின் ஒரு பிரிவினரின் வாக்குகள் அரசாங்கத்தைப் பாதிப்ப தாக இருந்தாலும் தேர்ந்தெடுக்கப்பெருத பெருமக்கள் சபை சட்டங்களைகொண்டு வருவதில் நல்லதோர் இடத்தைப் பெற்றிருக்கிறது.

பெருமக்கள் சபையால் செய்யப்படும் முதன்மை பணியென்ன வென்ருல் மசோதாக்களை மாற்றியமைப்பதேயாகும். அரசாங்கக் கொள்கையில் சில சலுகைகளைப் பெறுவது இதன் நோக்கமாக இருக்கலாம். இருப்பினும் மசோதாக்களை இறுதி நிலையில் தள்ளி விட இச் சபைக்கு அதிகாரமிருக்கிறது. இருப்பினும், மசோதாக் களைச் செயல்படத்தக்கவைகளாகச் செய்வது ஒரு பெரும் வழக்க மாக இருந்தது. விவாதங்களை திடீரென முடிவிற்குக் கொண்டு வரும் (Closure) முறை பெருமக்கள் சபையில் இல்லாததால் மசோ தாக்களின் பிரிவுகள் போதிய அளவு விவாதிக்கப்படலாம், விபரங்கள் ஆராயப்படலாம். கீழ்சபையில் மசோதாக்களின் நிறைவேற்றத்தின் போது 'துறைகளுக்கும் குறிப்பிட்ட நலன் களுக்கும் இடையில் கொடுக்கப்பட்ட விளம்பரம் பல்வேறு நடை முறைக் குறைபாடுகளை வெளிக்கொணர்ந்திருக்கலாம். இவைகளை

அரசாங்கம் சரிசெய்ய விரும்பலாம். மேலும், ஒரு மசோதாவை சட்ட இயல்படி செம்மையாக்கப் பெருமக்கள் சபை பெரும் பணி யாற்றுகிறது. 1961-62-ல், அரசாங்க மசோதாக்களுக்கு 368 திருத்தங்கள் கொண்டுவரப்பட்டதும் இவைகளில் சபை 212 திருத்தங்களை ஏற்றுக்கொண்டதும் ஒரு சுறுசுறுப்பான அரசாங்கத் திற்குப் பெருமக்கள்சபை எப்படி உதவலாம் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

தனியார் மசோதாக்களையும் ஒப்படைக்கப்பட்ட சட்ட ஆக்கங்களையும் பெருமக்கள் சபை ஏற்றுச் செயல்படுத்துதல் பொது மக்கள் சபையின் பளுவைக் குறைக்கிறது குறிப்பாக, தாற் காலிகக் கட்டளைகள் உறுதிப்பாட்டு மசோதாக்களையும் சிறப்பு விதிமுறைக் கட்டளைகளையும் மேல்சபை ஏற்றுச் செயல் படுத்திக் கீழ்சபைக்கு உதவுகிறது. எல்லாப் பணிகளையும் கீழ்சபைக்கு மாற்றி விடுவதும் கடினமாகும். ஏனெனில் வேலைப்பளு அதிகரிப் பதோடு, விளம்பரத்தையும் அரசியல் பலன்களையும் அளிக்காத பணிகளை மேற்கொள்ள உறுப்பினர் முன்வருவதில்லை.

### விவாதித்தல்

கொள்கையின் பொதுவினை பயன்கள் பற்றியதாக பெரு மக்களின் விவாதம் அமையும். மூதறிஞர்களும், முன்னாள் அமைச் சர்களும், முன்னாள் கவர்னர் ஜெனரல்களும் குறிப்பிட்ட துறையில் தனிப் பயிற்சி பெற்ற பெருமக்களும் விவாதத்தில் கலந்து கொள்வ தால் சபையின் விவாதம் வழக்கமாக நல்ல தரமுள்ளதாக இருப்பதால் கீழ்ச்சபையைவிட இச் சபை நன்நிலையில் இருக்கிறது. கடினமாக உழைப்பதுபோல் தொகுதியினருக்குக் காட்டிக் கொண்டு அவர்களைக் கவர பிரதிநிதிகள் பேசலாம். ஆனால் ஒரு குறிப்பிட்ட முக்கியமாகச் சொல்ல வேண்டிய கருத்தொன்றிருந் தால் மட்டுமே பிரபு ஒருவர் சபையின் விவாதத்தில் கலந்து கொள்ளுவார். இவர் தம் கட்சிக் கருத்தையொட்டிப் பேச வேண்டிய கட்டாயமுமில்லை. கட்சிக் கொரடாக்கள் இவர்களை நெருக்கினாலும் கீழ்சபையினரைக் காட்டிலும் இவர்கள் சுயேச்சை யாகத் தம் கருத்துக்களை வெளியிடுவர். எப்படி இருப்பினும் கட்சிக் கருத்துக்களை ஏற்காத பிரபுக்கள் பலர் இருக்கின்றனர் இவர்கள் சபையின் சுயேச்சை உறுப்பினர்களைப் போல் செயல் படுகின்றனர். இச்சபை கீழ்ச்சபையைப் போல் நேரம் போதாமல் அவதிப்படுவதில்லை. திங்கள், செவ்வாய், புதன், வியாழன் ஆகிய நாட்களில் இச் சபை பிற்பகல் 2.30-ல் இருந்து 8 மணி வரை வழக்கமாகக் கூடும். அரசாங்கம் அதனுடைய பணிகளுக்கு

முன்னுரிமை கோராததால் சபை அதன் விருப்பம்போல் எப் பொருளைப் பற்றியேனும் விவாதிக்கலாம். விவாதம் கட்டுப் பாடின்றி நடைபெறுவதால் சபைத் தலைவரின் பணிகளும் எளிதாகி விடுகின்றன. மேலும் இச்சபையின் விவாதங்கள் திடீரென முடி விற்குக் கொண்டு வரப்படுவதில்லை. எனவே ஒரு பிரபு தான் தயாரித்த பேச்சைத் தடையின்றி சபையில் நிகழ்த்த வாய்ப்பு இருக்கிறது.

ஆனால் சபையின் விவாதங்கள் கீழ்ச்சபையில் நன்றாக விவாதிக் கப்பட்டதும் பெருமளவு விளம்பரத்திற்குள்ளானதுமான சர்ச்சை களை யொட்டியே இருப்பதும் உண்மையே. இருப்பினும் கொள்கை உருவாக்கத்தை இவை உறுதிப்படுத்துவதாக இருக்கும். ஏனெனில் கீழ்ச்சபையில் விவாதங்கள் கட்டுப்பாடுகளுக்குட்பட்டு நடைபெறு வது போல் இங்கு நடைபெறாததால் பரவலான கருத்துக்கள் வெளியிடப்படலாம். கலந்தாய்ந்து அரசாங்கம் நடத்துவதற்குப் பெருமக்கள் சபை அரும் பணியாற்றுகிறது.

## நீதி வழங்கும் பணி

பெருமக்கள் சபையின் அசல் விசாரணை அதிகாரவரம்பு இப் பொழுது பெரும் சிறப்புப் பெறவில்லை. பெருமக்கள் நிலை பற்றிய சர்ச்சைக்குரிய கோரிக்கைகளை இச்சபை முடிவு செய்கிறது. இச் சபையின் சிறப்புரிமைகளை மீறியவர்களை சபை தண்டனை விதித்து அல்லது சிறைப்படுத்தித் தண்டிக்கலாம். ஆனால் கடுமையான அரசியல் குற்றங்களுக்காக விசாரணை செய்யும் வழக்கம் 1806ல் நின்றுவிட்டது. 1948ஆம் ஆண்டின் குற்றவியல் நீதிச் சட்டத்தின் படி பெருமக்கள்சபை பெருமக்களை விசாரிக்கும் சிறப்புரிமை நீக்கப்பட்டது.

இருப்பினும், மேல்முறையீடுகளில் குற்றவியல் துறையிலும் உரிமைபற்றிய துறையிலும் இங்கிலாந்தில் இச்சபை தலையாய இறுதி நீதிமன்றமாக இருந்து வருகிறது. இப்பணியை ஒருதலைமை நீதிமன்றம் சிறப்பாகவும் பயனுள்ள முறையிலும் செயல்படுத்தலா மாகையால் இச்சபையின் பணி மற்றவைகளிலிருந்து தனிச் சிறப்புடன் விளங்குகிறது. எனவே பெருமக்கள் சபையைத் தக்க வைத்துக்கொள்ள இது நல்ல காரணமாகாது.

## அரசியலமைப்புத் தொடர்புடைய பணிகள்

நடைமுறையில் மேல்சபை ஒன்றிருத்தல் பிரதம அமைச்சருக்கு உதவியாக இருக்கிறது. ஒருவரை அரசாங்கத்தில் சேர்த்துக் கொள்ள பிரதமர் விரும்பினால் அவரை மேல்சபையில் சேர்க்க

இச்சபை உதவுகிறது. கேபினெட் அமைச்சர் ஒருவரைத் தேவை யில்லாதபொழுது விட்டு விடவும் இச்சபை உதவியாக இருக்கிறது. இத்துடன், பொதுமக்கள் சபையின் முழுமையான கடின அரசியல் உழைப்பிலிருந்து முதிய அரசியல் அறிஞர்களுக்கு இச் சபை ஓய்வளிக்கிறது. மேலும், கட்சி அரசியலில் பங்குபெற விரும்பாதவர்கள் தம் அறிவாற்றலையும், பட்டறிவையும் தனி நுட்ப அறிவையும் அவ்வப்போது நாட்டிற்கு அளிக்க விரும்புகிறவர் களுக்கு இது சட்டசபையில் இடமளிக்கிறது.

ஒரு சில அரசியலமைப்புத் திறனாய்வாளர்களைத் தவிர மற்றவர்களுக்கு இச்சபை ஆழ்ந்த சிறப்புடையதாகத் தோன்றுகிறது. ஏனெனில், அரசாங்கத்தின் பெருகி வரும் பளுவை இச் சபை சமன் செய்கிறது. அரசியல் கட்சிகளின் வழியாக அரசாங்கம் பொதுமக்கள் சபையின்மீது ஆதிக்கம் செலுத்துவ தாலும், சாதாரண நடைமுறையைப் பின்பற்றிப் பாராளுமன்றம் அரசியலமைப்பை மாற்ற முடியுமென்பதாலும், சாதாரணப் பெரும்பான்மை வாக்களிப்பு முறையாலும் ஒரு பெருமக்கள் சபை இருத்தல் அவசியமாகத் தோன்றுகிறது. எனவே இத்தகைய அரசாங்கம் சட்ட வழிமுறைகளைப் பயன்படுத்தி அதன் அதிகாரத்தை எதிர்ப்பார்க்காத அளவிற்குப் பெருக்கிக் கொள்ளலாம்.

இப்படி எதுவும் நேராவண்ணம் இச் சபை பாதுகாப்பளிக்க முடியாதெனினும், இச்சபை இருப்பதே ஒரு பாதுகாப்பாக அமையும் எனக் கருதப்படுகிறது. பொதுமக்கள் சபையின் அவசரப் போக்கில் எழும் அரைகுறையாக வரையப்பட்ட மசோதாக்களை இச் சபையின் திறனாய்வு தடுத்து நிறுத்தக்கூடும். இச் சபையின் விவாதங்களுக்குக் கொடுக்கப்படும் விளம்பரத்தைக் கொண்டு அரசாங்கக் கொள்கையின் எல்லா அம்சங்களும் பொதுமக்களின் கவனத்திற்குக் கொண்டு வரப்படுகின்றன. சபையின் சுணக்கும் அதிகாரத்தால் அடிப்படையான பிரச்சினைகளை இது ஆராய முடி கிறது. ஒரு குறிப்பிட்ட சட்ட ஆக்கத்தின் அவசியத்தை ஆராயப் போதிய அவகாசம் வேண்டுமென சபை வலியுறுத்தலாம். இதன் விளைவாகத் தற்காலிக மக்களாட்சி வெறி ஒன்றை உருவாக்கலாம். இதைப் பயன்படுத்தி அரசாங்கம் முழுமையான பெரும்பான்மை யைப் பெற முற்படலாம். இருப்பினும், பெருமக்கள் சபை தன் கருத்தை வலியுறுத்தினாலும் பொதுமக்கள் சபையை எதிர்க்க முற் படுவதில்லை. 1965-ல் போர் அழிவு மசோதாவை இச்சபை கொள்கை அளவில் ஏற்க மறுத்தாலும் இறுதியில் மசோதா நிறை வேற அனுமதித்தது.

சர்ச்சைக்குரிய மசோதாக்களை அடிப்படையாக வைத்து நடத்தப்படும் பொதுத் தேர்தல் முடிவு தெரியும் வரை இச் சபை மசோதாக்களை முடக்கி வைக்கும் அதிகாரத்தைப் பயன்படுத்தும் என்று பொருள்படாது. வழக்கமாக, கட்சியின் இரண்டு மூன்று திட்டங்களில் ஒன்றை தேர்தலின்போது மக்கள் தேர்ந்தெடுக்கலாமே ஒழிய இத் திட்டங்களின் ஒரு பகுதியைப் பற்றி நன்றாக ஆராய்ந்து கருத்தைத் தெரிவிப்பதென்பது இயலாததாகும். மக்கள் முன் வைக்கப்படாத சர்ச்சைக்குரிய மசோதா ஒன்றை மேல்சபை முடக்கி வைக்கலாம். ஆனால் இக் கருத்தைப் பெருமக்கள் சபை ஏற்றுக் கொள்ளவில்லை.

இந் நூற்றாண்டில் பெருமளவு அதிகாரத்தை இச் சபை இழந்து விட்டது. இச் சபை இழந்த அதிகாரத்தை அரசாங்கம் ஏற்றுக் கொண்டுள்ளது. ஆனால் பொதுமக்கள் சபையின் நிலையில் வீழ்ச்சி ஏற்பட்டுள்ளதெனலாம். இரு சபைகளும் விரும்பினால்கூட இப்பொழுது கேபினெட் செயல்படுத்த விரும்பும் கொள்கையை தடுக்க முடியாது; ஆனால் வாக்காளர் தொகுதிகளின் இணக்கமின்றி கேபினெட் மறுபடியும் பதவிக்கு வர முடியாதென்பதை இரு சபைகளும் மாறுபட்ட வழிகளில் தெரிவிக்கலாம்.

## நடைமுறையும் அதிகாரங்களும்

சபை தன் சொந்தக் கட்டிடத்தில் வெஸ்ட்மின்ஸ்டரில் கூடுகிறது. உலகில் உள்ள சட்டசபைக் கட்டிடங்களில் இது மிக்க அழகுற அமைந்ததாகும். இது கூடுமிடும் மிகக் கவர்ச்சியான இடமாகும். சிறந்த முறையில் அமைந்திருக்கும் இருக்கை வசதிகளோடு இச்சபைக்குள் மென்மையான ஒளிக்கதிர்கள் அழகிய கண்ணாடிச் சன்னல்களின் வழியே ஊடுருவிச் செல்கின்றன. இச் சபையின் அமைப்பில் அழகையும் அமைதியையும் காண முடிகிறது. பொதுமக்கள் சபை கூடும்போது இச் சபையும் கூட்டப்படுகிறது. பொதுமக்கள் சபையின் கூட்டத் தொடர் முடிவடையும் பொழுது மேல்சபையின் தொடர் கூட்டமும் முடிவிற்குவரும். இருப்பினும் இரு சபைகளின் அன்றாட நடவடிக்கைகள் சபைகளின் விருப்பையொட்டித் தள்ளிவைக்கப்படலாம். பிரதமரின் அறிவுரையின் பேரில் அரசரால் அமர்த்தப்படும் சான்சலர் பிரபு பெருமக்கள் சபையின் கூட்டத்திற்குத் தலைமை தாங்குவார். ஒரு பெரிய கம்பளித் திண்டின் மேல் இவர் உட்காருகிறார். கோரிக்கைகளை இவர் சபை முன் வைக்கிறார். இவருக்கு ஒழுங்கு நடவடிக்கை மேற்கொள்ள அதிகாரமில்லை. பேச விரும்பும் பிரபுக்களை கண்டறியும் அதிகாரம் கூட இவருக்கில்லை. இருவர் ஒரே சமயத்தில் பேச எழுந்தால் யார் முதலில் பேச

வேண்டுமென்பதைச் சபை முடிவு செய்யும். சான்சலர் பிரபுவாக இல்லாத நிலையில் ஓர் அரண்மனை அலுவலராக இவர் இருந்த பொழுதிலிருந்தே இச் சபையின் தலைவருக்கு அதிகாரக் குறைப்பு ஏற்பட்டிருந்தது இவர் சபையின் ஓர் உறுப்பினராக இருக்க வேண்டுமென்பதில்லையெனினும் வழக்கமாக இவர் இப்பொழுது சபையின் உறுப்பினராக இருந்து வருகிறார்.

செவ்வாய், புதன், வியாழன் ஆகிய கிழமைகளில் சபை கூடுவது வழக்கமெனினும் திங்கள் கிழமைகளில் சபை அடிக்கடி கூட்டப் பட்டாலும் வெள்ளிக்கிழமைகளிலும் சபை கூட்டப்படலாம். கூட்டம் வழக்கமாக இரண்டு மணிக்கு மேல் நடக்காது. ஒரு சிலர் தான் கூட்டத்தில் கலந்து கொள்வர். மிக முக்கியமான விவாதங்கள் நடக்கும் பொழுது 900 உறுப்பினர்களில 30 அல்லது 40 உறுப்பினர்தான் சபைக் கூட்டத்தில் பங்கு பெறுவர். ஓராண்டில் பத்திற்குக் குறைவான கூட்டத்தில் மூன்றில் இரு பங்கினர் கலந்துகொள்வர். சபையின் பணிகளைத் தொடர மூன்று உறுப்பினர் இருந்தால் போதுமெனினும் ஒரு மசோதா சபையில் நிறைவேற குறைந்தது முப்பது பேர் இருக்க வேண்டும். கூட்டத்தொடர்களின் பிற்பகுதியில் பொதுமக்கள் சபையிலிருந்து மசோதாக்கள் இச் சபைக்கு வரும் பொழுது சபை நாள்தோறும் நீண்ட நேரம் கூடி விரைந்து பணி செய்கிறது. இப்படிப்பட்ட நாட்களில் சபைக் கூட்டத்தில் பலர் கலந்து கொள்வர். வழக்கமாகச் சபையின் நடைமுறை நிகழ்ச்சிகள் சுவையற்றுக் காணப்பட்டாலும், சிற்சில வேளைகளில் விவாதங்கள் உயர்ந்த தரமுடையனவாக இருக்கும். இச் சபையில் கேள்விகள் கேட்கப்படுவது குறைவு; செலவீன மதிப்பீடுகள் பற்றிய ஆய்வுகள் இங்கு நடப்பதில்லை. சபைக் குழுக்களின் பரிந்துரைகள் மாறுதல் இன்றி ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

பொது முக்கியத்துமுடைய எப்பொருள் பற்றி எவரும் எப்பொழுதும் ஒரு விவாதத்தைத் தொடங்கிவைக்கும் அளவிற்குச் சபையின் நடைமுறைவிதிகள் தாராளமாகவே இருக்கின்றன. அதிகாரபூர்வமான தஸ்தாவேசுகளை சபைமுன் வைக்குமாறு உறுப்பினர் ஒருவர் ஒரு தீர்மானம் கொண்டுவரலாம். பொது மக்கள் சபை வேலைப்பளுவை தாங்க முடியாது அவதிப்படும் பொழுது எப்பொருள் பற்றியேனும் பொதுமக்களின் கவனத்தை ஈர்க்கும் வகையில் இச்சபை முழுமையான விவாதத்தை நடத்து வதும் வழக்கமெனலாம். இப்படிப்பட்ட சமயங்களில் சபையின் விவாதங்களின் தரம் மிக உயர்ந்து காணப்படும். ஏனெனில் இச்

சபையில் நல்ல பேச்சாளர்கள் பலர் இருக்கின்றனர். மேலும் இவர்கள் எடுத்துக்கொண்ட பொருளைப் பற்றிப் பேசக்கூடிய வர்கள். இச்சபையினரின் சொற்பொழிகள் செய்தித்தாள்களை அல்லது வாக்காளர்களை கவரும் நோக்கில் அமைவதில்லை. பிரபு ஒருவருக்குத் தனிப்பட்ட தொகுதியில்லை, தொகுதியினரைத் தட்டிக் கொடுக்கும் முறையிலோ, அவர்களை தம் வசப்படுத்தும் நோக்கிலோ பிரபுக்கள் பேசுவதில்லை. பிரபுக்கள் தம்மைத் தவிர வேறு எவரையும் பிரதிபலிப்பதில்லை. இச்சபையினர் பெரும் பாலோர் பழமைவாதிகளாக இருத்தலால் இவர்கள் ஒரு சார்புடையவர்களாக இருக்கின்றனர். சபை வாக்கெடுப்பில் ஈடு பட்டால் முடிவு எப்படி இருக்கும் என்பது தெளிவு. எனினும் சபை பெரும்பாலும் வாக்கெடுப்பில் ஈடுபடுவதில்லை.

பொதுமக்கள் சபைக்கில்லாத இருதனிப்பட்ட அதிகாரங்கள் இச் சபைக்கு உள்ளன. சில குறிப்பிட்ட சிவில், கிரிமினல் வழக்கு களை விசாரிக்கும் மேல்முறையிட்டு தலைமை நீதிமன்றமாக இச் சபை இருக்கிறது. ஆனால் நீதி வழங்கும் இப்பணியை சபையின் ஒரு சிறு பிரிவினர் மேற்கொள்ளுகின்றனர். இரண்டாவதாக கீழ்ச்சபையால் கொண்டு வரப்படும் கடுமையான அரசியல் குற்றங் களைக் கேட்டு முடிவு செய்வதும் இச் சபையாகும். இது சபையின் மிகப்பழமையான சிறப்பதிகாரமாகும், சாக்சானியர் காலத்திய மூதறிஞர் அவையிலிருந்து பிறந்ததாகும் இந்த அதிகாரம். அமைச்சவைப் பொறுப்புடைமை வளர்ச்சியடைவதற்கு முன் இது பெரும் சிறப்புடைய அதிகாரமாகும். ஏனெனில் இந்த ஓர் அதிகாரத்தால்தான் அரசரின் ஆலோசகர்களை பொறுப்புடையவர் களாக்க முடியும். இக் கடுங்குற்ற விசாரணை அதிகாரத்தால் தான் பாராளுமன்றம் அரசரின் செயல்களை கட்டுப்படுத்த முடிந்தது. பல நூற்றுண்டுகளாக இந்த அதிகாரம் பெருமளவு செயல்படுத்தப்பட்டது. ஆனால் இப்பொழுது இந்த அதிகாரம் வழக்கொழிந்து போய்விட்டது. எந்த அரசாங்க அலுவலரையும் விசாரித்துத் தண்டிக்கும் நிலையை இப்பொழுது இருந்து வரும் பாராளுமன்ற முறைகளையொட்டி நினைத்துக் கூடப் பார்க்க முடியாது. ஓர் அலுவலரைப் பதவி நீக்கம் செய்ய வேண்டுமெனப் பொதுமக்கள் சபை வாக்களித்தால் போதுமானது. ஏனெனில் சபையின் இத்தகைய வேண்டுகோளை புறக்கணிக்கும் அமைச் சரவை தொடர்ந்து பதவியில் இருக்கமுடியாது. இந்த அதிகாரத் தைப் பயன்படுத்தி நீதிபதிகளைப் பதவி நீக்க முடியாது. ஏனெனில் இரு சபைகளின் தீர்மானமொன்றினுல் தான் நீதிபதிகள் பதவி நீக்கப்படலாம். பொது அலுவலர்கள் தண்டிக்கப்பட வேண்டு

மெனின் இத்தண்டனையை சாதாரண நீதிமன்றங்கள் விசாரித்து அளிக்கும்.

நிதி மசோதாக்கள் நீங்கலாக மற்ற பொது மசோதாக்கள் பெருமக்கள் சபையில் கொண்டு வரப்படலாம். நிதி மசோதாக்கள் பொதுமக்கள் சபையில் தான் கொண்டு வரப்பட வேண்டும். எனினும் தனி மசோதாக்களைத் தவிர மற்ற மசோதாக்கள் மேல்சபையில் முதல் வாசிப்பிற்கென எடுத்துக் கொள்ளப்படுவதில்லை. பொது மசோதாக்களில் பத்தில் ஒன்பது கீழ்சபையிலிருந்து மேல்சபைக்கு வருகின்றன. இதன் பயனாக, கூட்டத் தொடரின் துவக்கத்தில் கீழ்சபையில் வேலை மிகுதியாகவும் மேல்சபையில் வேலை குறைவாகவும் இருக்கும். பிற்பகுதியில் பொதுமக்கள் சபை விரைந்து செயல்பட்டு மசோதாக்களை மேல்சபையின் ஏற்பிக்கு அனுப்புகிறது. இதனால் பெருமக்கள் சபையும் கூட்டத் தொடர் கூட்டம் முடியும் பொழுது விரைந்து செயலாற்ற வேண்டியுள்ளது. சட்ட ஆக்கப் பணிகளை இரு சபைகளுக்கும் கேபினெட் பகிர்ந்தளிக்க வேண்டுமென்னும் கோரிக்கை நடைமுறையில் பயனளிக்கவில்லை. பொதுமக்கள் சபையின் போக்கை அறியாமல் முக்கிய சட்ட ஆக்கப் பணிகளை மேல் சபைக்கு ஒதுக்குதல் அறிவுடைமையாகாது.

## பெருமக்கள் சபை—குறை நிறை ஆய்வு

**சபையின் அமைப்பு**

நான்கு முக்கிய பிரிவினர் சபையில் அமர உரிமை பெற்றிருந்தனர்.

(i) மரபுவழி பிரபுக்கள்,

(ii) அரசியல் வாழ்க்கை, ஆயுதப்படைகள், ஆட்சி இயல், பொது நல வாழ்க்கை, அறிவியல், கல்வி, கலைகள் ஆகிய துறைகளில் ஈடுபாடு கொண்டு நாட்டிற்காக உழைத்த பெருமக்களிலிருந்து தெரிவு செய்யப்பட்ட ஆயுட்கால பிரபுக்களும் முதல் தலைமுறைப் பிரபுக்கள்;

(iii) பதவிக் காரணமாக மேல்சபையில் அமரும் சட்டப் பிரபுக்கள், மேற்றிராணியார்கள்;

(iv) 1963ஆம் ஆண்டு பெருமக்கள் உரிமைச் சட்டத்தின்படி இருக்கத் தகுதி பெற்ற ஸ்காட்டிஷ் பிரபுக்கள்.

இச்சபையின் பணிகளை நிறைவேற்ற இவ்வுறுப்பினர்கள் ஏற்றவர்களாகவே இருக்கின்றனர். மசோதாக்களை வரையும்

பொழுது திறமை மிக்க வழக்கறிஞர்களின் அறிவுரையை சபை பயன்படுத்திக் கொள்ளலாம். தேசிய வாழ்க்கையில் புகழ்பெற்ற வர்கள் இச் சபையில் இடம் பெறுகின்றனர். மேலும், பலதரப் பட்ட மக்கள் சபையின் நிகழ்ச்சிகளில் பங்கு பெறுவதால் இது ஒரு நல்ல சொற்போர் அரங்காகத் தோற்றமளிக்கிறது. விரிவான நிபுணர் குழுக்களோடு அரசியல்வாதிகள் சேர்ந்து குறை நிறைவு செய்கின்றனர். தேவையான போது தம் சிறப்பறிவுரைகளை இவர்கள் சபைக்கு அளிக்கின்றனர். திருச்சபையினர் அவ்வப் போது ஆன்மீக, தார்மீக சீர்திருத்தம் பற்றிப் பேசுவர். படை யினர் பாதுகாப்பு பற்றிய கருத்துகளை சபைக்கு கூறுகின்றனர். சபையின் விவாதங்களுக்கு இத்தகைய நிபுணர்கள் தம் தனிப் பயிற்சியையும் திறமையையும் அளிக்கின்றனர். ஆயினும், இவர்கள் அரசியல்வாதிகளோடு சமநிலை பெற்று விடுதலால் இவர்களுக்குரிய துறைகளில் கூட இவர்கள் ஆதிக்கம் செலுத்து வதில்லை.

அரசியல் அதிகாரம் முற்றிலும் பிறப்பு அடிப்படையில் இருப்பது கால முரண்பாடாகும். இடைக்காலத்தில் ஆட்சி, சட்டம், படை ஆகிய துறைப் பொறுப்புகளை பெருமக்கள் பெற் றிருந்தனர். ஆகவே இவர்கள் சட்ட ஆக்கப் பொறுப்புக்களையும் பெற்றிருத்தல் பொருத்தமாகும். நில உடைமையை அடிப்படை யாகக் கொண்டு கடமைகளையும் பொறுப்புக்களையும் பகிர்ந்து கொண்டிருக்கையில் மேல்சபையில் முற்றிலும் மரபு வழி வந்த பிரபுக்கள் இடம் பெற்றிருந்ததற்குக் கொள்கையளவில் பெரும் எதிர்ப்பு ஏற்படவில்லை. பெரும் செல்வாக்குடைய பெருமக்கள் இன்றும் வணிக நிறுவனங்களில் அல்லது வங்கிகளின் நிருவாக சபைகளில் அமர்ந்தும், தலஆட்சி மன்றங்களின் தேர்ந்தெடுக்கப் பட்ட உறுப்பினராக இருந்தும், பல்வேறு சங்கங்களின் அலுவலர் பதவியைப் பெற்றும், தம் திறமையைப் பயன்படுத்தி தல நிறுவனங்களில் செயலாற்றி வருகின்றனர்.

ஆனால் ஆட்சித் திறமைக்கு மரபுரிமை ஓர் உத்திரவாத மாகாது. மரபுரிமை வழி வந்த பெருமக்கள் வாக்காளர்களின் கருத்திற்கேற்ப செயல்பட வேண்டியதில்லை, ஏனெனில் இவர் களின் வாழ்க்கை முறையும் பின்னணியும் வாக்காளர்களின் உணர்வுகளோடு தொடர்பு கொள்ளாமல் செய்து விடுகின்றன. கல்வியைப் பொறுத்த வரையில் இவர்களின் குழந்தைகளை தெரிவு செய்யப்பட்ட ஒரு சில பொதுக் கல்விக்கூடங்களிலும் பெரும் புகழ் சார்ந்த ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் போன்ற பல்கலைக் கழகங்களிலும் சேர்த்துப் பயிற்றுவிக்கின்றனர்.

எனினும், நுண்ணறிவும் தகவும் சமூகத்தின் ஒரு சிறிய பிரிவின் உடைமையாகா. இருப்பினும் சமூகத்தின் முக்கிய பிரிவினர் மேல்சபையில் இடம்பெறுவதில்லை. தொழிலாளர்களும் தொழிற் சங்கங்களும் பெரும் செல்வாக்கும் சிறப்பும் பெற்றிருப்பினும் கொள்கைப் பிரச்சினைகள் பெருமளவு இவர்கள்சார்புடையனவாக இருப்பினும் தொழிலாளர்களின் பிரதிநிதிகள் இச் சபையில் மிகக் குறைவே. ஆங்கிலேயர்களின் வாழ்க்கையில் அறிவியலின் பங்குப் பணி பெருகிவரினும், படைக்குறைப்பு, எரிபொருள், சாலைப் பாதுகாப்பு ஆகிய பலதரப்பட்ட பொருள்களையொட்டிய சட்ட ஆக்கத்தில் அறிவியல் வளர்ச்சியோடு ஈடுபாடு கொண்டிருக்கும் அறிவியலாளர்கள் சபையில் போதிய அளவிற்கு இடம் பெறவில்லை சிவில் பணியாளர்களின் பரந்த ஆட்சி இயல் அனுபவத்தைப் பயன்படுத்திக்கொள்ளும் வகையில் இவர்களுக்குச் சபையில் பிரதிநிதித்துவம் அளிக்கப்படவேண்டும். காமன்வெல்த் நாடுகளின் பிரதிநிதிகளும் இச் சபையில் இடம் பெறலாமென்பதும் ஒரு சிலரின் கருத்தாகும்.

பெருமக்கள் சபையில் இங்கிலாந்தின் திருச்சபையும் இடம் பெற்றிருப்பது இதற்குத் தனிச்சிறப்பு நிலையை அளிக்கிறது. ரோமன் கத்தோலிக்கரும் இணங்காதவர்களும் தங்கள் கருத்துகளைப் பாராளுமன்றத்தில் வெளியிட எத்தகைய இடரு மில்லையாதலால் பெரும் அளவு உணர்ச்சிகளை இது தோற்றுவிப்ப தில்லை.

தனியாரின் தனிச் சிறப்பு நிலை கருதி அல்லது இவர்கள் பொது வாழ்க்கையில் ஆற்றிய சேவை கருதி பிரபுவாக உயர்த்தப் படுகிறவர்கள் முதியவர்களாக இருப்பதால் இச்சபையின் பழமைவாத இயல்பிற்கு இன்னும் உரமூட்டுகிறதெனலாம். இது ஓர் இடர்பாடாகும்.

இச்சபையில் இப்பொழுது மரபு வழிவந்த பிரபுக்கள் 865 பேர் இருந்தாலும் ஒரு சிலர்தான் சபையின் நிகழ்ச்சிகளில் கலந்து கொள்கின்றனர். தம் ஆயுள்காலம் வரை மட்டும் பதவியி லிருக்கும் பிரபுக்களோடு மேற்றிராணியார்களையும் சேர்த்து ஏறத்தாழ 200 பேர் சபைக் கூட்டத்திற்கு வருவர். சர்ச்சைக் குட்பட்ட மசோதாக்களுக்கு மட்டும் வாக்களிக்க சிலர் சபைக்கு வரலாம். எனவே அரசியலில் பயிற்சியில்லாத பழைமைவாதிகள் சிலர் சபை நிகழ்ச்சிகளில் பங்குபெறும் அதிகாரம் இன்னும் பெற்றிருக்கின்றனர்.

## சபையின் அதிகாரம் பற்றிய திறனாய்வு

மரபுவழி அடிப்படையில் அமையும் மேல்சபையை ஏற்க முடியாதென்பதை எல்லாக்கட்சிகளும் ஒத்துக் கொள்ளுகின்றன, பெருமக்கள் சபையின் எதிர்காலம் பற்றி ஆராய 1948-ல் கூடிய கட்சிகளுக்கிடையேயான மாநாடு, இச்சபையில் உறுப்பினராதற்கு மரபுரிமை மட்டும் ஒரு தகுதியாக அமையலாகாதென்பதை ஏற்றுக் கொண்டது மேல் மாற்றியமைக்கப்பட்ட சபையில் ஓர் அரசியல் கட்சி நிரந்தப் பெரும்பான்மை பெற்றிருக்கலாகாதென்பதும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. சீர் திருத்தி அமைக்கப் பெற்ற சபையின் தாமதப்படுத்தும் (மசோதாக்களை) அதிகாரத்தைப் பற்றி முட்டுக்கட்டை ஏற்பட்டது. தாமதம் செய்யும் அதிகாரம் பொதுமக்கள் சபையின் மூன்றாவது வாசிப்பிற்குப் பிறகு குறைந்த அளவு 12 மாதமாக இருக்கலாமென கன்சர்வேடிவ் கட்சியினர் கருதினர். இது ஒன்பது மாதத்திற்கு மேலாக இருக்கலாகாதென தொழில் கட்சி அரசாங்கம் வலியுறுத்தியது. இறுதியில் 1949ஆம் ஆண்டு பாராளுமன்றச் சட்டத்தின் படி இரண்டாது வாசிப்பிற்குப் பின் இது 12 மாதமாக இருக்கலாம் என்பது ஏற்றுக்கொள்ளப்பட்டது. இது தொழில் கட்சியின் முற்போக்குவாதிகளுக்கு ஏற்புடையதாகத் தோன்றவில்லை. ஓராண்டு சுணக்கும் மேல் சபையின் அதிகாரம் மிகையாகுமென இவர்கள் கருதினார்கள். தொழில்கட்சி அரசாங்கத்தைப் பதவியிலிருந்து விலக்க பெருமக்கள்சபைக்கு அதிகாரமில்லையெனினும் அரசாங்கச் சட்ட ஆக்கத் திட்டத்தை இச்சபை குலைக்க முடியும். ஒரு மசோதாவைக் கொண்டு வருமுன், அக்கறை கொண்டிருப்பவர்களைக் கலந்து கொள்ளவும் இதை வரையவும் தயாரிக்கவும் போதிய அளவு நேரம் அனுமதிக்க வேண்டும். ஓராண்டிற்கு மசோதா முடக்கப்படுமென்றால் நிலையில் ஏற்பட்டுள்ள மாற்றங்களையும் கருத்துகளையும் ஆராய செயல்முறைகளை மறுபடியும் தொடங்க வேண்டியிருக்கும். இறுதியாக பெருமக்கள் சபையில் மசோதா நிறைவேறி விட்டதென்றாலும் தொடக்கத் தொல்லைகளை அகற்றவும் ஆட்சி இயல் ஏற்பாடுகளைச் செய்யவும் அவகாசம் தேவைப்படுகிறது. அரசாங்கக் கொள்கையின் நற்பயன்களை மக்கள் உணருமுன் அரசாங்கம் தேர்தலுக்குத் தயாராக வேண்டி இருக்கும்.

## சீர்திருத்தத் திட்டங்கள்

16ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பெருமக்கள் சபையின் அதிகாரங்களையும் அமைப்பையும் திருத்தியமைக்க பல்வேறு சமயங்களில் பல கருத்துகள் தெரிவிக்கப்பட்டன. இக்காலத்தில்

பல்வேறு மசோதாக்களைப் பெருமக்கள் சபை ஏற்க மறுத்தது. லிபரல் கட்சியினரிடையே பெரும் வெறுப்பை உண்டாக்கியது ஆனால் மரபுவழிப் பிரபுக்களை குறைக்கும் வகையில் ஆயுட்காலப் பிரபுக்களை புகுத்த கன்சர்வேடிவ் கட்சியினர் செய்த ஏற்பாட்டை லிபரல் கட்சியினர் விரும்பவில்லை.

1908—1911-க்கு இடைப்பட்ட காலத்தில் பெருமக்களும் லிபரல்களும் இணைந்து செயல்பட்டபொழுது பல சீர்திருத்தத் திட்டங்கள் எடுத்துரைக்கப்பட்டன. இத் திட்டங்களில் ஒன்று லான்ஸ்டௌன் திட்டமாகும். ஒரு சிக்கலான முறையில் தெரிவு செய்யப்பட்ட பெருமக்களின் பிரதிநிதிகளும் பொதுமக்களின் பிரதிநிதிகளும் 330 க்கு மிகாமல் இச்சபையில் இருப்பர். அதாவது பெருமக்கள் தொகுதியிலிருந்து (Peerage) 100 பிரபுக்கள் தெரிவு செய்யப்பட வேண்டும். பெருமக்கள் தொகுதியிலிருந்து அல்லது இதற்கு வெளியிலிருந்து அரசரால் 100 பேர் அமர்த்தப்பட வேண்டும், பொதுமக்கள் சபையினர் பிராந்தியவாரியாக அமர்ந்து 120 பேர்களை தேர்ந்தெடுக்க வேண்டும். மேற்றிராணியார் களிலிருந்து 5 மேற்றிராணியார்கள் தெரிவு செய்யப்பட வேண்டும் பாராளுமன்ற மசோதாவின் நிறைவேற்றத்தைத் தவிர்க்கும் நோக்கத்தோடு லிபரல்கள் இத் திட்டத்தைக் கொண்டு வந்தனரெனினும் இது ஏற்கப்படவில்லை. பலர் பல வகைத் திட்டங்களை உருவாக்கினர். இவைகளை ஆராய பிரைஸ் பிரபுவின் தலைமையில் பாராளுமன்றக்குழு ஒன்று அமர்த்தப்பட்டது. இரு சபைகளிலிருந்தும் சமமான எண்ணிக்கை உறுப்பினர்களைக் கொண்ட இக் குழுவில் 30 உறுப்பினரிருந்தனர். எல்லா அரசியல் கட்சிகளின் பிரதிநிதிகள் இக் குழுவில் இடம் பெற்றனர்.

1918-ல் இக்குழு, குறிப்பிட்ட பரிந்துரைகளோடு ஒரு நீண்ட அறிக்கை தயாரித்தது. மேல்சபையின் உருவளவு குறைக்கப்பட வேண்டுமென்றும், இரு கூருகளைக் கொண்டதாக இது அமைக்கப் படவேண்டுமென்றும், இதன் உறுப்பினரில் மூன்றில் ஒரு பங்கினர் பெருமக்களிலிருந்து தெரிவு செய்யப்பட வேண்டுமென்றும் எஞ்சியுள்ள மூன்றில் இருபங்கினரை பொதுமக்கள் சபையினர் பிராந்திய அடிப்படையில் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றும் இக்குழு பரிந்துரைத்தது. உறுப்பினரின் பதவிக்காலம் பன்னிரண்டு ஆண்டெனவும் உறுப்பினரில் மூன்றில் ஒரு பங்கினரை நான்காண்டிற்கொரு முறை தேர்ந்தெடுக்க வேண்டுமென குழு குறிப்பிட்டது. இரு சபைகளுக்கிடையே கருத்து வேறுபாடுகள் எழுமாயின் இவைகளை இரு சபைகளிலிருந்தும் தெரிவு செய்யப் பட்ட 30 உறுப்பினர் கொண்ட கூட்டுக் குழுவிடம் விடவேண்டும்

கருத்து வேறுபாடுகளை கூட்டுக்குழு தீர்த்து வைக்கும் இத்திட்டம் கடுமையான எதிர்ப்புக்குள்ளாகியது.

இப் பரிந்துரைகளை வலியுறுத்துவதற்குப் பதிலாக கேபினெட் உறுப்பினர்களைக் கொண்ட ஒரு குழுவை கேபினெட் அமர்த்தியது. இக் குழு 5 தீர்மானங்களை பெருமக்கள் சபையின் ஆய்விற்கு 1922-ல் அனுப்பிற்று.

5. தீர்மானங்கள் பின்வருமாறு

1. அரச மரபினரைச் சேர்ந்த பெருமக்களோடும் சமயத் துறைப் பிரபுக்களோடும் சட்டப் பிரபுக்களோடும் இச் சபை: (அ) மரபுவழி வராத வெளியார்களில் இருந்து மறைமுகமாகவோ நேர்முகமாகவோ தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களையும்; (ஆ) பெருமக்கள் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பிரபுக்களையும்; (இ) அரசப் பதவியில் இருப்பவரால் அமர்த்தப்படுகின்ற உறுப்பினர்களையும் கொண்டு அமைய வேண்டும். இப் பிரிவு ஒவ்வொன்றின் உறுப்பினர் எண்ணிக்கை சட்டத்தால் வரையறுக்கப்பட வேண்டும்.

2. அரச மரபினரைச் சேர்ந்த பிரபுக்களையும் சட்டப் பிரபுக்களையும் தவிர, திருத்தியமைக்கப்பட்டதும் உருவளவு குறைக்கப் பட்டதுமான பெருமக்கள் சபையின் மற்ற ஒவ்வொரு உறுப்பினரும் சட்டத்தால் வரையறை செய்யப்பட்ட காரியத்திற்கு சபையின் உறுப்பினராய் இருப்பர். ஆனல் இவர்கள் மறுபடியும் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்படுவதற்குத் தகுதி உடையவராவர்.

3. திருத்தியமைக்கப்பட்ட பெருமக்கள் சபையில் ஏறத்தாழ 350 உறுப்பினர் இருத்தல் வேண்டும்.

4. பெருமக்கள் சபை பணமசோதாக்களை திருத்தவோ தள்ளி விடவோ முடியாதெனினும், ஒரு மசோதா பணமசோதாவா அல்லது பணமசோதா இல்லையாவென்பதையும், அல்லது ஓர் அளவிற்கு பணமசோதாவா அல்லது இல்லையாவென்பதையும் இரு சபைகளின் கூட்டுநிலைக் (கமிட்டிக்கு) குழுவிற்கு அனுப்பி முடிவு செய்ய வேண்டும். இக் குழுவின் முடிவு இறுதியானதாகும். ஒவ்வொரு புதிய பாராளுமன்றத்தின் துவக்கத்தின் போது இக் கூட்டு நிலைக்குழு அமர்த்தப்பட வேண்டும்; பாராளுமன்றத்தின் ஒவவொரு சபையும் ஏழு உறுப்பினரை அனுப்பி இக் குழுவை அமைக்கும். இத்துடன், பொதுமக்கள் சபையின் சபாநாயகர் குழுவின் பதவி முறைப்பட்ட தலைவராக இருப்பார்.

5. ஒரு பாராளுமன்றத்தின் பதவிக் காலத்தில் பெருமக்கள் இசைவின்றி ஒரு மசோதா சட்டமாக நிறைவேற்றப் படலாம் என்ற 1911ஆம் ஆண்டின் பாராளுமன்றச் சட்டத்தின் பிரிவுகள், இத் தீர்மானங்களில் குறிப்பிட்டுள்ளபடி பெருமக்கள் சபையின் அமைப்பை மாற்ற அல்லது திருத்த கொண்டு வரப்படும் அல்லது பாராளுமன்றச் சட்டத்தால் பெருமக்கள் சபைக்கு கொடுக்கப் பட்டுள்ள அதிகாரங்களை எவ் வகையிலும் மாற்றி அல்லது திருத்தி யமைக்கக் கொண்டு வரப்படும் எந்த மசோதாவிற்கும் பொருந்தா.

ஆனல் அமைச்சரவையின் இத் திட்டத்திற்கு பெருமக்கள் ஆர்வம் காட்டவில்லை. மரபு வழியமைந்த இச் சபையின் அதிகாரங்களைப் பெருக்கும் வகையில் மேற்கொள்ளப்படும் அரைகுறையான சீர்திருத்தமெதுவும் அறிவுடைமையாகாதெனும் கருத்தும் நிலவியது. இருப்பினும் 1922-ல் லாயிட் ஜார்ஜின் அமைச்சரவை பதவி விலகியபோது இத் தீர்மானங்கள் முடக்கப் பட்டன.

அவ்வப்போது பொதுமக்கள் சபையில் மேல்சபையின் சீர்திருத்தம் பற்றிய விவாதங்கள் நடைபெற்றனவெனினும் எவ்வித முடிவும் ஏற்படவில்லை. பெருமக்கள் சபை திருத்தியமைக்கப் பட வேண்டுமென்னும் விருப்பை இச் சபையின் விவாதங்கள் குறிப் பிட்டன. ஆனலும் இச் சீரமைப்பு எத்தகைய உருவைப் பெற வேண்டுமென்பது பற்றி பரவலான கருத்து வேறுபாடுகளும் இருந்தன. பன்னிரண்டுக்கு குறையாமல் சீர்திருத்தத் திட்டங்கள் பலரால் கொண்டு வரப்பட்டு விவாதிக்கப்பட்டன. ஆனல் இவைகள் அனைத்திற்கும் கடுமையான எதிர்ப்புகள் தோன்றின.

சமீப காலம் வரை இச் சபையின் அமைப்பு, அதிகாரம் ஆகியவை பற்றிய பெரும் திருத்தமெதையும் எக் கட்சியினரும் கொண்டுவர விரும்பவில்லை. பெருமக்கள் சபையின் அமைப்பில் காணப்படும் பழைமை வாதப்போக்கை மாற்றியமைக்கும் திட்ட மெதையும் கன்சர்வேடிவ் கட்சியினர் கொண்டுவர விரும்பவில்லை. பெரும் சர்ச்சைக்குரிய மசோதாக்களை சுணக்கும் இதன் அதிகாரம் போதாது என இக் கட்சியினர் நினைத்தனர். பண மசோதாக் களின் மீது பெருமக்கள் சபைக்கு அதிகாரமில்லையெனினும் அடிப் படையான மாற்றங்களை உண்டாக்கும் மசோதாக்களைக் கொண்டு வருவதிலும் நிறைவேற்றுவதிலும் இச் சபை பெரும் பங்கு பற்றுகிறது. மற்ற மசோதாக்களைப் பொறுத்த வகையில், பன்னி ரெண்டு மாதம் சுணக்கி வைக்கும் அதிகாரம் வெறும் தோற்றமே

யாகும். ஏனெனில் இக் காலத்தில் பெரும்பகுதி கீழ்சபையிலேயே கழிந்து விடும். மேலும், வங்கி வட்டி வீதத்தை மாற்றுதல் தூர கிழக்குப் பாதுகாப்பு ஏற்பாடுகளைக் குறைத்தல் போன்ற அரசாங்க நடவடிக்கைகளை இச் சபையின் சட்ட ஆக்க அதிகாரங்களைப் பயன் படுத்தி தடுக்க முடியாது. ஆகவே பொருளாதார, இராணுவக் கொள்கைகளில் அடிப்படையான மாற்றங்கள் ஏற்படுவதைத் தடுக்க பெருமக்கள் சபை எத்தகைய அதிகாரத்தையும் பெறவில்லை. பொதுமக்கள் சபையின் பெரும்பான்மை ஆதரவு பெற்றிருக்கும் அரசாங்கம் சமூகத்தை முற்றிலும் மாற்றியமைக்கக் கூடிய சட்டங்களை நிறைவேற்றலாம்.

எனவே, கன்சர்வேடிவ் கட்சி பதவியில் இருந்தபொழுது அரை குறையான சிறிய மாற்றங்களைத்தான் செய்தது. 1957-ல் சபைக் கூட்டத்திற்கு வரும், தனிப்பட்ட வசதி இல்லா, உறுப்பினரை ஊக்குவிக்கும் பொருட்டு நாள் ஒன்றுக்கு 4½கினி பண உதவியளிக்க வசதி செய்யப்பட்டது. 1958ஆம் ஆண்டின் ஆயுட்கால பெரு மக்கள் சட்டத்தின்படி பிரதமரின் அறிவுரையின் பேரில் ஆண், பெண் பிரபுக்கள் ஆயுட்காலத்திற்குப் படைக்கப்படலாம், 1963ஆம் ஆண்டின் பெருமக்கள் சட்டப்படி, ஆண், பெண் பிரபுக்கள் தம் சொந்த உரிமைகளைத் துறந்துவிட்டு தம் ஆயுட் காலத்தில்பொதுமக்கள் சபைத் தேர்தலில் கலந்து கொள்ளலாம். பெண் பிரபுக்கள் தம் சொந்த உரிமையின்படி பெருமக்கள் சபையில் அமரலாம்.

தொழில்கட்சி வாளா இருந்ததற்கும் சில காரணங்கள் இருக்கின்றன. 1945-51க்கு இடைப்பட்ட காலத்தில் நிகழ்ச்சி களுக்குபின், அரசாங்கத்தைக் கண்டிப்பதிலும் அரசியலமைப்பிலும் தம் குறைவான பங்கினை பெருமக்கள் சபை உணர்ந்து கொண்ட தாகத் தெரிகிறது. திருத்தியமைக்கப் பெற்ற பெருமக்கள் சபையில் திறமையும் செல்வாக்குமுள்ளவர்கள் இடம் பெறுவதை தொழில் கட்சியில் பெரும்பாலோர் விரும்பவில்லை. இச் சபை அதிகமான அதிகாரத்தைக் கோரவில்லையென்றாலும் இச் சபையின் இடையறா ஆய்விற்கு அரசாங்கம் தன்னை உட்படுத்திக் கொள்ள விரும்ப வில்லை. நடைமுறை, அரசியல் காரணங்களுக்காக இச் சபையை ஒழித்து விடுதல் இயலாதெனினும் இச் சபையின் சீர்திருத்தம் எம் முறையில் இருக்க வேண்டுமென்பதையும் முடிவுசெய்ய இயலா திருக்கிறது. உறுப்பினரை நியமித்தல் அல்லது தேர்ந்தெடுத்தல் ஆகியவைகளில் தோன்றும் இடர்கள் உறுப்பினரின் எண்ணிக்கை பெருகும்போது இன்னும் அதிகமாகும்.

நியமனத்தைப் பொறுத்தவரையில், முற்றிலும் நடுநிலை தவறா ஒருவரை நியமனராகப் பெறுவது பெரும் பிரச்சினையாகும். இதற்கு அரசப் பதவியில் இருப்பவர், சபாநாயகர், பிரதமர் ஆகியோர் பெயர் குறிப்பிடப்பட்டனவெனினும் இவர்கள் ஒவ்வொருவருக்கும் குறைபாடுகள் இருக்கின்றன. இன்று அரசப் பதவி அரசியலில் நடுநிலையோடு செயல்படும்பொழுது, சட்டசபை உறுப்பினரை தெரிவு செய்யும் முழுமையான அதிகாரத்தை அரசரிடம் விடுதல் வழக்கமான நடுநிலையைப் பாதிக்கலாம். இதே போல், சபாநாயகரை இப் பணி அரசியல் பூசலில் உட்படுத்தி விடும். தெரிவு செய்வதைப்பிரதமரிடம் விடுதலும் இயலாதாகும். வருங்காலத்தில் மேல்சபையைக் கட்டுப்படுத்த வசதியாக தமக்குகந்தவர்களைப் பிரதமர் நியமிக்க விரும்பலாம். பொது மக்கள் சபை நீண்டகாலத்திற்கு ஒரு கட்சியின் கட்டுபாட்டில் இருக்கும் பொழுது, மேல்சபை இப்பொழுது இருப்பது போல் அரசியலில் நடுநிலையற்றதாக ஆகி விடலாம்.

ஆயினும், பயன்படுத்தத்தக்க எளிய தேர்தல் முறையுமில்லை. பொதுமக்கள் சபையைத் தேர்ந்தெடுப்பதற்கான அதே வாக்குரிமையடிப்படையில் அதே காலத்திற்கு பெருமக்கள் சபையைத் தேர்ந்தெடுத்தால் இச் சபை கீழ்சபைதான் பிரதி பலிக்கும். தல ஆட்சி மன்றங்களால் மறைமுகமாகத் தேர்ந் தெடுப்பதென்றாலும் தலஆட்சியில் கட்சி அரசியலின் செல்வாக்கை இது அதிகரிக்கலாம். தல ஆட்சியில் இது அதிகமான அக்கறையைத் துண்டலாமெனினும் தல ஆட்சியாளர்களின் உண்மையான கடமைப் பொறுப்புகளிலிருந்து இது அவர்களின் கவனத்தை வேறு திசையில் திருப்பிவிடலாம். ஐக்கிய குடியரசின் இணைந்த பகுதிகளாகிய இங்கிலாந்து, வேல்ஸ், ஸ்காட்லாந்து வடக்கு அயர்லாந்து போன்றவைகளின் அடிப்படையில் தேர்தல் நடப்பதில் நன்மைகளும் இல்லை. ஏனெனில் இது தேசிய உணர்ச்சிகளை அளவிற்குமேல் வலியுறுத்தலாம். லண்டன் மேற் பகுதி, நடுப்பகுதி என மண்டலமாக நாட்டை அமைப்பதும் செயற்கையான பிரிவுகளை உண்டாக்கலாம். மக்களின் பற்றுறுதியையும் அக்கறையையும் இது ஒருக்கால் குறைத்து விடலாம்.

### சபையின் சீர்த்திருத்தப் பிரச்சினை

பாராளுமன்றச் சட்டத்தையொட்டி எழுந்த பிரச்சினைகளை கட்சித் தலைவர்கள் ஆராய்ந்தபொழுது இவர்கள் கீழ்க்காணும் கருத்துகளை ஏற்றுக் கொண்டனர்:-

1. மேல்சபை கீழ்சபைக்குத் துணையாக இருக்கவேண்டுமே யன்றி இதற்குப் போட்டியாக அமையலாகா. இக் கருத்தை நோக்கமாகக் கொண்டு முற்றிலும் ஒருபுதிய உருவில் மேல்சபையை அமைப்பதற்கு எதிராக பெருமக்கள் சபையின் சீர்திருத்தம் இப்பொழுது இருக்கும் அமைப்பில் ஒரு திருத்தத்தின் அடிப் படையில் தான் இருக்க வேண்டும்.

2. பெருமக்கள் சபையின் திருந்திய அமைப்பு, எந்த ஒரு அரசியல் கட்சிக்கும் நிலையான பெரும்பான்மை இருக்காத வகையில் இருக்கவேண்டும்.

3. முற்றிலும் மரபுரிமை அடிப்படையில் வந்திருந்து வாக்களிக்கும் இப்போதைய முறை, சீர்திருத்தம் செய்யப்பட்ட மேல்சபையில் கலந்து கொள்ளுவதற்கு இதுவே ஒரு தகுதியாக அமைந்துவிடலாகாது.

4. மேல்சபை உறுப்பினர் 'பாராளுமன்றப் பெருமக்கள்' எனப் பெயர் பெற வேண்டும். பொது சேவை அல்லது தனிப்பட்ட மேம்பாடு அடிப்படையில் இவர்கள் அமர்த்தப் படவேண்டும். மரபு வழிப் பெருமக்களிலிருந்து இவர்கள் அமர்த்தப்படவேண்டும் அல்லது ஆயுள்காலப் பிரபுக்களாக படைக்கப்படக்கூடிய பொது மக்களிலிருந்து இவர்கள் அமர்த்தப்பட வேண்டும்.

5. ஆண்களைப் போல் பெண்களும் பாராளுமன்றப் பெருமக்களாக அமர்த்தப்பட வேண்டும்.

6. அரச மரபினரிலிருந்து குறிப்பிட்ட சிலரும், ஒரு சில சமயத்துறைப் பிரபுக்களும் சட்டப் பிரபுக்களும் மேல்சபையில் இடம் பெற வழி செய்யவேண்டும்.

7. சொந்த வருமான வசதி இல்லாதவர்கள் மேல்சபையில் உறுப்பினர் ஆகும் பொருட்டு சிறிது ஊதியம் இவர்களுக்கு அளிக்க வேண்டும்.

8. பாராளுமன்றப் பொதுமக்களாக இல்லாத பிரபுக்கள் பொதுமக்கள் சபைக்கான தேர்தலில் நிற்க உரிமையுடைய வர்களாக வேண்டும். மற்ற குடிமக்களைப் போல் வாக்களிக்கவும் உரிமை இருக்க வேண்டும்.

9. மேல்சபையின் உறுப்பினருக்கான கடமைகளைச் செய்ய இயலாத அல்லது அக்கறைக் காட்டாத அல்லது தகவில்லாத ஒருவரின் தகுதி இழப்பிற்கு சில விதிகள் இருக்கவேண்டும்.*[1]

---

1* 1948-ஆண்டில் நடந்த கட்சித்தலைவர்கள் மாநாட்டில் ஏற்றுக் கொள்ளப்பட்ட முடிவுகள். H.M.S.O., 1948.

இக் கருத்துக்கள் செயல்படுத்தப்படவில்லை. அரைகுறை யாகப் பெருமக்கள் சபை பற்றிய எதையும் செய்ய இயலாமல் போய்விட்டது. ஒரு விரிவான சீர்திருத்தத் திட்டம் ஏற்றுக் கொள்ளப்படும் வரை பெருமக்கள் சபை இப்பொழுது போல் தொடர்ந்து இருந்து வரலாம். எவ்வாறுயினும், 1948ஆம் ஆண்டில் கட்சித் தலைவர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்ட கருத்துகள் சபையின் சீர்திருத்தத்தை ஆராய ஓர் அடிப்படை யாக அமையும்.

### சமீபகால வளர்ச்சிகள்

"தற்கால பாராளுமன்றமுறை அமைப்பிற்குள் மேல்சபை வளர்வதற்கு அதன் மரபுரிமை வழி அடிப்படையை நீக்கவும். அதிகாரங்களைக் குறைக்கவும் சட்டம் கொண்டு வரப்படுமென 1967 ஆம் ஆண்டில் அரசியாரின் சொற்பொழிவில் அறிவிக்கப் பட்டது. ஆனால் ஏற்றுக் கொள்ளக்கூடிய சீர்திருத்த அடிப்படை பற்றி கட்சிகளுக்கிடையே பேச்சுகள் நடைபெற வேண்டும்.

பிரிட்டிஷ் பாராளுமன்ற முறையில் மறு ஆய்வு செய்யும் ஒரு மேல்சபையின் தேவையை எல்லாக் கட்சிகளும் ஒப்புக் கொள்ளு கின்றன. இதன் உறுப்பினர்கள் எப்படித் தேர்ந்தெடுக்கப்படுவர் என்பது தான் பிரச்சினையாகும்.

ஆயுள்காலப் பிரபுக்களையும் செயல் திறமுடைய மரபுவழி வந்த ஒரு சில பிரபுக்களை கொண்ட பெருமக்கள்சபை 300 பேர் களை கொண்டதாக இருக்கலாம் என ஒரு கருத்துத் தெரிவிக்கப் பட்டது. இப் பிரபுக்களைத் தெரிவு செய்யும் முறை எதுவானாலும் அப்பொழுது பிரதமராக இருப்பவரின் ஏற்பிசைவை அது பெறவேண்டும்.

இத் தலைமுறையினைச் சேர்ந்த மரபுவழி வந்த பிரபுக்கள் அனைவரும் சபையில் இருக்கவும் பேசவும் அனுமதிக்கப்பட வேண்டும். ஆனால் ஆயுள்காலப் பிரபுக்களாக நியமனம் செய்யப் பட்டவர்கள் மட்டுமே வாக்களிக்க அனுமதிக்கப்பட வேண்டு மென்பது இன்னொரு கருத்தாகும். மரபுவழிப் பிரபுக்கள் ஆயுள்காலப் பிரபுக்களை நியமிக்க வேண்டும்.

பெருமக்கள் ஒரு தேர்வுக் குழுவாக இருந்தும் குறிப்பிட்ட சில பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கலாமென்றால், தொழில் சங்கங்கள், வாழ்க்கைத் தொழில்கள், தொழில்சாலைகளின் கூட்டமைப்புகள், தல நிறுவனங்கள், பல்கலைக் கழகங்கள், பல்வேறு திருச்சபைப்

பிரிவு போன்ற முக்கியமான நிறுவனங்கள், ஏன் இதே போன்ற சிறப்புரிமைகளைப் பெறலாகா? என்னும் வினா எழுகிறது. இத்தகைய தெரிவு முன்ற முழுநின்றவுடையதாக இருப்பதோடின்றி, பிரதமரின் தன்னிச்சையான போக்கில் இருந்து இதை அகற்றும். இத்துடன், பொதுமக்கள் சபையின் பணியை மறுஆய்வு செய்யத் தக்க நிபுணர்களை இம்முறையளிக்கும்.

மேல்சபையின் அமைப்பைப் பற்றி கட்சிகள் ஓர் உடன் பாட்டிற்கு வரலாம். ஆனால் இச் சபையின் அதிகாரம் பற்றிய ஒரு உடன்பாட்டிற்கு கட்சிகள் வருவது கடினமாக இருக்கலாம். ஏனெனில் மேல்சபையின் பணியைப் பற்றி பிரிட்டிஷ் அரசிய லமைப்பில் ஒரு முழுமையான உடன்பாடு காணப்படவில்லை. இது மறு ஆய்வு செய்யும் அவையாக மட்டும் இருந்தால் போதுமா? அல்லது சுணக்கும் சபையாகவும் இது இருக்க வேண்டுமா ? முடிவு செய்யும் உரிமை தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளிடம் இருக்க வேண்டுமென தொழில் கட்சி வலியுறுத்துகிறது. தேர்தலில் முடிவு செய்யப்பட்டது இன்னொரு சபையின் முடிவிற்குட் படுத்துவது மக்களாட்சி முறைக்கு ஒவ்வாததாகும். இருப்பினும், மறுசிந்தனைக்காக ஒரு குறைந்த காலத்திற்கு, அதாவது 6 மாதத் திற்கு, சுணக்கி வைத்தலை இக் கட்சி ஒப்புக்கொள்ளுகிறது. ஆனால் கன்சர்வேடிவ்களோ, பொதுமக்கள் சபை நிறைவேற்றும் சர்ச்சைக்குரிய சட்டங்களை உண்மையிலேயே சுணக்குவதற்கு விரும்பினர். இப்பொழுது இருந்துவரும் கட்சி அமைப்பு, கட்டுப்பாடு ஆகியவைகளுக்கு அரசாங்கம் இணங்கி அவசரமாகச் செயல்படும் பொழுது இத்தகைய அரசியலமைப்பு சார்ந்த தடுப்பமைவு அவசியமாகிறது.

ஒரு மசோதாவை மேல்சபை சுணக்கும் காலத்தை ஒரு ஆண்டிலிருந்து 6 மாதத்திற்கு அல்லது இதற்கும் குறைவாகக் குறைக்கவும்; இத்தகைய மசோதாவை மறுபடியும் புதிய பாராளு மன்றக் கூட்டத்தொடரில் கொண்டு வர வேண்டுமென்பதையும் குறைக்க அரசாங்கம் கருதுவதாகத் தோன்றுகிறது. சட்ட வலிமையுடைய அரசாங்க ஆணைகளை பெருமக்கள் சபை முழுமை யாகத் தள்ளிவிடும் அதிகாரம் அகற்றப்பட வேண்டுமென்றும் அரசாங்கம் விரும்புகிறது.

இக் கருத்துக்களை கன்சர்வேடிவ்களும் பெருமக்களும் ஏற்றுக் கொள்வார்களா என்பது ஐயப்பாட்டிற்குரியதே. ஆனால் மேல் சபைப் புதுப்பொலிவுடையதாக்கி அதே சமயத்தில் அதை மெலிவுறச் செய்வதில் யாது பயனுமில்லை.

## மேலும் படிப்பதற்குரிய நூல்கள்

Sir Iror Jennings, 'Parliament' (1957) Chapter 12.
Harvey and Bathor, 'The British Constitution', Chapter 4. (1968).
Albert, Sir Conrtenay, 'Parliament'.
Sydney D. Bailey, 'British Parliamentary Democracy' 1958.
Pollard, A. F. The 'Euolution of Parliament'. 1926.
Gordons, 'Your Parliament.' (1910)

# 3. பொதுமக்கள் சபை

## (House of Commens)

### தேர்ந்தெடுக்கப்பட்ட சபை

பல்வகையான நிலைகளிலும் கட்டுப்பாடுகளிலும் இங்கிலாந்தின் மக்கள் ஆயிரம் ஆண்டுகளாக வாக்களிப்பில் ஈடுபட்டிருக்கிறார்கள். இது தொடர்ந்து நடைபெறுவதாகும். உள்நாட்டுக் குழப்ப காலங்களிலும் புரட்சிக் காலங்களிலும் கூட இத் தொடர்ச்சி முறியவில்லை. பதினேழாம், பதினெட்டாம் நூற்றாண்டுகளில் ஐரோப்பாவில் பிரதிநிதித்துவ நிறுவனங்கள் நலிவுற்ற பொழுது இங்கிலாந்தில் மக்கள் இவைகளைப் பற்றி நின்றார்கள். ஆல்ஃபிரட் காலந் தொடங்கி இன்று வரை ஆங்கிலேயர்கள் ஏதாவதொரு தேர்தலில் ஈடுபட்டு வந்துள்ளார்கள். இத் தேர்தல்கள் நகரமன்றம், கோட்ட நீதிமன்றம், அல்லது பொது மக்கள் சபை ஆகிய ஏதாவதொன்றில் நடந்து வந்துள்ளன.

இறையிலி மானியதார்களின் பிரதிநிதிகள் கோட்ட நீதி மன்றத்தில் கோட்டப் (படைமானிய) பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பதின்மூன்றாம் நூற்றாண்டில் பல்வேறு சமயங்களில் இவர்கள் பேரவைக்கு அழைக்கப்பட்டார்கள். இக் கோட்டப் பிரதிநிதிகள் காலப்போக்கில் பாராளுமன்றத்தின் முறையானஉறுப்பினராயினர். நகரத்தொகுதிகள் பாராளுமன்றத்திற்கு பிரதிநிதிகளை அனுப்ப ஆணை பெற்றதும் இந் நகரப் பிரதிநிதிகள் கோட்டப் பிரதிநிதிகளோடு இணைந்து பொதுமக்கள் மன்றமாக அமைந்ததும் ஈண்டு நினைவிற் கொள்ளலாம். கோட்ட இறையிலி மானியதார்களின் பொது விருப்பையொட்டி கோட்ட நீதிமன்றக் கூட்டத்தில் இவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். எனவே, பிரிட்டிஷ் பாராளுமன்ற வாக்களிப்பு முறை ஓரளவு மக்களாட்சிக் கோட்பாட்டின் அடிப்படையில் தொடங்கியதெனலாம். கோட்டங்களிலும் நகரங்களிலும் வாக்களிப்பதற்கு

திட்டவட்டமான தகுதி வேறுபாடுகள் இல்லை. மகா சாசனம் புரட்சிகரமானதாகக் கருதப்பட்டாலும் இது புதிதாக யாருக்கும் வாக்குரிமை அளிக்கவில்லை யெனலாம். தல ஆட்சியாளர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமை பழங்காலம் தொட்டு இறையிலி மானிய தார்களுக்கு இருந்து வந்துள்ளது.

ஆயினும் வாக்குரிமை கொள்கையளவில் கூட இருந்ததாகத் தெரியவில்லை. ஆண்டு ஒன்றுக்குக் குறைந்தது 40 ஷில்லிங் குத்தகை மதிப்புடைய இறையிலி நிலச்சொந்தக்காரர்களைத் தவிர வேறு எவரும் கோட்டத் தேர்தல்களில் வாக்களிக்கலாகாதென ஆறும் ஹென்றியின் காலத்தில் ஒரு விதி செய்யப்பட்டிருந்தது. 40 ஷில்லிங்குக்கிற்கு குறைவான இத்தகை மதிப்புடைய நிலத்தைப் பெற்றிருந்த பலர் வாக்களிக்கும் உரிமையை இழந்தனர். இவ்விதி ஒரு பெரும் மாற்றத்தைச் செய்தது. 1832ஆம் ஆண்டுப் பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டம் நிறைவேறிய வரை 40 ஷில்லிங் குத்தகை செலுத்திய மானிய தார்கள் தான் பொது மக்கள்சபை உறுப்பினர் தேர்தலை முடிவு செய்தனர்.

இதற்கிடையில் நகரங்களிலும் வாக்குரிமை குறைக்கப் பட்டது. கொள்கையளவில் சுயேச்சையான ஒவ்வொரு குடி மகனும் வாக்குரிமை பெற்றிருந்தாரெனினும் படிப்படியாக இவர் களின் நிலையில் மாற்றம் ஏற்பட்டு வந்தது. குறிப்பிட்ட குத்தகை அடிப்படையில் நிலம் வைத்திருந்தவர்கள் அல்லது குறிப்பிட்ட சில தல வரிகளை நகருக்குச் செலுத்தியவர்கள் மட்டுமே சில நகரங்களில் சுயேச்சைக் குடிகளாகக் கருதப்பட்டனர். இன்னும் சில நகரங் களில், வணிகக் கழக உறுப்பினர் நிலைக்கும் அல்லது குறிப்பிட்ட சில தொழில் அமைப்பின் உறுப்பினர் நிலைக்கும் வாக்குரிமை தாழ்த்தப்பட்டது. சுயேச்சையான நிலையை அடைய ஒருவர் சுயேச்சைக் குடியின் மகனாக அல்லது சுயேச்சைக்குடி ஒருவரின் மகளை மணந்தவராக அல்லது நகருக்கு வரி செலுத்துபவராக இருக்க வேண்டுமென சில நகரங்கள் விதி செய்திருந்தன. ஒரே படித்தான தகுதி முறைகள் நகரங்களில் காணப்படவில்லை. ஒவ்வொரு நகரும் அதன் சொந்த விதிகளையும் முன் நிகழ்வுகளையும் நடைமுறைகளையும் வளர்த்துக் கொண்டன. ஆனல் பதினைந்தி லிருந்து பத்தொன்பதாம் நூற்றுண்டுகளுக்கிடைப்பட்ட காலத்தில் நகர வாக்குரிமை எங்கும் குறைக்கப்பட்டிருந்தது. பொதுமக்கள் சபையைக் கட்டுப்படுத்த விரும்பிய அரசரும் இவ் வளர்ச்சிக்கு உதவினர். குறைந்த வாக்குகளைப் பெற்றிருக்கும் நகரங்களை கட்டுப்படுத்துவதைவிட அதிகமான வாக்குகளை பெற்றிருக்கும்

நகரங்களைக் கட்டுப்படுத்துவது கடினம் என்பதை அரசர் அறிந்திருந்தார்.

வாக்குரிமை இவ்வாறு பறிக்கப்பட்டதை அக்காலத்திய மக்கள் எதிர்க்கவில்லை. ஏனெனில் இன்று நாம் கருதுவது போல் அன்று வாக்குரிமை முக்கியமானதன்று. எனவே இதற்காகப் போராட்டம் நடத்தவும் விரும்பவில்லை. பாராளுமன்ற உறுப்பினருக்கு அரசாங்கம் ஊதியமெதுவும் அளிக்கவில்லை. உறுப்பினருக்கான போக்குவரத்துச் செலவுகளை நகரமும் கோட்டமும் ஏற்க வேண்டும். பெரும்பாலும் தன் செலவுகளைத் தானே ஏற்றுக் கொள்ளக் கூடியவர்கள்தான் உறுப்பினராகத் தெரிவு செய்யப்படுவர். சில சமயங்களில் இப்படிப்பட்டவர்கள் கிடைப்பது அரிதாகிவிடும். எனவே, பாராளுமன்றத்திற்குப் பிரதிநிதிகளை அனுப்புவதிலிருந்து விலக்களிக்குமாறு நகரங்கள் சில வேலைகளில் அரசரை வேண்டிக் கொள்ளும். இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன் வாக்குரிமை கேட்டுப் போராட்டம் நடத்த வேண்டுமென எவரும் நினைக்கவில்லை.

அரசாங்கம் நடத்துவதில் பொதுமக்கள் சபையின் செல்வாக்கு அதிகரித்த பொழுதுதான் இச் சபையில் பிரதித்துவம் பெறுவது பெரும் சிறப்பாகக் கருதப்பட்டது. இதற்கிடையில் தேர்ந்தெடுக்கப்படுவதற்கான தகுதிப்பாடுகளில் குழப்ப நிலை ஏற்பட்டது. நாற்பது ஷில்லிங் இறையிலிமானியதார், வாக்களிக்கும் தகுதி பெற்றிருந்தார். ஆனால் பலவகையான இறையிலி நிலக்குத்தகை முறைகள் இருந்தன. சில நகரங்களில் வயது வந்த எல்லா ஆண்களும் வாக்களிக்கும் உரிமை பெற்றிருந்தனர். மற்ற நகரங்களில் மக்கள் தொகையில் நூற்றுக்கு ஒருவர் கூட வாக்களிக்கும் தகுதி பெற்றிருக்கவில்லை. இன்னும் சில நகரங்களில் உணவு சமைக்கக் கூடிய சிறிய மனைக்கட்டுடைய ஆண்கள் வாக்குரிமை பெற்றிருந்தனர். மற்ற சில நகரங்களில் நகராட்சி மன்ற உறுப்பினரைத் தவிர வேறெவருக்கும் வாக்குரிமை இல்லை. நகராட்சி உறுப்பினர் பதவியைப் பிறப்பாலும், திருமணத்தாலும் பெறலாம். இதை விலைக்கும் வாங்கலாம்; மானியமாகவும் பெறலாம். ஒருவர் வசிக்கும் இடத்தை அடிப்படையாகக் கொண்டு அவருடைய வாக்குரிமை இருந்தது.

பொதுமக்கள் சபையில் பிரதிநிதித்துவம் மக்கள் தொகை அடிப்படையில் இருக்கவில்லை. ஒவ்வொரு கோட்டமும் அவை எந்த உருவளவு உடையதாக இருந்தாலும் சபைக்கு இரண்டு

உறுப்பினரை அனுப்ப வேண்டும். இதை கருத்தில் கொண்டு பார்த்தால், 1832க்கு முன், பொதுமக்கள் சபை மக்களைப் பிரதிபலித்தது என்று சொல்வது தவறாகும். 1831-ல் பிரட்டனிலும் அயர்லாந்திலும் ஏறத்தாழ 24 மிலியன் மக்கள் வசித்தனர். வயது வந்தவர்களுக்கு வாக்குரிமையெனும் அடிப்படையில் சுமார் 10 மிலியன் மக்கள் வாக்குரிமை பெற்றிருக்க வேண்டும். உண்மையில் வாக்குரிமை பெற்றிருந்தவர்களின் எண்ணிக்கை ஒரு மிலியனுக்குக் குறைவாகத் தான் இருந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இங்கிலாந்து மக்களாட்சி முறையைப் பெற்றிருக்க வில்லை. நாடு உயர்வகுப்பினரால் ஆளப்பட்டது.

### பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பிரதிநிதித்துவமும் வாக்களிப்பும்

எட்டாம் ஹென்றியின் காலத்தில் பொதுமக்கள் சபையில் 298 உறுப்பினர் இருந்தனர். கோட்டங்களின் பிரதிநிதிகளாக 74 பேர்களும் நகரங்கள், தனி நகரர்கள் ஆகியவற்றின் பிரதிநிதிகளாக 224 பேர்களும் சபையில் இருந்தனர். 'மாதிரிப்பாராளுமன்ற' த்தைக் காட்டிலும் இச் சபையில் உறுப்பினர் குறைவகாவே இருந்தனர். ஏனெனில் பிரதிநிதிகளைச் சபைக்கு அனுப்புவதைக் கடமையாகக் கருதாமல் ஒரு சுமையாக தனி நகர்கள் கருதின. டியுடர்களின் காலத்தில் இவ்விதப் போக்கில் சிறிது மாற்றம் ஏற்பட்டது. எட்டாம் ஹென்றி 41 பேர்களை புதிதாகச் சபையில் இடம் பெறச் செய்தார். ஆறும் எட்வர்டு, எலிசபத் ஆகியோரின் ஆட்சிக் காலத்தில் சபையின் உறுப்பினர் தொகை பெருகிற்று. 1677-ல் சபையில் 513 உறுப்பினர் இருந்தனர். 1707-ல் ஸ்காட்லாந்து இங்கிலாந்தோடு இணைந்த பொழுது 45 உறுப்பினரும் 1800-ல் அயர்லாந்து இங்கிலாந்தோடு ஐக்கியமான போது சபையில் 100 உறுப்பினர் அதிகரித்தனர்.

1830-ல் சபையில் 658 உறுப்பினர் இருந்தனர். 40 மாவட்டங்கள் 179 தனி நகர்கள், ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகங்கள், 12 வேல்ஸ் மாவட்டங்கள், 12 வேல்ஸ் தனி நகர்கள், ஸ்காட்டிஷ், ஐரிஸ் தொகுதிகள் ஆகியவற்றின் பிரதிநிதிகளாக இவர்கள் இருந்தார்கள்.

மாவட்டப் பிரதிநிதிகள் சபையின் நிலையான உறுப்பினராக இருந்து வந்தனர். 13ஆம் நூற்றாண்டிற்குப்பின் மோன்மவுத் ஷயர், செஷயர், சொர்ஹாம் ஆகியவை சேர்க்கப்பட்டன. மேலும் மாவட்டத்தின் பிரதிநிதியாக வந்த இருவரும் தேர்வாளர்களின்

வகையாட்களாக வந்தனர். ஆனால் பதினெட்டாவது நூற்றாண்டின் இறுதியில் மாவட்டங்கள் பல்வேறு விளைவாற்றல்களுக்குள்ளாயின. எடுத்துக்காட்டாக, பதினொரு இடங்களில் சசெக்ஸ் இரண்டு இடங்களைக் கட்டுப்படுத்தியது. இவைகள் நியுகாசில் கோமகனின் கட்டுப்பாட்டிற்குள் இருந்தன. பெரும்பாலும் சபையின் இடங்கள் மரபுரிமையாகக் கருதப் பட்டதோடு தேர்தலைத் தவிர்க்கும் நோக்கத்தோடு சில ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

இருப்பினும், சபையின் உறுப்பினரில் மூன்றிலிரு பங்கினரை அனுப்பிய தனி நகர்கள் சபையின் அரசியல் உருவமைப்பை வரையறைச் செய்தன. இவைகளில் பல, மூன்று நூற்றாண்டுக்கு முன்னரே, பாராளுமன்றத்திற்கு இரு உறுப்பினரை அனுப்பும் உரிமையைப் பெற்றிருந்தன. இதற்கிடையில் இவைகளின் உருவளவு பெருமளவில் மாற்றம் பெற்றிருந்தது. சில நகர்கள் அடையாளம் காணமுடியாத அளவிற்கு மாற்றமடைந்திருந்தன வெனலாம். தொழிற் புரட்சியின் காரணமாக இங்கிலாந்தின் வடபாகமாகிய மிட்லாண்டிற்கு மக்கள் இடம் பெயர்ந்தனர். நகரங்களின் வளர்ச்சியால் தெற்கில் நகரங்கள் செறிந்திருந்தன. இவைகளில் பாதிக்கு மேற்பட்ட நகரங்கள் வில்ட்ஷயரை யொட்டி இருந்தன. 3 லட்சத்திற்கு மேற்பட்ட மக்கள் தொகையுடைய கார்ன்வால் 42 உறுப்பினரைப் பாராளு மன்றத்திற்கனுப்பியது. ஆனால் 13 லட்சத்திற்கு மேற்பட்ட மக்கள் தொகையுடைய லங்காசயர் 14 உறுப்பினரை மட்டுமே அனுப்பியது. மான்செஸ்டர், பர்மிங்ஹாம், லீட்ஸ் செப்பீல்ட்ஸ் போன்ற பெரும் நகரங்களுக்குப் பாராளுமன்றத்தில் பிரதிநிதிகள் இல்லை.

வாக்களிப்பு முறையும் காலத்திற்கு ஒவ்வாததாகத்தான் இருந்தது. மாவட்டங்களில் (1430-ல்) ஏற்படுத்தப்பட்டிருந்த ஒரேபடித்தான் தகுதிகள்தான் இன்னுமிருந்தன. இறையிலி நிலமோ 40 ஷில்லிங் மதிப்புக்கூடிய குடியிருப்பு மனையோ ஒருவருக்குச் சொந்தமாக இருக்குமானால் வாக்களிக்க உரிமை யுண்டு. மாவட்ட மன்றங்களில் தேர்தல்கள் நடைபெற்றன. இத் தேர்தல்கள் பல நாட்கள் நடத்தப்படலாம். பட்டியல் எதுவும் தயாரிக்கப்படவில்லை. வாக்களிக்கும் உரிமை பெற்றவர்கள் நேரில் சென்று வாக்களித்தார்கள்- வாக்களிக்கும் தகுதியை நிலை நாட்ட பிரமானம் எடுத்துக்கொண்டார்கள். இவ்வுரிமையைப்பெற பெரிய இறையிலி நிலத்திலிருந்து ஒரு சிறு பகுதியைப் பிரித்துக்கொள்ளும் வழக்கமும் இருந்தது. இரகசிய

மாக்களிப்பு முறை இல்லாததால் பணக்காரர்கள் வாக்காளர்களை மிரட்டி வாக்குகளைப் பெறுவதும் கையூட்டுக் கொடுத்து வாக்குகளைப் பெறுவதும் பழக்கமாக இருந்தது. 1830-ல் மாவட்ட இடம் ஒன்றில் வெற்றி பெற 6,000 பவுன் செலவாயிற்றென மதிப்பிடப்பட்டது.

மாவட்டத்தில் உள்ளதைப் போலன்றி நகர வாக்குரிமைத் தகுதி ஒழுங்கற்றதாகவும் பெரும்பாலும் தலப் பழக்கத்தைச் சார்ந்ததாகவும் இருந்தது. பல நகரங்களில் இத் தகுதி மக்களாட்சி சார்புடையதாக இருந்தது. சில நகரங்களில் இரவலர் வரி செலுத்தக் கடமைப்பட்டவர்கள் வாக்களிக்கும் தகுதி பெற்றிருந்தார்கள். இன்னும் சில இடங்களில், தனியறையில் இருந்து கொண்டு அடுப்பு மூட்டித் தம் உணவைச் சமைத்துக்கொள்பவர்களும் இத் தகுதி பெற்றூர்கள். ஆயினும், பெரும்பாலான நகரங்களில் ஒரு சில தேர்வாளர்களே இருந்தனர். சில இடங்களில் மரபுரிமை அடிப்படையில் இத் தகுதி ஒரு சிலருக்கிருந்தது. வேறு இடங்களில் நகராட்சி உறுப்பினர்களுக்கு மட்டும் சாசனங்களால் இத் தகுதி அளிக்கப்பட்டிருந்தது. பொதுச் சட்டத்தின் அடிப்படையிலும் சில வழக்கங்களின் அடிப்படையிலும் பழைய மனைகளில் வசிப்பவர்களும் சிறு நிலமுடையவர்களும் இத் தகுதியைப் பெற்றிருந்தது மிகப்பெரும் முறைகேடாகும். மக்கள் இல்லாத சாரும் (Sarum) மிட்ஹர்ஷ்ட்ம் (Midharst) இரு உறுப்பினரை பாராளுமன்றத்திற்கு அனுப்பலாம்.

அறிவிற்குப் பொறுந்தாத இவ்வித வாக்குரிமைத் தகுதியில் இரண்டு குறிப்பிடத்தக்க விளைவுகள் காணப்படுகின்றன.

(1) வாக்களிக்கும் உரிமைகடுத்தமாக வரையறை செய்யப்பட்டது. இரண்டு கோடி மக்களில் 1831-ல், 4,35,000 பேர்கள் தான் வாக்களித்தனர். மக்கள் தொகைக்கும் வாக்காளருக்கும் உள்ள விகிதம் இடத்திற்கிடம் மாறியது. 9000 மக்கள் தொகையுடைய வின்செஸ்டரில் (Winchester) 60 வாக்காளர்கள் தான் இருந்தனர். 20 லட்சம் மக்கள் வசித்த ஸ்காட்லாந்தில் 3000 வாக்காளர்கள் தான் இருந்தனர்.

(2) பாராளுமன்றத்திற்கான இடங்கள் ஒரு சில நிலக்கிழார்களின் கட்டுப்பாட்டிற்குள் இருந்தன. இந் நகரத் தொகுதிகளை இவர்கள் சொந்தமாகவோ, கையூட்டலாலோ, மிரட்டலாலோ தம் உடைமையாக்கிக் கொண்டிருந்தனர். 1793-ல் பொதுமக்கள் சபை உறுப்பினரில் பாதிப்பேர் இப்படிப்

பட்ட 154 நிலக்கிழார்களால் தெரிவு செய்து அனுப்பப் பட்டார்கள். இவர்களில் 40 பேர் பிரபுக்களாவர். இவர்கள் பாராளுமன்ற இடங்களை அதிக விலை கொடுத்து வாங்கக் கூடியவர்களுக்கு விற்பதும் உண்டு. அல்லது பாராளுமன்றத்தில் இவர்களின் ஆதரவாளர்களின் வழியாகப் பதவிகளையும் தகுதி உயர்வுகளையும் இவர்கள் பெற விரும்புவர். 'பிரிட்டனின் மக்களை இச் சபை பிரதிபலிக்கவில்லை; பெயரளவு நகரத் தொகுதிகள். சிதைந்தழிந்துபோன நகரங்கள், பணம் படைத்த வர்கள், வெளிநாட்டுப் பிரமுகர்கள் ஆகியவைகளை இது பிரதி பலித்தது'வென இளைய பிட் (Younger Pitt) கூறியதில் வியப் பொன்றுமில்லை.

இருந்தபோதிலும், மக்களாட்சி முறையில் இச் சபை அமைய வில்லை யென்பதற்காக இதை முற்றிலும் பழித்துரைக்க இயலாது. மக்களாட்சி முறை சிறந்ததென அக்காலத்தில் மக்கள் கருதவில்லை. பாமர மக்களோடு நெருங்கி இருந்ததால் மெய்யாகவே இந்த ஆட்சியை மக்கள் ஐயப்பாட்டோடு பார்த்தனர். மக்களைப் பிரதிபலிக்காமல் 'உடைமையையும் நுண்ணறிவையும்' பாராளு மன்றம் பிரதிபலிக்க வேண்டுமென பர்க் (Burke) கருதினர். சிதைந்த நகரத் தொகுதிகளிலிருந்து இளைய பிட், சார்லஸ் ஜேம்ஸ் ஃபாக்ஸ் போன்ற திறமிக்க இளைஞர்கள் பாராளுமன்றத்தில் நுழைய முடிந்ததைச் சுட்டிக்காட்டி இந்த முறையை ஆதரித் தார்கள். பெருமளவிற்கு, பாராளுமன்றம் மக்கள் விருப்பத் திற்கேற்ப ஆட்சி செய்ததெனக் கூறலாம். சிதைந்த தொகுதி களிலிருந்து வந்த பிரதிநிதிகள் தான் போப்பாண்டவரை எதிர்த்தார்கள். தனி வல்லரசர்களை எதிர்த்து நின்றூர்கள்; பதினேழாம் நூற்றுண்டில் டச்சுக்காரர்களையும் பதினெட்டாம் நூற்றுண்டில் பிரெஞ்சுகாரர்களையும் எதிர்த்து வெற்றி பெற்றனர். சபையின் சீர்த்திருத்தக் கோரிக்கை வலுப்பெற்றதும் சீர்திருத்தத் திற்கு சபையே வழி செய்தது.

பதினெட்டாம் நூற்றுண்டின் இறுதியில் பாராளுமன்றத்தின் அமைப்பைக் கீழறுக்கும் பல்வேறு காரணக்கூறுகள் தோன்றத் தொடங்கின. மானியம் வழங்கும் உரிமையை விக்குகளுக்கு (Whigs) எதிராக மூன்றும் ஜார்ஜ் மன்னர் பயன்படுத்தியது. காலத்திற் கொவ்வாத தேர்தல் முறை சீர்திருத்தக் கோரிக்கையை எழுப்புவதற்கு இவர்களிடையே ஒற்றுமையுணர்வைத் தோற்று வித்தது. மேலும், பொதுமக்கள் சபையும் திறமையின்றிக் காணப்பட்டது. அமெரிக்கக் குடியேற்ற நாடுகளின் இழப்பில் இது வெளிப்பட்டது. மக்களின் விருப்புகளோடு சபை நெருங்கித்

தொடர்பு கொள்ளவில்லையென்பதற்கு ஜான்வில்க்ஸ் (John Wilkes) என்பவருக்கு மக்கள் காட்டிய ஆதரவைச் சான்ருகக் கூறலாம். இவற்றிற்கெல்லாம் மேலாக, பெரும் நிலக்கிழார்களின் ஓர் அவையாக இது இருந்தது இதன் வெற்றிக்குக் காரணமாகும். ஒரு வேளாண்மை சமூகத்தின் பொதுவான அமைப்பை இது ஒத்திருந்தது. தொழில் புரட்சி இச் சமூகத்தை அகற்றியபொழுது இதன் அழிவும் உறுதியாயிற்று. அரசியல் அதிகாரத்திலிருந்து நடுத்தர வகுப்பினர் விலக்கப்பட்டது அவர்களுடைய மன நிறைவைக் குலைத்தது, வீட்டிலும் வேலையிலும் தொழிலாளர்கள் பட்ட துன்பங்கள், அவர்களின் வாழ்க்கை நிலையை உயர்த்தப் பாராளுமன்றச் சீர்த்திருத்தம் தேவையென்பதை இப்பொழுது உணர்ந்தார்கள். செய்தித்தாள்களின் வளர்ச்சியும், நெப்போலியப் போர்களுக்குப் பின் ஏற்பட்ட அடக்குமுறைகளும் நிலையற்ற அரசாங்கங்களும் இவர்களின் கோரிக்கைகளை வலியுறுத்த உதவின.

## பாராளுமன்றச் சீர்திருத்தம்

பதினெட்டாம் நூற்றுண்டில் பாராளுமன்றச் சீர்திருத்த முயற்சிகள் 1775-ல் தொடங்கினுலும் வெகுவாக வெற்றி பெற வில்லை. இதற்கான காரணங்கள் பல. பிரெஞ்சுப் புரட்சியின் வரம்பு மீறிய போக்கும் ஒரு காரணமாகும். எந்த அரசியல் கட்சியும் சீர்திருத்தங்களுக்கு ஆதரவு தெரிவிக்கவில்லை. தனிப் பட்டவர்களின் தன்னிச்சையான முயற்சிகளாக இவைகள் கருதப் பட்டன. மேலும் பன்னிரண்டு ஆண்டு ஐரோப்பா நெப்போலியப் போர்களில் மூழ்கி இருந்த பொழுதும் நெப்போலியன் சிறையில் இருந்த வரையிலும் ஆங்கில மக்கள் தம் சொந்த உள்நாட்டுப் பிரச்சினைகளைக் கவனிக்க முடியாமல் இருந்தனர். மேலும் நெப்போலியப் போர்கள் முடிவிற்கு வந்தபொழுது பழைமை வாதமும் பிற்போக்குச் சக்திகளும் யதேச்சாதிகாரமும் தலை காட் டத் தொடங்கின. எத்தகைய அரசியல் சீர்திருத்தங்களுக்கும் இக் காலம் வசதியாக இருக்கவில்லை. பாராளுமன்ற விவாதங்கள் 1736-ல் இருந்து வெளிவந்து கொண்டிருந்தாலும் 1769-ல் தான் முதல் அரசியல் சமுதாயம் உருவாகியதெனலாம். 'உரிமை மசோதாவின் ஆதரவாளர்களின் கழகமாக இது அமைந்தது. ஜான்வில்க்ஸ் (John Wilkes) என்பவரை ஆதரிக்கவும். பாராளு மன்றச் சீர்திருத்தத்தை வலியுறுத்தவும் இக் கழகம் பாடுபட்டது. நேர்மையான, சமத்துவப் பாராளுமன்றப் பிரதிநிதித்துவக் கோரிக்கையை வில்க்ஸ் 1776-ல் கொண்டு வந்தார். இத்துடன் தேர்தல்களில் ஊழல்களையும் லஞ்சத்தையும் குறைக்க கோரிக்கைகள் கொணரப்பட்டன. இவ் வியக்கத்திற்குப் பரிவு

காட்டிய பிட் (Pitt) 1785-ல், சீரழிந்த நகரத் தொகுதிகளின் எண்ணிக்கையைக் குறைக்க ஒரு மசோதாவைக் கொணர்ந்தார். இம் மசோதா பெருந் தோல்வியுற்றது.

நெப்போலியப் போர்களுக்குப் பின் பாராளுமன்றச் சீர்திருத்தத்தில் மக்கள் அக்கறை காட்டத் தலைப்பட்டனர். பொதுமக்கள் சபையின் சீர்திருத்தம் பற்றிய விண்ணப்பங்கள் அதிகரித்தன. 1815-க்குப் பிறகு இங்கிலாந்து தொழில் வளப்பெருக்குடைய நாடாயிற்று. புதிய ஆலை நகர்களில் தொழிலாளர்கள் செறிந்து வாழ்ந்தனர். இருப்பினும், பரவலாக மக்களை வாழச் செய்யும் முயற்சி புதிய தேவைகளையும் புதிய பிரச்சினைகளையும் புதிய சட்டங்களையும் புதிய அரசியலையும் தோற்றுவிக்குமென்பதை அரசாங்கம் உணரவில்லை. நகரமைப்புத் திட்டம், குடிநீர் வசதி, சுகாதாரம் ஆகிய எதும் இல்லை. தொழிலாளர்கள் குடியிருப்புகளிலும் வீடுகளிலும் நெருக்கத்தைக் குறைக்க தக்க ஏற்பாடுகள் செய்யப்படவில்லை. நீண்ட நேர உழைப்பும் குறைந்த ஊதியமும் தொழிலாளரிடையே காணப்பட்டன. பெண்களும் குழந்தைகளும் பெரும் எண்ணிக்கையில் மோசமான சூழ்நிலையில் உழைத்தனர். இந் நிலையை எதிர்த்து ஒரு சில சீர்திருத்தக்காரர்கள் எதிர்ப்பொலி எழுப்பினர். ஆனால் இதை எவரும் பொருட்படுத்தவில்லை. ஆயினும் எதிர்ப்பு இருந்து கொண்டிருந்தது. ஆலைத் தொழிலாளர்களின் நலனுக்கான சட்டங்களுக்கு மக்களிடையே இவர்கள் பேராதரவைத் திரட்டினார்கள். போரின் விளைவாக விதிக்கப்பட்ட வரிப்பளுவைத் திருத்தியமைக்கவும் நகர வாழ்க்கை நிலையில் மேம்பாட்டைக் காணவும் இவர்கள் மக்களின் உணர்ச்சிகளைத் தட்டியெழுப்பினர். இக் கோரிக்கைக்குப் பொதுமக்கள் சபை எவ்வித மறுமொழியும் கூறவில்லை. ஆகவே, பாராளுமன்றத்தைத் திருத்தியமைக்காமல் எத்தகைய சமூக, பொருளாதாரத் திட்டமும் பயனளிக்காதென்பதை மக்கள் சிறிதுசிறிதாக உணர்ந்தனர். அதாவது அரசியல் சீர்திருத்தம் முதலில் வர வேண்டுமென்பதை மக்கள் உணர்ந்தனர்.

இருப்பினும். பெருந்தடைகள் பல இருந்தமையால் அரசியல் சீரமைப்பு எளிதன்று என்பதையும் மக்கள் உணர்ந்திருந்தார்கள். ஆங்கில நடுத்தர வகுப்பினரின் பிற்போக்கையும் பழைமைவாதத்தையும் நீக்குவது கடினமாகவே இருந்தது. 1832-ல் விக்குகள் (Whigs) அதிகாரத்திற்கு வரும் வரை அரசியல் சீர்திருத்த இயக்கம் முன்னேற்றம் காணவில்லை. இவர்கள் சீர்திருத்த மசோதா ஒன்றைக் கொணர முற்பட்டனர். பொதுமக்கள் சபை இதை நிறைவேற்றியது; ஆனால் பெருமக்கள் சபை இதை ஏற்கவில்லை.

மறுபடியும் இதை பொதுமக்கள் சபை நிறைவேற்றியது. இரு சபைகளுக்குமிடையே கடுமையான மோதல் ஏற்பட்டு பிரச்சினை சிக்கலாகியது. இத்தகைய மோதல் மற்ற நாடுகளில் உள்நாட்டுக் கலகத்தை உண்டாக்கி இருக்கும். ஆயினும், இறுதியில் பெரு மக்கள் சபை விட்டுக் கொடுத்ததால் 1832ஆம் ஆண்டுச் சீர்திருத்தச் சட்டம் ஏற்பட வசதியாயிற்று.

பிரிட்டிஷ் பாராளுமன்றம் இயற்றிய சட்டங்களில் 1832ஆம் ஆண்டு சீர்திருத்தச் சட்டம் முக்கியமானதாகும். இச் சட்டத்தில் மூன்று முதன்மையான பிரிவுகள் இருந்தன. (i) தேர்தல் தொகுதி யெல்லைகளை இச் சட்டம் மாற்றியமைத்தது. 56 சீரழிந்த நகர்த் தொகுதிகள் முற்றிலும் பிரதிநிதித்துவத்தை இழந்தன. 31 தொகுதிகள், தொகுதிக்கு ஓர் உறுப்பினரை இழந்தன. இதன் விளைவாக, வட இங்கிலாந்தின் பெரிய நகரத் தொகுதிகள் 143 இடங்களைப் பெற்றன. சீரழிந்த நகரத் தொகுதிகளும் தனியார் தொகுதிகளும் (Pocket boroughs) நீக்கப்பட்டன. சிறிய தொகுதிகள் சீரமைக்கப்பட்டன. மற்ற தொகுதிகள் ஒவ்வொன்றும் ஓர் உறுப்பினரை இழந்தன. (2) வாக்குரிமை விரிவாக்கப்பட வேண்டுமென்ற கோரிக்கை இச் சட்டத்தால் நிறைவேறியது. இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு பாராளுமன்றம் வாக்குரிமையை ஒரே சீராக அமைத்திருக்கலாம். ஆனால் பாராளுமன்றம் இதைச் செய்யத் தவறி விட்டது. நகர, மாவட்டத் தொகுதிகளுக்கிடையே காணப்பட்ட வாக்குரிமை வேறுபாடு தொடர்ந்திருந்து வந்தது. மாவட்டத் தொகுதிகளில், 40 ஷில்லிங் செலுத்தும் இறையிலி நிலக்கிழார் களுக்கும் இன்னும் சற்று அதிகமாக வரி செலுத்தும் பெரும் நிலக் கிழார்களுக்கும் வாக்குரிமை அளிக்கப்பட்டது. அதாவது வழக்க மாக 40 ஷில்லிங் வரிசெலுத்துபவர்களும், பத்துப்பவுன் வரிசெலுத் தும் படியுரிமை நிலத்தவர்களும், பத்துப்பவுன் செலுத்தும் நீண்ட கால குத்தகையாளர்களும் 50 பவுன் செலுத்தும் குறைந்தகால குத்தகைக்காரர்களும் இச் சட்டத்தால் வாக்குரிமை பெற்றனர். பத்துப் பவுன் ஆண்டு மதிப்புடைய நில மனையிடங்களில் தங்கி இருப்பவர்களை அடிப்படையாக வைத்து நகர்த்தொகுதிகளில் வாக்குரிமை அளிக்கப்பட்டது. இதனால் வழக்கமாக நிலவி வந்த நகர்த்தொகுதி வாக்குரிமை நீக்கப்பட்டது. நடுத்தர வகுப் பினருக்கு இத் தகுதியால் வாக்குரிமை கிடைத்ததெனினும் பழைய தகுதியடிப்படையில் வாக்குரிமை பெற்றிருந்த கைவினைஞன் நடைமுறையில் இதை இழக்க வேண்டியிருந்தது. வாடகைக் குடியிருப்பாளர் அல்லது அறைகளை வாடகைக்குக் கொடுப்பவர் ஆகியோருக்கு வாக்குரிமை அளிக்கப்படவில்லை. ஆகவே, இச்

சட்டம் வயது வந்தோருக்கு வாக்குரிமை என்னும் கோரிக்கையை நிறைவேற்றவில்லை. ஆயினும் இச் சட்டத்தால் 5 லட்சம் பேர் வாக்குரிமை பெற்றனர். இதனுல் மொத்த வாக்காளர்களின் தொகை இரு பங்காக உயர்ந்தது. (3) வாக்காளர்களைப் பதிவு செய்யும் முறை இச் சட்டத்தால் ஏற்பட்டது. இதனுல் வாக்காளர் பட்டியலில் இடம் பெற்றவர் வாக்களிக்கும் தகுதி பெற்ருர். இம் முறை இன்றும் இருந்து வருகிறது.

இதன் உடனடி விளைவுகளைக் கருதிப் பார்க்கும் பொழுது இச் சட்டம் சிறப்பற்றதாகத் தோன்றலாம். இது மக்களாட்சிக்கு வகை செய்யவில்லை. ஆட்சியில் பங்கு பெறும் அளவிற்கு மக்கள் வாக்குரிமை பெறவில்லை. மிகக் குறைவான வாக்காளர் தொகையோடு இன்னும் 217,000 வாக்காளர்கள் சேர்க்கப்பட்டனர். இது 50% அதிகரிப்பைக் குறிப்பிடுகிறது. இந் நூற்ருண்டின் நடுப்பகுதியில் பண மதிப்புக் குறைவால் பல வீடுகளின் ஆண்டு மதிப்பு பத்துப் பவுனுக உயர்ந்தது. இது மிகப் பெரும் விளைவை உண்டாக்கியது. இத்துடன் மக்கள் தொகையும் பெருகவே 1866-ல் வாக்காளர் தொகையும் பத்து லட்சமாக உயர்ந்தது. வாக்களிக்கும் அதிகாரத்தை இச் சட்டம் முற்றிலும் சமமாகச் செய்யவில்லை. தெற்கு இங்கிலாந்தில் பல நகர்த் தொகுதிகளில் குறைந்தது ஓர் உறுப்பினராவது இருந்தார். இங்கு நால்வரில் ஒருவர் வாக்களித்தார். ஆனுல் பெரிய தொழில் நகரங்களில் நாற்பற்தைந்து பேர்களில் ஒருவர் வாக்களித்தார். மேலும் பழைய ஊழல்கள் மறையவில்லை. ஒரு சிலரின் பிடியிலிருந்து வாக்காளர்கள் தப்பினுலும் விலைக்கு வாங்கும் அளவிற்கு இவர்களின் தொகை சிறியதாகவே இருந்தது. 1841-ல் பாராளுமன்றம் இலஞ்ச ஊழலுக்குட்பட்ட பாராளுமன்றமாகத்தான் இருந்தது. ஒரு பவுன் கொடுத்து ஒரு வாக்குப் பெறலாம். வன்செயல்களுக்கும் குடி வெறிக்குமிடையில் தேர்தல்கள் நடைபெற்றன.

அரசியலமைப்பு முறையில், இச் சட்டத்தின் விளைவுகள் அடிப்படையானவை; தீவிரமானவை. நியமன முறையை தேர்தல் அகற்றியது. நிலவுடைமை, வணிக உரிமை ஆகியவை மேலோங்கி நின்ற உயர்குடி மக்களின் பிரதிநிதிகளாகத்தான் பாராளுமன்ற உறுப்பினர் இருந்தனர். ஆனுலும் தொகுதியினரின் கருத்திற்கு மாறுபட்ட கருத்தை வெளியிட இவர்களால் இயலவில்லை. இறுதி நிலையில், இறைமை வாக்காளரிடம் நிலைபெற்றிருந்தமையால் கட்சிகள் பாராளுமன்றத்திலிருந்து நாடு முழுவதும் பரவின மேலும், தம் அமைச்சவையை உருவாக்குவதில் அரசர் தம் ஆதிக்கத்தை இழந்தார். இரண்டாண்டிற்குள் இதை நான்காம்

வில்லியம் கண்டறிந்தார். டோரி (Tory) கட்சியைச் சேர்ந்த பீல் (Peel) என்பவரைப் பிரதமராக இவரால் வைத்துக் கொள்ள முடியவில்லை. ஏனெனில், வாக்காளர்கள் விக்குகளைத் தேர்ந்தெடுத்துப் பொதுமக்கள் சபையில் பெரும்பான்மைக் கட்சியாக அமர்த்தினர், மாறுக, பொதுமக்கள் சபையின் பெரும்பான்மை ஆதரவு பெற்ற கட்சியிலிருந்து கேபினெட் அமைச்சவை அமைக்கப் படவேண்டும். எனவே, விரிவாக்கப்பட்டுள்ள கட்சியோடு இது நேர்முகமாக இணைக்கப் பெற்றுள்ளது. இறுதியாக, வாக்காளர்களிடம் அரசியல் அதிகாரம் நிலை பெற்றுள்ளது, பிரதிநிதித்துவ நிறுவனமாகிய பொதுமக்கள் சபையின் சுதந்திரத்தை வளர்த்தது.

இச் சீர்திருத்த சட்டத்தின் விளைவுகள் வெளிப்படக் காலமாயிற்றெனினும் உடனடியாகச் செய்யப்பட்ட சட்டங்கள் சீர்திருத்த ஆர்வத்தோடு செயல்படுத்தப்பட்டன. 1834ஆம் ஆண்டின் இரவலர் திருத்தச் சட்டமும் (Poor Law Amendment Act, 1834) நகராட்சிச் சட்டமும் (1835) அரசாங்கத்தின் ஆர்வத்தை வெளிப்படுத்தின. நகரத் தொகுதிகளின் தேர்தல் முறையை நகராட்சிச் சட்டம் உருவாக்கியது. ஆலைத்தொழில் சட்டம் (Factory Act) அடிமை ஒழிப்புச் சட்டம் (Abolition of Slavery Act) ஆகியவை மக்கள் விருப்பையொட்டிய சட்டங்களாகவே இருந்தன.

1832ஆம் ஆண்டின் சீர்திருத்த சட்டம் மக்களாட்சியை கொண்டு வரவில்லை. பாராளுமன்றச் சீர்திருத்த இயக்கமும் இத்துடன் நின்றுவிடவுமில்லை. தொகுதிகள் இப்பொழுது கூட ஒரே மாதிரியாக அமையவில்லை. மறைவாக வாக்களிக்கும் முறையும் நடைமுறைக்கு வரவில்லை. தேர்தல்கள் பல நாட்கள் நீடித்தன. தேர்தல் ஊழல்கள் தொடர்ந்து இருந்து கொண்டுதான் இருந்தன. ஆகவே பேருரிமைக் கிளர்ச்சி இயக்கத்தினர் (Chartists) தொடர்ந்து கடுமையாகப் போராடி வந்தனர். வயது வந்தவர்களுக்கு வாக்குரிமை, ஒரே மாதிரியான தொகுதிகள், மறைவாக வாக்களித்தல், ஆண்டுதோறும் தேர்தல் ஆகிய கருத்துகளுக்காக இவர்கள் போராடி வந்தனர். இக் கோரிக்கைகளை அடைவதில் இவ் வியக்கத்தினர் வெற்றி பெறவில்லையெனினும் மக்களிடையே தோன்றிய சீர்திருத்தக் கருத்துகள் வாக்குரிமையை மேலும் விரிவாக்க உதவின. கன்சர்வேடிவ் கட்சியினர் இரண்டாவது சீர்திருத்தச் சட்டத்தைக் கொண்டு வந்தது சற்று வியக்கத்தக்கதாகத்தான் இருந்தது. லிபரல் கட்சியினரின் சீர்திருத்தக் கருத்துக்களை முன் திறமை வாய்ந்த டிசரெலி (Disaraeli) தாம் மேற்கொண்டு 1867ஆம் ஆண்டுச் சீர்திருத்தச் சட்டத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றினர்.

### 1867ஆம் ஆண்டு சீர்திருத்தச் சட்டம்

1832ஆம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டம் 100க்கு 5 பேருக்கு மட்டுமே வாக்குரிமை அளித்தது. ஆகவே, இச் சட்டம் மக்களாட்சியை ஏற்படுத்தியதெனக் கூற முடியாது. ஆனல் பழைமையான முறையைத் தூக்கி நீக்குவதற்கு இது வழி செய்த தெனலாம். ஆயினும், 1830ஆம் ஆண்டுத் தொடரில் தானியச் சட்டங்களை அகற்றுவதில் மக்களின் ஆர்வம் நிலைபட்டது. பேருரிமை இயக்கத்தினர் இந்த நூற்றுண்டின் இடைப் பகுதியில் எதையும் சாதித்து விடவில்லை. இந்த இயக்கத்தின் செயல் வேகத்தில் சற்று தடை ஏற்பட்டது.

தானியச் சட்ட எதிர்ப்பு இயக்கத்தின் வெற்றியால் உந்தப் பட்ட ஜான்பிரைட் (Joh'n Bright) என்பவர் மேலும் வாக் குரிமையை நீட்டிப்பதற்கு அரும்பாடுபட்டார். நகராட்சிகள் பற்றிய சட்டத்தின் வெற்றியும் ரயில் பாதை அமைப்புகளால் மக்கள் தொகையில் ஏற்பட்ட இடப் பெயற்சியும் சீர்திருத்த இயக்கத்திற்குப் பேருதவியளித்தன. கிரிமியப் போரை (Crimean War) நடத்திய முறையும் அமெரிக்க உள் நாட்டுப் போரில் ஜனநாயக சக்திகள் பெற்ற வெற்றியும் இங்கிலாந்தின் ஆளும் வகுப்பினரின் அதிகாரத்தை கீழறுத்தன.

விக்குக் கட்சியைச் சேர்ந்த பாமர்ஸ்டன் (Palmarston) மேற் கொண்டு எவ்விதச் சீர்திருத்தத்தையும் விரும்பவில்லை. இவர் இறந்த பின் 1865-ல் ஜான்ரசல் பிரபு (John Russell) ஒரு சீர்திருத்த மசோதாவைக் கொண்டு வந்தார். இம் மசோதா மட்டான கருத்துகளைக் கொண்டிருந்தபோதிலும் தோல்வி யடைந்தது. அடுத்து, கன்சர்வேட்டிகள் பதவிக்கு வந்தனர். இவ் வாய்ப்பை பயன்படுத்திக் கொண்ட டிசரெலி, விக்குகளை ஒழித்துக் கட்டும் நோக்கத்தோடு மேலும் தீவிரமான மசோதா ஒன்றைக் கொண்டு வந்தார். இவ் விரண்டாவது சீர்திருத்த மசோதா இடங்களை மறு ஒதுக்கீடு செய்ததோடு வாக்குரிமை யிலும் மாறுதல் செய்தது.

கட்டுக்குத்தகையாளர், படியுரிமையாளர் ஆகியோரின் உடைமைத் தகுதிகளை மாவட்டங்களில் 10 பவுனிலிருந்து 5 பவுனிற்கு இச் சட்டம் (1867) குறைத்தது. குறைந்தது 12 பவுன் வரி செலுத்தக் கூடிய குடியிருப்பு மனைகளில் தங்கி வசிக்கும் தகுதிப்பாட்டை கூடுதலாக இச் சட்டம் புகுத்தியது. மாவட்ட வாக்காளர்களின் எண்ணிக்கையை இது 50% உயர்த்தியது. இருப்பினும் வேளாண்மைக் குடிகளுக்கு இவ் வுரிமை கிட்டவில்லை

வாக்களிப்பு இன்னும் இரகசியமாக்கப்படவில்லை. ஆகவே, மாவட்டங்கள் தொடர்ந்து பெருங் குடிமக்களின் கட்டுப் பாட்டிலேயே இருந்தன். நகர்த் தொகுதிகளில் தொழிலாளர் களுக்கு வாக்குரிமை அளிக்கப்பட்டது. தனிப்பட்ட குடியிருப்பு மனைகளில் ஓராண்டு வசிப்பவர்களும் இரவலர் வரி செலுத்துபவர் களும் வாக்குரிமை பெறும் வகையில் தகுதிப்பாடுகளை இச் சட்டம் திருத்தியமைத்தது. வாடகை விடுதிகளில் தங்கி ஆண்டு ஒன்றுக்கு 10 பவுன் வாடகை செலுத்துபவர்களும் வாக்களிக்கும் தகுதி பெற்றனர். வாக்காளர்களின் தொகையை இச் சட்டம் இரட்டித்ததோடு, இடங்களை மறு ஒதுக்கீடு செய்தது. 10,000 மக்களுக்குக் குறைவாக வசிக்கும் நகர் தொகுதிகள் 45, ஒவ்வொன்றும் ஓர் உறுப்பினரை இழந்தது. அதாவது ஆங்கில நகர்த் தொகுதிகளிலிருந்து 33 இடங்களை எடுத்து இங்கிலாந்தி லும் ஸ்காட்லாந்திலுமுள்ள மாவட்டங்களுக்கு இச் சட்டம் அளித்தது. பதினேறு நகர்த் தொகுதிகள் பிரதிநிதித்துவத்தை இழந்தன. இதற்கு முன் இரண்டு உறுப்பினரை அனுப்பி வந்த 35 தொகுதிகள் இப்பொழுது தொகுதிக்கு ஒருவரையே அனுப்பியது. பதினேறு புதிய நகர்த் தொகுதிகள் புதிதாகப் படைக்கப்பட்டன. புதிய தொகுதிகளை அமைக்கக் குறிப்பிட்ட சில மாவட்டங்கள் துண்டாடப்பட்டன ?

லண்டன் பல்கலைக்கழகங்களுக்கும் நான்கு ஸ்காட்டிஷ் பல் கலைக்கழகங்களுக்கும் இச் சட்டம் பிரதிநிதித்துவம் அளித்தது. நான்கு ஸ்காட்டிஷ் பல்கலைக்கழகங்களும் இரண்டு தொகுதி களாகத் தொகுக்கப்பட்டன. முதலாம் ஜேம்ஸ் மன்னர் காலத்தி லிருந்து ஆக்ஸ்ஃபோர்டு, லண்டன் பல்கலைக்கழகங்கள் மட்டுமே பிரதிநிதித்துவம் பெற்று வந்தன.

ஆன் அரசியார் காலத்திற்கு முன், அரசப் பதவியில் இருப்ப வர்கள் இறந்துவிட்டால் பொதுமக்கள் சபை கலைக்கப்பட வேண்டு மெனும் மரபு இருந்து வந்தது. அரசர் இறந்தாலும் பாராளு மன்றம் தொடர்ந்திருந்து வர இச் சட்டம் வகை செய்தது.

பாராளுமன்றத் தொகுதிகளில் இச் சட்டத்தின் பயனுக பெரும் எண்ணிக்கையில் தொழிலாளர்கள் வாக்குரிமை பெற்ற னர். வாக்காளர்களின் எண்ணிக்கை இரண்டு பங்காக உயர்ந்தது. கன்சர்வேட்டிவ்களிடையே இச் சட்டம் பேரச்சத்தை உண்டாக் கியது. 'விளைவு தெரியாமல் மேற்கொள்ளப்பட்ட துணிகரச் செய'லென்பதை டெர்பி பிரபு (Lord Derby) ஒப்புக் கொண்டார். ஆயினும் சீர்திருத்த முயற்சிகள் தவிர்க்க முடியாதவை என்பதை

மக்கள் உணர்ந்தனர். ஏனெனில் பாராளுமன்றத் தொகுதிகளுக்கு வெளியே வசித்து வந்த சுரங்கத் தொழிலாளர்களும் வேளாண்மைத் தொழிலாளர்களும் இன்னமும் வாக்குரிமை பெறவில்லை.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் கொண்டு வரப்பட்ட சீர்திருத்தச் சட்டங்கள் தேர்தல்களில் காணப்படும் வன்கண்மை, இலஞ்ச ஊழல் போன்றவைகளைப் நீக்கவும், வாக்காளர்களைப் பதிவு செய்யும் முறைகளை மேம்படுத்தவும், வாக்குரிமையை எளிதாக்கவும், விரிவுபடுத்தவும் முற்பட்டன. பழைமையான நிலவுடைமை நலன்களை இச் சட்டங்கள் மேலும் பாதித்தன.

முன்னேற்றப் பாதையில் முதல் படியாக 1868ஆம் ஆண்டு, ஆய்விற்குட்பட்ட தேர்தல் வழக்குகளை பாராளுமன்றம் முடிவு செய்வதை உயர் நீதிமன்றத்தின் அரசியார் நீதிமன்றப் பிரிவிற்கு (Queen's Bench) மாற்றினுர்கள். கட்சிக் கண்கொண்டு பாராளுமன்றம் தேர்தல் வழக்குகளை ஆராய்வதை நீதிமன்றம் நடுநிலை நின்று ஆராய இந் நடவடிக்கை உதவியது. ஒரு தேர்தலை செல்லாது என முடிவு செய்யும் அதிகார வரம்பு இரு நீதிபதிகளிடம் விடப்பட்டது. எனினும் இவ் விருநீதிபதிகளும் இத்தகைய முடிவை ஒரு மனதாகச் செய்ய வேண்டும்.

1868-ல் நடந்த தேர்தல்களில் பரவலாக காணப்பட்ட ஊழல்களைத் தடுக்க மேலும் பல நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன இரகசிய வாக்குப்பதிவு முறை 1872-ல் கொண்டுவரப்பட்டதெனினும் இதைப் பெருமக்கள் சபையினர் வன்மையாக எதிர்த்தனர். அரசியல் தொடர்புடையவைகள் இரகசியமாக நடைபெறலாகாதென்பது இவர்களின் கருத்தாகும். பெரு நிலச் சொந்தக்காரர்கள் சிறு பண்ணைக்குடிகளைத் தம் விருப்பையொட்டி வாக்களிக்க வற்புறுத்தி வந்தனர். மறைவான வாக்குப் பதிவுச் சட்டத்தின் (Secret Ballot Act, 1872) வழியாக இக்குறைபாடும் நீக்கப்பட்டது. இச் சட்டம் தொகுதிக்கு ஒருவரை நியமனம் செய்யும் இக் கால முறையை புகுத்தியது. இதற்கு முன் பொதுக் கூட்டங்களில் ஒரு வேட்பாளர் தெரிவு செய்யப்படுவார் அப்படி தெரிவு செய்யப்பட்டவரை எதிர்த்து அத் தொகுயில் ஒருவரும் போட்டியிடவில்லையென்ருல் அவரே தேர்ந்தெடுக்கப்பட்டதாக அறிவிக்கப்படுவார்.

தேர்தல்களில் பெருந்தொகையாகப் பணம் செலவிடப்பட்டது. இது ஒழுங்கீனமாகும். இதை நீக்க கிளாட்ஸ்டன்

(Gladstione) ஊழல் நடவடிக்கைகள் பற்றிய சட்டமொன்றைக் (Corrupt Practices Act, 1883) கொண்டு வந்தார். இதன்படி தொகுதிக்கேற்றபடி பணம் செலவிடப்பட வேண்டும். எந்த நோக்கத்திற்காக பணம் செலவிடப்பட வேண்டுமென்பதும் வரையறை செய்யப்பட்டது. இத்துடன் நெறிகேடான தேர்தல் முறைகள் சரி நுட்பமாக வரையறை செய்யப்பட்டதுமின்றி தேர்தல் பதிலாட்கள் (Agents) சட்டத்தின்படி கணக்கு காட்ட வேண்டுமென்பது அவர்களுடைய சட்டப்படியான பொறுப் பாக்கப்பட்டது. இச் சட்டத்தை மீறியவர்கள் மீது கடினமான தண்டம் விதிக்கப்பட்டது. இதன் பின் ஓரளவு பொருளாதார வசதியுள்ளவர்கள் தேர்தலில் போட்டியிட முடிந்தது. 1880-ல் வாக்காளர் ஒவ்வொருவருக்கும் செலவான ஒரு பவுன் 1883-ல் இத் தேர்தல் செலவு ஒரு வாக்காளருக்கு மூன்று ஷில்லிங்காகக் குறைந்தது. இன்றி இச் செலவு ஒருவருக்கு 4 பென்சாகக் குறைந்துள்ளது. நெறி கேடான முறைகளை அகற்றுவதில் இச் சட்டம் பெரும் வெற்றி பெற்றதெனலாம்.

1832ஆம் ஆண்டுச் சட்டம் வாக்காளர்களைப் பதிவு செய்ய வழி செய்த போதிலும், இதற்கென ஒரு நிறுவன அமைப்பை இச் சட்டம் படைக்கவில்லை. எனவே வாக்காளர்களைப் பதிவு செய்யும் பொறுப்பை அரசியல் கட்சிகள் எடுத்துக் கொண்டிருந்தன. 1878-ல் இருந்து வாக்காளர்களைப் பதிவு செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்யப் பல சட்டங்கள் இயற்றப் பட்டன. மாவட்டத் தொகுதிகளில் (மாவட்ட) கவுன்சிலின் எழுத்தரும் நகர்த் தொகுதிகளில் நகர எழுத்தரும் வாக்காளர் களின் பெயரைப் பதிவு செய்ய சட்டம் வகை செய்தது. இருப் பினும் 1918ஆம் ஆண்டு வரையிலும் வாக்காளரின் தகுதி பற்றிய தகராறுகளை வழக்கறிஞர்கள் மறு ஆய்வு செய்து மாற்றியமைத் தனர். இன்று இப் பணியை பதிவு அலுவலர்கள் செய்த போதி லும் பாதிக்கப்பட்டவர்கள் மாவட்ட நீதிமன்றத்திற்கு (County Courts) மேல் முறையீடு செய்யலாம்.

### 1884ஆம் ஆண்டுச் சீர்திருத்த சட்டம்

1867ஆம் ஆண்டுச் சட்டம் நகர்ப்புறத் தொழிலாளர்களுக்கும் வீடுகளில் வசிப்பவர்களுக்கும் வாக்குரிமை அளித்தது. ஆனல் மாவட்டத் தொழிலாளர்களுக்கு வாக்குரிமை வழங்கவில்லை. இது ஓர் உறுதியில்லாத நிலையை நாட்டில் உருவாக்கியது. மாவட்ட, நகர்ப் பகுதிகளுக்கிடையேயான வேறுபாடு நடைமுறையில் ஒரு நிலையாக இருந்து வந்தது. தொழில் மயமான பகுதிகள் இன்னும்

கிராம பகுதிகளாகவே கருதப்பட்டன. எனவே, இரு கட்சிகளும் வீடு உள்ளவர்களுக்கு வாக்குரிமை என்னும் தகுதியை மாவட்டத் தொகுதிகளுக்கும் நீடிக்க இசைந்தன. சுரங்கத் தொழிலாளர்களைப் போன்ற மற்ற தொழிலாளர்களின் வாக்குகள் வேளாண்மைத் தொழிலாளர்களின் வாக்குகளை மிஞ்சிவிடுமோ வென கன்சர்வேடிவ்கள் அஞ்சினர். எனவே, வாக்குரிமையில் செய்யப்படும் எம் மாற்றமும் இட மறு ஒதுக்கீட்டோடு தொடர் புடையதாக இருக்க வேண்டுமென்பது அரசியல் கட்சிகளால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இம் மசோதா பெருமக்கள் சபையில் தோல்வியுற்ற பின்னர்தான் கட்சிகளுக்கிடையே இத்தகையதோர் உடன்பாடு ஏற்பட்டது. இதற்குப்பின் இரு மசோதாக்கள் பாராளுமன்றத்தில் நிறைவேறின.

*1884ஆம் ஆண்டு மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம்.* இச் சட்டம் மூன்று மாற்றங்களைச் செய்தது:

(1) மாவட்டத் தொகுதியில் வீடு உள்ளவர்களுக்கும் அறையில் தங்கி வசிப்பவர்களுக்கும் இச் சட்டம் வாக்குரிமை அளித்தது. 1867ஆம் ஆண்டுச் சட்டம் இத்தகைய வாக்குரிமையை நகர்த் தொகுதியில் வசிப்பவர்களுக்கு ஏற்கனவே அளித்தது;

(2) மாவட்டத் தொகுதிகளிலும் நகர்த்தொகுதிகளிலும் நில முடையவர்களும் அறைகளில் தங்கி வசிக்கிறவர்களுக்கும் வாக்குரிமை அளிப்பதை இச் சட்டம் திருத்தியமைத்தது. நிலத் திற்கும் வீட்டிற்குமான ஆண்டு மதிப்பு 10 பவுனாக இருக்க வேண்டும்.

(3) வீட்டு வேலை செய்பவர்கள், வேலைக்கமர்த்துபவர்களிட மிருந்து விலகி தனித்து வசிப்பவர்களுக்கு இச் சட்டம் வாக்குரிமை அளித்தது. வேலைக்கமர்த்துகிறவர்களின் வீட்டோடு வசிப்பவர் களுக்கு வாக்குரிமை கிடையா.

இச் சட்டத்தின் பயனாக, மாவட்டத் தொகுதிகளில் வசிக்கிற தொழிலாளர்கள் குறிப்பாக வேளாண்மைத் தொழிலாளர்கள் வாக்குரிமை பெற்றனர். வாக்காளரின் எண்ணிக்கை மூன்று மிலியனிலிருந்து ஐந்து மிலியனாக உயர்ந்தது.

கிராமப்புறத்திலிருந்து மக்கள் பெருந் தொகையாக புதிய நகர்ப்புறங்களில் சென்று குடியேறியதால் இடமாறு ஒதுக்கீட்டுச் சட்டம் (Redistribution of Seats Act, 1885) ஒன்றை *1885*-ல்

கொண்டு வர வேண்டிய அவசியம் ஏற்பட்டது. 5,000 மக்களைக் கொண்ட வில்ட்சயருக்கு (Wiltshire) ஒரு பிரதிநிதி தேர்ந்தெடுக்கப் பட்டார். ஆனால் லிவர்பூலின் 450,000 பேர்களுக்கு மூன்று பிரதி நிதிகளே பாராளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். 15,000 பேருக்குக் குறைவாக உள்ள நகரத்தொகுதிகள் இச் சட்டத்தால் பிரதிநிதித்துவத்தை இழந்தன. 50,000 மக்களுக்குக் குறைவான நகரத் தொகுதிகள் ஓர் உறுப்பினரை இழந்தன. லண்டனையும் இன்னும் குறிப்பிட்ட நகர்களையும் தவிர மற்ற நகரங்கள் ஓர் உறுப்பினரையே பெற்றிருந்தன. பாராளு மன்றத்தில் பிரதிநிதித்துவம் பெற்றிருந்த நகர்களின் எண்ணிக்கை 302-ல் இருந்து 237ஆக குறைக்கப்பட்டது. மிகச் சிறிய மாவட்டமாகிய ரட்லாண்டு (Rutland) ஓர் உறுப்பினரை இழந்தது. இப்பொழுது 258 மாவட்டங்கள் பாராளுமன்றத்தில் பிரதி நிதித்துவம் பெற்றன. சமுதாயக் குடியிருப்புகளின் உருவளவையும் மக்கள் தொகையையும் கருத்தில் கொள்ளாத பழைய இடைக் காலக் கருத்தாகிய சமத்துவப் பிரதிநிதித்துவக் கொள்கை இப் பொழுது கைவிடப்பட்டது. மக்கள் தொகைக்கேற்ப இப்பொழுது பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டது. பழங்கால மரபுத் தொடர் புடைய பிரிவுகளுக்காக, மாவட்டங்களும் நகரங்களும் மொத்த மாக உறுப்பினர்கள் வகையாட்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இப்பொழுது நாடு ஒற்றை உறுப்பினர்களாகப் பிரிக்கப்பட்டது. பழைய சமுதாயக் குடியிருப்புகளுக்கு ஒப்பாக இல்லாமல் இத் தொகுதிகள் செயற்கையானதாக இருந்தன. செயற்கையாக வரையறை செய்யப்பட்ட ஒரு குறிப்பிட்ட பகுதியில் வசிக்கும் மக்களின் பிரதிநிதியாக பாராளுமன்ற உறுப்பினர் இருந்தார். சமமான தொகுதிகள் அமைக்கப்பட வேண்டுமென்னும் நோக்கத்தில் தான் இவ் இட ஒதுக்கீட்டுச் சட்டம் செய்யப்பட்ட தெனலாம். மாவட்டங்களிலும் நகரங்களிலும் வசித்த பழைய சமுதாயத்திற்கும் பிரதிநிதித்துவத்திற்கும் இப்பொழுது தொடர் பில்லை. பொதுமக்கள் சபையில் இப்பொழுது 670 உறுப்பினர் இருந்தனர். 1832ஆம் ஆண்டுச் சீர்திருத்தச் சட்டத்திற்கு முன் சபையில் 658 பேர் இடம் பெற்றனர். இவர்களில் 513 பேர் இங்கிலாந்தின் பிரதிநிதிகள். 100பேர் அயர்லாந்தின் பிரதிநிதிகள் 45 பேர் ஸ்காட்லாந்தின் பிரதிநிதிகள். இரண்டாவது சீர்திருத்தச் சட்டத்திற்குப் பின்னும் இந்த எண்ணிக்கையில் மாறுதல் இல்லை. ஆனால் இடங்கள் மறு ஒதுக்கீடு செய்யப்பட்டு வாக்குரிமையும் விரிவாக்கப்பட்டது. மூன்றாவது சட்டத்தின் விளைவாக சபையின் உறுப்பினர் எண்ணிக்கை 670 ஆக உயர்ந்தது. 22 நகரங்களும் சில பல்கலைக்கழகங்களும் 1950 வரை இரண்டு உறுப்பினர்களைப்

பிரதிநிதிகளாக தொடர்ந்து பாராளுமன்றத்திற்கு அனுப்பி வந்தன.

## பெண்களுக்கு வாக்குரிமை

ஆண்களைப் போல் பெண்கள் வாக்குரிமை பெற அரை நூற்றாண்டு இவர்கள் பொறுத்திருக்க வேண்டியிருந்தது. 1867ஆம் ஆண்டுச் சீர்த்திருத்தச் சட்டத்தில் பெண்களின் வாக்குரிமையும் இடம் பெறவேண்டுமென்று ஜான் ஸ்டூவர்ட் மில் (John Stuart Mill) அரும்பாடுபட்டார், இதற்குப் பெரும் எதிர்ப்பு இருந்தது. ஆனால் பெண்களின் அரசியல் சமூகச் சங்கம் (Women's Social and Political Union) அமையும்வரை ஒன்றும் நடக்கவில்லை. இச் சங்கம் 1903-ல் அமைந்து செயல்படத் தொடங்கிய பொழுதுதான் பெண்களின் வாக்குரிமையில் மக்கள் அக்கறை காட்டத் தொடங்கினர். 1911-க்குப் பிறகு, 'பெண் வாக்குரிமைப் போராட்ட அணங்குகள் தொடர்ந்து சட்ட விரோதச் செயல்களில் ஈடுபட்டு சிறை சென்று உண்ணாவிரத மிருந்து மக்களின் கவனத்தை ஈர்ந்தனர். உலகப் பெரும்போர் மூண்டபொழுது தான் இவர்களின் போராட்டம் தடைப்பட்டது. போர்க் காலத்தில் இதுவரை ஆண்கள் மட்டுமே பார்த்து வந்த வேலைகளை இப்பொழுது பெண்கள் ஏற்றுச் சிறப்புறச் செய்து மக்களின் நன்மதிப்பைப் பெற்றதோடு தம் திறமையையும் பெண்கள் வெளிப்படுத்தினர். போர் ஓய்வதற்கு முன் லாயிட் ஜார்ஜ் (Lloyd George) ஒரு மசோதாவைக் கொண்டு வந்தார்.

## மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் 1918.

இச் சீர்திருத்தச் சட்டம் பெரும் மாறுதல்களை உண்டாக்கிற்று இதன்படி

(1) வாக்குரிமை பெற ஒருவர் ஓரிடத்தில் ஆறு மாதம் தங்கி வசிக்க வேண்டும் அல்லது ஒரு தொழில் மனைக்குரியவராக இருக்க வேண்டும். வாக்களிப்பதற்கு இதற்கு முன் இருந்த பல தகுதிகள் எளிதாக்கப்பட்டன.

(2) 30 வயதிற்கு மேற்பட்ட பெண்களுக்கு வாக்குரிமை யளிக்கப்பட்டது. இவ் வாக்குரிமையைப் பெற ஒரு பெண் அல்லது அவளுடைய கணவன் தல ஆட்சிக்கான தேர்தல்களில் வாக்க ளிக்கும் தகுதி பெற்றிருக்க வேண்டும்,

(3) ஏழ்மை தணிப்புதவி பெற்று வந்தவர்களுக்கிருந்த தகுதி யின்மை அகற்றப்பட்டது.

(4) பொதுத் தேர்தலில் எல்லாத் தேர்தல்களும் ஒரே நாளில் நடைபெறவும் ஒரு வாக்காளர் இரு தொகுதிகளுக்கு அதிகமாக வாக்களிக்கலாதெனவும் சட்டம் வழி செய்தது.

(5) வேட்பாளர் ஒருவர் 150 பவுனை ஈடாக தேர்தல் அதிகாரியிடம் செலுத்த வேண்டியதன் தேவையை இச் சட்டம் புகுத்தியதோடு, அளிக்கப்பட்ட வாக்குகளில் எட்டில் ஒரு பங்கு வாக்குகளைப் பெறத் தவறினால் இவர் ஈட்டுப்பணத்தை இழப்பார்.

(6) மக்கள் தொகையில் 70,000 பேருக்கு ஓர் உறுப்பினர் என்ற அடிப்படையில் இது இடங்களை மறு ஒதுக்கீடு செய்தது.

இச் சட்டம் வாக்காளர் எண்ணிக்கையை 8 மிலியனிலிருந்து 21 மிலியனாக உயர்த்தியது. ஆண்களுக்குச் சமமாக பெண்களும் 1928-ல் வாக்குரிமை பெற்ற பொழுது இது 28 மிலியனுக்குமேல் உயர்ந்தது.

1948ஆம் ஆண்டின் மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் வாக்குரிமையைப் பரவலாக மாற்றியமைத்தது. வாக்களிப்பிற் கிருந்த தொழில்மனைத் தகுதியையும் பல்கலைக்கழக இடங்களையும் இச் சட்டம் அகற்றியது. இதற்குப் பின் ஒருவருக்கு ஒரு வாக்கு என்ற முறை ஏற்றுக் கொள்ளப்பட்டது. மக்கள் இடமாற்றத்தால் தொகுதிகளில் ஏற்பட்ட மாற்றங்களை அனுமதிக்க 1944ஆம் ஆண்டின் இட மறு ஒதுக்கீட்டுச் சட்டம் வழி செய்தது.

130 ஆண்டுக்கால வரையறைக்குள் தேர்தல் முறையில் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டன. சமுதாயப் பிரதிநிதித்துவத்திற்குப் பதிலாக மக்கள் பிரதிநிதித்துவம் நிலைப்பட்டது. உடைமைப் பிரதிநிதித்துவத்திற்குப் பதிலாக இப்பொழுது குடிமக்களுக்குப் பிரதிநிதித்துவம் ஏற்பட்டது. மிகக் குறைவான வாக்குரிமை இப்பொழுது ஒருவருக்கு ஒரு வாக்காக வளர்ந்தது. மேலும், ஒற்றை உறுப்பினர்த் தொகுதிகள் ஏற்பட்டதோடு ஊழல்கள் தவிர்க்கப்பட்டன. 21 வயதும் அதற்கு மேற்பட்ட வயதினருமான ஆண்களும் பெண்களும் வாக்குரிமை பெற்றனர்.

பல்வேறு சீர்திருத்தச் சட்டத்தின் விளைவாக வாக்காளர்களின் எண்ணிக்கையில் ஏற்பட்ட வளர்ச்சி பின்வருமாறு இருந்தது.

| ஆண்டு | வாக்காளர்களின் எண்ணிக்கை (சுமாராக) | மக்கள் தொகை (வயது வந்தவர்கள்) |
|---|---|---|
| 1832-க்கு முன் | 510,000 | — |
| 1832 | 720,000 | 10,200,000 |
| 1867 | 2,230,000 | 13,600,000 |
| 1884 | 5,000,000 | 17,400,000 |
| 1918 | 20,000,000 | 26,900,000 |
| 1928 | 29,000,000 | 30,100,000 |
| 1950 | 34,900,000 | 36,100,000 |

* SYDNEY D Bailey : British Parliamentary Democracy.

### தேர்தல் நடைமுறை

இங்கிலாந்தில் தேர்தல்கள் எப்பொழுது நடைபெறுகின்றன?

மக்களாட்சி அரசாங்கம் நடைபெற வயது வந்தவர்கள் வாக்குரிமை பெற்றிருத்தல் இன்றியமையாதாகுமென்றாலும் பிரதிநிதிகளைத் தெரிவு செய்ய வாக்காளர்களுக்கு வாய்ப்புகள் இருக்க வேண்டும். தேர்தல்களும் குறிப்பிட்ட கால இடைவெளிக்குள் நடத்தப்பட வேண்டும். மேலும் தேர்தல்கள் சுயேச்சையாகவும் நேர்மையாகவும் நடைபெறும் சூழ்நிலைகள் இருக்க வேண்டும். மறைவான வாக்குப் பதிவு முறையையொட்டி நடத்தப்படும் தேர்தல்களின் முடிவுகளின் அடிப்படையில் பொது மக்கள் சபையும் தல ஆட்சி மன்றங்களும் அமைகின்றன.

பொதுமக்கள் சபைக்கான தேர்தல்கள், பொதுத் தேர்தல் இடைத் தேர்தல் என இருவகைப்படும். பிரதமரின் அறிவுரையின் பேரில் அரசியார் பொதுமக்கள் சபையைக் கலைத்த பின் அல்லது சபையின் முழுமையான பதவிக்காலம் முடிவடைந்த பின் சபைக்கான தேர்தல் நடைபெறுகின்றன. 1832க்கு பிறகு முழுப் பதவிக் காலத்திற்குப் பின் கலைக்கப்பட்ட பாராளுமன்றம் 1959ஆம் ஆண்டுப் பாராளுமன்றமாகும். இருப்பினும் போர்க் கால நெருக்கடி நிலை காரணமாக 1911ஆம் ஆண்டுப் பாராளுமன்றம் 1918ஆம் ஆண்டு வரை தொடர்ந்து பதவியில் இருந்தது. இதே காரணத்தையொட்டி 1935ஆம் ஆண்டுப் பாராளுமன்றமும் 1945 வரை தொடர்ந்து செயல்பட்டது.

அரசாங்கம் மறுமுறையும் வெற்றி பெறும் வாய்ப்புகள் தோன்றும் பொழுது வழக்கத்திற்கு மாறாக பாராளுமன்றத்தின்

கடைசி இரண்டாண்டு பதவிக்காலத்தில் சிலவேளை சபை கலைக்கப் படுகிறது. கட்சியின் சில முக்கிய உறுப்பினரைப் பிரதமர் கலந்து கொண்டாலும் எப்பொழுது சபையைக் கலைத்துவிட்டு தேர்தலை நடத்துவதென்பது இவரைப் பொறுத்ததேயாகும். அரசாங்கத்திற் கொவ்வாத நேரத்தில் தேர்தலை நடத்துமளவிற்கு பிரதமர் எவரும் சபையின் பதவிக்கால இறுதியாண்டு வரை காத்திருக்க மாட்டார்.

இந் நடைமுறையின் சட்டப்படியான நிலைக்குப் பரவலான ஆதரவு காணப்படுகிறது. கட்சியின் நல்வாய்ப்புகள் பிரதமரோடு இணைந்து நிற்றலால் இம் முடிவு அவரிடம் நிலை பெறுகிறது. அரசியல் அமைப்பும் இதை வலியுறுத்துவதால் இம் முடிவை அரசாங்கமே எடுக்கிறது. இல்லையெனில் ஐந்தாண்டு பதவிக் காலம் முடியும் வரை சபையைத் தொடர்ந்து பதவியில் இருக்கச் செய்ய வேண்டும். ஆயினும், மக்கள் கருத்து மாறும் போது அரசாங்கத்தை மாற்றமுடியாத ஒரு கடின நிலையை இது உருவாக்க லாம். தேர்தல்களாலன்றி வேறு முறையைப் பயன்படுத்தி மக்கள் கருத்தை அறிய அரசியல் அமைப்பு வழி செய்யவில்லை. பொதுக் கருத்து மதிப்பீடுகள் இப்பொழுது வளர்ச்சியடைந்து வந்தாலும் வெறும் புள்ளி விவர அடிப்படையில் பெரும் முடிவுகளை அரசாங்கம் செய்ய முடிவதில்லை. வாக்காளர்களின் ஆதரவை இழக்கக் கூடிய நடவடிக்கைகளை சில சமயங்களில் அரசாங்கம் மேற்கொண்டுவிடுதலுமுண்டு. இதன் கொள்கைகளை மக்கள் ஏற்பிற்கு விட்டு அவர்களின் ஆதரவை நாடும் பொழுது, கொள்கை களின் நல்லியல்புகளை மக்கள் உணர்ந்து கொள்ளும் வரை தேர்தலைத் தாமதப்படுத்தும் அளவிற்கு அரசாங்கம் திறமுடைய தாக இருக்க வேண்டும்.

பெரும்பான்மை ஆதரவு குறைகிறதென்றால் பிரதமர் மக்கள் கருத்தை அறிய விரும்பலாம். அல்லது தன் நிலையை வலுப் படுத்திக்கொள்ளவும் அல்லது சட்டமன்ற வாக்கெடுப்பின் பயனாக விளையும் தொல்லைகளை அகற்றவும் பிரதமர் பொதுத்தேர்தலை நடத்தக் கட்டளையிடலாம். அல்லது ஒரு முக்கியமான குறிப் பிட்ட பிரச்சினையை யொட்டி வாக்காளர்களின் கருத்தை அறிந்து கொள்ள இவர் விரும்பலாம். ஆனால் பொதுமக்கள் சபையில் ஒரு பெரும் பிரச்சினையை யொட்டி இவர் தோல்வியடைந்தாலும் அல்லது இவருக்கெதிராக சபையில் ஒரு கண்டனத் தீர்மானம் நிறைவேறினும் சபையைக் கலைத்துத் தேர்தலை நடத்தவும் அல்லது எதிர்கட்சித் தலைவரை அழைத்து அரசாங்கம் அமைக்குமாறு இவர் பரிந்துரைக்கலாம். தன்னுடைய நிலையை உறுதி செய்து

கொள்ளும் பொருட்டு புதிய பிரதமர் சபையைக் கலேக்குமாறு அரசரைக் கேட்கலாம். இறுதியாக, தன்னுடைய கட்சியினரின் ஆதரவை பிரதமர் இழந்து கொண்டு வருகிறர் என உணர்ந்தாலும் சபையைக் கலேத்துவிடுமாறு பரிந்துரைக்கலாம். 1951ஆம் ஆண்டில் இந்நிலேயை அட்லி எதிர்நோக்கினர்.

ஓர் உறுப்பினரின் மரணம் அல்லது உடல்நலக் குறைவு காரணமாக ஏற்படும் காலி இடங்களுக்கு இடைத்தேர்தல் நடைபெறும். அரசரின் கீழ் ஊதியம் பெறும் பதவிகளே ஏற்பதாலும், பிரபுவாக உயர்த்தப்படுவதாலும், சபையிலிருந்து விலக்கப்படுவதாலும், சொந்தக்காரணங்களுக்காக பதவியிலிருந்து விலகிக் கொள்வதாலும் ஏற்படும் காலியிடங்களுக்கும் இடைத்தேர்தல் நடத்தப்படும். கருத்து வேறுபாடு காரணமாக கட்சியிலிருந்து விலகியவர்கள் சபையில் சுயேச்சை உறுப்பினராக இருந்து செயல்படுவதுமுண்டு. ஓர் உறுப்பினர் பதவியிலிருந்து விலகிக் கொள்வதில்லே; மாருகத் தம்மை தகுதி இழப்பு செய்து கொள்ளுகிறர். ஆகவே, சொந்தக் காரணங்களுக்காகவோ, உடல் நலக் குறைவிற்காகவோ பதவி விலக விரும்பும் பொழுது அரசரின் கீழ் ஊதியம் பெறும் பதவியொன்றிற்கு இவர் விண்ணப்பம் செய்கிறர். பதவியை ஏற்றுக் கொண்டவுடன் உறுப்பினருக்கான தகுதியை இவர் இழந்து விடுகிறர். தகுதி இழப்பிற்குப் பின் உறுப்பினர் பதவியிலிருந்து இவர் தாமாகவே விலகிக் கொள்ளுகிறர்.

### வாக்களிக்க இப்பொழுதுள்ள தகுதிகள்

தேர்தலில் வாக்களிக்க ஒருவர் வாக்காளர் பதிவேட்டில் இடம் பெற்றிருக்க வேண்டும். பதிவு அலுவலர் ஒருவர் ஆண்டு தோறும் ஒரு பட்டியலேத் தயாரிக்கிறர். வாக்காளர் பட்டியலில் இடம் பெற ஒருவர் ஒரு தொகுதியில் வசிக்க வேண்டும். ஆனல் அப்படிப்பட்ட ஒருவர் 21 வயதிற்கு மேற்பட்டவராகவும் பிரிட்டிஷ் குடிமகனுகவும் அல்லது ஐரிஷ் குடியரசின் குடிமகனுகவும் இருக்க வேண்டும். அல்ஷ்டர் தொகுதிகளில் ஒரு குறிப்பிட்ட நாளுக்கு முன் ஒருவர் தொடர்ந்து மூன்று மாதம் வசித்திருக்க வேண்டும். சிலர் வாக்களிக்கத் தகுதியற்றவர்களாக்கப் பட்டுள்ளனர். இவர்களில் பிரபுக்கள், வெளியார், முழு மூடர்கள், பித்தர்கள், பெரும் குற்றத்திற்காக 12 மாதத்திற்கு மேல் சிறைத் தண்டனே அனுபவித்துக் கொண்டிருப்பவர்கள், தேர்தல்களில் இலஞ்ச ஊழல் செயல்களேப் பயன்படுத்தித் தகுதி இழந்தவர்கள் ஆகியோர் அடங்குவர்.

## வேட்பாளர்களின் தெரிவும் நியமனமும்

பாராளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கான வாய்ப்பைப் பெற, முதன்மையான கட்சியொன்றினுல் வேட்பாளராக நியமனம் செய்யப்படுதல் இன்று தேவையாக இருக்கிறது. தலத் தொகுதிச் சங்கம் அல்லது கட்சியொன்றின் தெரிவு முதல் நிலையாகும். கன்சர்வேடிவ் கட்சியில், கட்சியின் தலைமையகம் பெயர்களைக் குறிப்படுகிறது அல்லது தனிப்பட்ட முறையில் விண்ணப்பித்துக் கொள்ளலாம். தொழில் கட்சின் நடைமுறை என்னவென்ருல் நேர்முக விண்ணப்பங்களைக் கட்சி ஏற்பதில்லை. கட்சியின் தலைமையகங்கள் பெயர்களைக் குறிப்பிடுவதில்லை. எனினும் இவைகள் ஒரு பட்டியலை வெளியிடுகின்றன. தொகுதிக் கட்சிகள் விரும்பினுல் இப் பட்டியலிருந்து விண்ணப்பங்களை வரவேற்கலாம். கட்சி அமைப்புகள் கட்சியோடு இணைக்கப் பட்டவைகள். ஒவ்வொன்றும் ஒரே ஒரு நியமனம் தான் செய்யலாம். இவ் விதி முறைகள் இடைத் தேர்தலுக்குப் பொருந்தா.

வேட்பாளர்களின் முதல் பட்டியலில் நூற்றுக்கு மேற்பட்டவர்கள் இருக்கலாம். இதிலிருந்து இரண்டு முதல் ஐந்துபேர் தெரிவு செய்யப்படுகிருர்கள். கன்சர்வேட்டிவ் கட்சியின் தலச் செயற் குழுவிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பத்திலிருந்து முப்பது உறுப்பினர்களைக் கொண்ட ஒருகுழு இதைச் செய்கிறது. தொழில் கட்சியில் தொகுதிச் செயற்குழு பொது மேலாண்மைக் குழுவிற்கு பரிந்துரை செய்கிறது. சிறிய பட்டியலை தயாரிப்பதற்கு இக் குழுவிற்கு உண்மையான அதிகாரமிருக்கிறது. இவ்வாறு தெரிவு செய்யப்பட்டவர்கள் டோரிக் கட்சியினராக இருந்தால் தொகுதியின் முழு நிருவாகக் குழுவின் முன் வரவேண்டும். தெரிவு செய்யப்பட்டவர் ஒரு (சோஷலிஸ்டாக) சமதர்மவாதியாக இருந்தால் பொது மேலாண்மைக் குழுவின் முன் தோன்றவேண்டும். இக் கட்சிக் குழுக்களில் 50-ல் இருந்து 200 உறுப்பினர் வரை இருப்பர். விண்ணப்பதார் ஒவ்வொருவரும் 10 அல்லது 15 நிமிடம் சொற்பொழிவாற்ற வேண்டும். பின், கேட்கப்படும் வினுக்களுக்கு இவர்கள் விடையளிக்க வேண்டும். உறுப்பினர் தெரிவு செய்யப்படுதற்காகக் கட்சிக்குப் பணம் கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்தப்படுவதில்லை, வேட்பாளர்கள் கட்சிக்குப் பணம் செலுத்துவதை தொழில் கட்சியும் கன்சர்வேட்டிவ் கட்சியும் கட்டுப்படுத்தியுள்ளன. தொழில் சங்கமோ கூட்டுறவு கழகமோ தொழில் கட்சியின் சார்பில் வேட்பாளர்களைத் தேர்தலில் நிறுத்துமானுல் தேர்தலுக்கான செலவில் 80 சத வீதத்தை அவைகள் ஏற்றுக் கொள்ளும். கன்சர்வேட்டிவ் கட்சியின் மத்திய அவையின் நிலை

யான ஆலோசனைக் குழு உறுப்பினரைத் தெரிவு செய்கிறது. இக் குழுவின் முடிவுகள் மறுக்கப்படுவதில்லை. ஆனால் தொழில் கட்சியின் நடைமுறை இப்படி அமையவில்லை. இக் கட்சியின் மேலாண்மைக் குழுவின் தெரிவுகள் தேசிய நிருவாகக் குழுவிற்குச் செல்ல வேண்டும். இக் குழு தெரிவுகளை அப்படியே ஏற்றுக் கொள்ள வேண்டுமென்பதில்லை. தொகுதிக் கூட்டத்தில்தான் உண்மையில் வேட்பாளர் நியமனம் பெறுகிறார்.

வேட்பாளராகத் தெரிவு செய்யப்பட்டவர் தேர்தலுக்கு முன்னரே வழக்கமாக தெரிவு செய்யப்பட்டு விடுகிறார். இவர் தொகுதிக் கூட்டங்களில் கலந்து கொண்டு அரசியல் தொடர்புடையவைகளைப் பற்றி சொற்பொழிவாற்றுவார்.

தேர்தலுக்கான நாள் சட்டப்படி அறிவிக்கப்பட்ட பின்னர் நியமனங்கள் நடைபெறும். அதாவது புதிய பாராளுமன்றம் கூடு மாறு அழைக்கப்படும் அறிவிப்பிற்குப் பின் எட்டு நாட்களுக் குள்ளாக நியமனங்கள் ஏற்றுக் கொள்ளப்படும். வேட்பாளரின் பெயர், முகவரி, தொழில் ஆகியவைகளை தேர்தல் அதிகாரியிடம் ஒருவர் எடுத்து மொழிய வேண்டும். இன்னொருவர் இதை வழி மொழிய வேண்டும். இதை கூடுதலாக இன்னும் எட்டு வாக் காளர்கள் ஆதரிக்க வேண்டுவதோடு 150 பவுனை ஏம வைப்பாகச் செலுத்த வேண்டும்.

### தேர்தல் போராட்ட ஏற்பாடு

ஒவ்வொரு வேட்பாளரும் ஒரு பதிலாளை அமர்த்திக் கொள்ள சட்டம் வலியுறுத்துகிறது. தேர்தல் செலவுகள் அறுதியிட்ட மேல் வரம்பிற்கு மேல் செல்லாமல் பார்த்துக் கொள்வது இவரது பொறுப்பாகும். தேர்தல் செலவின் உயர் அளவு 450 பவுனாகும். இத்துடன், மாவட்டத் தொகுதி வாக்காளர் ஒருவருக்கு 2 பென்சும் நகர்த்தொகுதி வாக்காளர் ஒருவருக்கு $1\frac{1}{2}$ பென்சும் அனுமதிக்கப் படுகிறது, சொந்த செலவுகள் இந்த வரம்பில் அடங்கா. ஆனால் இச் செலவு 100 பவுனுக்கு மேல் இருந்தால் இதை தேர்தல் பதிலாள் வழியாகத் தான் செலவிடவேண்டும். தேர்தல் ஒழுங் கீனங்களைக் குறைக்க இந்த வரம்பு முதலில் விதிக்கப்பட்டது. ஆனால் இப்பொழுது நிதி நிலையைப் பொறுத்தவரை ஏழை, பணக்கார வேட்பாளர்களையும் தொகுதிகளையும் இவ் வரம்பு சம நிலையில் வைக்க உதவுகிறதெனலாம். வேட்பாளர்களுக்கு ஊக்க மளிக்கவே இவ்வரம்பு விதிக்கப்பட்டது. ஆனால் வேட்பாளரின் கட்சியின் வளர்ச்சிக்காக செலவிடுவதில் வரம்பு விதிக்கப்படவில்லை. கட்சிகளும் தனியாரும் தேர்தலுக்கு முன்னரே பெருமளவு

பணத்தைச் செலவிடக் கூடும். தேர்தல் போராட்டக் காலத்தில், தேர்தல் பதிலாள் மத்திய நிலையில் உருவாக்கப்பட்ட சுவரொட்டிகளுக்கும் விளம்பரங்களும் அதிகாரம் அளிக்க வேண்டும். இவைகளுக்கான செலவு தேர்தல் செலவு கணக்கில் சேர்க்கப்பட வேண்டும்.

தேர்தல் போராட்டம் பத்திரிகை வழியாகவும், தெருக்களில் ஒலிபெருக்கிக் கார்களிலும், சுவரொட்டிகளாலும், தேர்தல் கொள்கை விளக்க அறிவிப்புகளாலும், பொதுக் கூட்டங்களிலும் வீட்டுக்கு வீடு சென்று ஆதரவு திரட்டுவதாலும் நடைபெறுகிறது. ஒரு தொகுதியில் ஏறத்தாழ 50,000 வாக்காளர்கள் இருப்பர். இவர்களில் 5,000 பேர்கள் கூடப் பொதுக்கூட்டங்களில் கலந்து கொள்வதில்லை. எனவே ஆர்வமிக்க கட்சியினர் வீடுதோறும் சென்று வாக்காளர்களில் பெரும்பான்மையோரைச் சந்தித்து ஆதரவு திரட்டுவர், சட்டப்படி தலத் தொகுதிக் கட்சி கலைக்கப் படவேண்டுமெனினும் இவ்வமைப்புத்தான் தேர்தல் போராட்டத்தை நடத்துகிறது. இதன் தலைமையகம் வேட்பாளரின் குழுக் கூட்டங்களுக்குப் பயன்படுகிறது. தேர்தல் கூட்டங்களுக்கு வேட்பாளர்கள் பள்ளிக் கட்டிடங்களை இலவசமாகப் பயன் படுத்திக் கொள்ளலாம். வேட்பாளரின் (தேர்தல்) கொள்கை விளக்க அறிக்கையை ஒருமுறை இலவசமாகத் தபாலில் அனுப்பலாம். தேசிய மட்டத்தில் செய்தித் தாள்கள் வழியாகவும் பொதுக் கூட்டங்கள் வழியாகவும் தேர்தல் பிரசாரம் நடைபெறுகிறது. ரேடியோவிலும் தொலை காட்சியிலும் கட்சி அரசியல் ஒலிபரப்புகள் வழியாகத் தேர்தல் போராட்டம் நடக்கிறது. இரு பெரும் அரசியல் கட்சிகளுக்கு சமமான அளவு நேரம் ரேடியோவில் பிரசாரத்திற்கென ஒதுக்கப்படுகிறது. இந் நேர ஒதுக்கீடு நேர்மையற்றதென சிறிய அரசியல் கட்சிகள் கருதுகின்றன.

தேர்தல் போராட்டம் எந்த அளவிற்கு முடிவுகளில் மாறுதல் உண்டு பண்ணும்? இரு பெரும் கட்சிகளும் உறுதியான ஆதரவாளர்களைப் பெற்றிருக்கின்றன. ஆனால் அரசாங்கம் நிறைவேற்றியவைகளை எடை போடுகின்ற வாக்காளர்களுமுண்டு. எந்த முடிவிற்கும் இறுதி நாள்வரை முடிவிற்கு வராத வாக்காளர்களுமுண்டு. இவர்களை நோக்கித்தான் கட்சிகளின் பிரசாரம் அமையும். எம் முடிவிற்கும் வராத தொகுதிகளை தம் சார்பில் மாற்ற பெரும் முயற்சியைக் கட்சிகள் மேற்கொள்ளும். தேர்தலுக்கு முன் உள்ள இரண்டரை வாரத்திற்குள் 12 சதவீத வாக்காளரை மட்டுமே வசப்படுத்த முடிகிறதென மதிப்பிடப்பட்டிருக்கிறது. ஆகவே, பெரும்பாலோர் தேர்தல் போராட்டத்திற்கு முன்னரே முடிவெடுத்து விடுகின்றனர்.

### வாக்கெடுப்பு நாள்

பாராளுமன்றம் கலைக்கப்பட்ட பின் இடைப்படும் ஞாயிற்றுக் கிழமைகளையும் விடுமுறை நாள்களையும் நீக்கிய பின் பதினேழு நாள்களுக்குள் வாக்கெடுப்பு நடைபெறவேண்டும். தேர்தல் நாளன்று கட்சிகளின் ஆதரவாளர்கள் வாக்களிக்கச் செல்லுமாறு கட்சிகள் பார்த்துக் கொள்ளுகின்றன. இந் நாளில் கார்கள் பயன் படுத்தப்படுகின்றன. வாக்களிக்க வருகின்றவர்களை கட்சியினர் தணிக்கை செய்து வராதவர்களைப் பின்னர் திரட்டிக் கொணர்வர்.

வாக்குச் சாவடியில் வாக்காளர் தன் பெயரையும் முகவரியை யும் அறிவித்தவுடன் எழுத்தர் ஒருவர் வாக்காளர் பட்டியலோடு சரி பார்த்த பின் வாக்களிக்க அனுமதிக்கிறார். ஒருவர் இரு முறை வாக்களிக்காதவாறும் இவர் பார்த்துக் கொள்ளுகிறார். வேட் பாளரின் பெயர் அச்சிடப்பட்டுள்ள காகிதத்துண்டு (வாக்குச்சீட்டு) ஒன்று வாக்காளருக்குக் கொடுக்கப்படுகிறது. இதைப் பெற்றுக் கொண்டதும் வாக்காளர் மறைவான இடத்திற்குச் சென்று தன் விருப்பைத் தெரிவிக்கும் குறி ஒன்றை (×) தாம் விரும்பும் வேட் பாளரின் பெயருக்கெதிராக இட்டு, வாக்குச் சீட்டை மடித்து முத்திரை இடப்பெற்ற வாக்களிப்புப் பெட்டிக்குள் போடுகிறார். பொதுத் தேர்தலில் வாக்கெடுப்புகளெல்லாம் ஒரே நாளில் நடை பெறுகிறது. வாக்குச் சாவடிகள் காலை 7 மணி முதல் மாலை 9 மணி வரை திறந்திருக்கும் வாக்கெடுப்பு முடிவடைந்த பின் முத்திரை இடப்பட்ட வாக்குப் பெட்டிகள் நகர மன்றத்திற்கு எடுத்துச் செல்லப்படுகின்றது. இங்கு தேர்தல் அதிகாரியின் மேற்பார்வை யில் வாக்குகள் எண்ணப்படுகின்றன. படையில் பணிபுரிபவர் களும் வேலையில் ஈடுபட்டிருப்பவர்களும் தபாலில் வாக்குகளை அனுப்பி வைக்கலாம். இப்படி 5 லட்சம் பேர் வாக்களிக்கிறார்கள், இச் சலுகையை கன்சர்வேட்டிவ் கட்சியினர் பெருமளவு பயன் படுத்திக் கொண்டு சபையில் 12 இடங்களை 1966—ல் நடந்த தேர்தலில் பெற்றதாகக் கணக்கிட்டுள்ளனர். தேர்தல் முடிவுகள் பெரும்பாலும் அன்று நள்ளிரவிற்குப்பின் அறிவிக்கப்படுகின்றன. சில தொகுதிகளில் வாக்குகளை எண்ணுவது அடுத்த நாள் காலையில் தான் தொடங்கும். தேர்தல் அதிகாரிகளுக்காகும் செலவை திரண்ட நிதியில் சாட்டுவர். இச் செலவு சுமார் 10 லட்சம் பவுனாகும். வாக்காளர் பட்டியலை ஆண்டு தோறும் தொகுப் பதற்கு 17-5 லட்சம் பவுன் செலவு பிடிக்கிறது. இச் செலவைத் தல ஆட்சி நிறுவனங்களும் கருவூலமும் சமமாகப் பகிர்த்து கொள்ளுகின்றன.

தொடர்புடைய பெரும்பான்மை முறையையொட்டி தேர்தல்கள் இந் நாட்டில் நடைபெறுகின்றன.

ஒற்றை வாக்குமுறையையொட்டிய முடிவுகள் வாக்காளர்களின் விருப்புகளின் சரி நுட்பமான பிரதிபலிப்பாக இருக்கவில்லை பல்வேறு அரசியல் கட்சிகளும் சபையில் பெற்றுள்ள இடங்கள் இவைகளுக்காக கொடுக்கப்பட்ட வாக்குகளின் உண்மையான பிரதிபலிப்பாக இல்லை. வழக்கமாக வெற்றி பெறும் கட்சி அது பெற்றிருக்கும் ஆதரவை மெய்ப்பிக்க முடியாத வகையில் அதிகமான இடங்களைச் சபையில் பெற்றிருக்கும். 1951–ல் நடந்த பொதுத் தேர்தலில் தொழில் கட்சி, கன்சர்வேட்டிவ் கட்சி பெற்ற வாக்குகளை விட அதிகமான வாக்குகளைப் பெற்றது. ஆயினும் இதற்கு 26 இடங்கள் குறைவாகவே கிடைத்தன. சிறிய பெரும்பான்மையில் பல தொகுதிகள் வெற்றி பெற்றதே இத்தகைய முடிவுகளுக்குக் காரணமாகும். மூன்ருவது கட்சியாகிய லிபரல் கட்சியின் பெருமளவு சிறுபான்மையினர் பிரதிநிதித்துவம் பெருமலே இருந்து விடுகின்றனர். இம் முறையை ஆய்ந்தவர்கள் இக் கணக்குகள் உண்மையில் நெறிப் பிறழ்வைக் காட்டவில்லை எனக் கருதுகின்றனர். ஏனெனில் வாக்கினை விணுக்கும் அச்சத்தால் உண்மையில் தாம் விரும்புவருக்குப் பலர் வாக்களிப்பதில்லை. மற்றும் சிலர் வாக்களிப்பதே இல்லை.

சீர்திருத்தக் கருத்துகளை லிபரல் கட்சி எடுத்துரைத்தது. ஆனல் பெரிய கட்சிகள் மாற்றுத் திட்டமெதையும் குறிப்பிடவில்லை. ஏனெனில் இப் பெரிய கட்சிகளின் இடத்தில் சிறிய கட்சிகள் வளர இத் திட்டங்கள் உதவலாம். வழக்கமாக, கன்சர்வேட்டிவ் கட்சியினர் பெற்ற வாக்குகளுக்குரிய இடங்களை விட அதிகமான இடங்களை சபையில் கைப்பற்றினர். மாறும் இயல்புள்ள வாக்குகளின் ஒரு சிறிய ஊசலாட்டத்தின் விளைவால் தொழில் கட்சி பெரும்பான்மை ஆதரவைப் பெற்றுப் பெரும்பான்மையான இடங்களைப் பெற முடியுமெனக் கருதியது. ஆயினும் இக் கருத்துகளெல்லாம் புற உண்மைகளை உள்ளபடி காட்டவில்லை. வகக்களிப்பு முறையை மாற்றியமைப்பதால் அரசியல் அமைப்பு மேம்பாடடையுமா ?

## பொதுத் தேர்தல் முடிவுகள் 1959—1966

| கட்சி | 1959 | | | 1964 | | | 1966 | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | வாக்குகள் | இடங்கள் | வாக்களிப்பு % | வாக்குகள் | இடங்கள் | வாக்களிப்பு % | வாக்குகள் | இடங்கள் | வாக்களிப்பு % |
| தொழில் கட்சி | 12,215,538 | 258 | 44 | 12,205,814 | 317 | 44 | 13,064,951 | 363 | 48 |
| கன்சர்வேடிவ்கட்சியும் ஆதரவாளர்களும் | 13,749,830 | 365 | 49 | 12,001,396 | 304 | 43 | 11,418,433 | 253 | 42 |
| லிபரல் கட்சி | 1,638,571 | 6 | 6 | 3,092,878 | 9 | 11 | 2,327,533 | 12 | 9 |
| கம்யூனிஸ்ட் கட்சி (பொதுவுடைமைக் கட்சி) | 30,897 | — | — | 45,932 | — | — | 62,112 | — | — |
| மற்ற(கட்சி)வர்கள் | 224,405 | 1 | 1 | 309,354 | — | 1 | 390,577 | 2 | 1 |
| மொத்தம் | 27,859,241 | 630 | 100 | 27,655,374 | 630 | 100 | 27,263,606 | 630 | 100 |
| வாக்களிப்பு % | | 78·7 | | | 771. | | | 75·8 | |

* General Elections of 1966, D. E. Butlor & Ring

மேலும் படித்தற்குரிய நூல்கள்

Munro, W. B. 'Governments of Europe'.
Ivor, Jennings, 'The Britsh Constitution'. (1961)
Lowell, A. L. 'The Governments of England'.
Carter- Herz - Ranney, 'The Government of Great Britain'.
Adams, G. B. 'Constitutional History of England'.
Felt, Sir Brayan, 'The Houses of Parliament'. (1953)
Ross, J. S. F. 'Parliamentary Representation' (1943)

# வயது வந்தோர் வாக்குரிமை பெற்ற வரலாறு



# 4. பாராளுமன்ற உறுப்பினர்

பாராளுமன்ற உறுப்பினராதற்கு ஒருவர் பிரிட்டிஷ் குடிமகனுகவும், 21 வயது நிரம்பியவராகவும், பத்து வாக்காளர்களால் நியமனம் செய்யப்படுவராகவும் இருக்க வேண்டும். ஓரிடத்தில் தங்கி வசிக்கும் தகுதி வலியுறுத்தப்படுவதில்லை. ஆயினும் வினையியல் பாங்கற்ற நியமனங்களைத் தவிர்க்கும் வகையில் உறுப்பினராக விரும்புகிறவர் தேர்தல் அதிகாரியிடம் 150 பவுனை காப்பு நிதியாகச் செலுத்த வேண்டும். பெருமக்கள் சபை உறுப்பினர், இங்கிலாந்து திருச்சபைக் குருமார்கள், ரோமன் கத்தோலிக்கக் குருமார்கள், மன நோயாளிகள், கடனைத் தீர்க்க முடியாமல் நொடித்துப்போனவர்கள், அடாப்பழிக்காகத்தண்டனை அனுபவிப்பவர்கள், தேர்தல் ஊழலுக்காக ஏழாண்டு தண்டிக்கப்பட்டவர்கள், 1957ஆம் ஆண்டு, தகுதி இழப்புச் சட்டத்தால் நீக்கப்பட்டவர்கள், சில சிவில் பணியாட்கள், நீதிபதிகள், அரசுத் தூதர்கள், ஆயுதப் படையினர், காவல் படையினர் தேசியமயமாக்கப்பட்ட தொழிற்சாலைகளின் ஊதியம் பெறும் வாரிய (Board) உறுப்பினர், இங்கிலாந்து பாங்கின் இயக்குநர்கள், மாவட்ட ஆட்சிக் குழுவின் எழுத்தர்கள், நகர எழுத்தர்கள் ஆகியோர் பொதுமக்கள் சபையின் உறுப்பினராகும் தகுதியைச் சட்டப்படி இழந்தவராவர்.

பல்கலைக்கழகங்களுக்கான இடங்கள் இப்பொழுது நீக்கப்பட்டுவிட்டன. ஒரு கட்சியின் பெயரிலன்றி பாராளுமன்றத் தேர்தலில் எவரும் போட்டியிட்டு வெற்றி பெறும் வாய்ப்புக்கள் இப்பொழுது மிகக் குறைவேயாம். இருந்த போதிலும் கட்சி உறுப்பினராக மட்டும் ஒருவர் இருந்தால் போதாது. முன் குறிப்பிட்ட முறைப்படி தலத் தொகுதிக் கழகத்தினரால் ஒருவர் நியமன ஆதரவு பெறவேண்டும்.

பாராளுமன்ற உறுப்பினர் எப்படிப்பட்ட மனிதர்? கட்சியின் நீண்ட நாள் உறுப்பினராகவும் தல அரசியலில் செயல் திறமுடன் பணியாற்றியவராகவும் இவர் இருக்கலாம். வெற்றி வாய்ப் புடைய தொகுதிக்கு வேட்பாளராகத் தெரிவு செய்யப்படும் முன் இவர் தனிப்பட்டு பல தொகுதிகளில் போட்டியிட்டவராகவும் இருப்பார். உறுப்பினர் பதவிக்குரிய ஒருவர் முப்பது வயதிற்கு மேற்பட்டவராகவும் வெற்றி வாய்புடையவராகவும் இருக்க வேண்டும். தேர்தலில் கலந்து கொள்வதற்கு முன் வணிகத்தில் அல்லது தொழில் வழியாக ஓரளவு நிதி வளமுடையவராக ஒருவர் இருக்கவேண்டும். கன்சர்வேட்டிவ் கட்சியின் வேட்பாளராயின் கேம்பிரிட்ஜ் அல்லது ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகத்தில் பயின்ற வராகவும் இருந்தால் இவருக்கு நல்ல வாய்ப்பு உண்டு. தொழில் கட்சியினராக இருந்தால் இவர் முதிர்ச்சியடைந்தவராக இருக்க வேண்டும். மாறாக, ஒரு தொழில் சங்கம் அல்லது கூட்டுறவுக் கழகத்தின் ஆதரவாளராக தெரிவு செய்யப்படும் ஒரு வேட்பாளர் தொழில் கட்சி வேட்பாளர்களில் நாலில் ஒருவராகத்தான் இருக்கிறார். வேட்பாளர்களில் 4 சதவீதத்தினர் பெண்கள்.

பாராளுமன்ற உறுப்பினராக இருக்க ஒருவர் விரும்புவதற்குக் காரணம் என்ன? இவ் வினாவிற்கு விடையளிப்பது மிகக் கடின மாகும். நிதி நிலையைப் பெருக்கிக் கொள்வதற்கில்லையென்பது உறுதி. அமைச்சர் பதவி அல்லது மேன்மை நிலையை ஒருவர் அடைந்தாலும், பொதுமக்கள் சபையின் உறுப்பினர் தகுதியை வைத்துக் கொண்டு பணம் திரட்டும் காலம் கடந்து விட்டது. ஆண்டுக்கு 3250 பவுனே ஓர் உறுப்பினர் இப்பொழுது ஊதிய மாகப் பெறுகிறார். வரி செலுத்தும் காரணத்திற்காக இதில் பெரும் பகுதி செலவினங்களாக மதிப்பிடப்படுகின்றன. பாராளு மன்றக் கூட்டம் நடக்கும் இடத்திற்கும் தம் தொகுதிக்கும் தம் வீடு உள்ள இடத்திற்கும் பயணம் செய்ய உறுப்பினர் முதல் வகுப்பு ரயில் பயணச் சலுகைக்குரியவராவார். ஆனால் 1911 வரை உறுப்பினர் எவரும் இந் நாட்டில் செலவுத் தொகை பெற வில்லை. இன்றும், பாராளுமன்ற ஊதியத்தைப் பல உறுப்பினர் முற்றிலும் நம்பி இருந்தாலும் இவர்கள் இலவசமாக செயலாற்ற வேண்டுமெனும் கருத்து இன்னும் நிலவுகிறது. மேலும், அரசி யலுக்கு வெளியே பெரும் பொருள் திரட்டும் அளவிற்கு உயர்ப் பலர் தகுதித் திறமுடையவர்களாக இருக்கின்றனர். எவ்விதத் திலும், ஓர் உறுப்பினரின் வாழ்க்கையில் வசதியற்ற சூழல்கள் மலிந்து காணப்படுகின்றன. இவருடைய வருவாய் வளம் அரசி யலுக்கு வெளியே இருக்குமானால் இவர் பணமுடைக்குள்ளாகலாம். கட்சியினரும் தொகுதியினரும் இவருடைய நேரத்தில் பெரும்

பகுதியைப் பயன்படுத்திக் கொள்வதால் இவருடைய இல்வாழ்க்கையையும், பொழுது போக்கையும் பண்பாடு நலன்களேயும் இவர் தியாகம் செய்ய வேண்டி இருக்கும். இவருக்குத் தரப்படும் அலுவலகச் சலுகைகள், குடி இருப்பு வசதி ஆகியவைகள், நாகரிக உலகில் மற்றெந்த சட்டசபையினர் பெற்றிருக்கும் வசதிகளே விடக் குறைந்தவைகளேயாகும்.

இக் குறைபாடுகளுக்கீடாக, இச் சபையின் உறுப்பினர் என்ற முறையில் பெரும்பாலோர் அதிகார உணர்வையும் செல்வாக்கையும் நாம் பெற்றிருப்பதாக உணர்கிருர்கள். இக் காலக்கட்சியமைப்பைக் கருத்திற்கொண்டு பார்ப்போர் இவ் வதிகாரத்தை உண்மைதாஞ என வினவுகின்ருர்கள். தாம் முக்கியமானதெனக் கருதுகின்ற கருத்துகளேயும் நிறுவனங்களேயும் அப்படியே கட்டிக் காக்க வேண்டுமென விரும்புகிறவர்களின் கருத்து இவைகளேச் சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்பவர்களின் விருப்பத்தை விட வலிமையானதாகும். ஆனல், இவர்களுடைய ஆர்வம் எதுவாயினும், தாம் பற்ருர்வம் தெரிவிக்கின்ற கருத்துகளுக்கு மிகப் பெரும்பான்மையோர் நம்பிக்கை தெரிவிக்கின்றனர். இல்லேயெனில், தனித் தெரிவுக் குழுவின் ஆய்வில் இவர்கள் வெற்றி பெற்றிருக்க முடியாது. அரசியல் ஆர்வம் காரணமாக பெரும்பாலான உறுப்பினர் சபைக்கு வந்திருக்கலாம். சிலருக்கு அரசியல் இரத்தத்தில் ஊறியதாகும்; சிலருக்கு இது மற்றவர்களால் ஊட்டப்பட்டதாகும். இவ் விருவகையினரும் சபை உறுப்பினர் பதவியை இயல்பான குறிக்கோளாகக் கருதுகின்றனர்.

ஆனல், அரசியல் வாழ்க்கை நிச்சயமற்றதாக இருப்பதால் இதைப் பலர் தம் வாழ்க்கைத் தொழிலாக மேற்கொள்ளவில்லே. ஆகையால், நடைமுறையில், நாட்டுச் சேவையில் பங்கு பற்றும் பொருட்டு சமூகத்தின் எல்லாப் பிரிவுகளிலிருந்தும் சபை உறுப்பினரை ஏற்றுக் கொள்ளுகிறது. கம்பெனி இயக்குநர்கள், பல்கலேக்கழக ஆயர்கள், தரகர்கள், மருத்துவர்கள், பத்திரிகையாளர், தொழிற்சங்கத் தலேவர்கள், மா வழக்கறிஞர்கள், வழக்குரைஞர்கள் ஆகியோர் சபை உறுப்பினராக இடம் பெறுகின்றனர். தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னரும் பலர் தம் வெளி நலன்களேத் தொடர்ந்து வைத்துக் கொள்ளுவர். இதனல் சபைக்கும் ஆதாயம் தான். முழு நேர அரசியல்வாதிகளே மட்டுமே சபை கொண்டிருக்குமாயின் வெளி உலகத் தொடர்பை சபை இழந்திருக்கலாம். பரந்த கருத்துடையதாக சபை இருந்திராது. பல தரத்தவர் இப்பொழுது எப்பொருள் பற்றியும் சபையால் தனிச் சிறப்பாய்வு செய்ய முடிகிறது.

பாராளுமன்ற உறுப்பினராகச் சிலர் இருக்க விரும்புவதேன்? என்பதைப் பற்றி நாம் கவலை கொள்ளத் தேவை இல்லை. அதிகார மோகம், கீர்த்தி, பகட்டு, பற்றுர்வம், அரசியல் நலன் ஆகிய வற்றிற்காகப் பாராளுமன்ற உறுப்பினராலும், அரசியல் புகழார்வத்தை நிறைவேற்றிக் கொள்ளவதற்காவது இவர்கள் உறுப்பினராக இருக்க வேண்டியிருக்கிறது. ஆகவே, உறுப்பினர் சிறிதளவு திறமையுடையவர்களாக இருக்கவேண்டும்; மேலும், இவர்கள் வாக்காளர்களின் விருப்புகளில் கவனம் செலுத்த வேண்டும். தொகுதியில் உள்ள தலக் கட்சித் தொண்டர்கள் செல்வாக்குக் குழுக்கள் ஆகியோரின் விருப்புகளை அறிந்து அவைகளை இவர்கள் நிறைவேற்ற வேண்டும்.

உறுப்பினரின் கடமைகளை விட அமைச்சர்களின் கடமைகள் கடினமானவையென்பது தெரிந்ததே. ஆனால் உறுப்பினரின் கடமைகள் எளிதானவை என்ற முடிவிற்கு வந்து விடலாகாது. மனச் சான்றுக்குக் கட்டுபட்ட உறுப்பினர் நாள் ஒன்றுக்குப் 14 மணிகள் பாடுபட வேண்டும். உறுப்பினருக்கு வெளி வேலைகள் இருக்குமானால் இன்னும் அதிகமாக உழைக்கவேண்டும். முழு நேரச் செயலரை தனிப்பட்டு அமர்த்திக் கொள்ள இயலாதவர்கள் மற்றவர்களோடு சேர்ந்து ஒருவரை வைத்துக் கொள்ளவேண்டும். இவர் தம் கட்சிக்கும், தொகுதிக்கும் நாட்டுக்கும் தமக்கும் கடமைப் பொறுப்புடையவராக இருப்பதால் இவர் கடமைகள் மிகையாகும்.

(1) கட்சிக்கு

"கொள்கையை உதறித்தள்ளு! கட்சியைப் பற்றி நில்லு!" என டிசரெலி உணர்ச்சி மீதுரக் கூறினர். வழக்கமாக இக் கருத்துப் போக்கே இன்றும் நிலவுகிறது. கட்சியளித்த ஆதரவின் பயனாக உறுப்பினர் பாராளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப் படுகிறார். இதற்கீடாக இவரது பற்றுறுதியைக் கட்சி வற்புறுத்து கிறது. அரசாங்கத்தின் உறுதி நிலை கட்சி முறையில் நிலை பெறுகிறது. ஆனால் ஒரு சில வேளைகளில், தன் விருப்பப்படி வாக்களிக்க உறுப்பினர்கள் அனுமதிக்கப்படும் பொழுது இவர்கள் கட்சிக் கொள்கையைப் பின்பற்ற வேண்டும். ஆயினும் இவருக்கென ஒரு பொறுப்பும் மனச்சான்றும் உண்டு. கட்சியின் கொள்கையை ஏற்க முடியவில்லையென்றால் இவர் உறுப்பினர் பதவியை விட்டு விட வேண்டும். அல்லது சுயேச்சையாக இருந்து செயல்பட வேண்டும். அல்லது இவரது மெய்மைப் பற்றுறுதியை கட்சி ஏற்று மதிக்கும் என்னும் நம்பிக்கையில் இவர் தொடர்ந்து

செயலாற்ற வேண்டும். உறுப்பினரின் தனிப்பட்ட கருத்துகளை தலத் தொகுதியைக் காட்டிலும் தலைமையகம் பொறையோடு ஏற்றுக் கொள்ளலாம். விளக்கம் தருமாறு உறுப்பினரைக் கட்சி கோரலாம். கன்சர்வேட்டிவ் கட்சி அரசாங்கத்தின் சூயெஸ் கொள்கையை ஆதரிக்கத் தவறியதற்காக 1956-ல் போர்ன்மவுத் தொகுதிக்கு நிகெல் நிக்கோல்சன் (Nigel Nicolson) விளக்கம் அளிக்க வேண்டியிருந்தது. 1960-ல் ஆல்ஃபிரடு ரோபென்ஸ் (Alfred Robens) அணுசக்திக் அமைப்புக் கம்பெனியின் தொழில் உறவு ஆலோசகராக அமர்த்தப்பட்டதின் விளைகளை பிலித் (Blyth) தொகுதியின் தொழில் கட்சி நிருவாகக் குழுவிற்கு விளக்கியுரைக்க வேண்டியிருந்தது. தலக் கட்சியை உறுப்பினர் திருப்தி செய்து விட்டால் தலைமையகம் எதைப் பற்றியும் கவலைப்படுவதில்லை. ஆனால் உறுப்பினரை பதவியிலிருந்து விலகிக் கொள்ளுமாறு தொகுதியினர் கேட்கலாம். விலகினாலும் விலகாவிட்டாலும் இவரது உறுப்பினர் பதவி முடிவிற்கு வந்து விடுகிறது. ஏனெனில் மறுபடியும் இவர் அத் தொகுதியில் அல்லது வேறொரு தொகுதியில் வேட்பாளராக ஏற்றுக் கொள்ளப்படாமல் இருக்கலாம்.

தம் சொந்தத் தொகுதியில் உறுப்பினர் கட்சி நலன்களின் மேம்பாட்டிற்காகவும் பாடுபட வேண்டும். பாரளுமன்றத்தில் பின்பற்றப்படுகின்ற கொள்கைகளை உறுப்பினர் தம் தொகுதி வாழ் மக்களுக்கு அடிக்கடி விளக்கியுரைத்தல் அவசியமாகும். வாக்காளர்களுடன் அடிக்கடி தொடர்பு கொண்டு இவர் தொகுதியில் நல்லெண்ணத்தை எல்லா வழிகளிலும் பேணுதல் வேண்டும்.

2) தொகுதிக்கு

நற்குணப் பண்புகளோடு இடையறுது செயலாற்றும் ஒரு வேட்பாளர் ஒரு சில நூறு வாக்குகளுக்கு மேல் பெற்று விட இயலாது. ஆகவே, உறுதியில்லாத தொகுதியொன்றில் தான் ஓர் உறுப்பினரின் பணி மெய்யாகவே குறிப்பிடத்தக்கதாக அமைகிறது. இருந்த போதிலும், அடிக்கடி அரசியல் கூட்டங்களை நடத்தியும், மலர் காட்சிகளில் கலந்து கொண்டும், பள்ளிகளில் சொற்பொழிவாற்றியும், வெஸ்மின்ஸ்டருக்கு வரும் தொகுதி யினரை வரவேற்றுபசரித்தும், தொகுதியினரின் நல்லெண் ணத்தைப் பேணி வளர்த்துக் கொள்ள பெரும்பாலான உறுப்பினர் முயல்வர். இவைகளைத் தவிர, ஓர் உறுப்பினர் தம் நிலையை தலத்தில் இரண்டு வழிகளில் உயர்த்திக் கொள்ளக் கூடும்.

தம் சொந்தத் தொகுதியினரைப் பொறுத்த வரை ஓர் உறுப்பினருக்குச் சில கடமைப் பொறுப்புகள் உண்டு. தனி மனிதன், சில வேளைகளில், ஆட்சியாளரிடமிருந்து பாதுகாப்பு நாடுவதை பிரிட்டிஷ் அரசியலமைப்பு ஏற்றுக் கொள்ளுகிறது. குடிமகன் ஒருவன் பாராளுமன்ற உறுப்பினரை நாடித் தன் சார்பில் குறை கலையப் பாடுபடக் கேட்டுக் கொள்ள உரிமை உண்டு. தன் கட்சி ஆதரவாளர்களுக்கு மட்டுமன்றி தொகுதியினர் ஒவ்வொருவருக்கும் அவர் தம் சொந்த இடர் கலைந்து பாராளுமன்ற உறுப்பினர் உதவ வேண்டும். உறுப்பினர் ஒருவர் நாளொன்றுக்கு முப்பது கடிதங்களை வரப் பெறுகிறார். இத்துடன் பல உறுப்பினர் வாரத்தில் ஒரு நாள் தல கட்சி அலுவலக கூட்டத்தில் தவறாமல் கலந்து கொண்டு தொகுதியினருக்குப் பேட்டியளிக்கிறார்கள். உறுப்பினரின் செயலாளர் பல விபரங்களைக் கேட்டறிந்து கொள்ளுகிறார். சிலருக்குத் தக்க தகவலையும் அறிவுரையையும் இவர் அளிக்கிறார். ஆனாலும் சில குறைபாடுகளை உறுப்பினர் பயனுள்ள முறையில் கேட்கலாம். தீர்த்து வைக்கலாம். வழக்கமான முறையில் ஒருவர் அரசாங்கத்தின் ஒரு துறையிடமிருந்து தக்க பதிலைப் பெற முடியாத போது உறுப்பினரின் ஒரு கடிதம் அதிகார வர்க்கத்தின் மனப்பான்மையை மாற்ற உதவலாம். இதனாலும் பயன் கிட்டவில்லையென்றால் குறிப்பிட்ட துறைப் பொறுப்பை ஏற்றுக் கொண்டுள்ள அமைச்சரை நேரிலோ கடிதத்தின் வாயிலாகவோ சந்திக்கலாம். 1967ஆம் ஆண்டிலிருந்து பாராளுமன்ற கமிஷனரை அணுகும் மாற்று முறையொன்று மேற்கொள்ளப்பட்டுள்ளது.

கேள்வி நேரத்தின்போது பாராளுமன்றத்தில் உறுப்பினர் ஒருவர் கேள்விகளின் வாயிலாகத் தொகுதியினரின் குறைபாடுகளை வெளிப்படுத்தலாம். இம் முறையில் சில குறைபாடுகள் இருக்கலாம். ஓரிரண்டு நிமிடங்களில் பேசித் தீர்த்து விடக் கூடிய பிரச்சினைகள் மிகக் குறைவே. அமைச்சரோடு நடத்தும் சொற்போரில் பெரும் பயனை உறுப்பினர் அடைய முடியாது. எவ்வாறாயினும், ஓர் அமைச்சர் கடுமையான தாக்குதலுக்கு உள்ளாகும்போது, தவறை ஏற்றுக் கொள்வதற்குப் பதிலாகத் தம் பெருமையைக் காத்துக் கொள்ளும் பொருட்டு சொற் திற மிக்க பதில் ஒன்றைத் தெரிவிக்கிறார். இதையொட்டி யெழுப்பப் படும் துணைக் கேள்விகளாலும் பயன் கிட்டா. ஆனால், தொகுதியினருக்கு நியாயமான குறைபாடுகள் இருக்கின்றதாக ஓர் உறுப்பினர் அறிவாராயின் பாராளுமன்றத்தில் அவர் எவ்வகையான நடவடிக்கையையும் மேற்கொண்டு குறைகளை களையத் தயங்க மாட்டார்.

தம் தொகுதியின் தனி நலனில் அக்கறை கொண்டுள்ள உறுப்பினர் ஒருவர் பாராளுமன்றத்தில் தம் கருத்தைத் தெளிவாக வற்புறுத்த வேண்டும். இருப்பினும், இதற்கும் ஒரு வரையறை யுண்டு ஏனெனில் தேசியப் பின்னணியில்தான் தலப் பிரச்சினைகள் ஆராயப்பட வேண்டும். இப் பரவலான நோக்கில் தொகுதியினரை உறுப்பினர் பயிற்றுவிப்பதும் கடமையாகும். இக் கால அரசியலில் ஒவ்வொரு வாக்கிற்கும் ஒரு தனி மதிப்பு இருப்பதால் இப்பொழு தெல்லாம் இது புறக்கணிக்கப்படுகிறது. பிரச்சினைகள் தெளிவற்றுக் காணப்படுதலால், தேசிய நலனுக்கேற்றவைகளையே தொகுதியின் சார்பில் உறுப்பினர் எடுத்துரைக்கிருர்.

(3) நாட்டிற்கு

உறுப்பினர் எதிர்க் கட்சியினராயினும் ஆளும் கட்சியினராயினும் விதி முறைகளைப் பின்பற்றுவார்களெனின் பாராளுமன்றம் தன் பணிகளை நிறைவேற்ற உதவியாக இருக்கும். பாராளுமன்றக் குழுக்களில் (Committees) இவர் செயலாற்றி, நிதி நடைமுறைகளில் பங்குபற்றி, சட்ட ஆக்கத்தில் கவனம் செலுத்தி, நிர்வாகத்தைக் கட்டுப்படுத்த இவர் உதவ வேண்டும். மரபை யொட்டி எழும் பாராளுமன்றப் பணிகளை நிறைவேற்ற இவர் துணை நிற்க வேண்டும். இப் பணிகளில் பல இடர் மிக்கவை, நேரம் பிடிக்கக் கூடியவை. இருப்பினும் இவைகளுக்குத் தேவையான விளம்பரம் கிடைப்பதில்லை. ஆகவே, தம் கடமைப் பொறுப்புகளை மனச்சான்றிற்குட்பட்டு நிறைவேற்றும் உறுப்பினரைச் சிறப்பிக்க வேண்டும். விளம்பர நாட்டமுடையவர்கள் இதைப் புறக்கணித்து விடலாம்.

உறுப்பினரின் கடமைப் பொறுப்புக்கள் விரிவான உட்கருத்துக்களைக் கொண்டிருக்கின்றன. பல்வேறு பிரச்சினைகளையொட்டி தாம் வாக்களிக்க வேண்டியிருப்பதால் இவைகளைப் பற்றி தாம் அறிந்து கொள்ளும் கடமை இவருக்குண்டு. நூல் நிலையங்களில் சென்று படிப்பதோடும் விவாதங்களைக் கவனிப்பதோடும் மட்டும் நின்று விடாமல், கட்சியினரால் ஏற்பாடு செய்யப்படும் கருத்தரங்குகளில் கலந்து கொண்டு அமைச்சர்களும் அறிஞர்களும் தெரிவிக்கின்ற கருத்துக்களை இவர் கேட்க வேண்டும். தம் நாட்டிற்கும் தொகுதிக்குமிடையேயான நலனில் வேறுபாடுகள் இருப்பதாக ஆய்ந்து இவர் அறிவாராயின், ஐக்கிய முடியரசின் பாராளுமன்ற உறுப்பினர் என்பதை இவர் உணரவேண்டும். ஒரு நோக்கத்தோடு ஒரு நாட்டில் இயங்கும் விவாத அரங்காகப் பாராளுமன்றம் உள்ளதென்பதையும், இதில் தல நோக்கங்கள்

அல்லது வெறுப்புகள் இடம் பெறலாகாதென்பதையும், இதில் பொது நோக்கின் அடிப்படையில் உருவாகும் பொது நலனே நிலைபெற வேண்டுமென்பதையும் உறுப்பினர் உணர்தல் வேண்டும். பாராளுமன்றத்தில் எவ்வாறு பேச வேண்டுமென்பதையும் எப்படி வாக்களிக்க வேண்டுமென்பதையும் தொகுதியினர் வழியாக அறிந்து கொண்டு இவர்களின் வகையாளாக செயல்படுபவராக மட்டும் இவர் இருக்கலாகாது. மாறாக, தொகுதியினரின் கருத்துகளை மதித்து நடக்கும் பிரதிநிதியாக இருக்கையில், சபையில் நடக்கும் வாதங்களையும் எதிர்வாதங்களையும் கருத்தில் கொண்டு தம் சொந்த முடிவில் இவர் செயல்படுகிறார். பர்க் என்பார் தம் தொகுதியினருக்கு அனுப்பிய கடிதம் தெற்றென விளக்குகிறது. 'அரசாங்கமும் சட்ட ஆக்கமும் திறனாய்வையும் செயல் நோக்கத்தையும் பொறுத்தவை. மன விருப்பத்தைப் பொறுத்ததன்று. விவாதத்திற்கு முன் முடிவு செய்வதற்கும், ஒரு சிலர் விவாதிக்கவும் மற்றவர்கள் முடிவு செய்வதற்கும் வாக்கு வாதங்களைக் கேட்பவர்கள் முடிவு எடுப்பவர்கள் இருக்கும் இடத்திலிருந்தே முன்னூறு மைல் தொலைவில் இருப்பதற்கும் என்ன தான் காரணமாக இருக்க வேண்டும்.'

இக்கால நடைமுறைக்குப் பர்க்கின் கருத்துகள் பொருந்துமா? வழக்கமாக, கட்சியின் கொள்கையையொட்டி உறுப்பினர் கருத்து அமைகிறது. பாராளுமன்றத்தில் இதை இவர் பின்பற்ற வேண்டுமென்று தொகுதியின் தலக் கழகங்கள் எதிர்பார்க்கின்றன. இதற்கு மாறாக நடந்து கொண்டால் இவர் பதவி இழக்க நேரிடலாம். தம் தொகுதியினரின் கருத்தைவிட முற்போக்கான கருத்துடைய உறுப்பினர்கள் தொகுதியினரை தம் சார்பில் கொண்டு வருவதில் வெற்றி பெறலாம். அல்லது இவர் தம் சுயேச்சையான கருத்தை வெளியிட ஒரு வாய்ப்பைப் பெறலாம். இவ் விரண்டிற்கும் வழியில்லையென்றால் இவர் தம் அரசியல் வாழ்க்கையைத் தியாகம் செய்ய மனவலிமை உடையவராக இருக்க வேண்டும்.

### 4. இவருடைய சொந்தக் கருத்துகளும் நலன்களும்

பலவற்றைப் பற்றி ஓர் உறுப்பினருக்குச் சொந்தமான தனிப்பட்ட கருத்துக்கள் இருக்கலாம். பந்தயம் கட்டுவது பற்றிய சட்டங்கள் நேர்மைற்றனவென இவர் கருதலாம் அல்லது இவைகளைத் தளர்த்தினால் தீய விளைவுகள் ஏற்படலாமென இவர் கருதலாம். விவகாரத்தை எளிதாக்க இவர் விரும்பலாம் அல்லது இம் முயற்சிகளை எதிர்க்க இவருடைய சமயம் இவரைத் தூண்டலாம்.

இவருடைய கருத்துகளை பாராளுமன்றத்தில் திட்டவட்டமான செயல்களால் உருவாக்கலாம். ஒரு கூட்டுறவுச் சங்கம் அல்லது ஒரு தொழில் சங்கம் ஆகியவற்றின் தனி நலன் காரணமாக இது நடைபெறலாம். இதற்குக் கைமாருகத் தம் பதவியைப் பயன் படுத்தி இவைகளின் மேம்பாட்டிற்காக இவர் பாடுபடவேண்டும். ஒரு தனி உறுப்பினர் மசோதாவைக் கொணருவதன் வாயிலாக ஓர் உறுப்பினர் இதை நிறைவேற்றலாம். வாக்கெடுப்பின் போது இவைகளுக்குச் சாதகமாக வாக்களித்தும் அல்லது அவ்வப்போது பாராளுமன்றத்தில் இவைகளைப் பற்றிய கேள்விகளைக் கேட்டும் இவர் சேவை செய்யலாம். எந்த ஒரு குறிப்பிட்ட நலனோடும் தொடர்பில்லாத ஓர் உறுப்பினர் இருந்தால் இவர் உதவியை நாட மற்றவர்கள் இருப்பதை இவர் விரைவில் தெரிந்து கொள்ளு கிறார்.

உறுப்பினரின் வாய்ப்புகள் இங்கிலாந்தின் ஆட்சி முறை கட்சியை ஆதாரமாக கொண்டியங்குவதால் பாராளுமன்றத்தின் நேரத்தை ஆளும் கட்சியும் எதிர்கட்சியும் முற்றிலும் பயன் படுத்திக் கொள்ளுகின்றன. கட்சி இயந்திரத்தில் சாதாரண உறுப்பினர் இயக்க விசையை ஏற்படுத்தும் ஓர் இயந்திரப் பல்லாகக் கருதப்படுகிறார். பாராளுமன்றத்தில் சொற்பொழி வாற்றியோ மசோதாக்களைக் கொணர்ந்தோ இவர்கள் சேவை செய்வதை விட குறிப்பிட்ட நேரத்தில் வாக்கெடுப்பு நடைபெறும் போது எந்தப் பக்கத்தில் இருந்து இவர் வாக்களிக்கிறார் என்பது தான் இவரது அரும் பணியாகிறது. ஆளும் கட்சியில் பின்னணி யில் இருப்பவர்கள் திறமையற்றவர்களாகிக் கொண்டு வரு கின்றனர். இவர்களின் கருத்துகள் அரசாங்கத்திற்கு இக் கட்டான நிலையை உண்டாக்குவதாகவும், அரசாங்கத்திற்கா தரவாக இவர் பேசுவதும் அரசாங்கத்தின் நேரத்தை விழுங்கு வதாகவும், இவர் கொண்டு வரும் மசோதா ஒரு வகுப்பினரைச் சார்ந்ததாகவும் இருக்கலாம். இதனால் அரசாங்கத்தின் நிலையும் பாதிக்கப்படலாம்.

இருப்பினும், பின்னணி உறுப்பினர் சேல்வாக்கில்லாதவரில்லை. பாராளுமன்றக் கட்சிக் கூட்டத்தில் தனிப்பட்ட கருத்துகளை இவர்கள் வெளியிடலாம். மக்கள் இசைவிலா திட்டங்களை அரசாங்கம் கொண்டு வரும் பொழுது உறுப்பினர் தம் கருத்துக் களைக் கட்சிக் கொறடாக்களிடம் (Wips) கூறலாம். இக் கருத்துகள் பரவலாகக் காணப்பட்டால் இவைகளைக் கட்சித் தலைவர்களுக்கு அறிவிக்கலாம். மேலும், உறுப்பினர் ஒருவர் அரசாங்கத்தைக் கண்டிக்க விரும்பினாலும், சட்டங்களைக் கொணர

விரும்பினாலும் ஒரு குறிப்பிட்ட நலனின் சார்பில் கருத்துக்களை பரப்ப விரும்பினாலும் இவருக்கு வாய்ப்புகள் இருக்கின்றன. இவை ஓர் அளவு குறைவாகத்தான் உள்ளன.

### (1) கொள்கையில் குணங்குறை கூற வாய்ப்புகள்

கேள்வி நேரத்தின் போதும் தள்ளி வைப்புப் பிரேரணைக்கான வாக்கெடுப்பின் போதும் 'உடனடியாக ஆராய வேண்டிய முக்கிய மானவை பற்றிய'வை மீதான தள்ளி வைப்புத் தீர்மானத்தை சபை நிரந்தர ஆணை 9-கீழ் கொண்டு வரும் பொழுதும் இவ் வாய்ப்புகள் உண்டாகலாம். சபாநாயகரின் கவனத்தை ஓர் உறுப்பினர் ஈர்ந்தாலும் பின்னணியில் இருக்கும் ஒருவர் விவாதத் தில் கவந்து கொள்ளலாம்; அல்லது அரசியாரின்/அரசரின் கருத் துரையையொட்டிய விவாதத்தில் கலந்து கொண்டு பேசலாம். இடைவேளைக்கு முன் கொண்டு வரப்படும் தள்ளி வைப்புப் பிரே ரணையில் கலந்து கொள்ளலாம்; திரண்ட நிதிபற்றிய மசோதாக் களிலும் பண ஒதுக்கல் மசோதாக்களிலும் கலந்து கொள்ளவும் வாய்ப்புண்டு. நடைமுறையில், பின்னணியிலிருக்கும் உறுப்பின ருக்கு நேரம் கிடைப்பதில்லை. ஏனெனில், விவாதத்திற்கான நேரத்தில் நான்கு முதல் ஐந்து மணி நேரத்தை முன்னணி உறுப் பினர் எடுத்துக் கொள்ளுகின்றனர். மேலும், இப்பொழுது, உறுப்பினர் பேச வேண்டிய பொருள் பற்றி முன்கூட்டியே முடிவு செய்யப்படுகிறது. இதை உறுப்பினர் பற்றி நிற்க வேண்டும். குறைந்த அளவில், மதிப்பீடுகள் பற்றிய விவாதங்களிலும் இதே முறை பின்பற்றப்படுகிறது. சபாநாயகரின் கவனத்தை ஈர்ந்த உறுப்பினர் மதிப்பீடு பற்றிய இனம் எதைப்பற்றியும் தம் கருத்தைத் தெரிவிக்கலாம்.

### (2) சட்டம் கொணர வாய்ப்புகள்

தனி உறுப்பினரின் மசோதா சர்ச்சைக்குட்பட்டதாக இல்லாமல் இருந்தாலும் வெள்ளிக்கிழமை இரண்டாவது வாசிப் பிற்கு எடுத்துக் கொள்வதற்கான நேரத்தைப் பெற்றாலும் சட்ட மாகும் வாய்ப்பு இதற்கு சிறிதளவேயுண்டு. இருந்தபோதிலும், உறுப்பினரின் கருத்துகளையும் திட்டங்களையும் வெளியிட இவ் வாய்ப்பு உதவுகிறது.

### (3) கருத்துப் பிரசாரம் செய்ய வாய்ப்புகள்

ஒரு குழு நலனைப் நிறைவேற்றச் சட்டம் அவசியமாகிறது. இதைத் தயாரிக்க, குழுநலன் பற்றிய பரிவுணர்வை பல ஆண்டுகள் ஓர் உறுப்பினர் வளர்க்கலாம். பாராளுமன்றத்திற்குள்ளேயும்

வெளியேயும் தம் கருத்துகளைப் பரப்ப ஓர் உறுப்பினர் வாய்ப்புப் பெறுகிருர். 'பத்து நிமிட விதியையொட்டிக் கொண்டுவரப் படும் மசோதாக்கள் நிறைவேறும் வாய்ப்பு மிகக் குறைவாகும். ஏனெனில் பத்து நிமிடத்திற்குள் மசோதாவை ஆதரித்து உறுப்பினர் தம் கருத்துக்களை வெளியிட இயல்வதில்லை.

ஒவ்வொரு கூட்டத் தொடரின்போதும் தனி உறுப்பினர் பிரேரணைக்கென பத்து வெள்ளிக்கிழமைகளை ஒதுக்கி அதிக நேரம் அளிக்கப்பட்டுள்ளது. ஒரு குறிப்பிட்ட வெள்ளிக்கிழமைக்குப் பதினுறு நாட்களுக்கு முன் சீட்டுக் குலுக்கப்படுகிறது. இதில் ஒரு தனி உறுப்பினர் மசோதா முதலிடம் பெற்ருல் பின் ஒரு வெள்ளிக் கிழமையில் இம்மசோதாவைக் கொண்டு வருமுன் இதைப் பற்றி சபையின் கருத்தை அறிந்துகொண்டு வரலாம். கேள்விநேரத்தின் போதும் மதிப்பீடு பற்றிய பிரேரணைகள் கொண்டு வரப்படும் பொழுது உறுப்பினர் சிலர் சில வாய்ப்புக்களை பெறுகிருர்கள்.

பாராளுமன்றத்திற்கு வெளியே ஒரு தனி உறுப்பினரின் நிலை உயரப் பல்வேறு வாய்ப்புகளும் வசதிகளும் இருக்கின்றன. இவர்களின் கருத்துகளை வெளியிடப் பத்திரிகைகள் முன் வரலாம். பொது நிகழ்ச்சிகளிலும் விழாக்களிலும் சொற்பொழிவாற்ற உறுப்பினர்கள் அழைக்கப்படலாம். வாஞெலியும் தொலைக் காட்சியும் உறுப்பினரின் கருத்துகளைப் பரப்ப உதவுகின்றன.

இடைக்காலத்தில் பாராளுமன்ற உறுப்பினர்களின் சேவைக் காகத் தொகுதியினர் இவர்களுக்கு ஊதியம் அளித்தனர். ஆனுல் உறுப்பினர் இப் பதவியை ஒரு சிறப்புரிமையாகக் கருதியதால் ஊதியம் பெறல் வழக்கற்றுப் போய் விட்டது. தொகுதியினரிட மிருந்து ஆந்ரு மார்வெல் (Andrew Marvell) என்பவர்தான் கடைசியாக ஊதியம் பெற்றவர். தொழிலாளர்கள் பிரதிநிதி களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டபொழுது உறுப்பினருக்கு ஊதியம் அளிக்க வேண்டிய அவசரநிலை ஏற்பட்டது. 1830ஆம் தொடர் ஆண்டுகளிலும் 1840ஆம் தொடர்ஆண்டுகளில் வலியுறுத்தப்பட்ட சீர்திருத்தங்களில் இதுவும் ஒன்ருகும். ஆனுல் இருபதாம் நூற்றுண்டு வரையில் இது வலியுறுத்தப்படவில்லை. 1911–ல் உறுப்பினருக்கு ஆண்டுக்கு £ 400–ம், தொகுதிக்கும் வெஸ்ட் மின்ஸ்டருக்கும் இலவச ரயில் பயணச் சலுகை அளிக்கப்பட்டது. முதல் உலகப் போருக்குப் பின் இவர்களின் ஊதியம் £ 600-ஆக உயர்ந்தது. 1946–ல் பாராளுமன்ற உறுப்பினரின் ஊதியம் ஆண்டிற்கு £ 1000ஆக இருக்க வேண்டுமென்று விதி செய்யப் பட்டது. 1954-ல் இருந்து பாராளுமன்றக் கூட்டம் நடக்கும்

நாள் ஒவ்வொன்றிற்கும் உறுப்பினருக்கு உதவித்தொகை அளிக்கப்பட்டது. பெருமக்கள் சபை உறுப்பினர் ஊதியம் பெறுவதில்லை. ஆனல் தேவையான பயணச் சலுகைத் தொகையைப் பெற்றுக் கொள்ளலாம். பொதுமக்கள் சபையினர் இப்பொழுது £ 1750 பெறுகிருர்கள். இதில் £ 750-க்கு வரி விதிப்பில்லை. பெருமக்கள் சபையினர் அன்ருடச் செலவிற்காக உதவித் தொகை பெற்றுக் கொள்ளலாம்.

மேலும் படித்தற்குரிய நூல்கள்

P. G. Richards, 'Honourable Members', (1964)
Nigel Nicolson, 'People and Parliament', (1958)

# 5. பொதுமக்கள் சபை செயல்படும் முறை

சட்டமியற்றும் பிரதிநிதித்துவ சபை என்ற முறையில் பிரிட்டனின் பொதுமக்கள் சபை மிகப் பழமையானது. தந் நிகரற்றது. தனிப்பட்ட சபையாக இது ஆறு நூற்றுண்டுகள் இருந்து வந்திருக்கிறது. உலகத்தில் இன்றிருக்கும் சட்டசபை களில் இது காலத்தால் பழைய சபை என்பதால் மட்டும் இது சிறப்படைந்து விடவில்லை. வரம்பில்லா அதிகாரமுள்ள சட்ட சபையாக இது இருக்கிறது. அரசியலமைப்புக் கட்டுப்பாடுகள் இல்லாததால் இதன் அதிகார வரம்பு இணையற்று விளங்குகிறது. சட்டமியற்றுவதில் இச் சபை தனி முதன்மை பெற்றுள்ளது. நாட்டின் நிதி நிலையை இது கட்டுப்படுத்துகிறது. நீதி மன்றங் களின் அதிகார வரம்பை இது வரையறை செய்கிறது. நிருவாகத்தில் இது ஆதிக்கம் செய்கிறது. மேலும் சபையின் நிகழ்ச்சி முறை மற்றெந்த சபையைக் காட்டிலும் மிகக் கவர்ச்சி யாக நடைபெறுகிறது. இச் சபை ஆங்கிலேயரின் பெருமைக் கும் மாண்பிற்கும் உரியதாக விளங்குகிறது.

இப்பொழுது லண்டன் மாநகரின் ஒரு பகுதியாக விளங்கும் வெஸ்ட்மினிஸ்டரில் இச் சபை பல நூற்றுண்டுகளாகக் கூடியது. முதலில் வெஸ்ட்மினிஸ்டர் அபியின் தொழுகைக் கூடத்தில் சபை கூடியது. இக் கட்டிடம் சாக்சன் மன்னர்களால் கட்டப்பட்ட தாகும். பின்னர் வெஸ்ட்மினிஸ்டர் அரண்மனையிலுள்ள புனித ஸ்டிபென் திருச்சபைக்கு மாற்றப்பட்டது. 1834-ல் இவ் வரண்மனை தீக்கிரையான காலம் வரை இதன் கூட்டங்கள் இங்கு தொடர்ந்து நடந்து வந்தன. இதன்பின், பாராளுமன்ற மாளிகைகள் எனப் படும் புதிய கட்டிடங்கள், 1837—1852-ல் எழுப்பப்பட்டன.

தேம்ஸ் ஆற்றின் இடப்பக்கத்தில் செல்சி பாலத்திற்கும் லண்டன் டவருக்கும் இடையில் பாராளுமன்ற மாளிகைகள் அமைந்திருக்கின்றன. ஒன்பது ஏக்கர் பரப்பில் 1200 அறைகளைக் கொண்ட மாபெரும் கட்டிடமாக இன்று இவைகள் திகழ்கின்றன. வாட்டிகன் மாளிகை நீங்கலாக இது ஐரோப்பாவிலேயே மிகப் பெரிய கட்டிடமாகும். டியுடர் மன்னர்கள் காலத்திய கூர் மாடச் சிற்பக் கட்டிடக் கலைப் பாணியில் இது அமைக்கப்பட்டுள்ளது. இன்றுள்ள கூர் மாடக் கோபுரக் கட்டிடங்களுள் மிகக் கவர்ச்சி யானதாகக் கருதப்படுகிறது. இந் நீள் நெடுமாடங்களின் மையத் தில் ஒரு பெரும் மன்றமுள்ளது. இதற்குத் தெற்கில் பச்சை வண்ணப் பொதுமக்கள் சபையும் இதற்கு வடக்கில் செந்நிறப் பெருமக்கள் சபையும் இருக்கின்றன. இவ் விரு பெரும் சபைகளைச் சுற்றிலும் புறக்கூடங்கள், நடைக் கூடங்கள், குழு அறைகள், அலுவலகங்கள், ஓய்வறைகள், இவைகளுக்குத் துணையாகப் பயன்படுகிற இன்னும் பல அறைகளுமிருக்கின்றன. கட்டிடத்தின் பல்வேறு பகுதிகளில் இவை போன்ற நூலகங்கள், உணவுக் கூடங்கள், புகைபிடிப்போர் தங்கிப் புகைபிடிக்குமிடங்களும் இருக்கின்றன. சபாநாயகர், எழுத்தர், காவல்துறை முகவர் போன்ற பாராளுமன்ற அலுவலர்கள் தங்கி வசிக்குமிடங்களும் இருக்கின்றன.

பொதுமக்கள் சபை கூடும் இடம் வெளிப் பார்வையிலிருந்து விலகி இருக்கிறது. மேலே இருக்கும் சாரளங்களின் வழியாகத் தான் இதற்குள் ஒளி விழுகிறது. இந்த அறை நீள் சதுர உருவிலானது. இதில் மையத்தை இதில் நோக்கி விரிவான இடை வழி ஒன்று செல்கிறது. இவ் விடை வழியின் ஒரு முனையில் நுழை வாயிலும் மறுமுனையில் சபாநாயகரின் இருக்கையும் இருக்கின்றன. நுழைவிடத்தில் இழைவுக் கம்பித் தடையொன்றுள்ளது. இதை யொட்டிய இடத்தில் காவல்துறை முகவர் அமர்கிறார். உறுப் பினரைத் தவிர வேறு எவரும் இந் நுழைவழி வழியாகச் செல்லலாகாது. சபையின் கம்பித் தடுப்பாக இது இருக்கிறது. இடைவழியின் இரு மருங்கிலும் பச்சை நிறப் பதனிட்ட தோலால் மெத்தையமைக்கப்பட்ட நீள் இருக்கைகள் அடுக்கடுக்காக அமைக்கப்பட்டுள்ளன. உறுப்பினர்கள் இந் நீள் இருக்கைகளில் உட்கார்ந்து கொள்கின்றனர். இவர்களுக்கு முன் சாய்வு மேஜைகள் இல்லை. தனிப்பட்ட உறுப்பினர்களுக்கு இடம் ஒதுக்கப்படுவதில்லை. மிகச் சிறந்த இச் சபை குறைபாடுடைய இருக்கை வசதியைப் பெற்றிருப்பது விசித்திரமாகத் தோன்றுகிறது. நீண்ட இருக்கை களில் நெருக்கமாக உட்கார்ந்து கொண்டாலும் படியடுக்கு மேடைகளின் பக்கத்தில் உள்ள ஒதுக்கிடங்களைப் பயன்படுத்திக்

கொண்டாலும் ஏறத்தாழ 450 உறுப்பினர்களுக்கு இருக்கை வசதி செய்ய இயலும். ஆனால் சபையின் உறுப்பினர் தொகை 630 ஆக இருக்கிறது. எல்லோரும் சபைக்கு வந்தால் பலர் நிற்க வேண்டியிருக்கும்.

ஆனால் சபைக்கு எல்லோரும் வருதல் என்பது அரியதாகும். சுவையானதொரு விவாதம் நடைபெற்றாலன்றி இருநூறு உறுப்பினரின் வருகையை நல்ல வருகையெனக் கொள்வது ஒரு வழக்கமாகும். இடங்கள் வழக்கமாக ஒதுக்கப்படுவதில்லையென்றாலும், அமைச்சவைக்கு ஆதரவளிக்கும் உறுப்பினர்கள் சபாநாயகருக்கு வலப்புறம் அமர்வது வழக்கமாகும். எதிர்கட்சி உறுப்பினர்கள் இடப் பக்கம் அமர்வர். இருப்பினும், அமைச்சவையை ஆதரிக்கும் கட்சியினர் நிறைந்து வழிகிற பொழுது சிலர் எதிர் தரப்பில் சென்றிருந்து கொள்வதுமுண்டு. சபாநாயகரின் நாற்காலிக்கருகில் இருமருங்கிலும் நீண்ட இருக்கைகள் இரண்டிலும் அமர்ந்திருக்கும் உறுப்பினர் அரசாங்கத் தரப்பினர் என்றும் எதிர்த்தரப்பினர் என்றும் பெயர் பெறுகின்றனர். அமைச்சவையினர் ஒரு பக்கத்திலும் எதிர்க் கட்சியின் முதன்மையான உயர் நிலையினர் மறு பக்கத்திலும் அமர்வது சபையின் வழக்கமாகும்

பொதுமக்கள் சபை உறுப்பினர்கள் தொகுதியினரால் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் இங்கிலாந்தின் முழுமைக்கும் தம்மைப் பிரதிநிதிகளாகக் கருதிக் கொண்டார்கள். இவர்கள் தங்கள் தொகுதியை மட்டும் கருத்தில் கொண்டியங்குவதில்லை. பிரதிநிதித்துவ சபையாகவும் கலந்தாராயும் சபையாகவும் இது இருக்கிறது. ஆனால் கலந்துரையாடி முடிவெடுக்கும் இதன் பணி சிறப்பிக்கப்படுகிறது. சட்டமியற்றுநர் ஒருவர் தம் மனச் சான்றையும் நாட்டுப் பற்றையும் கருத்தில் கொண்டு செயல்பட வேண்டுமா? அல்லது தொகுதியினரின் விருப்புகளையும் நலன்களையும் மதித்து நடக்க வேண்டுமா?

இது பழையதொரு வினவாகும். இதற்குரிய விடையைப் பல ஆண்டுகளுக்கு முன் எட்மண்ட் பர்க் (Edmand Burke) அளித்துள்ளார். உறுப்பினர் தொகுதியினரோடு நெருங்கித் தொடர்பு கொண்டு இவர்களின் விருப்புகளைக் கண்டுபிடித்து அவைகளுக்குப் பெரும் சிறப்பளிக்க வேண்டும் என இவர் குறிப்பிட்டார். வாக்காளர்களின் வகையாளாக இவர் சேவை செய்ய வேண்டும். ஆனால் 'இவருடைய சொந்த கருத்துகளையும், முதிர்ந்த தீர்ப்பையும், அறிவொளிமிக்க மனச் சான்றையும் ஒரு பாராளுமன்ற உறுப்பினர் எந்த மனிதனுக்கோ, மனிதர்களுக்கோ' தொகுதி

யினருக்கோ அல்லது வெளியார்களுக்கோ தியாகம் செய்து விடக் கூடாது.'' எனக் கூறினர். 'ஓர் உறுப்பினரின் மனச் சான்று கடவுளிடமிருந்து கிடைத்த பெரும்பாண்மையாகும். இதைத் தவருகப் பயன்படுத்தியதற்கு இவர் பொறுப்பேற்க வேண்டும்.' அரசியல் அமைப்புச் சட்டங்களிலிருந்து இவர் தம் மனச் சான்றைப் பெறவில்லை.' உங்களுடைய பிரதிநிதி தம் திறனுய்வுப் பண்பையும் அளிக்கிறர். உங்களுடைய கருத்துகளுக்கு இவர் இறையாணுல் உங்களுக்குச் சேவை செய்வதற்குப் பதிலாக வஞ்சனை செய்து விடுகிறர்.'

மக்களின் உரிமைகளைப் பாதுகாப்பதும் இவர்களின் உரிமைகளுக்கு உறுதியளிப்பதும் பொதுமக்கள் சபையின் முதன்மையான பணியாகும். இவைகளைப் பெற்றுத் தருவதில் தான் இச் சபையின் வளர்ச்சி அடங்கியுள்ளது.

## பொதுமக்கள் சபையின் செயல்முறை

1. செயல்முறைத் திட்டம்: பாராளுமன்றக் கூட்டத்தொடர்

பாராளுமன்றம் அரசியார் அல்லது அரசரால் கூட்டப்படுகிறது; கலைக்கப்படுகிறது. சட்டப்படியிலான ஐந்தாண்டு பதவிக்கால இறுதியில் சபை கலைக்கப்பட வேண்டும். ஆனல் நடைமுறையில் வ்ழக்கமாக பிரதமரின் அறிவுரையின் பேரில் சபை முன் கூட்டியே கலைக்கப்பட்டு விடலாம். பாராளுமன்றம் கலைக்கப்படுவதற்கான பேரறிக்கையோடு பொதுமக்கள் சபையின் தேர்தலுக்கான கட்டளையும் பிறப்பிக்கப்படுகிறது. சபைக் கூட்டத்திற்கான நாளையும் இது அறிவிக்கிறது.

ஒவ்வொரு பாராளுமன்றத்தின் பதவிக் காலமும் கூட்டத் தொடர்களாக பிரிக்கப்பட்டிருக்கின்றன. இக் கூட்டத் தொடர்கள் வழக்கமாக நவம்பர் மாதம் தொடங்கி நவம்பர் மாதம் முடிவடைகின்றன. இரு சபைகளின் கூட்டத் தொடர்களையும் பேரறிக்கை முடிவிற்குக் கொண்டு வரும். புதிய கூட்டத் தொடரை அரசியார் தாமே தொடங்கி வைக்கிறர். அவ்வமயம் இவர் தம் கருத்துரையைப் பெருமக்கள் சபையில் இருந்து கொண்டு நிகழ்த்துகிறர். அல்லது அரசியாரின் ஆணையர்கள் அவர் சார்பில் உரை நிகழ்த்தலாம். கூட்டத் தொடரைத் தள்ளி வைப்பதால் எல்லாப் பொது வேலைத் திட்டங்களும் முடிவிற்கு வருகின்றன. பாராளுமன்றச் சட்டத்திற்குட்பட்ட சட்டங்களைத் தவிர மற்றெல்லா பொதுச் சட்டங்களும், இரு சபைகளில் எல்லா நிலைகளையும் நடக்கவில்லையென்றல், வீழ்வுறும்.

ஆனால் கூட்டத் தொடர் முடிவிற்கு வருமுன் தனி மசோதாக்களை ஒரு தீர்மானத்தால் அடுத்த கூட்டத் தொடருக்கு கொண்டு செல்லலாம். புதிய கூட்டத் தொடரைப் புதிதாகத் தொடங்குவதில் சில நன்மைகள் இருக்கின்றன. அரசாங்கம் தன்னுடைய சட்ட ஆக்கப் பணிகளை விழிப்புடன் இருந்து நிறைவேற்றி முடித்து வைக்க இது உதவுகிறது. சில சமயங்களில் ஒரு மசோதாவை விட்டு விட்டு இன்னொன்றை வரைந்து கொள்வது விரும்பத் தக்கதாக இருக்கலாம். ஆனால் பெருமளவு காலத்தைச் செலவிட்ட பின் சபையின் ஜூலை மாதக் கோடை விடுமுறைக்கான தள்ளி வைப்பினால் மசோதாக்கள் முடிவு பெறுமல் போய் விடுகின்றன. இதன் விளைவாக, கூட்டத் தொடரின் தள்ளி வைப்பிற்கு முன் இலையுதிர் காலத்தில் சில நாள்களுக்கு, எஞ்சியுள்ள மசோதாக்களை நிறைவேற்றுவதற்காகப் பாராளுமன்றம் மறுபடியும் கூட வேண்டும்.

கோடை காலத்தில் ஒரு நீண்ட இடைவேளையினால் கூட்டத் தொடர் தடைபடுகிறது. கிறிஸ்துமஸ், ஈஸ்டர் போன்றவைகளால் கூட்டத் தொடர் சிறிய இடைவேளைகளால் தடைபடுகிறது. ஒவ்வொரு சபையும் தனித் தனியே ஒத்தி வைப்புக் காலத்தை முடிவு செய்யும்.

நாள் முறைக் கால அட்டவணை பொதுமக்கள் சபையின் நிலைக் கட்டளைகளால் இயல்பான கால அட்டவணையால் ஒழுங்கு படுத்தப்படுகிறது.

**2.30 இறை வணக்கம்**

**2.35 பூர்வாங்க வேலைகள்**

*காலி இடங்களை நிரப்பப் புதிய கட்டளைகளுக்கான பிரேரணைகள் எதிர்ப்பில்லாத் தனியலுவல்கள் பொது விண்ணப்பங்களை முன்னிலைப்படுத்துதல்.*

*அமைச்சர்களை நோக்கி கேள்விகள்*

**3.30 'தனியறிக்கை'க் கேள்விகள்**

*நிலைக் கட்டளை 9-ன் கீழ் சபை நிகழ்ச்சிகளைத் தள்ளி வைக்க அனுமதிக்கான வேண்டுகோள்கள்.*

*மற்ற பூர்வாங்க அலுவல்கள் எடுத்துக்காட்டாக, சடங்குமுறை சொற்பொழிவுகள், அமைச்சர்களின் அறிக்கைகள், பதவி விலகும் முன்னுள் அமைச்சரின் தனிப்பட்ட விளக்க அறிக்கைகள்.*

பொது அலுவல்

பொது மசோதாக்களை சபை முன் வைத்தல்

மசோதாக்களைக் கொணர அனுமதி கோரும் பிரேரணைகள்.

பொது அலுவல்கள் — அன்றைய விதி முறைகள்

10.00 பொது அலுவல்களைத் தடுத்து மறித்தல்

பத்துமணி விதியிலிருந்து அலுவல்களுக்கு விதி விலக்களிக்க அரசாங்க அலுவல் பிரேரணைகள்.

10.00 மணிக்குப் பிறகு எடுத்துக் கொள்ளும் அலுவல்கள் — சட்டப்படியான கட்டளைகளையொட்டி நடைமுறைகள் தள்ளி வைப்பிற்கான பிரேரணை

10.30. சபை தள்ளி வைக்கப்படுகிறது.

இருந்தபோதிலும், கால அட்டவணையில் சில மாறுதல்களைச் செய்ய நிலைக் கட்டளைகள் வழி செய்கின்றன. ஆகவே, விலக்களிக்கப்பட்ட சில குறிப்பிட்ட அலுவல்களை 10.30. க்கு (பிற்பகல்) மேலும் சபை ஆராயலாம். நிலைக் கட்டளையின் தள்ளிவைப்பு ஏற்றுக் கொள்ளப்பட்டிருப்பின் அரசாங்கம் செயல் திட்டத்தை நிறைவேற்றலாம். இருப்பினும், காலம் கடந்தமர்ந்து செயல்படுதலை உறுப்பினர்கள் விரும்புவதில்லை. சில சமயங்களில் இப்படி நடக்குமாயின் முறிவுற்றதை இது குறிப்பிடும்.

வெள்ளிக் கிழமைகளில் முற்பகல் 11 மணியிலிருந்து பிற்பகல் 4.30 வரை சபை செயல்படும். வார இறுதியில் உறுப்பினர்கள் தம் தொகுதிக்கு செல்ல இது வாய்ப்பளிக்கிறது.

2. நடைமுறை விதிகள்

பொதுமக்கள் சபைக்கு அச்சிட்ட விதிகள் இல்லையெனப் பொதுவானதொரு கருத்து இருந்து வருகிறது. இதை விளக்க ஒரு கட்டுக்கதையொன்று சொல்லப்படுகிறது. அதாவது, ஒரு புதிய உறுப்பினர் பாராளுமன்ற எழுத்தரிடம் சென்று விதிகள் அடங்கிய நூல் ஒன்று கேட்டதாகவும் இதற்கு அவர் 'விதிப் புத்தகம்' என்று ஒன்றுமில்லை எனப் பதில் அளித்ததாகவும், அப்படியெனில் 'சபையின் விதிகளை நான் எப்படி அறிந்து கொள்வ'தென உறுப்பினர் வினவியதற்கு, 'விதிகளை மீறி' யெனப் பதில் வந்ததாகவும் சொல்லப்படும் இப் பழகிப்போன கதையே இக் கருத்து நிலவுவதற்குக் காரணமாக இருக்கிறது. சபையின் விதிகள்

அடங்கிய நூல் ஒன்றுமில்லை யென்பது உண்மையாயினும் இதன் நிலைக் கட்டளைகள் விதிகளுக்கொப்பாகக் கருதப்படுகின்றன. சபையின் எல்லா நடைமுறை விதிகளையும் இந் நிலைக் கட்டளைகள் குறிப்பிடுவதில்லை யெனினும் இவைகளில் பல வழக்காறுகளின் மேல் நிலை பெறுகின்றன. எந்த ஓர் அச்சிட்ட புத்தகத்திலும் எல்லா வழக்காறுகளும் இடம் பெறுவதில்லை. பாராளுமன்ற நடைமுறை விதிகளின் நுட்பங்களையெல்லாம் அறிந்து கொள்ள ஓர் உறுப்பினருக்குப் பாராளுமன்றப் பட்டறிவு பல ஆண்டுகள் இருக்க வேண்டுமெனக் கூறலாம். புதிய உறுப்பினர்கள் விதிகளை மீறியே விதிகளைக் கற்றுக் கொள்ளுகின்றனர் என்பதையும் மெய்யாகவே குறிப்பிட வேண்டும்.

இந் நிலைக் கட்டளைகள் நிலையானவை. தேர்தலுக்குப் பின் இவைகள் மாற்றியமைக்கப்படுவதில்லை. அமெரிக்க சட்டமன்ற விதிகளைப் போலன்றி இவைகளை எந்த நேரத்திலும் பெரும் பான்மை வாக்கினால் தள்ளி வைக்கலாம் அல்லது திருத்தியமைக் கலாம். அல்லது நீக்கி விடலாம். பெரும்பான்மையினரிடம் கொடுக்கப்பட்டுள்ள ஆபத்தான அதிகாரமென நாம் இதை நினைக்கலாம். ஆனால் இந்த அதிகாரம் தவறாகப் பயன்படுத்தப் படவில்லை. சபையின் விதிகள் தள்ளிவைக்கப்படுவது அலுவல்களை விரைந்து செய்து முடிப்பதற்காக மட்டுமேயாகும். பெரும் பான்மையைப் பயன்படுத்திச் சட்டமியற்றிவிட வேண்டுமென் பதற்காகவன்றி பெரும்பான்மையினரின் இசைவோடு தான் இது செய்யப்படுகிறது.

பொதுமக்கள் சபையின் நடைமுறை விதிகள் இதன் நிலைக் கட்டளைகளில் காணப்படுகின்றன. முன்பிருந்த சபாநாயகர் களின் முடிவுகளால் நிலை பெற்றுள்ள முன்னிகழ்வுகளுக்கேற்ப இவைகள் பொருள் விளக்கம் செய்யப்படுகின்றன. சபையின் எழுதப்பட்ட நடைமுறை விதிகளை முற்றிலும் நம்பி 630 உறுப்பினர்களைக் கொண்ட சபை ஒழுங்கைப் பேணவும் பயனுள்ள முறையில் செயல் படவும் இயலாது. விட்டுக் கொடுக்கும் மனப் பான்மை, கூட்டு முயற்சி, முழு விருப்பம் ஆகியவற்றைக் கொண்டு தான் ஓர் அரசியலமைப்பு வெற்றி பெறுகிறது. பல நூற்றாண்டுகளாக நிறுவப் பெற்றுள்ள வழக்கங்கள், முறையான நடைமுறை விதிகளுக்குத் துணை நிற்கின்றன. இந் நிலையை நாம் வேறெங்கும் காண்பதில்லை; சிறப்பாக எதிர்க் கட்சியின் வாய்ப்புகளை உறுதிப்படுத்தும் மரபுகளை நாம் இங்குக் குறிப்பிட வேண்டும். பிரிட்டிஷ் அரசியலமைப்பின் சிறப்பியல்புகளை நடை முறை விதிகள் வெளிப்படுத்தினும் இவைகளைப் பேணி வளர்க்க இவை (மரபுகள்) பாடுபடுகின்றன.

அரசாங்கத்தின் கொள்கையை செயல்படுத்த தேவையான எல்லா அதிகாரங்களையும் பெற இவைகள் (விதி முறைகள்) உறுதியளிக்கின்றன. பயனுறுதி மிக்க அரசாங்கத்தின் சிறப்பையும் இவைகள் வலியுறுத்துகின்றன. பூர்வாங்க அலுவல்களுக்காக ஒவ்வொரு நாளும் செலவிடப்படும் நேரத்தை நிலைக் கட்டளைகள் கட்டுப்படுத்துகின்றன. வாரத்தில் குறைந்தது நான்கு நாள்கள் பிற்பகல் 3.30-ல் இருந்து 10 மணிவரை அரசாங்கத்தின் முழுப் பயன்பாட்டிற்காக ஒதுக்கப்படுகின்றன. எல்லையில்லா விவாதத்தில் சபை அகப்பட்டுக் கொள்ளாத வகையில், அரசாங்கம் அதிகாரம் பெற்றிருக்கிறது. விவாதத்தை முடிவிற்குக் கொண்டு வரும் 'குலோசர்' (Closure) முறையை நிலைக் கட்டளைகள் சபைக்கு அளித்திருக்கின்றன. தனி உறுப்பினர்களுக்காக ஒதுக்கப்பட்டிருக்கும் வெள்ளிக்கிழமையை அரசாங்க அலுவல்களுக்காகப் பயன்படுத்திக் கொள்ள சபையின் நிலைக் கட்டளைகள் வழி செய்கின்றன. பிரதமரின் ஒப்புதலோடும் சனிக்கிழமைகளில் கூடுமாறு சபை அழைக்கப்படலாம். இடை ஓய்வுக் காலத்தில் இருக்கும் உறுப்பினர்களை திருப்பியழைத்து கூட்டம் நடத்தலாம். சபையின் எல்லாப் பிரிவினரும் விட்டுக் கொடுப்பதால் இப்படி கால அட்டவணையிலிருந்து விலகிச் செயல்படும் வழக்கம் அடிக்கடி நிகழ்வதில்லை.

சிறுபான்மைக் கட்சிகள் எவ்வளவு சிறியனவாக இருந்தாலும் அரசாங்கத்தைத் திறனாய்வு செய்ய முழு வாய்ப்புத்தர வேண்டுமெனும் கருத்தை நடைமுறை விதிகள் பாதுகாக்கின்றன. எனவே, கேள்வி நேரத்தை ஒதுக்கவும், அவசரமாக ஆராய வேண்டிய பொருள் ஒன்றையொட்டி சபை நிகழ்ச்சிகளைத் தள்ளி வைப்பதற்கான நிபந்தனைகளை வகுக்கவும், சப்ளை பற்றிய விவாதங்களில் எதிர்க் கட்சிக்குக் குறைந்த பட்சமாக நாள்களை ஒதுக்குவதில் உறுதியளிக்கவும் நிலைக் கட்டளைகள் வகை செய்கின்றன. மேலும், நிலைக் கட்டளைகளுக்குப் பொருள் விளக்கம் செய்யும் உரிமை சபாநாயகரிடம் விடப்பட்டுள்ளது. சிறுபான்மைக் கட்சிகள் போதிய அளவு நேரம் பெற்றனவா என்பதை இவர் தான் முடிவு செய்ய வேண்டியிருந்தது. விவாத வரிசை முறையை வரையறை செய்வதால் அரசாங்கத்தின் கொள்கையை குறை கூறுபவர்களை இது விலக்கி விட முடியாது. அப்படியே ஆயினும், அரசாங்கக் கொள்கையைக் குறைகூறும் முதன்மையான வாய்ப்புக்களை எதிர்க் கட்சி பெற்றிருப்பது முறையான விதிகளாலன்றி பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்ட உடன்பாடுகளாகும்.

மக்கள் இசைவோடு நடக்கும் அரசாங்க முறைக்கு இன்றியமையாததும் அரசியல் அமைப்பில் பொதிந்துள்ளதுமான விதி

முறை வழுவாப் பண்பையும் இந் நடைமுறை விதிகள் கொண்டிருக்கின்றன. விவாதத்திற்கு உறுப்பினர்களை அழைக்கையில் ஒவ்வொரு கட்சியும் அதனுடைய கருத்துகளைத் தெரிவிக்கும் வாய்ப்பை பெறுகிறதாவென்பதை சபாநாயகர் பார்த்துக் கொள்ளுகிறார். ஒரு பிரச்சினையை எழுப்ப அறிவிப்புத் தேவை என்பதை விதிகள் வலியுறுத்துகின்றன. அறிவிப்பில்லாமல் அரசாங்கம் தாக்கப்படுவதிலிருந்து இவ் விதிகள் பாதுகாப்பளிக்கின்றன. எதிர்க் கட்சியின் கவனம் வேறு திசைகளில் இருக்கும் பொழுது அலுவல் நழுவிவிடாமல் இருக்க விதிகள் உறுதியளிக்கின்றன. இதேபோல், பணம் வழங்குவது பற்றிய விவாதங்கள் 29 நாள்களுக்குக் குறைக்கப்பட்டிருப்பதையும், சபையின் ஒத்திவைப்பிற்கு முன் வழக்கமாக குறைபாடுகள் பற்றிய விவாதத்திற்கு ஒதுக்கப்படும் நேரக் குறைவையும், இச் சமயங்களில் விவாதிப்பதற்கான பொருள்களை எதிர்க் கட்சி தெரிவு செய்துகொள்ள அனுமதிக்கப்படுவதால் வாய்ப்புக் குறைவு ஓரளவிற்கு மட்டுப் படுத்தப்படுகிறது.

உறுப்பினர்களின் நடத்தையிலும் பேச்சிலும் நடைமுறை விதிகள் நிதானத்தை வளர்க்கின்றன. சபாநாயகரின் (அதிகாரத்தை) நிலையை எல்லாக் கட்சியினரும் ஆதரிக்கின்றனர். பேச்சுகள் இவரை நோக்கி இருக்க வேண்டுமே தவிர தனிப்பட்ட உறுப்பினர்களை நோக்கி இருக்கலாகா. உருவில் சிறிய அவையாதலால், நின்று பேசுவதற்கென தனி இடமில்லை. பேச்சுக்களை எழுதிப் படிக்கலாகாதென்பது விதியாகும். வெற்றுரவார பேச்சு நடையும் மறுதலிப்பும் தடை செய்யப்பட்டுள்ளன. சபையில் முன் நடந்த விவாதங்களுக்குத் தக்க பதிலளிக்க உறுப்பினர்கள் தூண்டப்படுகிறார்கள். உறுப்பினர் ஒருவர் மன்றம் ஒவ்வாச் சொல்லைப் பயன்படுத்தலாகாது. மற்றொரு உறுப்பினரைப் பெயர் சுட்டி விளிக்கலாகாது. இதனால் தனியாள்கள் விவாதத்திற்குட்படுத்தப்படுவதில்லை. ஆனால் மாற்றுச்சொல் ஒன்றை பயன்படுத்தும் பொழுது இது சிந்தனையை வளர்க்கிறது.

சிறப்புக்கால நடைமுறை விதிகளையும் கவனிக்க வேண்டும். சபையின் கூட்டங்களுக்கு இவைகள் பெருமை அளிக்கின்றன. அடிப்படையான உறவு முறைகளை இவைகள் குறித்துக் காட்டுகின்றன. பெருமக்கள் சபைக்கு வருமாறு அரசியாரால் அழைக்கப்படுவதும், பாராளுமன்றத்தைத் தொடங்கி வைத்து அரசியார் பேசுவதைக் கேட்பதும், பெருமக்கள் சபையை நோக்கிச் சபாநாயகர் செல்வதும் வழக்கமான பழக்கமாக இருப்பதோடு பொது மக்கள் சபையின் நிரந்தரத் தன்மையை எடுத்துக்காட்டவும்

இவைகள் பயன்படுகின்றன. சபையின் செயற்பாடுகளுக்கு இவைகள் ஒருவித மரபு த்தொடர்ச்சியையும் அளிக்கின்றன. பாராளுமன்றத்தில் இணைந்திருக்கும் அரசர் / அரசியார்' பெருமக்கள் சபை ஆகிய பழமையான நிறுவனங்களின் ஒற்றுமை, பொதுமக்கள் சபையினர் அரசியார் முன் பெருமக்கள் சபைக்கு வெளியே கூடும் பொழுது வெளிப்படுகிறது. எல்லா அரசியல் பூசல்களுக்கிடையில் அடிப்படையான பிரச்சனைகளில் காணப்படும் இணக்கம் ஆழ்ந்து உணரப்படுவதோடு, சபாநாயகரின் நிலே, அன்ருட இறை வணக்கம் ஆகியவற்ருலும் இது உறுதிபடுத்தப்படுகிறது.

### 3. அரசாங்க அலுவல்

பொதுமக்கள் சபையின் ஒரு கூட்டத் தொடர் வழக்கமாக 150 நாள்கள் நடக்கும். இதில் பாதிக்குச் சற்றுக் குறைவான நாள்கள் இயல்பாக அரசாங்க அலுவல்களுக்கென ஒதுக்கப்படுகின்றன. தனி உறுப்பினரின் அலுவலுக்கும் இசை நிகழ்வான அலுவலுக்கும், நடைமுறையான அலுவலுக்கும் நிதித் தொடர்புடைய அலுவலுக்கும் மற்ற நாள்கள் பயன்படுத்தப்படுகின்றன.

தனி உறுப்பினர்களுக்காக ஒதுக்கியளிக்கப்பட்ட நேரத்தின் போது கவனிக்கப்படும் மசோதாக்களும் பிரேரணைகளும் தனி உறுப்பினர் அலுவல்களில் அடங்கும். மொத்தத்தில் இவைகளுக்கு 24 நாள்கள் அல்லது சற்று அதிகமான நாள்கள் பிடிக்கும்.

இடை நிகழ்வான அலுவல்களுக்கும் இதே நாள்கள் தான் பிடிக்கும். ஏற்கப்படாத தனி அலுவல்கள். நிலேக் கட்டளே ஒன்பதின் கீழ் நடைபெறும் வாக்குவாதங்கள், கண்டன வாக்களிப்புகள், பிரேரணைக்குட்படாத ஒரு பொருளேப் பற்றி அமைச்சரின் அறிக்கையை கேட்பதற்காக அரசாங்கத்திஞல் கொண்டு வரப்படும் தள்ளிவைப்புப் பிரேரணைகள், நாட்டுடமையாக்கப்பட்ட தொழில்களின் ஆண்டறிக்கையையொட்டிய வாக்குவாதங்கள், சிறப்புரிமை மீறல் ஆகியவைகளுக்காக இக்காலம் செலவிடப்படுகிறது.

நடை முறை சார்ந்த அலுவல்களுக்கும் நிதிச் சார்புடைய அலுவல்களுக்கும் 6 நாள்கள் ஒதுக்கப்படுகின்றன. அரசியாரின் பேருரைக்குப் பதிலளிக்க இந் நாள்கள் பயன் படுத்தப்படுகின்றன. சபையின் இடை ஓய்வுக்கு முன் சபைக் கூட்டத்தைத் தள்ளி வைக்கும் பிரேரணைகளுக்கு நான்கு நாள்களும், மதிப்பீடுகள் பற்றியும் திரண்ட நிதித் தொடர்புடைய மசோதாக்கள் பற்றி

வாதிக்க 29 நாள்களும், பட்ஜெட் பற்றியும் நிதி மசோதாக்கள் பற்றியவாதம் செய்ய 15 நாள்களும் ஆண்டுதோறும் முடிவடையும் சட்டங்களை நீட்டிக்கும் மசோதாக்கள் போன்ற பல் பொருள் தொடர்புடைய மசோதாக்களுக்கு 5 நாள்களும் செவிடப்படுகின்றன. பொதுவில், இம் முக்கியமான வேளைகளில் தான் எதிர்க் கட்சி அரசாங்கத்தை எதிர்த்துத் தன் பணியை நிறைவேற்றுகிறது.

ஆகவே, பாராளுமன்றத்திடமிருந்து சட்ட ஆக்க அதிகாரத்தைப் பெறவும், கொள்கையை எடுத்துரைத்துச் செயல்படுத்தும் கடமைப் பொறுப்பை நிறைவேற்றவும் அரசாங்கத்திற்கு மிகக் குறைந்த காலமே (நாள்களே) கிடைக்கிறது. இருப்பினும், கீழ் கொடுக்கப்பட்டுள்ள காரணங்களினால் அரசாங்கம் தன்னுடைய அலுவல்களை நிறைவேற்ற முடிகிறது.

(i) செயற்திட்ட நிரலில் உள்ளவைகளுக்கு விவாதத்தை சுருக்கிக் கொள்வது இக் காலத்திய போக்காக இருக்கிறது.

மற்ற இனங்களை ஆராய்வதால் ஒப்புக் கொள்ளப்பட்ட கால அட்டவணை புறக்கணிக்கப்படுகிறது. இதன் விளைவாக நிலைக் கட்டளையின் (எண் 9.) கீழ் கொண்டு வரப்படும் அவசரப் பிரேரணைகள் அதிகமில்லை. '10 மணி வரை' விதி அன்றைய வாக்குவாதத்தை முடிவிற்குக் கொண்டு வருகிறது.

(ii) தேவையானால் அரசாங்க அலுவல்களுக்கு முன்னுரிமை அளிக்கப்படுகிறது.

10. மணி விதியிலிருந்து குறிப்பிட்ட அலுவல்களுக்கு நிலைக் கட்டளைகள் தாமே விலக்களிக்கின்றன. இத்துடன், குறிப்பிட்ட காலப் பகுதிகளில் அரசாங்கத்தின் எல்லா அலுவல்களையும், குறிப்பிட்டப் பொருள்களையும் எப்பொழுதும் சபையின் வாக்களிப்பினால் விலக்களிக்கலாம். பிற்பகல் 10 மணிக்கு, 'குறிப்பிட்ட பொருள் பற்றிய இன்றைய கூட்டத்தின் நடவடிக்கைகள் நிலைக் கட்டளையிலிருந்து (எண் 1) விலக்களிக்கப்பட வேண்டு'மென அமைச்சர் ஒருவர் முன் மொழிகிறார்.

(iii) விவாதங்களுக்கான ஏற்பாடுகள் சபாநாயகரைக் கலந்து கொண்டு செய்யப்படுகின்றன.

ஒவ்வொரு வியாழக்கிழமையும், பின் வருகின்ற வாரத்திற்கான அலுவல்கள் சபைத் தலைவரால் எதிர்க் கட்சித் தலைவரின்

கேள்விக்குப் பதிலாக அறிவிக்கப்படுகின்றன. கட்சி தலைவர்களுக்கும் கொறடாக்களுக்குமிடையில் சபாநாயகர் முன்னிலையில் கிடைக்கும் நேரத்தைப் பகிர்ந்து கொள்ள முன் கூட்டியே கலந்து பேசி முடிவு செய்கின்றனர். எடுத்துக் காட்டாக, மற்றொரு நாளில், குறிப்பிட்ட அரசாங்க அலுவல்களை முடிக்க எதிர்க்கட்சி அனுமதிக்குமானால் கண்டனத் தீர்மானம் ஒன்றின் மீதான விவாதத்திற்கு அரசாங்கம் உடன்படலாம். இத்தகைய உடன்பாடுகள் வழக்கங்களின் மிகச் சிறந்த எடுத்துக் காட்டுகளாக இருக்கின்றன. மக்களாட்சி உண்மை நிலையில் செயல்பட அரசியல் அமைப்பிற்கு இவைகள் உதவுகின்றன. இந்த ஆக்க முறையிலான அணுகுநெறிக்கு மாற்று வெறும் எதிர் மறையாகத் தான் இருக்கும். அதாவது எதிர்க் கட்சி தடங்கல் செய்து அரசாங்கத்தை இடையூருக்குள்ளாக்கலாம் அல்லது இரவு முழுதும் கூடி இருந்து கால விரையம் செய்யலாம். இப்படி நடக்கும் வேளைகளில், சபாநாயகரைக் கலந்து முடிவு செய்வதில் உடன்பாடு காண இயலாதிருக்கலாம்; ஏனென்றால்; (அ) அரசாங்கத்தின் தலைமைக் கொறடாவின் திட்டங்களை எதிர்க் கட்சி ஏற்காதிருக்கலாம்; (ஆ) எதிர்க் கட்சி சில நடவடிக்கைகளின் அடிப்படைக் கருத்துக்களை எதிர்க்கலாம்; (இ) களைப்புறச் செய்யும் முறையினால் எதிர்க் கட்சி அரசாங்கத்தை விட்டுக் கொடுக்குமாறு தூண்டலாம்.

(iv) விவாதங்களின் வரிசைமுறை முன் கூட்டியே ஏற்பாடு செய்யப்படுகிறது. பேச்சுக்கள் சுருக்கமாக இருக்கின்றன.

சபாநாயகரின் கவனத்தை ஈர்க்க, முன்கூட்டியே சொல்லி வைப்பது வழக்கமாகத் தேவைப்படுகிறது. மெய்யாக, சபாநாயகரின் பின்னணி ஏற்பாட்டில் இது மற்றொரு கோணமாகும். ஒரு பொருள் பற்றிய விவாதம் ஒத்துக் கொள்ளப்படும் பொழுது அரசாங்கமும் எதிர்க்கட்சியும் தம் முதன்மையான பேச்சாளர்களை நியமிக்கின்றன. பின்னணி உறுப்பினர்கள் பங்கு பற்ற விரும்பினால் முன்கூட்டியே இதை சபாநாயகருக்கு அறிவிப்பது வழக்கமாகும்.

(v) சட்ட ஆக்கத்திட்டம் அமைச்சரவையால் கவனமாகத் தீட்டப்படுகிறது.

அலுவல்களைத் திட்டமிட கேபினெட் குழுக்கள் இப்பொழுது அமர்த்தப்படுகின்றன. எனவே, 1945-ல் தொழில் கட்சி அரசாங்கத்தின் கீழ் வருங்கால சட்ட ஆக்கக் குழு ஒன்று அமர்த்தப் பட்டது. ஒவ்வொரு கூட்டத் தொடரின் செயல் திட்டத்திலும் எம் மசோதாக்கள் இடம் பெற வேண்டுமென்பதை இது முடிவு

செய்தது. ஏனெனில் பாராளுமன்றத்தின் பதவிக் காலத்தில் கட்சியின் சட்ட ஆக்கத் திட்டங்கள் நிறைவு பெற வேண்டும். இத்துடன், அரசாங்கத்தின் ஒப்பிசைவைப் பெற வேண்டிய உண்மையான மசோதாவை ஆராய சட்ட ஆக்கக் குழு ஒன்றிருந்தது. வழக்கமாகக் கூட்டத் தொடரின் முற்பகுதியில் எவ்வளவு மசோதாக்களை இரண்டாவது வாசிப்பிற்கு எடுத்துக் கொள்ள முடியுமோ அவ்வளவையும் சபை ஏற்றுக் கொள்ளும். ஏனெனில் தரகு (பணம் அளிக்கும்) விவாதங்களால் இவைகள் சுணங்கி விடலாகாது.

(vi) 'சட்ட ஆக்க அதிகார ஒப்படைப்பு' கணிசமான அளவில் பயன்படுத்தப்படுகிறது.

(vii) பாராளுமன்ற அலுவல்கள் கேபினெட் கூட்டங்களில் தவறுமல் விவாதிக்கப்பட்டு முடிவு செய்யப்படுகின்றன.

viii) ஒரு பொருளை விவாதிப்பதில் செலவாகும் நேரத்தை அரசாங்கம் கட்டுப்படுத்துவதற்கு நிலைக் கட்டளைகள் திட்டவட்டமாக வழி செய்துள்ளன.

அ) வாத நிறுத்தத் தீர்மானம்: 18ஆம் 19ஆம் நூற்றுண்டுகளில் நடமுறை விதிகள் நெகிழ்ச்சியாக இருந்தன. வாதம் முடியுமுன் பேச விரும்பும் எவரும் பேசலாம். இதன் படியாக, அரசாங்கம் எதிர்க்கட்சி ஆகியவைகளின் முதன்மையான உறுப்பினர்களை இறுதிச் சொற்பொழிவாற்ற சபாநாயகர் அழைக்கும் மரபு வளர்ச்சியடைந்தது.

19ஆம் நூற்றுண்டின் இறுதியில் ஐரிஷ் தேசியவாதிகள் சபை நடவடிக்கைகளை பேரொலியால் தடை செய்த பொழுது நடைமுறை விதிகளைக் அமுலாக்கத் திட்டவட்டமான நடவடிக்கைகள் தேவைப்பட்டன. 1881-ல் இச் சபையின் பெருமையைப் பேணும் பொருட்டு சபாநாயகர் தம் அதிகாரத்தைப் பயன்படுத்திச் சபைக் கூட்டத்தை முடிவிற்குக் கொண்டுவரும் வரையில் 41 மணி நேரம் கூட்டம் நடத்தினர். ஆகவே, இவ்வாண்டின் வன்கண்மை மசோதாவை (Coercion Bill) சபாநாயகரும் கிளாட்ஸ்டனும் ஒரு நெருக்கடி நிலைத் தீர்மானத்தால் ஏற்றுக் கொண்டனர். சபாநாயகர், தம் சொந்த அதிகாரத்தால் வாத நிறுத்தத் தீர்மானத்தை நிறைவேற்ற இது வழி செய்தது. தீர்மானம் நிறைவேறிய பொழுது விவாதம் முடிவிற்கு வந்தது. 8182-ல் இந் நடைமுறை நிலைக் கட்டளையில் இணைக்கப்பட்டது.

1887-ல் இந் நிறுத்திவைப்புத் தீர்மானத்தைக் கொணரும் உரிமை உறுப்பினர்களுக்கு மாற்றப்பட்டது. வழக்கமாக அரசாங்கத்தின் தலைமைக் கொறடா இதை முன்மொழிவார். 100 உறுப்பினர்கள் இவருக்கு ஆதரவளித்தாலும் போதிய அளவு விவாதம் நடைபெற்றிருக்கிறதென சபாநாயகர் கருதினாலும் பிரேரணை சபையின் ஏற்பிற்கு விடப்படுகிறது. இது ஏற்கப்பட்டால் விவாதம் முடிவடையும்; வாதிக்கப்பட்ட பொருளையொட்டி வாக்களிப்பு நடைபெறும். ஆகவே, தடங்கல் விளைப்பதை தவிற்க அரசாங்கத்திற்கு இந் நிறுத்தப் பிரேரணை உதவுகிறது. சபாநாயகரின் ஒப்பிசைவு இப் பிரேரணைக்குத் தேவைப்படுவதாலும் இதை இவர் மறுப்பதும் வழக்கமாக இருப்பதாலும் சிறுபான்மைக் கட்சிகள் பாதுகாப்புப் பெறுகின்றன. முழுச் சபையின் குழுவிற்கும் நிலைக் குழுக்களுக்கும் இவ் விதி பொருந்துகிறது. நிலைக் குழுவின் மொத்த உறுப்பினரில் மூன்றில் ஒரு பங்கினர் இப் பிரேரணைக்காதரவளித்தால் இவ் விதி பயன்படும்.

(ஆ) விவாதச் சுருக்கம் (Guillotine): 1881ஆம் ஆண்டின் 'அவசர விதிகளின்' கீழ் இம்முறை கொண்டு வரப்பட்டது. ஒரு மசோதாவின் பிரிவுகளின் மீதான விவாதத்தை முடிவிற்குக் கொண்டுவர இது அனுமதிக்கிறது. மூன்றுக்கொன்று எனும் பெரும்பான்மையில் இப் பிரேரணை நிறைவேற்றப்பட்டால் இம் முறை செயல்படும் இப் பெரும்பான்மை இப்பொழுது சரதாரணப் பெரும்பான்மையாக மாற்றப்பட்டிருக்கிறது.

தனிச்சிறப்பு மசோதாக்களென அரசாங்கத்தால் கருதப் படுவனவற்றிற்கு இம் முறை முதன்மையாகப் பயன்படுத்தப் படுகிறது. மசோதாவின் எஞ்சிய ஒவ்வொரு நிலைக்கும் குறிப்பிட்ட நாள்களை ஒதுக்கி அளித்து கால அட்டவணை வரையப் பட்டிருக்கிறது. கமிட்டி (குழு) நிலை, அறிக்கை நிலை ஆகியவற்றைப் பொறுத்த வரையில் ஒவ்வொரு நாளுக்கும் குறிப்பிட்ட எண்ணிக்கையில் விதிக் கூறுகள் (Clauses) ஒதுக்கப்படுகின்றன. கொடுக்கப்பட்ட கால இறுதியில் அரசாங்கத்தின் திருத்தத்தின் மீது அல்லது விதிக் கூறுகளின் மீதும் பிரேரணை கொண்டு வரப் படலாம். எனவே, இச் சுருக்க முறையின் வாயிலாக, ஒரு மசோதாவின் ஒவ்வொரு விதிக் கூறும் எப்பொழுது முடிவுறும் என்பதை அரசாங்கம் முன்னதாகவே அறிந்து கொள்ளுகிறது. ஆனால் இது ஒரு தீவிர நடைமுறையாகும். எனவேதான் எதிர்க் கட்சிகள் இதை விரும்புவதில்லை. அரசாங்கமும் இதைப் பயன் படுத்த விரும்புவதில்லை. ஏனெனில் இப் பிரேரணையை விவாதிப் பதில் ஒரு நாள் கழிந்து விடுகிறது. எனவே, வழக்கமான வழி

களின் வாயிலாக ஒருகால அட்டவணைக்கு இணங்க முயற்சி மேற் கொள்ளப்பட்டது. இம் முயற்சி தோல்வியுற்றால் சபையின் முழுக் குழுவிலும் அறிக்கையிலும் இச் சுருக்கப் பிரேரணையைப் பயன் படுத்த வேண்டியிருக்கும். நிலைக் கட்டளை (எண் 43) நடு நிலை அலுவல் குழு ஒன்றிற்கு வழி செய்கிறது. தலைவர் பட்டியலில் உள்ளவர்களையும் சபாநாயகரால் நியமிக்கப்படும் ஐந்து உறுப் பினர்களையும் இக் குழு கொண்டிருக்கும். இக் குழு மசோதாவைப் பிரித்து ஒவ்வொரு பிரிவிற்கும் நாள்களை ஒதுக்கும்.

(இ) திருத்தங்களைத் தெரிவு செய்தல் — நிலைக் கட்டளை எண் 33.

முழுமையான சுருக்கப் பிரேரணையை நிறைவேற்றிய பின் (இதனைக் காங்கருவென்பர்) விவாதிக்கப்பட வேண்டிய மசோதாவின் விதிக் கூறுகளை சபாநாயகர் தெரிவு செய்வது வழக்கம்.

அறிக்கை நிலையிலுள்ள மசோதாவாயின் சபாநாயகரும், சபையின் முழுக் குழுவாயினும் அல்லது குழுவாயினும் இவைகளின் தலைவர்களும் ஒரு பிரேரணையின்றி விவாதத்திற்கு மிக முக்கிய மான திருத்தங்களைத் தெரிந்தெடுக்கலாம். எல்லாத் திருத்தங் களையும் விவாதிப்பதென்றால் தேவைக்குமேல் நேரம் பிடிக்கலாம்.

அலுவல்களை செய்து முடிக்க நிறுத்தப் பிரேரணையின் பல் வேறு வகைகளும் முக்கியமான கருவிகளாகின்றன. இவைகள் அளிக்கும் இசைவதிகாரம் தன்னிச்சையான உடன்பாட்டின் சாத்தியக் கூறுகளை அதிகரிக்கின்றன. சர் இவார் ஜென்னிங்ஸ் கூறுவதுபோல்: 'நியாயமான கால அளவிற்குள் சட்ட ஆக் கத்தை விரைவு படுத்த, நிறுத்த, சுருக்க, முழுச் சுருக்கப் பிரேரணைகள் கருவிகளாக இருக்கின்றன'. ஆனால் உறுப்பினர்கள் தம் கருத்துக்களை வெளியிடுவதை இவைகள் தடுக்கின்றன; விவா தங்களையும் அடக்கி விடுகின்றன. நேரக் குறைவுப் பிரச்சினையைத் தீர்க்க இவைகள் எதுவும் செய்யவில்லையாயினும் பழைய நடை முறைக்கு இவைகள் வெறும் சமாளிப்புச் செயல்களாகவே இருக் கின்றன.

4. அரசாங்கத்தைக் குறைகூற சிறுபான்மைக் கட்சிகளுக்குள்ள வாய்ப்புகள்

அரசாங்கம் கொள்கையைத் துவக்கிவைக்கிறது மற்ற(வர்கள்) கட்சிகள் இதை எதிர்க்கின்றன, என்ற பிரிட்டிஷ் அரசியலமைப்,

பின் பழைய கருத்தை நிலைக் கட்டளைகள் வெளிப்படுத்துகின்றன. துவக்க வாய்ப்புகள் சிறுபான்மைக் கட்சியினருக்குக் குறைவாக இருந்தாலும் இதைத் திறனாய்வு செய்ய இவைகளுக்குப் பல வாய்ப்புகள் இருக்கின்றன. வழக்கத்தின் அடிப்படையில் இருக்கும் நடைமுறை கூட முன்னணி உறுப்பினரின் சிறப்பை வலியுறுத்து கிறது. தனி உறுப்பினருக்கு மிகக் குறைந்த வாய்ப்புகள் தான் கிடைக்கின்றன. அரசாங்கத் தரப்பில் உள்ள தனி உறுப்பினர் கேள்வி நேரத்தில் கூட அமைச்சர்களை இக் கட்டான நிலைக் குள்ளாக்குவதில்லை. எதிர்தரப்பில், அரசாங்கத்தைத் தாக்கும் திறமுறை கட்சித் தலைவர்களால் குறிப்பிடப்பட்டு விடுகிறது. இந் நெறியிலிருந்து பின்னணி உறுப்பினர்கள் விலகிச் செல்லலாகாது. ஆகவே, கட்சி நிறுவனம் தான் ஆதிக்கம் செலுத்துகிறது. சபா நாயகருக்குப் பின் செய்யப்படும் ஏற்பாடுகளின் வழியாக, அரசாங் கத்தின் கொள்கையை விவாதிப்பதற்கு ஏற்றுக் கொள்ளப் பட்ட வேளைகள் ஒருங்கமைந்த எதிர்க் கட்சிக்கே பெரும்பாலும் முழுமையாக ஒதுக்கப்படுகின்றன.

### (i) தனி உறுப்பினருக்குக் கிடைக்கும் வாய்ப்புகள்

குறைகாண நான்கு நல் வாய்ப்புகளை மட்டுமே நிலைக் கட்டளைகள் தனி உறுப்பினர்களுக்களிக்கின்றன.

(அ) கேள்வி நேரம்: இது 19ஆம் நூற்றாண்டின் பிற்பாதியில் தோன்றிய வளர்ச்சியாகும். கேள்விகளை எந்த உறுப்பினரும் கேட்கலாம். கேள்வி எப் பொருளைப் பற்றியதோ அப் பொருளின் துறைப் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கும் அமைச்சரை நோக்கி கேள்வி கேட்கப்படவேண்டும். அமைச்சர் பெருமக்கள் சபை உறுப்பினராயின் அன்னாரின் கீழ்சபைப் பிரதிநிதியை நோக்கி கேள்வி இருக்கவேண்டும். ஓர் உறுப்பினர் ஒரு கூட்டத் தொடரில் நான்கு கேள்விகளுக்கு மேல் கேட்கலாகாது. தனிச் சிறப்பு வாய்ந்தவைகளைத் தவிர மற்றவைகளைப் பற்றிய கேள்விகளுக்கு முன் அறிவிப்பு வேண்டும். பின், கேள்விகள் அச்சிடப்பட்ட பட்டியலில் இடம் பெறும். இது எல்லா உறுப்பினருக்கும் கூட்டத் தொடக்கத்தில் கொடுக்கப்படுகிறது. தகவல் கேட்கும் நோக் கத்தில் கேள்விகள் இருக்க வேண்டும். வாதாடல், சுட்டிக் காட்டுதல், ஊகித்தல், அடைமொழி, அல்லது வஞ்சப் புகழ்ச்சி ஆகியவைகளை கேள்விகள் கொண்டிருக்கலாகாது. ஆனால் சில கேள்விகள் தாக்கும் நோக்கில் வரும் பொழுது இவைகளைச் சபா நாயகர் திருத்தி வரைகிறார் அல்லது தள்ளி விடுகிறார். இரகசிய மாக வைத்திருக்க வேண்டியவைகளைப் பற்றிய கேள்விகளுக்கு அமைச்சர் பதிலளிக்க மறுக்கலாம்.

தற்காலத்திய அரசியல் கட்சிகள் வளர்ச்சியடைவதற்குமுன் தனி உறுப்பினர்கள் இவ்வுரிமையை வலியுறுத்த பொதுமக்கள் சபையின் நடைமுறை விதி அனுமதித்தது. கட்சி அமைப்பிற்குள் தனி உறுப்பினர் இடம் பெற்ற பின் பாராளுமன்றத்தில் கேட்கப் பட்ட கேள்விகளின் எண்ணிக்கை அதிகரித்துள்ளது குறிப்பிடத் தக்கதாகும். ஐரிஸ் தேதியவாதிகள் சபை நடவடிக்கைகளைத் தடை செய்யக் கேள்விகள் கேட்டனர். இவைகளைக் குறைக்கும் வகையில் நடைமுறை விதிகளில் சில மாற்றல்களைச் செய்த பின்னரும் கேள்விகளின் எண்ணிக்கை பெருகிற்று.

கேள்விகள் பற்றிய இன்றைய விதிமுறைகள் பின் வருமாறு:—

(i) கேள்விகளையொட்டிச் செலவிடப்படும் நேரம் ஒரு மணி யளவாகும்.

(ii) ஒரு கேள்வியைப் பற்றி ஓர் அமைச்சருக்கு 48 மணி நேர முன் அறிவிப்பு கொடுக்கப்பட வேண்டும். ஓர் உறுப் பினர் சபாநாயகருக்கு தனிப்பட்ட அறிவிப்பு கொடுக்கும் பொழுது அவசர காரணம் பற்றி இவர் இதை அனுமதிக்க லாம். ஆனால் இது ஒரு விதி விலக்காகும். இதை சபை பிற்பகல் 3-30க்கு எடுத்துக் கொள்ளும். கேள்விகளுக்கு விடையளிக்க அமைச்சர்கள் ஒரு வேலை முறை அடிப் படையில் சபையில் கலந்து கொள்ளுகின்றனர். செவ்வாய்க்கிழமைகளிலும் வியாழக்கிழமைகளிலும் பிரதமர் கேள்விகளுக்குப் பதில் அளிக்கிறார்.

(iii) ஒரு நாளைக்கு உறுப்பினர்கள் இரு கேள்விகளை வாய் மொழியாக (oral) கேட்கலாம். வாய்மொழியாகப் பதில் கோரும் கேள்விகள் நிகழ்ச்சித் திட்டத்தில் நட்சத்திரக் குறியோடு தோன்றும். மற்ற கேள்விகள் எழுத்துருவில் விடைபெறும். இவைகள் அலுவல் அறிக்கையில் வெளியாகின்றன. நடைமுறையில், பெரும் பான்மையான கேள்விகள் வாய் வழிப் பதிலையே எதிர் நோக்கி இருக்கின்றன. இவைகளையொட்டி ஊறு உண்டாக்கக் கூடிய துணைக் கேள்விகளையெழுப்பலாம். குறிப்பிட்ட அமைச்சர் இவைகளுக்கு நேர்முகமாகவும் விரைவாகவும் பதில் தரலாம். ஆனால் பல வினாக்களை 3. 30 க்குள் கேட்க முடியாது. எனவே எழுத்துருவில் இருக்கும் பதிலே போதுமென்றாகி விடுகிறது.

(iv) கேள்விகள் தகவல் கேட்பதாகவும், செயல் வலியுறுத்து வதாகவும், சிறிதளவு அமைச்சுப் பொறுப்பை உட்படுத்து

வதாகவும் இருப்பதோடு அரசியலமைப்பு முறைக்கு இணக்கமாகவும் பாராளுமன்றமென்னய ஒழுங்கு முறைக்கு ஒத்ததாகவும் இருக்க வேண்டும். சொற்பொழிவுகள் அனுமதிக்கப்படுவதில்லை. உறுப்பினர் விடையால் திருப்தியடையவில்லையெனில் துணைக்கேள்வி கேட்கலாம். அல்லது வாராந்திர வாக்கெடுப்பில் (Ballot) நற்பேறுடையவராக இருந்தால் பிற்பகல் 10 மணிக்கு அதே பொருள் பற்றிய ஒத்தி வைப்புப் பிரேரணையொன்றை எழுப்பலாம். இத்தகைய சமயத்தில் நிலைக் கட்டளை (எண் 9) யை பயன்படுத்தி சபையின் ஒத்தி வைப்பைக் கோரலாம்.

கேள்வி நேரத்தில் சபை மிகச் சிறந்து காணப்படுவதாகப் பலர் நினைக்கின்றனர். மற்ற பாராளுமன்ற அலுவல்களுக்கு மாறாக, இதற்காகச் செலவிடப்படும் நேரம் முழுப் பயனையும் அடைகிறது. சிவில் சேவை முறையில் காணப்படும் அதிகார வர்க்கப் போக்கைத் தணிக்கும் வாய்ப்பில் இதன் சிறப்புத் தன்மை இருக்கிறது. பாராளுமன்றத்தின் நேரத்தில் ஒரு பகுதியைச் செலவிட்டு ஒரு துறையின் செயலுக்குப் பொறுப்புடைய அமைச்சரை வினவுதல் தனி மனிதரின் உரிமையைப் பாதுகாக்கப் பெரிதும் உதவுகிறது. சபையின் பார்வைக்கு ஒரு பொருளைக் கொண்டு வராமலேயே மன நிறைவு கொள்ள முடிகிறது. ஏனெனில் ஒரு கேள்வி கேட்கப்படலாமென்பதே உண்மையான இசைவாணையாகிறது. ஒரு துறையின் ஆட்சி விபரங்களைப் பற்றி ஓர் அமைச்சரை ஒரு கேள்வி சிந்திக்கச் செய்கிறது. இத்தகைய விரிவான ஆய்வை ஒரு சிவில் பணியாள் வெறுக்கிறார். 'பொதுச் சேவையின் ஒவ்வொரு மூலை முடுக்கிலும் ஒளி பாயச் செய்வது', கேள்வியென் பேராசிரியர் லோவெல் கூறுகிறார். இது சிவில் பணியாளரின் தொடங்குத் துணிவைப் பாதிக்கலாம்.

அரசாங்கத்தின் செல்வாக்கிற்கு ஊறு விளைக்கக் கூடிய ஒன்றை எதிர்க்கட்சி கண்டு பிடிக்கையில் அரசாங்கத்தை ஓர் இக் கட்டான நிலையில் தள்ள எதிர்க்கட்சி கேள்விகளைப் பயன்படுத்திக் கொள்வது இயல்பாகும். அல்லது முழுமையான விவாதம் தேவை இல்லாதபொழுது அரசாங்கத்தின் கொள்கையின் சில கருத்துகளை விளக்க இவைகள் கருவிகளாகப் பயன்படலாம். அரசாங்கமும் இன்னும் ஒரு முடிவைச் செய்ய தயாராக இல்லாதிருக்கலாம். இப்படிப்பட்ட வேளைகளில் தான் கேள்விகளுக்குப் பதிலளிக்கும் கலை சோதனைக்குள்ளாகிறது. இப்பொழுதுதான் அமைச்சர் உட்கவடான ஒரு துணைக் கேள்விக்குத் தயாராக இருக்க

வேண்டும். முதல் கேள்வியையொட்டி இது உடனடியாக கேட்கப் படுகிறது. முன் கூட்டியே எல்லா விபரங்களையும் துறை அமைச்ச ருக்குக் கொடுத்துதவுகிறது. அமைச்சர் அளிக்கும் பதிலை துறை தயாரித்தளிக்கிறது; கேள்வியைக் கேட்பவரைப் பற்றிய குறிப்பு களைக் கொடுக்கிறது; கேட்கப்பட்ட பொருளைப் பற்றி இவருக் குள்ள அறிவுப் பரப்பையும் தெரிவிக்கிறது. துணைக் கேள்விகளை எதிர்நோக்கி அவைகளுக்கான பதிலையும் அளிக்கிறது. ஒரு சிறந்த பதிலென்பது சுருக்கமாக இருப்பதாகும். கேள்விக்கு முழுப் பதிலையும் கொடுப்பதாகத் தோன்ற வேண்டும். மறுத்தளிக்கப் பட்டால், ஒவ்வொரு சொல்லும் சரி நுட்பமாக மெய்ப்பிக்கப்பட வேண்டும். தொல்லை தரும் துணைக் கேள்விகளுக்கு இடமளிக்க லாகாது. உண்மையில் எதையும் வெளியிடலாகாது. இருப் பினும், எதிர்பார்த்த போக்கில் துணைக் கேள்விகள் யெழாத பொழுது முழுமையான விபரங்களின்றி அமைச்சர் தவிக்கலாம். இப்படிப்பட்ட வேளைகளில் தம் துறையைப் பற்றிய எல்லா விபரங் களையும் அறிந்திருக்கும் ஓர் அமைச்சர் சிந்தனை வேகத்தோடு பதலளித்தும் மறுத்தளித்தும், சிறப்புறச் செயலாற்ற முடியும். எதிர்க்கின்ற கேள்விகளை எதிர் நோக்கும் பொழுது தம் துறையின் பணிகளை முழுமையாக அறிந்துள்ள ஓர் அமைச்சர் நிலையை அடிக்கடி திறமையோடு சமாளிப்பதைக் கட்சித் தலைவர் கண்டுணர் கிறார்; சபையும் அவரை விரைந்து பாராட்டுகிறது. பாதுகாப்பு ஆய்வு போன்ற இயல்பு கடந்த காரணங்களுக்காக மட்டும் ஓர் அமைச்சர் பதிலளிக்கத் தவறினால் சபை அவரைக் கடுமையாகச் சினந்து கொள்ளாது.

தனிப்பட்ட தலப் பிரச்சினைகளைப் பற்றி கேள்வி கேட்கும் வாய்ப்பை இக் கேள்விநேரம் ஓர் உறுப்பினருக்களிக்கிறது. உண்மையாகவே, உறுப்பினர் தகவல் நாடலாம் அல்லது தம் தொகுதியினருக்குத் தம்மைப் பற்றி விளம்பரப்படுத்திக்கொள்ளும் ஒரு நல்ல வாய்ப்பை இவர் எடுத்துக் கொள்ளலாம்.

கேள்விகளின் ஒரு முடிவான பயனைக் குறிப்பிட வேண்டும். ஒரு பொது அறிவிப்பு செய்ய அரசாங்கம் சிற்சில வேளைகளில் கேள்விகளைப் பயன்படுத்திக்கொள்ளலாம். அல்லது கொள்கையை இயல்பாக வெளியிட இதைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

**(ஆ) நிலைக் கட்டளை 9-ன் கீழ் சபை நடவடிக்கையைத் தள்ளி வைத்தல்**

கேள்விகளுக்குப் பின் பொது அலுவல்கள் தொடங்கு முன், 'அவசரமாகக் கவனிக்க வேண்டிய ஒரு முக்கியமான குறிப்பிட்ட,

பொருளைப்பற்றி', விவாதிக்க எந்த ஓர் உறுப்பினரும் சபை நிகழ்ச்சிகளைத் தள்ளி வைக்க பிரேரணை கொண்டு வரலாம். 1967-ல் நிலைக் கட்டளை திருத்தப்பட்டதிலிருந்து சபாநாயகர் முன்னிகழ்வால் கட்டுப்படாததோடு இப் பொருள் 'முறையாக இப்படி விவாதிக்கப்படுவதை' ஏற்றுக் கொள்ள வேண்டும். அமைச்சர் ஒருவரின் ஆட்சிப் பொறுப்பிற்குட்பட்ட ஒரு முக்கிய மான பொருளாக இது இருக்க வேண்டும் என்பதும், அத்துடன் மற்ற வழிகளில் இது சபை முன் கொண்டு வரப்படாததாகவும் இருக்க வேண்டுமென்பதும் இதன் பொருளாகும்.

நாற்பது உறுப்பினர்களுக்குக் குறையாதவர்களின் ஆதர வோடு பிரேரணை ஏற்றுக் கொள்ளப்பட்டால் அடுத்த நாள் பொது அலுவல்கள் துவங்கும்போது இது விவாதிக்கப்படுகிறது. மூன்று மணி நேரத்திற்கு மிகாமல் இது பின் முடிவிற்குக் கொண்டுவரப் படுகிறது. இயல்பு கடந்து, சபாநாயகர் அதே நாள் பிற்பகல் 7 மணிக்கு விவாதத்தை வைத்துக் கொள்ளலாம்.

பின்னணி உறுப்பினருக்கு அதிக வாய்ப்பு அளிக்கவும் நி. க 9-ன் பயனை விரிவாக்கவும் இக் கட்டளை திருத்தப்பட்டது.

(இ) பிற்பகல் 10 மணி ஒத்திவைப்பிற்கான அன்றுடப் பிரேரணை

பொது அலுவல்கள் பிற்பகல் 3-30க்குத் துவங்கி, 10 மணி விதி பயன்படுகிற பொழுது, பிற்பகல் 10 மணி வரை தொடர்கிறது. அவ்வமயம் சபாநாயகர் 'ஒழுங்கு, ஒழுங்கு', என்று கூறி, விவாதத்தில் இருக்கும் பொருளுக்குரிய அமைச்சரை விளித்து, இதை மறுபடியும் தொடர நாள் குறிப்பிடுமாறு பணிப்பார். பின், எதிர்ப்பில்லா அலுவல் எதையும் எடுத்துக் கொள்ளலாம். ஆனால் தனியான எதிர்ப்பு இருந்தாலும் இதை மேலே தொடர் வதில்லை. இதற்கு வழக்கமாக ஐந்து நிமிடம் பிடிக்கும். 'பின் அரசாங்க உறுப்பினர் ஒருவர் இச் சபை இப்பொழுது ஒத்தி வைக் கப்படுகிறதென' முன் மொழிகிறார். கேள்வி நேரத்தில் பெறு வதைவிட மிக விரிவான அறிக்கைகளை அமைச்சர்களிடமிருந்து பெற இந்தப் பிரேரணை வழி செய்கிறது. தனி உறுப்பினர்களால் தெரிவு செய்யப்பட்ட பொருள்களையொட்டி விவாதங்கள் வாரத் தில் நான்கு நாள்கள் பல்வேறு பொருள்களைப் பற்றியதாக அமையும். மற்ற நாள்களில் சபாநாயகரால் தெரிவு செய்யப் பட்ட உறுப்பினர்கள் விவாதத்தில் பங்கு பற்றுகின்றனர். குறிப் பிட்ட அமைச்சர்கள் பற்றி முன் கூட்டியே அறிவிக்கப்படுகிறது. சபாநாயகரின் அனுமதி இன்றி சட்ட ஆக்கம் பற்றிய எதுவும் விவாதிக்கப்படுவதில்லை. அரைமணியின் முடிவில் சபாநாயகர் சபையைத் தள்ளி வைக்கிறார்.

குறிப்பிட்ட சில அலுவல்கள் தாமாகவே 10மணி விதிலிருந்து விலக்குப் பெறுகின்றன. இதனுல் சபையின் நேரம் வரை செயல் பட வேண்டி இருக்கிறது. இத்தகைய அலுவல்கள் இரு வகைப் படும்.

(i) நிதியலுவல்கள் உள்பட நிலைக் கட்டளைகளால் விலக்குப் பெற்றவைகள்.

(ii) திட்டவட்டமாகச் சபையின் விலக்குப் பெற்றவைகள்.

(ஈ) இடை ஓய்வுக்காக ஒத்திவைப்பு

இடை ஓய்வு ஒத்திவைப்புப் பிரேரணையால் இது பெறப்படு கிறது. இவ்வொத்திவைப்பு நிகழ்வதற்குப் பல நாள்களுக்கு முன் இதற்கான இசைவு சபையிடமிருந்து பெறப்படுகிறது. இவ் விசைவைப் பெற்றுக்கொண்டு அரசாங்கம் தன் முக்கியமான அலுவல்களைக் கவனிக்கிறது. 'சபைக் கூட்டம் இப்பொழுது முடி விற்கு வரலாம்' எனும் பிரேரணையின்மீது கடைசி நாளன்று தள்ளிவைப்பு விவாதங்கள் நடைபெறுகின்றன. தனி உறுப் பினர்களால் கொண்டு வரப்பட்ட பல்வேறு பொருள்களைப்பற்றிய தாக இவ் விவாதங்கள் இருக்கும். தனி உறுப்பினர்களைச் சபா நாயகர் தெரிவு செய்து ஒவ்வொரு பொருளுக்கும் சிறிது நேரம் ஒதுக்குகிருர். சபாநாயகரின் இசைவின்றி சட்ட ஆக்கம் பற்றிய எப் பொருள் பற்றியும் பேசுவதில்லை.

(2) எதிர்க் கட்சிக்குள்ள வாய்ப்புகள்

அரசாங்கத்தின் சட்ட ஆக்கத் திட்டங்களின் பல்வேறு நிலைகள் பற்றி ஆய்வுகளையும் விவாதங்களையும் தவிர, முறையான விவாதங்களின் ஒழுங்கிணைந்த எதிர்க் கட்சிக்கு கூடுதல் நேரம் அளிக்கச் சபையின் வழக்கம் வழி செய்கிறது.

(அ) அரசர் / அரசியாரின் பேருரையையொட்டிய திருத்தத் தின் மீதான விவாதங்கள்.

ஒவ்வொரு பாராளுமன்றக் கூட்டத் தொடரின் துவக்கத்தின் போது, நடப்புக் கூட்டத்தில் அரசாங்கத்தின் செயற் திட்டப் பற்றிய சுருக்கமான உரையை அரசியார் நிகழ்த்துவார். இதை யடுத்து, உரையின் மீதான திருத்தத்தில் குறிப்பிட்ட திட்டங்களை விவாதத்திற்கு எதிர்க்கட்சி எடுத்துக்கொள்ளும்.

ஆ) அவ்வப்போது அரசாங்கமும் எதிர்க்கட்சியும் ஒப்புக் கொண்ட பொருள்கள் பற்றிய விவாதங்களும் அரசாங்கத்தின் மீதான கண்டனத் தீர்மானங்களும் வாக்கெடுப்பும்.

(இ) சபீலே விவாதங்கள்.

(ஈ) வரவு செலவுத் திட்ட ஆண்டறிக்கைச் சொற்பொழிவை யொட்டிய விவாதங்களும் வரவு செலவு திட்டங்களை உள்ளடக்கிய நிதி மசோதாவின் நிலைகளும்.

## 5. சபாநாயகர் (Speaker)

மிகத் தெளிவாகச் சபையில் காட்சியளிப்பவர் சபாநாயகர். இவர் விவாதங்களில் கலந்து கொண்டு பேசுவதில்லை. மற்ற சமயங்களிலும் இவர் மிகக் குறைவாகவே பேசுகிறார். இவர் சபையின் சார்பில் பேசுபவரன்றிச் சபையில் பேசுவதில்லை. இவருடைய நிலை சபையைப் போன்று மிகப் பழமையானது. முற்காலத்தில் சபையின் சார்பில் அரசரோடு பேசும் உரிமையை இவர் பெற்றிருந்தார்.

### இப் பதவியின் வளர்ச்சி

சபை தனித்து அமரவேண்டுமெனும் முடிவு, விவாதங்களின் போது தலைமை தாங்க ஒருவர் அமர்த்தப்பட வேண்டுமென் பதையும், பொதுக் கருத்து உருவாக்கப்பட வேண்டுமென்பதையும், சபையின் முடிவு அரசருக்கு அறிவிக்கப்பட வேண்டுமென்பதையும் வற்புறுத்தியது. தொடக்கத்தில் சபையின் விண்ணப்பங்களையும் தீர்மானங்களையும் இவர் அரசரின் பார்வைக்குக் கொண்டு வந்தார். பொதுமக்கள் சபை முற்காலத்தில் சட்டமியற்றிய தென்பதை விட விண்ணப்பம் செய்ததென்பதை மறந்து விடலாகாது. சட்டமியற்றி மக்களின் குறைகளை அகற்றுமாறு சபை மன்னரை வேண்டியது. தேவையான போது மக்களின் வேண்டுகோளுக்கிணங்கி மன்னரும் சட்டமியற்றினர். இவ்வாறு இவர் பல வேண்டுகோள்களை மன்னரிடம் கொண்டு சென்றார். சில வேளைகளில் விருப்பத் தகாத வேண்டுகோள்களையும் இவர் அரசரிடம் எடுத்துச் செல்ல வேண்டியிருந்தது. அரசரின் விருப்பிற்கிசைந்து பணிபுரிவோரே இப் பதவியில் அமர்த்தப் பெற்றார்கள். சபாநாயகராக சர் தாமஸ் ஹங்கர் ஃபோர்டு (Sir Thomas Hunger Ford) 1377-ல் அமர்த்தப்பட்டார். ஆனால் இவர் பொதுமக்கள் சபையால் அமர்த்தப்படவில்லை. இச் சபையோடு அரசியல் தொடர்பு கொள்ள வேண்டிய தேவை ஏற்பட்டதால் தம் நம்பிக்கைக்கு ஏற்றவராக ஒருவரை சபா நாயகராக அமர்த்திக் கொள்வது பயனுடையதாகுமென அரசர் கருதினர். எலிசபெத் அரசியாரின் காலத்திய சபாநாயகர்கள் உதவிப் பணம் பெற்றுக் கொண்டு பணியாற்றினர். இவர்கள் உயர் பதவிகளையும் வகித்தார்கள். இவைகளுக்கீடாக அரசியாரின்

விருப்பத்திற்கிணங்க சபையின் விவாதங்களை இவர்கள் நடத்தித் தர வேண்டும். அரசியார் வெறுப்பவைகளை விவாதிக்காமல் இவர்கள் தடுக்க வேண்டும். இன்றும் 'புதிய சபைக்குத் தலைமை தாங்குமுன் இவர் அரசியாரின் அங்கிகாரத்திற்குத் தம்மை உட்படுத்திக் கொள்ளுகிறார்.

சபாநாயகர்கள் தம் நிறைமையைப் பற்றிப் பலவாறு விளக்கம் செய்துள்ளனர். 'சபையின் பணியாள் என்பதால் அரசரின் பணியாள் என்பதிலிருந்து சிறிதும் குறைந்து விடவில்லை' யென 1629-ல் சபாநாயகர் ஃபின்ச் (Finch) சபைக்கு நினைவுப் படுத்தினார். ஆனால் சபை தன் உரிமைகளை வற்புறுத்தத் தொடங்கிய பின் சபாநாயகர் இதன் சார்பில் பேசுகின்றவரானார். இதன் பின் இவருடைய நிறைமை எங்கு நிலைபெற்றதென்பது விரைவில் தெளிவாயிற்று. எனவே, 1642-ல் முதலாம் சார்லஸ் மன்னர் ஐந்து உறுப்பினர்களைக் கைது செய்ய முயன்ற போது, 'ஐயா, இங்கு இச் சபையின் பணியாளாக இருக்கும் நான் சபையின் விருப்பை நிறைவேற்றுவதைத் தவிர இவ்விடத்தில் பார்க்க எனக்குக் கண்களும் இல்லை, பேச நாவும் இல்லை' யெனச் சபாநாயகர் லென்தால் (Lenthall) அறிவித்தார். 1679வரை சபாநாயகரின் நிலை தெளிவாக்கப்படவில்லை. டான்பி (Danby) என்பவரை கடுங் குற்ற விசாரணையிலிருந்து காப்பாற்றும் பொருட்டு இரண்டாவது சார்லஸ் மன்னர் தம்முடைய ஆளைச் சபாநாயகராகத் திணிக்க முயன்றார். சபையும் இன்னொருவரை அமர்த்த முயன்றது. முடிவில், இரு தரப்பினரும் விட்டுக் கொடுத்து மூன்றாவது ஆள் ஒருவர் சபாநாயகராக அமர்த்தப் பட்டார். இதற்குப் பின் அரசரும் இவரை அமர்த்தும் அதிகாரத்தை இழந்தார். இன்று சபையின் தெரிவிற்கு அரசர் ஒப்புதலளித்தல் என்பது ஒரு வழக்காகி விட்டது.

இருப்பினும் 19ஆம் நூற்றாண்டு வரை சபாநாயகர், அமைச்சர் பதவிகளை ஏற்றுக் கொண்டும் விவாதங்களில் கலந்து கொண்டும் ஒரு செயல் திறமை மிக்க அரசியல்வாதியாக இருந்து வந்தார். எடுத்துக் காட்டாக, ஆன் அரசியாரின் கீழ் ஹார்லி (Harley) என்பவர் சபாநாயகராகவும் அரசு செயலராகவும் இருந்ததைக் குறிப்பிடலாம். 1813-ல் சபாநாயகர் ஆபெட்டும் (Abbott) 1825-ல் சபாநாயகர் மானர்ஸ் சூட்டன் (Manners-Sutton) என்பவரும் ரோமன் கத்தோலிக்க இடர் உதவியை எதிர்ப்பதில் முதன்மையாக இருந்தனர். ஆனால் செயல் திறமிக்க கட்சிகளின் வளர்ச்சி சபாநாயகரின் கடமைகளை ஒரு தரப்பு நலனுக்காகப் பயன்படுத்தக் கூடிய சாத்தியக் கூறுகளை அதிகரித்துள்ளது.

ஆகவே, தம் நடு நிலையை ஐயப்படாதிருக்க வேண்டுமென்பதற்காக சபாநாயகர் ஆன்சுலோ (Onslow 172J—61) என்பவர் தம் கப்பற்படைப் பொருளாளர் பதவியிலிருந்து விலகிக் கொண்டார். ஆனால் சபாநாயகர் விவாதங்களில் பங்கு பற்றலாகாதெனும் கருத்து ஆபர்கோம்பி (Abercombie) என்பவரின் காலம் வரை (1835—39) ஏற்றுக் கொள்ளப்படவில்லை. இவருக்குப் பின் வந்த ஷா லெஃபெவர் (Shaw Lefevre 1839—57) நடு நிலை தவறாமையெனும் உயர்ந்த தரத்தை நிறுவினார். சபைக்கு உள்ளும் புறமும் இது இன்றும் நிலவுகிறது. இன்று இவருடைய ஊதியத்தை திரண்ட நிதியில் சாட்டி இந் நடு நிலை தவறாமை காக்கப்படுகிறது. இவரது ஊதியம் ஆண்டிற்கு £ 8500. இவர் வெஸ்டமின்ஸ்டர் அரண்மனையில் வசிக்கிறார். சபையின் வேண்டுகோளின் பேரில் இவருடைய சேவையைப் பாராட்டி இவர் ஓய்வு பெறும் பொழுது ஓய்வு ஊதியத்தையும் பிரபுப் பட்டத்தையும் அரசியார் இவருக்கு அளிக்கிறார்.

### இப் பதவியையொட்டிய மரபுகள்

சபையின் நீண்டகால அனுபவமுள்ள ஓர் உறுப்பினர் சபா நாயகராக இருக்கிறார். இவரை இப் பதவிக்குத் தேர்தெடுக்கும் சபையினர், அறிவாற்றலோடும் உறுதியோடும் செயல்படக் கூடிய ஒருவரைத் தேர்ந்தெடுக்கின்றனர். சபையினர் உணர்ச்சி வசப் படும் பொழுது சற்று நகைச்சுவையோடு சபையை நடத்திச் செல் பவராகவும் இருக்க வேண்டும். இப் பதவிக்குரிய மாண்பையும் நடுநிலை தவறாமையையும் பேணுபவராகவும் இவர் இருத்தல் வேண்டும். நடைமுறையில் இவரது தேர்தல் ஒரு சம்பிரதாயமாகி விட்டது. சபாநாயகர் பதவியிலிருந்து ஓய்வு பெறும் பொழுது பெரும்பான்மைக் கட்சி இவருக்குப் பின் வருபவரை நியமனம் செய்வது மரபெனினும் எல்லாக் கட்சித் தலைவர்களுக்கிடையில் முன் கூட்டியே ஆய்வு நடைபெறும். ஏனெனில் பொதுவாக ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒருவர் தெரிவு செய்யப்படலாம். இதனால் செயல் திறமிக்கக் கட்சித் தலைவர்களும் மிக உயர்ந்த அமைச்சுப் பதவி வகித்தவர்களும் கட்சி அரசியலோடு தொடர்புடையவர் களும் இப் பதவிக்கு ஏற்றவர்களாகக் கருதப்படுவதில்லை. எல்லாத் தகுதிகளையும் உடையவராக ஒருவர் இருத்தல் அரிதாகையால் இப் பதவிக்குரிய வேட்பாளர்கள் ஒரு சிலரே இருப்பர். இம் முறை யிலான தேர்தலில் கூட இவரது நடுநிலை தவறாமையை வெளிப் படுத்தவும் மரபுகளைப் பேணவும் முயற்சிகள் மேற்கொள்ளப்படு கின்றன. பின்னணி உறுப்பினர் ஒருவர் முன் மொழிய எதிர்ப் பின்றி இவர் பெரும்பாலும் தேர்ந்தெடுக்கப்படுதல் வழக்கமாகும்.

இவரை முன்மொழிபவரும் வழிமொழிபவரும் சபையின் மாறு பட்ட கட்சியினராக இருத்தல் வழக்கமாகும். ஆனால் டப்ல்யூ. எஸ். மோரிசனும் (W. S. Morrison) ஹல்டன் ஃபோஸ்டரும் (H. Hylton-Fostor) முன்னாள் அமைச்சர்களாவர். எனவே இவர்கள் சபையின் வாக்கெடுப்பின் வழியாகத் தேர்தெடுக்கப் பட்டனர். மேலும், ஒரு காலத்தில் விரும்பத்தகாத செய்திகளை சினங்கொண்ட அரசர்களுக்கு எடுத்துரைப்பவராக சபாநாயகர் இருந்தமையால் இப் பதவி தயக்கத்தோடு ஏற்றுக் கொள்ளப் பட்டது. இன்றும் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சபாநாயகரை இருக்கைக்குப் பிடித்து இழுத்துச் செல்லும் வழக்கம் இருந்து வருகிறது.

ஒரு முறை பதவியில் அமர்த்தப்பட்டவர் பதவி ஓய்வு பெறும் வரை தொடர்ந்து பதவி வகிக்க மரபு வகை செய்கிறது. எனவே, சமீப காலம் வரை இவரைப் போட்டியின்றி தேர்ந்தெடுப்பது வழக்கமாக இருந்தது. இவரது நடுநிலை தவறாப் பண்பை வளர்க்க இம் மரபு உதவியாக இருந்தது. ஏனெனில் இவர் தேர்தல் சொற்பொழிவாற்ற வேண்டியதில்லை: அரசியல் அல்லது பிரசாரங் களில் இவர் ஈடுபட வேண்டியதில்லை. ஆனால் இவ் வேற்பாட்டில் சில குறைகள் இருக்கின்றன. தொகுதியில் இவர் சார்பில் வேலை செய்ய ஒருவர் அமர்த்தப்படுவதாலும் வாக்காளர்களும் வாக் குரிமையை நடைமுறையில் இழப்பதாலும் தேர்தல் போராட்டம் இல்லாத பொழுது தலக் கட்சியின் அமைப்பு சிதைந்து போகலாம். இத்துடன், கட்சி நிலை சமமாக உள்ள தொகுதியின் பிரதிநிதியாக சபாநாயகர் முதலில் அமர்த்தப்பட்டபொழுது ஆதரவை இழந்து கொண்டு வரும் கட்சி அடுத்து வரும் தேர்தலில் அந்த இடத்தை மீண்டும் கைப்பற்ற இயலாது போய் விடும். ஆகையால், செயிண்ட் ஸ்டீபன், வெஸ்ட்மின்ஸ்டர், போன்ற பெயரளவிலான ஒரு தொகுதியில் சபாநாயகர் நிறுத்தப்படவேண்டுமென ஒரு கருத்து தெரிவிக்கப்பட்டது. இன்று வரை இக் கருத்தையொட்டி ஒன்றும் செய்யப்படவில்லை. ஏனெனில் இயல்பான வழியில் சபாநாயகர் தேர்ந்தெடுக்கப்படவில்லையென்றால் தன் மதிப்பு நிலையை இவர் இழக்க நேரிடலாமென்றும் இதையொட்டிச் சிறிது அதிகாரத்தை யும் இவர் இழக்க வேண்டியிருக்குமென்றும் பலர் கருதுகின்றனர்.

சபாநாயகரோடு தொடர்புடைய மற்ற மரபுகள் சபைக் கூட்டங்களின் மாண்பினை உயர்த்துகின்றன. சபையின் காவல் துறை முக்வர் இவருக்குத் துணை நிற்கிறார். சபைக் கூட்டத்தின் துவக்கத்திலும் முடிவிலும் சபாநாயகர் மற்ற சபையின் அலுவலர் களோடு வருவதும் பின் போவதும் கவர்ச்சி மிகு நிகழ்ச்சியாக

இருந்து வருகிறது. சபாநாயகர் இருக்கையில் இல்லாதிருப்பின் சபை அவையாகாதாகையால் இவருடைய அதிகாரச் சின்னமாகிய முத்திரைக் கோல் (Mace) மேசையின் கீழ் வைக்கப்படும். இவர் அணிந்திருக்கும் மயிர்த்தோகை இவருடைய தோற்றப் பொலிவை அதிகரிப்பதோடு இப் பதவியுடன் நீதிமன்ற நடைமுறைகளின் நடுநிலை தவறுமையையும் தொடர்புபடுத்திக் காட்டுகிறது.

### சபாநாயகர் கட்சிச் சார்பற்றவர்

பதவியேற்ற நேரத்திலிருந்து இவர் கட்சித் தொடர்பற்றவராகி விடுகிறார். இவர் இப்பொழுது லிபரல் கட்சிக்காரராகவோ, தொழில் கட்சிகாரராகவோ அல்லது கன்சர்வேட்டிவ் கட்சிக்காரராகவோ இருப்பதில்லை. இவர் கட்சிக் கூட்டங்களில் கலந்து கொள்வதில்லை. கட்சிக் கொள்கைகளைக் கலந்தாராய்வதில் மற்றவர்களோடு பங்கு பற்றுவதில்லை. அரசியலில் இவர் நடுநிலை வகிக்கிறார், மேலும், இவரது நடுநிலை கற்பனையன்று என்பது இவரது மறு தேர்தலில் இவரை எவரும் எதிர்த்துப் போட்டியிடாததிலிருந்து தெரிய வருகிறது. இவர் சபாநாயகராக இருக்கும் வரையில், ஒவ்வொரு பொதுத் தேர்தலிலும் இவர் எதிர்ப்பின்றி தேர்ந்தெடுக்கப்படுகிறார். பதவியில் இருக்கும் பொழுது இவர் அரசியலைத் தள்ளி வைத்து விடுகிறார். உறுப்பினர் ஒருவர் சபாநாயகராக தேர்ந்தெடுக்கப்படும் பொழுது இவர் தம் அரசியல் கொள்கைகளைப் பற்றிக் கவலை கொள்ளத் தேவையில்லை. இவர் தம் பதவியைத் தேடிக் கொண்டு விடுவதால் அடுத்தடுத்து இப் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்படுவது உறுதியாகும்.

### இப் பதவியின் சிறப்பு நிலை

சபாநாயகர் பதவி பெறற்கரிய பேறு ஆகும். இது மாண்பு மிக்கதோடன்றி நீண்டு வகிக்கக் கூடிய பதவியுமாகும். இப் பதவிக்கான ஊதியங்களும் கணிசமானவை. இவர் தாராளமாக ஊதியம் பெறுகிறார். வெஸ்ட்மின்ஸ்டர் அரண்மனையில் வசிக்கிறார். பதவியிலிருந்து ஓய்வு பெறும் பொழுது ஓய்வு ஊதியமும் பிரபுப் பட்டமும் பெறுகிறார். இவைகள் இப்பொழுது வழக்கமாக அளிக்கப்படுகின்றன. ஆனால் இவைகளை சபாநாயகருக்கு அளிக்க சட்ட ஆதாரம் இல்லை. ஆனால் சபாநாயகர் பதவியிலிருந்து ஓய்வு பெறும் பொழுது ஓய்வு ஊதியமளிக்க சபையின் இசைவைத் தெரிவிக்கத் தீர்மானமொன்றை நிறைவேற்றல் வழக்கமாகும். ஆனால் பிரபுவாகப் படைக்கும் அதிகாரம் அரச பதவிக்குரியதாகும். பிரபுப் பட்டத்தைப் பதவி விலகிய சபா

நாயகர் ஏற்க மறுக்கலாம். 1928-ல் திரு. ஜே. எச். வையிட்லி (J. H. Whitely) இப் பட்டத்தை ஏற்க மறுத்து விட்டார். பூவிலும் முள் இருப்பது போல், சபாநாயகர் இப் பதவியை ஏற்றுக் கொண்டவுடன் அரசியலில் இருந்து விலகிக் கொள்ளுகிறார். அரசியல் களத்தில் இருந்த ஒருவருக்கு இது கடுந் தண்டனையாகும். தம் நண்பர்களை விருந்திற்கு அழைப்பதிலும் பேச விரும்புகின்றவர்களை கண்டறிந்து கொள்ளவதிலும் ஒழுங்கு முறை பற்றி முடிவு செய்வதிலும் இவர் நீதிபதிக்குரிய நடுநிலை தவறாமையைப் பற்றி நிற்கிறார். பொது மனிதர்களைப் போல் இவர் சொந்த அரசியல் வெறுப்பு விருப்புகளுக்கு உட்படுபவராக இருந்தால் எப்படியாவது இவைகளை இவர் அடங்கியாள முற்படவேண்டும்.

### சபாநாயகரின் செயல் முறைகள்

சபையின் முழுக் கூட்டத்திற்குத் தலைமை தாங்குதல் இவருடைய தலையாய பணியாகும். இப் பணி நீதிமன்ற இயல்புடையதாகும். நடுநிலை தவறாமல் சுயேச்சையாக இருந்து செயல்படுவதால் இக் கடமைப் பொறுப்பை இவரால் மன நிறைவோடு நிறைவேற்ற முடிகிறது. சிரம் தாழ்த்தி சபைக்குள் நுழைவதும் வெளியேறுவதுமாகிய சிறு மரபுகள் சபையில் பெரும் சிறப்புப் பெறுகின்றன். இவருடைய தனி மதிப்பு நிலையை எல்லா உறுப்பினரும் நிலைபெறச் செய்வதே இவர் அரசியலில் இருந்து விலகி நிற்க முதன்மையான காரணமாக இருக்கிறது. அரசியல் நிறுவனங்கள் செயல்பட வேண்டுமென்ற விருப்பமே இதற்கும் காரணமாகிறது. ஒரு விளையாட்டிற்கு நடுவர் ஒருவர் இருப்பது போல் தான் சபாநாயகரும் சபையில் இருந்து செயல்படுகிறார். விதிகளின் படி சபை இயங்குவதை இவர் பார்த்துக் கொள்ளுகிறார். இவருடைய முடிவுகளை எதிர்ப்பதில்லை. அப்படி எதிர்ப்பதாக இருந்தாலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட விதி முறைகளையொட்டியே இருக்க வேண்டும். விதி மீறல்கள் தண்டிக்கப்படலாம்.

தலைமை தாங்கும் பொழுது சபாநாயகர் பல கடமைப் பொறுப்புகளை நிறைவேற்றுகிறார். விவாதங்கள் ஒழுங்காக நடைபெற இவர் உறுதியளிக்க வேண்டும். உறுப்பினர்கள் தம் கருத்துகளை தலைவரை நோக்கியே தெரிவிக்க வேண்டும். இவர் எழுந்து நிற்கும் பொழுது உறுப்பினர்கள் அமர்ந்து கொள்ள வேண்டும். சபையின் நடவடிக்கைகள் வரம்பு மீறும் பொழுது இவர் சபையில் ஒழுங்கை நிலை நாட்டுகிறார். இவரது அதிகாரத்தை சபை ஏற்கத் தவறும் பொழுது கூட்டத்தை சபாநாயகர் தள்ளி வைக்கலாம் அல்லது நீக்கிவிடலாம். உறுப்பினர் ஒருவரின் கூற்று ஒழுங்கு

மீறியதாக இருந்தால் அவரை மன்னிப்புக் கேட்கச் சொல்லவும் சபையில் இருந்து வெளியேறச் சொல்லவும் சபாநாயகருக்கு அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது. இவைகளில் எதைச் செய்யத் தவறினும் சபாநாயகரை அவமதித்த குற்றத்திற்காக ஒருவரைப் 'பெயர் சூட்டி' சபைக் கூட்டத்திலிருந்து விலக்கிவைக்கலாம். இடையறாத முறையற்ற நடத்தைக்காக ஒருவரை நீண்ட காலத்திற்கு சபையிலிருந்து விலக்கி வைக்கப் பிரேரணை ஒன்று கொண்டு வரப்படலாம். சபாநாயகரின் தீர்ப்புகள் இறுதியானவை. இவை பற்றி சபைக்கு மேல் முறையிடுகள் செய்யப் படுவதில்லை. சபாநாயகர் விரும்பினால் எந்தப் பிரச்சினையையும் சபையின் தீர்ப்புக்கு விட்டு சபையின் முடிவிற்கேற்ப நடந்து கொள்ளலாம். ஆனால் சபாநாயகர் தம் சொந்தப் பொறுப்பில் ஒரு முடிவு செய்வாரெனில் அதை மீற முடியாது. தன் விதிகளை பெரும்பான்மையான வாக்குகளால் சபை நீக்கி விட்டு சபாநாயகரின் முடிவை சுற்றி வளைத்து மீறலாம். ஆனால் இது அடிக்கடி நடப்பதில்லை. அவ்வப்போது விதிகள் நீக்கி வைக்கப் படலாம். ஆனால் இத்தகைய நோக்கங்களுக்கு அல்ல.

சபாநாயகர் சபையில் இருக்கும் பொழுது நடைமுறை விதிகளை நிலைக் கட்டளைகளுக்கேற்ப விளக்கிச் செயல் படுத்த வேண்டும். முன்னிருந்தவர்கள் ஏற்படுத்திய முன் நிகழ்வுகளையும் கருத்தில் கொண்டு இவர் செயல்பட வேண்டும். காலங் கடத்தும் நோக்கமுடைய பிரேரணைகளை இவர் ஏற்க மறுக்க வேண்டும். பிரேரணை முறையாக உள்ளதென்பதை இவர் உறுதி செய்து கொள்ள வேண்டும். அறிக்கைகள் மீதும் குறிப்பாக அமைச்சர்களை நோக்கிய கேள்விகள் மீதும் இவர் பொதுத் தணிக்கை செய்ய வேண்டும். முன் கேட்கப்பட்ட கேள்விகளை இவர் தவிர்க்க வேண்டும். உறுப்பினர்களின் சொற்பொழிவுகளில் காணும் பொருத்தமற்ற தொடர்பில்லா கருத்துகளை இவர் தடைசெய்ய வேண்டும்.

உறுப்பினர்கள் பேச வேண்டிய வரிசை முறையை முடிவு செய்யும் முழு அதிகாரம் சபாநாயகருடையதெனினும் முன்னறிவிப்பினால் சபாநாயகரின் பார்வையில் பட்'லென்பது பெறப் படுகிறது. இருப்பினும் விவாதங்கள் சுயேச்சையாகவும் நேர்மையாகவும் நடைபெறுமாறு பார்த்துக் கொள்ளப்படுகின்றன. ஆகவே, சபாநாயகர் மூன்று முக்கிய கருத்துகளில் கவனம் செலுத்துகிறார்.

(1) ஒதுக்கியளிக்கப்பட்ட நேரத்தை எல்லாக் கட்சிகளும் நேர்மையாகப் பங்கிட்டுக்கொள்வதை இவர் உறுதிப்படுத்துகிறார்.

தீவிரமான அல்லது இணங்காக் கருத்துகளை சபை கேட்க வேண்டு மெனும் வலிமையான மரபு, சிறிய கட்சிகள் பெருமளவில் நேரத் தைப் பயன்படுத்திக் கொள்வதில் முடிகிறது.

(2) தனிப்பட்ட உறுப்பினர், சிறப்பாக அரசாங்கத் தரப்பில் உள்ள பின்னணி உறுப்பினர், கேள்விகள் கேட்பதிலும் விவா தங்களில் பங்கு பற்றுவதிலும் கட்சி அமைப்பிலிருந்து பாதுகாப்பு பெறுமாறு இவர் பார்த்துக் கொள்ளுகிறார். சட்ட ஆக்கத் திட்டங்களை அரசாங்கம் முடிக்க முற்படும் பொழுது சபையின் நேரத்தை தேவைக்கு மேல் இது கவர்ந்து கொள்ளாதவாறு இவர் பாதுகாக்கிறார். ஆகவே, ஒரு விவாதத்தை முடிவிற்குக் கொண்டு வருவது பற்றி முடிவு செய்யும் பொறுப்பு சபாநாயகரிடம் விடப் பட்டுள்ளது. அரசாங்கத்தை இக் கட்டான நிலைக்குட்படுத்தும் முறைகளைத் தடுப்பதற்காக, திருத்தங்களையும் கேள்விகளையும் ஏற்கவும், தள்ளி வைப்புப் பிரேரணையில் விவாதிக்கப்படும் பொருளை ஏற்கவும், இவருக்கு முடிவான அதிகாரம் கொடுக்கப் பட்டுள்ளது. இத்துடன், 1911ஆம் ஆண்டின் பாராளுமன்றச் சட்டத்தின் கீழ் ஒரு மசோதா 'பண மசோதா' தானுவென சான்று வழங்கும் முழு அதிகாரத்தை இவர் பெற்றிருக்கிறார்.

சபை ஒரு முடிவு செய்யும் பொழுது நடைமுறையில் சபா நாயகர் அரும் பணியாற்றுகிறார். இவர் தேவையான கேள்வி களைக் கேட்கிறார்; எடுத்துக் கூறுகிறார்; ஆதரவையும் எதிர்ப்பை யும் முடிவு செய்கிறார்; பிரேரணை வாக்கெடுப்பிற்குச் சென்றால், முடிவை அறிவிக்கிறார். வாக்குகள் சமமாக அளிக்கப்பட்டால் இவருடைய முடிவு செய் வாக்கினுல் முடிவு செய்யலாம். ஆனால் மாற்றத்தைத் தவிர்க்கும் முறையில் தான் இவர் வாக்கு பயன் படுத்தப்படுகிறது. இதனல் நடுநிலை தவருமை நிலைப்பதோடு, பின்னர், மேலாராய்வும் அனுமதிக்கப்படுகிறது.

இவைகளுக்கெல்லாம் மேலாக, சபாநாயகருக்குப் பல்வேறு கடமைகளும் இருக்கின்றன. இடைத் தேர்தலை நடத்த இவர் கட்டளையிடுகிறார். தனி மசோதாக்களின் ஆய்வாளர்களை அமர்த்துகிறார். நிலைக் (கமிட்டி) குழுக்களின் தலைவர்களைத் தெரிவு செய்கிறார். பல்வேறு நிலைக் குழுக்களுக்குச் மசோதாக்களை ஒதுக்கிக் கொடுக்கிறார்.

சபைக்கு வெளியே, பொதுமக்கள் சபையின் பிரதிநிதியாகவும் இதன் உரிமைகளின் காவலராகவும் இவர் இருக்கிறார். சபையின் சார்பில் அலுவல் தொடர்புடைய செயல் முறைகளை இவர்

கவனிக்கிறார். வெளி நாடுகளிலிருந்தும் பிற சட்ட மன்றங்களிலிருந்தும் இதற்கனுப்பப்படுகின்ற செய்திகளையும் தஸ்தாவேசுகளையும் இவர் பெற்றுக் கொள்ளுகிறார். சபைக்கும் அரசருக்கும் அதிகார முறையில் இவர் செய்திகளைக் கொண்டு செல்லுகிறார். ஒவ்வொரு பாராளுமன்றக் கூட்டமும் தொடங்கும் போது சபையின் உரிமைகளை இவர் வற்புறுத்துகிறார். பாராளுமன்ற நிறுவனங்கள் அல்லது நடைமுறைகள் அல்லது தேர்தல் முறைச் சீர்திருத்தம் போன்றவைகளையொட்டிய சிறப்பான மாநாடுகள் இவருடைய தலைமையில் கூடுகின்றன. உரிமை மீறல்கள் முதல் நோக்கில் குற்றமென மெய்ப்பிக்கப்படுகின்றனவா வென்பதை சபாநாயகர் முடிவு செய்கிறார். உரிமை மீறியதாகக் கண்டால் இவர் தக்க தண்டனை அளிக்கிறார்.

சபையின் செயற்பாட்டை யொட்டி சபாநாயகரின் சிறப்பு நிலையை மிகைப்படுத்துதல் கடினமாகும். 'அரசாங்கத்துக்குரியவனுகவும் எதிர்க்கட்சிக்குரியவனுகவும் நான் சபாநாயகராக இருக்கவில்லை. நான் பொதுமக்கள் சபைக்குரியவன், எல்லாவற்றிற்கும் மேல்; நான் பின்னணி உறுப்பினருக்குரியவன் என்று கிளிஃப்டன் பிரவுன் (Cliften Brown) என்பார். 1945-இல் கூறினர். செயல்துறை அதிகார மிக்கதாகிக் கொண்டு வருகையில் சபாநாயகர் சபையின் உரிமைகளின் காவலராளுர். சில வேளைகளில் சபைக்கெதிராக இவர் சபையின் உரிமைகளைக் காக்க வேண்டியிருக்கிறது. சுருங்கக் கூறின், இப் பதவி அரசியலமைப்பின் உயிர் நாடியாக இருப்பது போல் வேறு எந்த நிறுவனமும் இருக்கவில்லையெனலாம்.

### சபாநாயகரோடு தொடர்புடைய சபையின் அலுவலர்கள்

வழிமுறைகள் பற்றிய குழுத்தலைவர்: இவரை வழக்கமாக குழுக்களின் தலைவர் என்ற பெயரால் குறிப்பிடுவர். இவருக்கு மூன்று முக்கிய செயல் முறைகள் இருக்கின்றன.

(1) இவர் சபாநாயகரின் துணைவராகச் செயல்படுகிறார் சபாநாயகர் உடல் நலமின்றி இருக்கும் பொழுதும், சபைக்கு வர இயலாத பொழுதும் இவர் சபைக்கு தலைமை தாங்குகிறார். எவ்வாறாயினும், சபாநாயகரைப் போலன்றி இவர் சபையின் பதவிக்காலத்திற்கு மட்டும் துணைத்தலைவராக அமர்த்தப்படுகிறார்.

(2) சபை குழுவாக அமைந்து செயல்படும் போது இவர் சபாநாயகருக்குப் பதிலாகத் தலைமை வகிக்கிறார். மேசைக்கு முன் உள்ள எழுத்தர் இருக்கைகளில் ஒன்றில் இவர் இப்பொழுது அமர்ந்து கொள்ளுகிறார்.

(3) எல்லாத் தனி அலுவல்கள் மீதும் இவர் கவனம் செலுத்து கிருர். குழுத்தலைவருக்கு உதவியாக ஒரு துணைத் தலைவரும் (Deputy Chairman) இருக்கிருர். இவர் தலைவரின் பணிகளை மேற் கொள்ளலாம். அரசியல் சர்ச்சைகளில் இவ் விருவரும் பங்கு பற்றுவதில்லை.

**காவற்துறை முகவர்:** சபாநாயகருக்கு உதவியாக இருக்க இவரை அரசர் அமர்த்துகிருர். சபையின் கட்டளைகளை இவர் செயற்படுத்துகிருர். சபாநாயகரின் கட்டளைகளை இவர் நிறை வேற்றுகிருர்.

**பொதுமக்கள் சபையின் எழுத்தர்:** இவரையும் இவருக்கு உதவியாக இரண்டு உதவி எழுத்தர்களையும் அரசர் அமர்த்துகிருர். சபையின் பேருரையால்தான் இவர்களைப் பதவியிலிருந்து நீக்க முடியும்.

## 6. பாராளுமன்றச் சிறப்புரிமை

நாட்டின் சாதாரணச் சட்டங்களிலிருந்து பாராளுமன்றச் சிறப்புரிமை ஒரு விதி விலக்காகக் கருதப்படுகிறது. ஏனென்ருல், உரிமை மீறலை முடிவு செய்யும் அதிகாரம் பாராளுமன்றத்திற்கே, உரியதாக இருக்கிறது. உரிமை மீறயவர்களைத் தண்டிக்க இரு சபைகளும் அதிகாரம் பெற்றிருக்கின்றன. எனினும் புதிய உரிமைகளை இரு சபைகளும் படைக்க இயலாது. ஓர் உரிமை பற்றிய தகராறு எழுமாயின் அதை நீதிமன்றங்கள் முடிவு செய்யும். சபை விவாதங்கள் பற்றிய அறிக்கைகளுக்கு பொதுமக்கள் சபையின் சிறப்புரிமையை நீட்டிக்கவியலாதென 1839-ல் ஸ்டாக்டேலுக்கும் ஹான்சார்டுக்கும் இடையிலான வழக்கில் முடிவு செய்யப்பட்டதால் பாராளுமன்ற இதழ்கள் பற்றிய சட்டத்தால், (Parliamentary Papers Act, 1840) இகழுரை பற்றிய நடவடிக்கைகளிலிருந்து விவாதங்கள் பாதுகாக்கப்பட்டன.

பேச்சுரிமை, அரசரை அணுகும் உரிமை, நடைமுறை விதிகளை ஏற்ற முறையில் அமைத்துக் கொள்ளக் கோரும் உரிமை ஆகியவை பழமையான பாராளுமன்றங்களின் மிக முக்கியமான சிறப்புரிமைகளாகும். இரு சபைகளும், குறிப்பாக பொதுமக்கள் சபை, அரசரோடு கொண்டுள்ள தொடர்பு பற்றிய அடிப்படையான உரிமைகளை நிலை நாட்டுதல் தேவையெனக் கருதின. நிறுவப் பெற்ற முன்னிகழ்வுகளிலிருந்து எழுதப் பெருத சட்டத் தொகுப்பு ஒன்று உருவாகியது. இது இரு சபைகளுக்கும் தனித்தனியே சில குறிப்பிட்ட உரிமைகளை அளித்தது. இவ் வுரிமைகளை இன்றும் சபா

நாயகர் பெருமக்கள் சபையிடமிருந்து கோரிப் பெறுகிறார். அரசர் அல்லது அரசியார் சார்பில் இவ்வுரிமைகளை சான்சலர் பிரபு பொதுமக்கள் சபைக்களிக்கிறார்.

### மிக முக்கியமான சிறப்புரிமைகள்

(1) சிறை பிடிக்கப்படுவதிலிருந்து விடுதலை: குற்றவியல் குற்றச் சாட்டுகளின் பேழுல் இச் சிறப்புரிமை கோர முடியாது. கடன் கொண்டதற்காக ஒருவர் சிறை பிடிக்கப் படலாமெனும் பொழுது அதாவது 1869க்கு முன், இது முக்கியமானதொரு உரிமையாகும். சபை முன் சாட்சிகளாக வருபவர்களுக்கும் குழுக்களின் முன் சாட்சியாக தோன்றுகிறவர் களுக்கும் சபையின் பணியாட்களுக்கும் இச் சிறப்புரிமை அளிக்கப்படுகிறது.

(2) பேச்சுரிமை: அரசருக்கெதிராக உறுப்பினர்களைப் பாது காக்க முதலில் இச் சிறப்புரிமை வலியுறுத்தப்பட்டது. முதலாம் எலிசபெத் இதைஏற்றுக் கொண்டார். ஆனல் சபைக்கு அக்கறை இல்லாத வெளிநாட்டுக் கொள்கை, அரசியாரின் திருமணம் ஆகிய குறிப்பிட்ட பொருள்களை விவாதிக்கலாகாதென அரசியார் முன் வரைசெய்தார். இந்த சிறப்புரிமையை ஸ்டுவர்டு மரபினர் ஏற்க மறுத்தனர். 1621-ல் ,முதலாம் ஜேம்ஸ் மன்னரை சபை கண்டித் தற்காக சபாநாயகரிடம் குறை கூறினர். சபை இதை முறையாக எதிர்த்த பொழுது சபையின் அன்றாட நடவடிக்கைக் குறிப்புகளில் இவரைத் தாக்கிய பகுதிகளை கிழித்தெறிந்தார். முதலாம் சார்லஸ் இன்னெருபடி மேலே சென்று சர் ஜான் எலியட் (Sir John Eliot) என்பவரையும் மற்ற உறுப்பினர்களையும் 1629-ல் சிறை பிடித்தார். ஐந்து பாராளுமன்ற உறுப்பினர்கள் 1642-ல் தெரிவித்த கருத்துகளுக்காக அரச துரோகக் குற்றம் சாட்டி அவர்களை சிறை பிடிக்க முயன்றார். 1689-ல், உரிமைகள் மசோதா இச் சிறப்புரிமைகளை முடிவாக உறுதி செய்தது. பாராளு மன்றத்தில் பொய்க் குற்றச்சாட்டு செய்த குற்றத்திலிருந்து உறுப்பினர்களுக்கு இச் சிறப்புரிமை காப்பளிக்கிறது என்பதில் தான் இதன் சிறப்பு இருக்கிறது. இரு சபைகளின் ஆணையின் கீழ் அச்சிடப்பட்ட எல்லாப் பாராளுமன்ற இதழ்களுக்கு 1840-ல் காப்புரிமை அளிக்கப் பட்டது.

(3) ஒரு குழுவாக அரசரை அணுகி பேருரை ஒன்றையளிக்கும் உரிமையைச் சபையினர் பெற்றனர்.

(4) அரசரை அணுகிப் பாராளுமன்ற நடைமுறை விதிகளை ஏற்புள்ள வகையில் அமைத்துக் கொள்ள வேண்டுகோள் விடுக்கும்

உரிமையையும் சபையினர் பெற்றனர். ஆனால் இவைகள் இப்பொழுது முக்கியமானதல்ல.

(5) **சபையின் அமைப்பிற்கு வழி செய்யும் உரிமை:** அவ்வப்போது தோன்றும் காலி இடங்களை நிரப்பக் கட்டளைகளைப் பிறப்பித்தல், சபையின் மாண்பைக் குறைக்கும் உறுப்பினரை வெளியேற்றுதல் அல்லது ஒதுக்கி வைத்தல், சபையின் உறுப்பினராக இருப்பவர்களின் தகுதிகள் பற்றிய முடிவுகள் ஆகியவை இதில் அடங்கும்.

(6) **சபையின் நடைமுறைகளை ஒழுங்கு படுத்தும் உரிமை:** எந்தப் பொருளையும் சபை விரும்பும் வகையில் விவாதிக்கலாம். இவ்வுரிமையை வலியுறுத்த, சபையின் கூட்டத் தொடரின் போது பேருரையின் மீதான விவாதத்திற்கு முன், ஒரு மசோதா முதல் வாசிப்பிற்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது. ஆனால் இதையொட்டி மேல் நடவடிக்கையெதும் எடுக்கப்படுவதில்லை. நார்த்தாம்டனிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட திரு. பிராட்லா (Bradlaugh) என்னும் நாத்திகர் பதவிப் பிரமாணம் எடுக்க 1884-ல் சபை அனுமதி மறுத்த போது இவ்வுரிமை மிகத் தெளிவான விளக்கம் பெற்றதெனலாம். சபையின் செயலைச் சட்டத்திற்கு மாறானதென நீதிமன்றம் கூற மறுத்து விட்டது. சபைக்குள் எழும் பிரச்சினைகளையொட்டி தீர்வு காண சபையினரே நீதிபதிகளாக இருக்க வேண்டுமெனும் கருத்தை நீதிமன்றம் தெரிவித்தது.

(7) **உரிமை மீறுவதையும் சபையை அவமதிப்பதையும் தண்டிக்கும் அதிகாரம்:** உரிமை மீறுவது பாராளுமன்ற உயர் நீதிமன்றத்தை அவமதிப்பதாகிறது. ஆகையால், நீதிமன்றங்களைப் போல், இரு சபைகளும் தம் மாண்பையும் திறமையையும் பேணுவதற்கு நடவடிக்கை எடுக்கலாம். பாராளுமன்ற உறுப்பினரை உறுப்பினரல்லாதவர் அச்சுறுத்தினால் அல்லது மிரட்டினால் சபையை அவமதித்த குற்றம் எழும். அல்லது சபையின் கட்டளைகளை செயல்படுத்துவதோடு ஒருவர் குறுக்கிட்டாலும் அல்லது கீழ்படிய மறுத்தாலும் அவமதிப்பு ஏற்படலாம்.

உரிமை மீறல் ஏற்பட்டுள்ளதாக சபை உடனடியாக முடிவு செய்யலாம் அல்லது உரிமைகள் பற்றிய குழுவின் ஆராய்விற்கென சபை குறிப்பிடலாம். உறுப்பினரல்லாதாரைச் சபை முன் வரச் செய்து கடிந்துரைத்தும் அல்லது எச்சரிப்புரை செய்தும் தண்டிக்கலாம், உறுப்பினராயின் வெளியேற்றப்படலாம் அல்லது தள்ளி வைக்கப்படலாம். கடுமையான மீறல்கள்

அல்லது குற்றம் செய்தவர் வருத்தம் தெரிவிக்கவில்லையென்றாலும் அபராதம் அல்லது கூட்டத் தொடர் முடியும்வரை சிறைபிடித்தல் ஆகியவைகளை விதிக்கலாம்.

### 7. சபையின் குழுக்கள்:

குழு முறையின் வளர்ச்சி

பல உறுப்பினர்களைக் கொண்டிருக்கும் நிறுவனம் கருத்துகளைக் கலந்தாராயப் பொருத்தமானதெனினும் விபரங்களை ஆராய இது ஏற்றதன்று. ஆகையால் ஒரு சில உறுப்பினரைக் கொண்ட குழுவை அமைப்பது வழக்கமான நடைமுறையாகும். திட்டங்களை விரிவாக விவாதித்துப் பரிந்துரைகளோடு முழுச் சபைக்கு இக் குழு அறிக்கை செய்கிறது. முழுச் சபையின் குழுக்கள் நீங்கலாக இன்றைய பொதுமக்கள் சபையின் குழுக்கள் அமைப்பிற்கு இது ஒரு காரணமாகும்.

பல்வேறு காரணங்களுக்காக முதலில் குழுக்கள் அமைக்கப்பட்டன. துவக்கத்தில் முக்கியமான மசோதாக்கள் ஓர் உறுப்பினரின் பொறுப்பில் விடப்பட்டன. இவர் ஒரு செயலராகவோ பிரிவிக் கவுன்சிலராகவோ இருந்தார். இவைகளைப் பற்றி அரசியாரின் கருத்து எப்படியிருக்குமென்பது பற்றிய சில குறிப்புகளை இவர் கொடுக்கலாம். சட்ட ஆக்கத்தின்மீது தம் கட்டுப்பாட்டை நீட்டிக்க விரும்பிய முதலாம் எலிசபெத் அரசியார், பொதுமக்கள் சபையில் ஆய்வுக் குழுவினராக இருந்த பிரிவி கவுன்சிலர்களை ஒரு குழுவாக அமைக்கும் முறையைக் கையாண்டார். இக் குழுவிற்கு மசோதாக்கள் ஆய்விற்கென அனுப்பப்பட்டன. இக் குழுக்கள் முதலில் சபைக்கு வெளியில் கூடின. ஆனால் பின்னர் வெஸ்ட்மின்ஸ்டரில் தமக்கென குழு அறைகளைப் பெற்றன.

சபையின் அனைத்து உறுப்பினர்களையும் கொண்ட குழுக்கள் இரண்டு முதன்மையான காரணங்களுக்காக வளர்ச்சியடைந்தன. ஒரு புறம், டியுடர்களின் கட்டுப்பாட்டு முறைகளைத் தொடர்ந்து செயலாற்றுவதில் முதலாம் ஜேம்ஸ் மன்னர் அக்கரை காட்டவில்லை. ஏனெனில் குழுக்களை நிரப்பப் போதிய பிரிவிகவுன்சிலர்கள் கிடைக்கவில்லை. சாதாரண உறுப்பினர்கள் குழுக்களில் நியமனம் பெறவில்லையெனினும் இவர்கள் குழுக் கூட்டத்தில் கலந்து கொண்டதோடு குழு கூடுவதற்குத்தேவையான எட்டு உறுப்பினர் குறைவெண்ணை (Quorum) நிறைவு செய்ய இவர்கள் வரவேற்கப்பட்டார்கள். மறுபுறம், அரசரைப் பாதிக்கின்றவைகளையொட்டிய விவாதங்களில் பெருமளவு கட்டுப்பாடற்ற விவாதங்களைச் சபை விரும்பியது. ஆகையால் எல்லா உறுப்பினர்களையும் கொண்ட

முழுக் குழுவை சபை அமைத்துக்கொள்ளத் தொடங்கியது. இதனால் அரசரின் வகையாளாக இருந்த சபாநாயகரை சபையின் தலைவராகச் செயல்படாதவாறு பார்த்துக் கொள்ளமுடிந்தது. இக் குழுக்கள் (அனைத்து உறுப்பினர் குழு) பெருமளவில் பயன்படுத்திக் கொள்ளப்பட்டன. தொடக்க முதலே இருந்து வந்த ஆய்வுக் குழுக்களிலிருந்து 1628-ல் ஐந்து பெரிய நிலைக் குழுக்கள் வளர்ச்சி யடைந்தன. சிறப்புரிமைகள், தேர்தல்கள் ஆகியவை பற்றிய குழுக்களைத் தவிர இவைகள் (ஐந்தும்) முழுச் சபையின் குழுக்க ளாயின. இவைகள் மேதகுக் குழுக்கள் (Grand Committees) யென பெயர் பெற்றன. ஆனல் இரண்டாம் சார்லஸ் காலம் வரையில், முழுச் சபையின் குழுக்கள் மசோதாக்களின் குழுநிலை எய்தத் தொடங்கவில்லையெனலாம்.

1882ஆம் ஆண்டு வரை, ஆய்வுக் குழுக்களின் ஆய்விற்கு விடப் படாத பொது மசோதாக்களை முழுச் சபையின் குழுக்கள் ஆராய்ந்தன. இவ் வாண்டில், ஐரிஷ்காரர்களின் தடங்களைச் சமாளிக்க உதவும் நோக்கத்தோடு கிளாட்ஸ்டன் முதன் முறையாக நிலைக் குழுக்களை அமைத்தார். இப்பொழுதுள்ள முறை நிலைக் கட்டளைகளால் 1907-ல் நிறுவப் பெறும் வரையில் இவைகள் எதிர்ப்பிற்குள்ளாயின.

இக் காலத்திய குழு முறை முதன்மையாக இன்று ஐந்து வகைக் குழுக்கள் இருக்கின்றன:

(1) முழுச் சபையின் குழுக்கள் : முழுச் சபையின் குழு வென்பது பொதுமக்கள் சபையினர் ஒரு குழுவாக அமர்வதைக் குறிப்பிடுகிறது. சபை குழுவாக அமரும் பொழுது சபாநாயகர் தம் இருக்கையிலிருந்து விலகி அமர்ந்து கொள்ளுகிறார். சபையின் சின்னமாகிய கோல் (Mace) சபை முகவரால் மேசையின் கீழ் வைக்கப்படுகிறது. குழுத் தலைவர் (Chairman) முழுச் சபைக் குழுவின் நடவடிக்கைகளை நடத்தி வைக்கிறார். இப்பொழுது சபையின் நடைமுறை விதிகள் சற்று நெகிழ்வாக இருக்கும். விரிவான விவாதத்திற்கு இது உதவுகிறது. உறுப்பினர்கள் ஒரு பொருளைப் பற்றி ஒரு தடவைக்கு மேல் இக் குழுவில் பேச அனுமதிக்கப்படுகிறார்கள்.

முழுச் சபைச் குழுவின் கருத்தாய்விற்கு எப் பொருளையும் விடலாமெனினும் பரவலான நலன் பற்றிய முக்கியமான மசோதாக்களை இக் குழு இன்று ஆராய்கிறது. கட்சிப் பற்றுடைய ஒருவர், புதிய பாராளுமன்றத்தின் பதவிக் காலத்திற்கு இவர் தலைவராக அமர்த்தப்படுகிறார். இவர் சபாநாயகரின் இருக்கையில்

அமருவதில்லை. இவர் தலைமை தாங்கும் பொழுது பொதுமக்கள் சபை குழுவாக மாறி விடுகிறது. ஒரு மசோதாவின் இரண்டாவது வாசிப்பிற்குப் பின், இதை முழுச் சபைக் குழுவிற்கு அனுப்புமாறு ஓர் உறுப்பினர் முன் மொழியலாம். அல்லது இதன் ஒரு பகுதியை ஒரு குழுவிற்கும் இன்னொரு பகுதியை நிலைக் குழுவிற்கும் அனுப்புமாறு கேட்கலாம்.

அரசாங்கத்திற்குச் சபையில் சிறிதளவு பெரும்பான்மை பலம் இருக்கும் பொழுது சர்ச்சைக்குரிய எல்லா மசோதாக்களையும் சபையின் முழுக் குழுவிற்கு அனுப்பும் போக்கு காணப்படுகிறது. ஏனெனில் ஒரு நிலைக் குழுவின் அரிதிப் பெரும்பான்மை பலம் சரிவீத அளவில் சிறியதாக இருக்கிறது. அரசாங்கச் சார்புடைய உறுப்பினர் உடல் நலமின்மை காரணமாக வராதிருந்தால் மசோதாக்கள் தோல்வியடையும்.

ஒரு மசோதாவை முழுச் சபைக் குழு ஆராய்ந்து முடித்த பின், குழு சபைக்கு அறிக்கை செய்யலாமென ஒரு பிரேரணை கொண்டு வரப்படுகிறது. பின், சபாநாயகர் தன் இருக்கையில் அமர்கிறார். குழு நடவடிக்கைகள் பற்றிக் குழுத் தலைவர் சபாநாயகரிடம் அறிக்கை கொடுக்கிறார். அதாவது பொதுமக்கள் சபைக்கு முழுச் சபைக் குழு அறிக்கை கொடுக்கிறது. இதன் சிபாரிசுகளைப் பின்னர் சபை ஏற்றுக் கொள்ள தொடங்குகிறது.

பொதுமக்கள் சபை வருவாய் மசோதாக்களை விவாதிக்கும் பொழுது முழுச் சபையின் குழுவை வழி துறை ஆய்வுக் குழு (Ways and means Committee) வெனக் குறிப்பிடுகின்றனர். பண ஒதுக்கீடுகள் அல்லது செலவினங்கள் பற்றி இது ஆராய்கிற பொழுது சப்ளைக் குழுவெனப் பெயர் பெறுகிறது.

(2) நிலைக் குழுக்கள்: நிலைக் குழுக்கள் மசோதாக்களை ஆய்கின்றன; திருத்துகின்றன. வரி விதிப்பிற்கான ஒரு மசோதா, திரண்ட நிதி, பண ஒதுக்கீடு ஆகியவை பற்றிய மசோதாக்கள், தற்காலிகக் கட்டளைகளை உறுதி செய்யும் மசோதாக்கள் ஆகியவை நீங்கலாக மற்றெல்லாப் பொது மசோதாக்களையும், சபை வேறு விதமாக விரும்பினாலன்றி, ஒரு நிலைக் குழுவிற்கு ஒப்படைக்க வேண்டுமென நிலைக் கட்டளை (40) வலியுறுத்துகிறது. முதல் தர அரசியலமைப்புச் சிறப்பு வாய்ந்த மசோதாக்களையும், விரைவில் நிறைவேற வேண்டிய மசோதாக்களையும் சர்ச்சைக்குட்படாத மசோதாக்களையும் சபை பொதுவாக ஏற்றுச் செயல்படுத்தி விடுகிறது. இத்தகைய மசோதாக்கள் வழக்கமாக முழுச் சபைக் குழு

விற்குச் செல்லுகின்றன. ஆனால் இவைகளை ஆய்வுக் குழுவிற்கும் அல்லது கூட்டுக் குழுவிற்கும் அனுப்பலாம்.

இன்று சபை தேவைக்கேற்ப பல நிலைக் குழுக்களை அமர்த்துகிறது. ஸ்காட்டிஷ் தொகுதி உறுப்பினர்களையும் 20க்கு மிகாமல் மற்ற உறுப்பினர்களையும் கொண்டமைவது ஸ்காட்டிஷ் நிலைக் குழுவாகும். ஸ்காட்டிய மேதகு குழுவென்று ஒன்றும் இருக்கிறது. இதில் ஸ்காட்டிஷ் உறுப்பினரனைவரும் இடம் பெறுவதோடு சபை அமைப்பை வெளிபடுத்தும் வகையில் 10—15 மற்ற உறுப்பினர்களும் இக் குழுவில் சேர்க்கப்படுகிறார்கள். ஒரு மசோதாவின் இரண்டாவது வாசிப்பை முடித்துக் கொண்டாலும் ஸ்காட்லாந்தோடு தொடர்புடைய எல்லா மசோதாக்களையும் இக் குழு இரண்டாவது வாசிப்பிற்கு எடுத்துக் கொள்ளுகிறது. ஸ்காட்டிஷ் மதிப்பீடுகளை விவாதிக்க ஆறு நாட்களையும் ஸ்காட்லாந்தோடு தொடர்புடையவைகளைப் பற்றி மட்டும் விவாதிக்க இரண்டு நாள்களையும் இது செலவிடுகிறது. வேல்ஸ் நாட்டிற்கென தனிப்பட்ட குழு இல்லையெனினும், வேல்ஸ், மோன்மௌவுத் ஷயர் ஆகியவற்றோடு தொடர்புடைய மசோதாக்களை ஒரு குழுவிற்கு அனுப்புகின்றனர். இதில் வெல்ஷ் தொகுதி உறுப்பினர் இடம் பெறுகின்றனர். வேல்ஸ், மோன்மௌத் ஷயர் ஆகியவைகளின் 36 உறுப்பினர்களையும் 25க்கு மேற்படாத மற்ற நியமன உறுப்பினர்களையும் வெல்ஷ் மேதகு குழு கொண்டிருக்கிறது சபையால் குறிப்பிடப்பட்டதும் வேல்ஸ் நாட்டோடு தொடர்புடைய குறிப்பிட்ட சில மசோதாக்களை ஆராயும் பொருட்டு இக் குழு அமர்த்தப்படுகிறது.

ஒவ்வொரு நிலைக் குழுவிலும் இருபதிலிருந்து முப்பதுக்குட்பட்டு உறுப்பினர் இருப்பர். இவர்களை தெரிவுக் குழு அமர்த்துகிறது. சபையில் இருக்கும் கட்சிகளின் நிலை, ஆய்விற்குட்பட்டவைகளையொட்டி உறுப்பினரின் தகுதிகள், நாட்டின் பல்வேறு பகுதிகளுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டிய விருப்பு ஆகியவைகளைக்கருத்தில் கொண்டு இக் குழு உறுப்பினர்கள் அமர்த்தப்படுகிறார்கள். ஒரு குழுவில் பணியாற்ற உறுப்பினர்கள் குறிப்பாக விரும்பினால் இதை கொரடாவிற்கு அறிவிக்கிறார்கள். வாராமைக்காகவும் உறுப்பினரின் சொந்த வேண்டுகோளையொட்டியும் உறுப்பினர்களை தெரிவுக் குழு நீக்கி விடலாம். ஆனால் ஒரு மசோதாவை ஆராயத் தொடங்கியவுடன் அதிகமாக உறுப்பினர்களை இது அமர்த்தும். உறுப்பினரின் நோய் காரணமாக இப்படிச் செய்வது இயல்பாகி விட்டது.

ஒவ்வொரு நிலைக் குழுவிற்கும் ஒருதலைவர் அமர்த்தப்படுகிறார். தலைவர்களின் பட்டியலிலிருந்து ஒவ்வொரு மசோதாவிற்கும் ஒரு

தலைவரைச் சபாநாயகர் அமர்த்துகிறார். 10 சட்டமன்ற உறுப்பினருக்குக் குறையாமல் இப் பட்டியலில் இருக்கின்றனர். கூட்டத் தொடரின் துவக்கத்தில் இவர்கள் சபாநாயகரால் அமர்த்தப்படுகிறார்கள். நிலைக் கட்டளைகளால் விளக்கப்படாத குழு நடைமுறை விதிகள் பற்றிய கருத்துகளை இது முடிவு செய்கிறது. இதுவே அலுவல் குழுவின் கருவாகவும் அமைகிறது. முழுச் சபைக் குழுவின் தற்காலிகத் தலைவர்களாக இதன் உறுப்பினர்கள் செயல்படுகின்றனர். 1907-ல், விவாதங்களை முடிவிற்குக் கொண்டு வரும் அதிகாரம் நிலைக் குழுத் தலைவருக் களிக்கப்பட்டது; 1934-ல் திருத்தங்களைத் தெரிவு செய்யும் அதிகாரமும் இவருக்களிக்கப்பட்டது. நிலைக் குழுக்கள் முற்பகலில் செயல்படுகின்றன. பணி மேற்கொள்ள இக் குழுவின் மூன்றில் ஒரு பங்கினர் குறைவெண்ணாக இருக்கின்றனர்.

நிலைக் குழு முறையில் சில நன்மைகள் இருக்கின்றன. குறிப்பிட்ட பொருள் பற்றிச் சிறப்பறிவு பெற்றுள்ள உறுப்பினர்களால் ஒரு மசோதாவின் விபரங்கள் முழுமையாக விவாதிக்கப் படுகின்றன. சபையில் இருப்பதைக் காட்டிலும் இங்கு நடைமுறை விதி சிறிது நெகிழாக இருக்கின்றன. மேலும் உறுப்பினர்கள் மீதான கொரடாவின் நெருக்கமும் சற்று குறைவானதேயாம். இன்னொரு வகையில், இதன் செயற்பாடுகளும் அறிவிக்கப்படுவதில்லை. இதனால், பொதுமக்களுக்கும் என்ன நடக்கிறதென்பதும் தெரியாது. இதன் விளம்பரமற்ற பணிகள் இக் குழுவில் பணியாற்ற உறுப்பினர்களைப் பெறுவதில் இடர் விளைக்கிறது.

(3) **ஆய்வுக்குழு:** அவ்வப்போது எழும் மசோதாக்களை ஆராயவும், விசாரணைகள் நடத்தவும், மேற்பார்வைப் பணிகளைச் செய்யவும், சபை ஆய்வுக் குழுக்களை அமர்த்துகிறது. குழு அமைக்கப்படும் பொழுது உறுப்பினர்களும் அமர்த்தப்படு கிறார்கள். சபையின் இசைவாணையின்றி உறுப்பினர் எண்ணிக் கையை கூட்டலாகாது. இயன்றவரை இசைவால் ஒவ்வொரு குழுவும் தன் தலைவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுகிறது. அப்படி இல்லையெனில் பெரிய அரசியல் கட்சியால் இவர் நியமிக்கப் படுகிறார். ஆய்வு வரம்பைக் குழு நிறைவேற்ற உதவ இதற்குச் சபை சிறப்பு அதிகாரங்களை அளிக்கலாம். ஆகவே, தலைவரின் கட்டளையின் பேரில் குழு சாட்சிகளை அழைக்கலாம். வேண்டு மென்றே வரவில்லை யென்றால் உரிமை மீறியதாக அறிக்கை கொடுக்கலாம். தஸ்தாவேசுக்களையும் பத்திரங்களையும் இது கேட்டுப் பெற்றுக் கொள்ளலாம்; உட்குழுக்களை அமர்த்தலாம்;

தல ஆய்வுகளை மேற்கொள்ளச் சபைக்கு வெளியே கூட்டத்தை நடத்தலாம்.

ஆய்வுக் குழுக்கள் மூன்று வகைப்படும்: (அ) கூட்டத் தொடர் சார்ந்த, (ஆ) தனிப்பட அமைந்த, (இ) வல்லுநர் குழுக்கள்.

மேற்பார்வைக்குரிய பணிகளைச் செய்ய ஒவ்வொரு தொடர்க் கூட்டத்தின் துவக்கத்தின்போது சபையின் கட்டளையால் தொடர்க் கூட்டக் குழுக்கள் அமர்த்தப்படுகின்றன.

நிலைக் கட்டளைகளால் அமர்த்தப்படும் குழுக்கள்:

(i) பொதுக் கணக்குக் குழு

(ii) தெரிவுக்குழு : இதில் பதினேரு உறுப்பினர்கள் இருக்கின்றனர். இவர்களில் அறுவர் அரசாங்கத் தரப்பினர். நிலைக்குழு உறுப்பினரை இது நியமிக்கிறது; நிலைக் கட்டளைக் குழுவின் எட்டு உறுப்பினர்களை நியமனம் செய்கிறது; தனி மசோதாக்களை தனி மசோதாக் குழுவிற்கு ஒதுக்கியளிக்கிறது ; தனி மசோதாக் குழு உறுப்பினர்களை அமர்த்துகிறது.

(iii) நிலைக் கட்டளைக் குழு, வழி துறைகள் பற்றிய குழுத் தலைவரையும் துணைத் தலைவரையும் கொண்டிருக்கிறது. தனி அலுவல்களோடு மட்டுமே இது தொடர்பு கொண்டு செயல்படுகிறது.

எஞ்சியுள்ள தொடர்க் கூட்டக் குழுக்கள் சபையின் கட்டளையால் அமர்த்தப்படுகின்றன. இவை :

(iv) மதிப்பீட்டுக் குழு

(v) சிறப்புரிமைகள் பற்றிய குழுக்கள் எல்லாக் கட்சிகளிலிருந்தும் பதினைந்து அனுபவமிக்க உறுப்பினர்கள் இதில் இருக்கின்றனர். சபையால் உடனடியாக முடிவு செய்ய இயலாத பொழுது உரிமை மீறல்களை இது ஆய்கிறது.

(vi) பொது விண்ணப்பக் குழுக்கள் உறுப்பினர்களால் வாய் மொழியாகக் கொடுக்கப்பட்ட விண்ணப்பங்கள் முறையாக இருக்கின்றனவாவென்பதை இக் குழுக்கள் ஆராய்கின்றன.

(vii) வெளியீடுகள், விவாத அறிக்கைகள் பற்றிய குழு விவாதங்களை வெளியிடவும் அறிக்கையிடவும் ஏற்பாடு

செய்வதில் இது சபாநாயகருக்குத் துணை செய்கிறது; அறிவிப்புத் தாள்களின் உருவளவை முடிவு செய்வதில் உதவுகிறது; சபைக்கும் பொதுப்பணித் தொகுதிக்கும் அச்சிடல், பொருள் வாங்குதல் ஆகியவைகளுக்கான செலவினம் பற்றி ஆய்வு நடத்துகிறது.

(viii) பொதுமக்கள் சபை (சேவை)க் குழு. சபையின் எல்லா நிருவாகப் பணிகளையும், உணவு ஏற்பாடுகள் உள்பட, இக் குழு கவனித்துக் கொள்ளுகிறது.

(ix) சட்டப்படியிலான கட்டளைக் குழு.

(x) நாட்டுடமையாக்கப்பட்ட தொழிற்சாலைகள் பற்றிய ஆய்வுக் குழு.

(xi) பாராளுமன்றக் கமிஷனருக்கான குழு.

(ஆ) தனிப்பட அமைந்த குழுக்கள் : மசோதாக்களை ஆராய்வதற்கு: ஆய்வுக்குழு ஒரு மசோதா பற்றிய பூர்வாங்கக் குழுவேயாகும். ஏனெனில் இது அறிக்கை செய்த பின் மசோதா முழுச் சபையின் குழுவின் ஆய்விற்குச் செல்கிறது. ஒரு மசோதாவை ஆய்வுக் குழுவிற்கு விடுவதில் ஒரு நன்மையென்னவென்றால், குழுவிற்குச் சபை சில சிறப்புக் கட்டளைகளை இடலாம். வழக்கமாக அமையும் குழுக்களுக்கு இத்தகைய கட்டளைகளை சபை பிறப்பிப்பதில்லை. சபைக்கு வெளியிலிருந்து சான்றுகளைக் கோரிப் பெறலாம்.

(ii) விசாரணைகளை நடத்துவதற்கு அரச மானியத்தில் அதிகரிப்பு, சபை நடைமுறை விதிகளை திருத்தியமைத்தல் ஆகியவை போன்ற பல்வேறு பொருள்களைப் பற்றி விசாரணை நடத்துவது. குழுவின் அறிக்கை சபைக்கு அளிக்கப்படுகிறது. தேவையானல், இதை ஆராய ஒரு நாள் ஒதுக்கப்படுகிறது.

(இ) வல்லுநர் குழுக்கள்.

(4) கூட்டுக் குழுக்கள்: இரு சபைகளின் கவனத்திற்குரிய அல்லாதவைகள் அரசியல் பற்றியும், ஒரு முக்கியமான பொருள் பற்றிய கொள்கையோடு தொடர்புடைய தனி மசோதாக்கள் பற்றியும் ஆராய 19ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியிலிருந்தே கூட்டுக் குழுக்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

இரு சபைகளின் ஒரு சிறிய ஆய்வுக் குழுவைக் கூட்டுக் குழு கொண்டிருக்கிறது. இரு சபைகளுக்கும் இக் குழுவில் சமமான

அளவில் உறுப்பினர்கள் இருக்கின்றனர். ஆனால் இதன் தலைவர் ஒரு பிரபு. குழுவின் இரு பிரிவினரும் தனித்தனியே தம் சபைக்கு அறிக்கை கொடுக்கின்றனர்.

அரசியலமைப்புப் பற்றிய கூட்டுக் குழுவொன்ற ஒரு கூட்டத் தொடர்க் குழு ஒன்றிருக்கிறது. இதில் பதினான்கு உறுப்பினர் இருக்கின்றனர். சபை ஒவ்வொன்றும் ஏழு உறுப்பினர்களை குழுவிற்கு அனுப்புகிறது. இது எல்லா ஒருங்கிணைவுகளையும் எழுத்துருவில் உள்ள சட்டத் திருத்த மசோதாக்களையும் ஆய்கிறது.

(5) தனிமசோதாக்கள் குழு: இக்குழுக்களின் பணிகள் பற்றிப் பின் விரிவாக விவாதிக்கப்படுகின்றன. இது இரு வகைப்படும்.

(i) எதிர்ப்பில்லாத மசோதாக்கள் குழு: வழி துறைகள் பற்றிய குழுத் தலைவரும், துணைத் தலைவரும், தெரிவுக் குழுவினால் அமர்த்தப்பட்ட ஒரு பட்டியலில் இருந்து தெரிவு செய்யப்பட்ட மற்ற நான்கு உறுப்பினர்களும் இதில் அடங்குவர்.

(ii) எதிர்க்கப்படும் மசோதாக்களின் குழு: இதில் ஒரு தலைவரும் மூன்று உறுப்பினர்களும் இருக்கின்றனர். தெரிவுக் குழுவினால் இவர்கள் நியமனம் செய்யப்படுகிறார்கள். மசோதாவையொட்டிய சொந்த அல்லது தல நலன்கள் தமக்கில்லையென உறுப்பினர்கள் அறிவிக்க வேண்டும். இதன் உறுப்பினர்கள் அதிக நேரம் எடுத்துக் கொள்வதாலும் விளம்பரம் பெறாததாலும் இக் குழுக்களில் பணியாற்ற உறுப்பினர் பெரும்பாலும் விரும்புவதில்லை.

### 8. நடைமுறை விதிகள்—ஓர்ஆய்வு

கொள்கை, சட்டமியற்றல், ஆட்சி, செலவினம் ஆகியவை பற்றி அரசாங்கத்தை திறனாய்வு செய்யும் முதன்மையான பணியை சபை நிறைவேற்ற வேண்டுமென்றால், தேவையான வாய்ப்புக்களையும் அறிவாற்றலையும் இது பெற்றிருக்க வேண்டும்.

கிடைக்கும் காலத்தால் வாய்ப்புகள் கடுமையாகக் குறைக்கப் படுகின்றன. சபை இயல்பாக நாளொன்றுக்கு 8 மணி நேரம் கூடுகிறது. இப்படி ஓர் ஆண்டில் 150 நாட்கள் சபை செயல் படுகிறது. ஆகையால், முக்கியமான சட்ட ஆக்க அதிகாரங்களைப் பெற அரசாங்கத்திற்குத் தேவையான நேரத்திற்கும், திறனாய்வு செய்ய எதிர்க் கட்சிகள் கோரும் நேரத்திற்கும் இடையில் ஒரு

சமன்பாடு காண வேண்டும். மிகையான திறனாய்வு செயல் முடக்கத்தை உண்டாக்குவது போல் மிகக் குறைந்த திறனாய்வு வல்லாட்சியை ஏற்படுத்தலாம். சட்டங்களை கொணரவும், இவர்களுடைய பிரேரணைகளை விவாதிக்கவும் ஆட்சி பற்றிய கேள்விகளைக் கேட்கவும் தனி உறுப்பினர்கள் வாய்ப்புகள் பெற்றிருக்க வேண்டும்.

மேலும் இரண்டாவது உலகப் போருக்குப் பின், அரசாங்கச் செயற்பாடுகளின் நீட்சியும் இவைகளின் பெருகி வரும் தொழில் நுட்பமும் பாராளுமன்றத்தின் அதிக வேலையிலும் தேவைக்குக் குறைந்த தகவலிலும் முடிவுற்றன. எனவே திறனாய்வு முழுப் பயனுடையதாக இராது. பொதுமக்கள் சபையின் இந் நிலையைப் பயன் படுத்திக் கொண்டு அரசாங்கம் அதிகாரத்தைப் பெருக்கிக் கொண்டது. விவாதங்கள் குறைக்கப்படுகின்றன. சட்டத்தின் இடத்தை நிருவாகக் கட்டளைகள் எடுத்துக் கொள்ளுகின்றன. அரசாங்கச் செலவினங்கள் மீது உண்மையான கட்டுப்பாடு எதுவும் செய்யப்படுவதில்லை.

ஆனால் பொதுமக்கள் சபையை எப்படி செயல் திறமிக்கதாகச் செய்வதென்னும் பிரச்சனைக்கான தீர்வு எளிதானதன்று. வெற்றியை உறுதிப்படுத்தும் சீர் திருத்தத் திட்டமெதுவும் இருக்க முடியாது. பொதுமக்கள் சபைக்கு அதிக நேரம் அளிக்கும் வகையில் நடைமுறை விதிகளை மாற்றியமைக்கலாமா அல்லது கொள்கையையும் ஆட்சியையும் ஆய்வதற்காக புதிய நிறுவனங்களைச் சபைக்களித்து இதற்கு வலியூட்டலாமா என்பதை அனுபவத்தின் அடிப்படையில் தான் ம்திப்பிட முடியும். பொதுமக்கள் சபை அரசியலமைப்பின் ஓர் அங்கமே. தடையீடுகளின் மிக நுட்ப அமைப்பில் எங்காவது ஓரிடத்தில் இம் மாற்றங்கள் பரந்த செயல் விளைவுகளை உண்டாக்கும். இதன் விளைவாகத் தற்காலிக அடிப்படையில் புதியன புகுத்தப்படுகின்றன. அனுபவத்தின் துணை கொண்டு பார்க்கையில் திங்கள், புதன் கிழமைகளில் காலையில் சபை கூடுவது கைவிடப்படலாம்.

சீர்திருத்தங்களை மூன்று தலைப்புகளின் கீழ் கொண்டு வரலாம்

**(1) தனி உறுப்பினர்களுக்குக் கூடுதலான வாய்ப்புகள் அளித்தல்:** சமீப காலத்தில், தனி உறுப்பினர்களுக்காக நிலைக் கட்டளை (5) யினல் ஒதுக்கியளிக்கப்பட்ட 20 வெள்ளிக்கிழமைகளில் எந்த நாளையும் எடுத்துக் கொள்வதை அரசாங்கம் தவிர்த்து வந்துள்ளது. 1967-க்குப் பின், அரசாங்கம் ஆதரிக்க விரும்பாத சமூகச்

சட்டங்களை தனி உறுப்பினர் கொண்டு வருவதை ஊக்குவித்த தோடு வசதிகளையும் செய்து கொடுத்துள்ளது. அண்மைக் காலத்தில் நிலைக் கட்டளை 9–ன் கீழ் தள்ளி வைப்புப் பிரேரணையைக் கொணரல் எளிதாக்கப்பட்டுள்ளது. இத்துடன், நான்கு நாள்கள் மேலதிகமாக தனி உறுப்பினர் பிரேரணைகளுக்கு ஒதுக்கப்பட்டிருக்கின்றன.

மறு புறம், பல உறுப்பினர்கள் பேச வசதியாக பேச்சின் நீளத்தைக் குறைக்க சபாநாயகருக்கு அனுமதியளிக்கும் நடைமுறை விதி பற்றிய ஆய்வுக் குழுவின் கருத்துரைகள் செயல் படுத்தப்படவில்லை. ஆனால் இக் குறிப்புரைகள் உறுப்பினர்களின் இணக்கத்தின் மீது சில தார்மீகப் பொறுப்புகளை புகுத்தியுள்ளன.

**(2) பாராளுமன்ற நேரத்தை நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ளுதல் :** சபையின் நேரத்தை நல்ல முறையில் பயன் படுத்திக் கொள்ள ஆய்வுக் குழு நடைமுறை விதிகள் பற்றிய பல் வேறு கருத்துரைகளை வழங்கியுள்ளது. இவைகளில் சில ஏற்றுக் கொள்ளப்பட்டன. எனவே, சப்ளைக் குழுவும் வழி துறைகள் பற்றிய குழுவும் அகற்றப்பட்டுவிட்டன. 1968-ல் இருந்து நிதி மசோதாவின் விபரங்களைச் சபையில் ஆராய்வதற்குப் பதிலாக 50 உறுப்பினர்களைக் கொண்ட ஒரு பொதுவான நிலைக் குழுவில் ஆராய கருத்து தெரிவிக்கப்பட்டது.

ஆனால் இரவில் நெடு நேரம் அமர்வதற்குப் பதிலாகப் புகுத்தப்பட்ட காலை வேளை அமர்வுகள் தோல்வியுற்றன. இவைகள் பல உறுப்பினர்களுச்கு வசதியாக இருந்தன. விவாதங் களும் சிறப்பிழந்து காணப்பட்டன. ஏனெனில் துறைப் பொறுப் புடைய அமைச்சர்கள் காலைக் கூட்டத்திற்கு வரவில்லை; மேலும் மாலை வரை வாக்கெடுப்புகள் நடைபெற இயலவில்லை. ஆகவே ஆறு மாத சோதனைக்குப் பின் இவைகள் கைவிடப்பட்டன. வருங் காலத்தில், முதல் நாள் இரவு தடைப்பட்ட விவாதங்களைத் தொடர மட்டும் காலை வேளைக் கூட்டம் பயன்படுத்தப்படும்.

**(3) பாராளுமன்றக் கட்டுப்பாட்டை பயனுறுதிமிக்கதாகச் செய்தல் :** சபையின் திறனாய்வாளர்கள் இதன் கட்டுப்பாட்டு இழப்பைப் பற்றி பெரிதும் கவலையடைகிறார்கள். கட்சியின் குழுக் கூட்டங் களில் வேறுபாடுகள் அகற்றப்பட்டு விடுவதால் விவாதங்கள் உயிரின்றி காணப்படுகின்றன. அரசாங்கமும் விவாதங்களைச் சிறப்பு முறைகளால் குறைத்து விடுகிறது. விவாதங்களின்

தரத்தை மேம்படுத்தியும் விரிவான கருத்துகளை விவாதிக்க முழுமையான வாய்ப்புகளை அளித்தும் விவாதங்களுக்கு முன்பிருந்த தனிச் சிறப்பை மீட்டுக் கொடுப்பது நோக்கமாக இருக்கிறது. முன்னதைப் பற்றி பல சமயங்களில் சுயேச்சையான வாக்களிப்பிற்கு வசதி அளிக்கவும், உறுப்பினர் தம் சொற்பொழிவுகளை பயன்மிக்க முறையில் தயாரிக்க ஆராய்ச்சி, செயலாண்மைப் பணி ஆகிய வசதிகளையும் செய்து கொடுக்கவும் பலர் விரும்புகின்றனர். எவ்வாருயினும், வெஸ்ட்மின்ஸ்டர் அரண்மனையின் விரிவாக்கப் பணிகள் 1970ஆம் தொடர் ஆண்டுகளில் முடிவடையும் வரை போதுமான வசதிகளை எதிர்பார்க்க முடியாது.

நிபுணர் ஆய்வுக் குழுக்களையும் ஆட்சி பற்றிய பாராளுமன்ற ஆணையரையும் அமர்த்திப் பாராளுமன்றக் கட்டுப்பாட்டிற்கு வலியூட்டப்பட்டிருக்கிறது. ஆட்சிக்கெதிராகக் கூறப்படும் குறைகளை விசாரணை செய்ய முன்னது ஒரு நிறுவனத்திற்கு வசதி செய்கிறது. ஒரு குறிப்பிட்ட துறைப் பணிக்கு நிபுணர் குழுவை பொது மக்கள் சபைக்கு அளிக்கப் பின்னது வழி செய்கிறது.

தம் துறையில் தனிச் சிறப்பறிவாற்றலுடைய உறுப்பினர்களைக் கொண்ட சபையின் ஆய்வுக் குழுக்கள் சிறிது காலம் இருந்து வந்தன. பொதுக் கணக்குக் குழு, மதிப்பீட்டுக் குழு, எழுத்துருவில் உள்ள கட்டளைகள் பற்றிய குழு, நாட்டுடமை ஆக்கப்பட்ட தொழில்கள் பற்றிய குழு ஆகியவை இதற்கு எடுத்துக் காட்டுகளாகும், ஆனல் ஒரு துறைப் பணிகள் பற்றிய குழுக்கள் என்பன இங்கிலாந்திற்குப் புதியவைகளே இதுவரை இரண்டு குழுக்கள் மட்டுமே அமர்த்தப்பட்டன. ஒன்று, அறிவியல் தொழில் நுட்பம் பற்றிய ஆய்வுக் குழுவாகும். இது பிரிட்டனின் அணுசக்திச் செயல் திட்டத்தை ஆராய்கிறது. இப்பொழுது இக் குழு நிரந்தரமாகி விட்டது. வேளாண்மை பற்றிய ஆய்வுக் குழு மற்றொன்ருகும், பொதுச் சந்தையில் பிரிட்டன் சேர்வதால் வேளாண்மைத் துறையில் ஏற்படும் விளைவுகளை பற்றி இக் குழு ஆராய்கிறது. கல்வி, சட்ட இயல் சீர்திருத்தம் ஆகியவை பற்றிய துறைகளில் குழுக்கள் ஏற்படலாம். மிக முக்கியமானதும் சர்ச்சைக்குரியதுமான பாதுகாப்பு, வெளி விவகாரம், பொருளாதாரக் கொள்கை, நிதியியல் கொள்கை, போன்ற துறைகள் பற்றிய குழுக்கள் ஏற்படாத வரையில் இம் முறையினுல் உண்மையான பயன்கள் கிட்டா.

அண்மைக் காலம் வரை இத்தகைய குழுக்கள் எதிர்க்கப்பட்டன. ஏனெனில் இவைகள் அமைச்சுப் பொறுப்பைக் அழித்து

விடுமெனக் அஞ்சப்பட்டது. ஆனல் அமைச்சுப் பொறுப்பு பற்றிய கோட்பாடு இன்று மிக்க நெகிழ்ச்சியாக இருப்பதால் இந்த எதிர்ப்பு செல்லாது போயிற்று. பாராளுமன்ற அதிகாரங்களை குழுக்களுக்கு மாற்றுவதினல் ஒரு குறுகிய நோக்கு உருவாகலா மெனச் சிலர் அஞ்சுகின்றனர். இப்படி நடப்பதற்கில்லை. பொது மக்கள் சபை இறுதிக் கட்டுப்பாட்டை எவ் வகையிலும் தக்க வைத்துக் கொள்ளும். மெய்யாக எந்தகைய மீறலும் கடின மாகையால் துறைகள் பாராளுமன்றத்திற்குப் பெரும் பொறுப் புடையனவாக இருக்கின்றன.

இப்படித்தான் நடக்கும். ஏனெனில் குழுக்கள் சபையைக் காட்டிலும் விபரங்களை மிக விரிவாக விவாதிக்க முடியும். அலுவலர்களை அழைக்கவும் பத்திரங்களைப் பெறவும் குழுவால் முடியுமென்பதோடன்றி, நிபுணர்களோடு ஒத்துழைப்பதாலும் தனி ஆய்வு நடத்துவதாலும் உறுப்பினர்களால் எல்லாத் தகவலை யும் பெற முடிகிறது. இதையொட்டி குறிப்பிட்ட துறையின் மதிப்பீடுகளை இத்தகைய குழுக்கள் ஆராய முடிகிறது. இப் பொழுது நிலைக் குழுக்கள் எடுத்துக் கொண்டுள்ள மசோதாக்கள் பற்றிய பணிகளை குழுக்கள் நிறைவேற்றலாம்.

கருத்துகளை விரிவாக விவாதிக்க மேலே குறிப்பிட்ட ஏற் பாடுகள் சபைக்கு அதிக நேரமளிக்கிறது. ஆனல் நிபுணர் குழுக் களில் பதினறு உறுப்பினர் மட்டுமே இருக்கின்றனரெனினும் சபை அமைக்கக் கூடிய குழுக்களின் எண்ணிக்கைக்கு ஒரு வரம்பு உண்டு. அலுவல் அதிகமுள்ள ஒரு கூட்டத் தொடரில் உள்ள குழுக்களில் பணியாற்ற 400 பேர் தேவைப்படுகிறார்கள். மேலும், இக் குழுக் களில் சேவை செய்யப் போதிய அனுபவமுள்ள எழுத்தர்களை மிக வேகமான விரிவாக்கத்தால் அளித்துதவ இயலாது. மற்ற துறை களின் கொள்கைகளை இக் குழுக்கள் எந்த அளவிற்கு கடந்து செல்லும் என்பதையும் முடிவு செய்ய வேண்டும். ஏற்கனவே வேளாண்மைக் குழு வெளி உறவு அலுவலகத்தின் மீது சினங் கொண்டுள்ளது. பிரிட்டன் பொதுச் சந்தையில் நுழைவதால் வேளாண்மையில் ஏற்பட்டுள்ள விளைவுகளைப் பற்றிய வேளாண் மைக் குழுவின் அறிக்கையின் சரி நுட்பத்தை ஆராய பிரௌ செல்ஸிக்கு (Brussels) ஐந்து பாராளுமன்ற உறுப்பினர்கள் சென்றதை இக் குழு எதிர்த்தது.

## 9. பொதுமக்கள் சபையின் செயல் முறைகள்

அரசரின் கடினமான நிதித் தேவையினல் பொதுமக்கள் சபை தோன்றியதென்பதை முன்னர் பார்த்தோம். இதன் உறுப்

பினர்களை இது வலிமையான நிலையில் வைத்தது. இவர்கள் வரவழைக்கப்பட்டபொழுது குறைபாடுகளை நீக்குவதற்கு நிதி உதவியளிப்பது நிபந்தனையாக்கப்பட்டது. அரசரின் கொள்கைகள் ஆராயப்பட்டன; இவருடைய ஆட்சியில் குறை காணப்பட்டது; தன் விருப்பில் அதிகாரங்களைப் பயன்படுத்துவது குறைக்கப்பட்டது. தயக்கமும் பணமுடையுமுள்ள ஓர் அரசரிடமிருந்து ஒரு முறை வலிந்து பெற்ற உரிமைகள் கவனமாகப் பாதுகாக்கப்பட்டன. புதிய நிலைகளுக்குகேற்ப இவைகள் வளர்ச்சியடைந்தன. எனவே வேண்டுகோள்களை அரசர் ஏற்றுக்கொண்டதை மசோதா உருவில் வரைந்து கொண்டால் நிரந்தரமாக இருக்குமென்பதை பொதுமக்கள் சபை கண்டறிந்து கொண்டது. இப்படித்தான் இது சட்டசபையாயிற்று. பின்னர், ஆண்டுக்கு ஒரு தடவையாவது பாராளுமன்றம் அழைக்கப்படவேண்டுமென்பதை சபை முழுத் தேவையாக்கிற்று,

500 ஆண்டுகளுக்கு முன் இருந்த பொதுமக்கள் சபைகள் எத்தகைய பணிகளை நிறைவேற்றினவோ அவைகளைத் தான் இன்றைய சபைகளும் செய்து வருகின்றன.

அவைகள்:

(1) அரசாங்கத்தை ஆதரிப்பது, கண்காணிப்பது, திறனாய்வது;

(2) விவாதங்களை நடத்தி வாக்காளர்களுக்கு அரசாங்கத்தின் கொள்கைகளை விளக்குவதும் மெய்ப்பிப்பதும்; அக்காலத்திய தலையாய பிரச்சனைகளை அணுகுவதில் மாற்றுவழிகளைக் கூறி மக்களுக்கு அறிவு புகட்டுவது;

(3) ஆட்சித் துறையோடு தனி மனிதன் கொண்டிருக்கும் தொடர்பில் உரிமைகளைப் பெற்றுப் பேணுதல்;

(4) பண வரவு, செலவுகளைக் கட்டுப்படுத்துதல்;

(5) சட்டமியற்ற உதவுதல்.

இவ்வளவு காலமாக ஏன் இப் பணிகள் வைத்துப் பேணப் பட்டன என்பதின் காரணத்தை, அரசாங்கத்திற்கும் சட்ட சபைக்குமிடையே தொடர்ந்திருந்து வரும் உறவு முறையிலிருந்து தெரிந்து கொள்ளலாம். கொள்கையை எடுத்து மொழிந்து செயல்படுத்துவது அரசாங்கத்தின் பொறுப்பாகும்; சட்ட சபை யின் அதிகாரத்திற்குட்பட்டு சபை கொள்கையைக் கட்டுப்படுத்து கிறது. நிருவாக அதிகார மையம் அரசரிடமிருந்து கேபினெட் டிற்கு மாற்றப்பட்டிருந்தாலும், அரசாங்கத்திற்கும் பொதுமக்கள்

சபைக்குமிடையில் உள்ள தராதர நிலை பேணப்பட்டு வந்திருக்கிறது.

எனினும், நடைமுறையில், தொடர்பு நிலையில் சிறிது மாற்றம் காணப்படுகிறது. 1832ஆம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டம் வரையில், அரசர் தம் அரசாங்கத்தையும் கொள்கையையும் தெரிவு செய்து கொள்ள முடியும். தனிப்பட்ட அதிகாரத்தைப் பொதுமக்கள் சபை வெளிப்படுத்த முற்பட்டது செயல் முறையில் இதன் கட்டுப்பாடு குறையத் தொடங்கியது 1832க்குப் பிறகு இது மாற்றப்பட்டது. பொதுமக்கள் சபையில் பெரும்பான்மையான இடங்களைப் பெற்றிருந்த கட்சியிலிருந்து அரசாங்கத்தை அமைத்ததால், செயற்குழுவிற்கும் சட்டசபைக்குமிடையில் இணக்கத்தைப் பெற முடிந்தது. மிகச் சிறந்த முறையில் அமைக்கப்பட்ட கட்சிகளின் பிற்காலத்திய வளர்ச்சி, கேபினெட் அமைச்சவை இப்பொழுது பொதுமக்கள் சபையை கட்டுப்படுத்தும் அளவிற்கு கொண்டு வந்து விட்டிருக்கிறது.

இருப்பினும், பொதுமக்கள் சபை இன்னமும் பெற்று வரும் செல்வாக்கை நாம் குறைத்து மதிப்பிடலாகாது. உறுப்பினரின் ஒரு சிறிய குழு கூட பொதுக் கருத்தைத் திரட்டி அரசாங்கத்தின் கொள்கையை மாற்றியமைத்து விடலாம். எட்டுக்கு ஒன்று என்ற வீதத்தில் தமக்குப் பெரும்பான்மை இருந்த போதிலும் தம்முடைய தலைமைக்குச் சபையின் ஆதரவில்லையெனத் தெரிந்ததும் நெவில்லி சேம்பர்லின் 1940-ல் பதவியில் இருந்து விலகிக்கொண்டார். 1956-ல் ஈடன் தம்முடையை சூயெஸ் கொள்கையை மாற்றிக்கொண்டார். எதிர்க்கட்சியின் குறைகூறல் ஒரு புறமிருக்க, தம்முடைய ஆதரவாளர்கள் பற்றிய ஐயப்பாட்டை இவர் உணர்ந்தார். மேலும், அரசியல்வாதிகள் பொதுமக்கள் சபையின் வழியாக அமைச்சராதல் வழக்கமாக இருந்தது. இவர் களைச் சபை உருவாக்கிப் பயிற்றுவிக்கிறது. கேபினெட் நிலையை அடையுமுன் ஓர் உறுப்பினர் சபையில் நீண்ட காலச் சேவைப் பயிற்சி பெறுகிறுர். இதன் விளைவாக, சபையின் பெரும்பான்மைக் கட்சியால் உருவாகிய அரசாங்கத்தைவிட கேபினெட் சிறந்து காணப்படுகிறது. பொதுமக்கள் சபையினரைக் கொண்டு அமைந்ததுதான் அரசாங்கம். ஏனெனில், சபையின் வழியாகத் தான் ஓர் அமைச்சர் அதிகாரத்திற்கு வந்துள்ளார். இவரால் சபையின் நம்பிக்கையைப் பெற முடிகிறது. ஆனுல் இவரை வளர்த்து உருவாக்கிய இதே சபை இவருடைய அரசியல் வாழ்வையே ஒரு முடிவிற்குக் கொண்டு வரலாம் என்பதையும் இவர் நினைவிற் கொள்ளுதல் வேண்டும்

எது எவ்வாறுயினும், பொதுமக்கள் சபைக்கு மேலாக கேபினெட்டின் அதிகாரப் பெருக்கம் சில எழுத்தாளர்கள் கருதுவது போல் அந்த அளவிற்கு விரும்பத்தகாததவை அல்ல. அரசாங்கத்தின் கொள்கைகளைச் சட்டசபை ஏற்க உறுதியளிப்பதால் பயனுரமிக்க அரசாங்கத்தை இது உண்டாக்குகிறது. குறைந்தது ஒவ்வொரு ஐந்தாண்டிலும் ஒரு புதிய சட்டசபை தேர்ந்தெடுக்கப்படவேண்டும். மக்களுடைய விருப்புகளுக்கு செவி சாய்க்காத அரசாங்கம் விலக்கப்படும். எனவே, மக்களாட்சியின் முதன்மையான இயல்பாகிய இறுதியான கட்டுப்பாடு பேணிக் காக்கப்படுகிறது. மேலும், பாராளுமன்றக் கட்சிக் கூட்டங்களில் பின்னணி உறுப்பினர்களாலும் அல்லது இதன் கமிட்டிகளாலும் கொரடாக்களாலும் மறைமுகமான தடைகள் பயன்படுத்தப்படுகின்றன.

செயல்துறைக்கும் சட்டசபைக்கும் இடையில் இருக்கும் இந் நெருங்கிய பிணைப்பின் வளர்ச்சி, தனி மனித உரிமைகளைப் பாது காத்தல் அரசாங்கத்தில் குறை காணல் ஆகிய பொதுமக்கள் சபையின் வழக்கமான செயல் முறையின் சிறப்பியல்புகளை அதிகரிக்கிறது. மேதகு அரசியாரின் எதிர்க்கட்சியின் வளர்ச்சியாலும் கட்சி முறையின் வழியாகவும் பாதுகாப்பு அளிக்கப் பட்டது. ‘எதிர்கட்சியின் வளர்ச்சி ஆட்சிக் கலைக்குப் பத்தொன்பதாம் நூற்றுண்டின் மிகப் பெரும் கொடை’யெனப் பேராசிரியர் லோவெல் வருணிக்கிறுர். அரசாங்கத்தின் குறை நிறை காண்பதற்காக எதிர்கட்சிக்கு சபையின் வழக்கத்தாலும் நிலைக் கட்டளையாலும் திட்டவட்டமான வாய்ப்புகள் கிடைத்துள்ளன.

அரசாங்கத்திற்கும் எதிர்க் கட்சிக்கும் இடையேயான இடைவிளைவு வழியாகப் பொதுமக்கள் சபையின் செயல்முறைகள் இன்று நிறைவேற்றப்படுகின்றன. ‘எதிர்க் கட்சியின் அறை கூவலால் விவாதங்கள் நடைபெறுகின்றன. சபை முன் வரும் எல்லாவற்றைப்பற்றியும் ஆங்கிலேயரின் மனநிலையை விவாதங்கள் வெளிப்படுத்துகின்றன. நாட்டுக்குத் தெரியாததை சபை தெரிவிக்கிறது; நாம் கேட்கக் கூடாததை கேட்கும்படி செய்கிறது. பொதுமக்கள் சபை ‘நாட்டின் பேராய்வு மன்ற’ மாக இருக்கிறது. அரசாங்கம் தன் திட்டங்களை விளக்கியும், கொள்கைகளைப் பற்றி குறை கூறல்களுக்கு மறு மொழி சொல்லியும் செயல்படும் ஒரு வகையான தேசிய பத்திரிகை மாநாடு போல் சபை காட்சியளிக்கிறது. தனி மனித உரிமைகளைப் பேணுவதிலும் நிதிக் கட்டுப்பாட்டிலும் கூட எதிர்க் கட்சி பெரும்

பங்கு பற்றுகிறது. சில சமயங்களில் அரசாங்கப் பின்னணி உறுப்பினர்கள் வெறும் கட்சியினராகச் செயல்படுவதைவிட பாராளுமன்றத்தினராகச் செயல்பட விரும்பலாம். அரசாங்கத்திற்கெதிராக வாக்களித்தல் அல்லது துறைத் தலைவரை இக்கட்டான நிலைக்குட்படுத்துதல் போன்ற செயல்களிலும் இவர்கள் ஈடுபடலாம். இறுதியாக, முற்றிலும் தனிப்பட்ட முறையில் அரசாங்கம் சட்டமியற்றுகையில் மசோதாக்களின் விபரங்களை ஆராய்ந்தும் கருத்துகளைத் திறனாய்வு செய்தும் எதிர்க்கட்சி தன் முக்கியமான கடமைப் பொறுப்பை நிறைவேற்றுகிறது.

எனவே, இன்று பொதுமக்கள் சபை எப்படிச் செயல்படுகிறதென்பதையும் இங்கு நிலவும் சூழ்நிலையையும் அரசியலமைப்பில் எதிர்க்கட்சியின் நிலையையும் அடுத்த அதிகாரம் தெளிவாக விளக்கும்.

### மேலும் படித்தற்குரிய நூல்கள்

Erskine, May. 'Parliamentary Practice,' (1946)
Rediligh, Josep, 'Procedure of House of commons,' (1908)
Taylor, Eric, 'House of Commons at work,' (1951)
Sir Ivor Jennings, 'Parliament,' (1957) Chapters, 8,11,13 and 14.

# 6. அரசியல் கட்சிகள்

### கட்சி முறை அரசாங்கம்

மக்களாட்சி உண்மையாக ஒரு நாட்டில் நடைபெறுகிற தெனில் அங்குள்ள அரசாங்கத்தின் கொள்கைகளோடு தொகுதி யினரின் விருப்பும் தொடர்புடையதாக இருக்க வேண்டும். நன்ருக வளர்ச்சியடைந்த கட்சி முறையால் இங்கிலாந்தில் இது பெறப் படுகிறது. பல கட்சிகளின் செயற் திட்டமொன்று பொதுத் தேர்தல் வாயிலாக தெரிவு செய்யப்படுகிறது. பொதுமக்கள் சபையில் பெரும்பான்மையான இடங்களை எக் கட்சி பெறுகிறதோ அக் கட்சி அரசாங்கத்தை அமைக்கிறது. எனவே கட்சி அரசாங்கம் இங்கு நடைபெறுவதாகச் சொல்லலாம்.

முதல் நோக்கில் இது ஏற்புடையதாகத் தோன்ருது ஏனெனில், அதிகாரம் பெற்ற ஒரு கட்சி, மாறுபட்ட கருத்துடைய வர்களை நேர்மைக் குறைவாக நடத்தலாம். பெருமளவிலான தொகுதியினரின் ஏற்புப் பெருத கொள்கையடிப்படையில் பெரும் பாலோர் நிரந்தரமாக ஆளப்படலாம். சிறுபான்மைக் கட்சி களில் உள்ள திறமைமிக்கோர் அரசாங்கத்தில் பயனுள்ள முறையில் பங்கு பற்ற இயலாது.

கட்சிக் கோட்பாடுகளுக்கு அப்பாற்பட்ட அரசாங்கத்தை உருவாக்கி இத்தகைய குறைபாடுகளை அகற்றலாம். கட்சித் தொடர்பில்லாத அறிவாளிகளைக் கொண்ட அரசின் குழு ஒன்றின் உருவத்தை இது பெறலாம் அல்லது எல்லாக் கட்சித் தலைவர் களையும் கொண்ட ஒரு கலப்பு அரசாங்கமாகவும் இது இருக்கலாம். ஆனல், போர்க் காலம் அல்லது நெருக்கடியான நிலையின்போது தான் இது சாத்தியமாகலாம். அமைதிக் காலத்தில் இது சாத்திய மாகாது. வெளியார் தாக்குதலில் இருந்து பாதுகாப்பு, உயர்ந்த

வாழ்க்கை தரம், மற்றவர்களின் இயல்பான உரிமைகளை மீருத வகையில் சுதந்திரமாக நாம் வாழ்க்கை நடத்துதல் போன்றவை களில் மக்கள் ஒரே மாதிரியான கோரிக்கையுடையவர்களாக இருக்கின்றனர். இந்த குறிக்கோள்களை ஏற்காத எந்த அரசியல் கட்சியும் இங்கிலாந்தில் அதிகாரத்தைக் கைப்பற்ற நினைக்க முடியாது. இக் குறிக்கோள்களை அடையும் வழிகள் பற்றித்தான் மக்கள் கருத்து வேறுபடுகிறார்களே ஒழிய இறுதிப் பயனை அடைவதில் இவர்கள் வேறுபடுவதில்லை. கொள்கையைப் பின் பற்றுவதில் காணப்படும் வேறுபாடுகளையொட்டியே கட்சிகள் பிளவுபடுகின்றன.

சில நிபந்தனைகள் நிறைவேற்றப்பட்டால்தான் கட்சி அரசாங்கம் ஏற்புடையதாக இருக்கும். தொகுதியினரின் நம்பிக் கையைப் பெற குறிப்பிட்ட இடைவெளிகளில் நடைபெறும் தேர் தலுக்கு அரசாங்கம் தயாராக இருக்க வேண்டும். சிறுபான்மை யோரின் கருத்துகளையும் உணர்ச்சிகளையும் மதித்து இயன்றவரை கொள்கைகளை அரசாங்கம் தளர்த்த வேண்டும். மக்களின் ஆதரவை அரசாங்கம் நாடும் பொழுது விவேகத்தின் பேரில் முறையிடவேண்டுமே ஒழிய வெறுப்புணர்ச்சியின் பேரில் முறை யிட்டு ஆதரவு திரட்டலாகாது. தொகுதியினர் தம் கருத்துகளை மாற்றிக் கொண்டால் அரசாங்கம் மாற்றப்படும் என்பது முதல் நிபந்தனையாகும். மக்கள் விருப்பதிற்கொவ்வாத நடவடிக்கைகளை முதலில் ஏற்றுக் கொள்ள வற்புறுத்திப் பின் அரசியல் அமைப்பு முறைகளைப் பயன்படுத்தி இவைகளை மாற்ற முயல்வது இரண் டாவது நிபந்தனையாகும். உணர்ச்சிகளும் இன்னும் பிற கருத்துகளும் தேர்தலில் மாற்றம் உண்டாக்கலாம் என்பது மூன்றாவது நிபந்தனையாகும். ஆனால் அரசியல்வாதிகளின் வெறிப் பேச்சுக்களுக்கும் தற்காலிக உணர்ச்சிகளுக்கும் மக்கள் கட்டுப் பட்டுவிடமாட்டார்கள் என்பதையும் இது குறிப்பிடுகிறது. சமயம், இனம், வரலாறு ஆகியவை பற்றிய மாற்ற முடியாத கருத்துகளாலும் தொகுதியினர் பாதிக்கப்படுவதில்லை.

பிரிட்டனில் இம் மூன்று நிபந்தனைகளும் மதித்தேற்றுக் கொள்ளப்படுகின்றன. கட்சிகளின் தன்மையால்தான் கட்சி முறை பயனுள்ள முறையில் செயல்படுகிறது. ஏனென்றால் சமயம், இனம், வட்டாரம் இவைகளுக்கு மேலாக பொருளாதார நிலை ஆகியவைகளுக்கும் மேலாக கட்சிகள் செயல்படுகின்றன. வேல் சின் இணங்காச் சமயப் பிரிவினரைச் சேர்ந்த தொழில் சங்கத்தினர் கன்சர்வேடிவ் கட்சியையும் தொழில் கட்சியையும் ஆதரிப்பதை நாம் காணுகிறோம். மேலும், இரண்டு பெரும் கட்சிகளும் ஏறத்

தாழ ஒத்த வலிமையுடையனவாக இருத்தலால் ஒவ்வொன்றும் தேர்ந்தெடுக்கப்படுவதற்கான நல்ல வாய்ப்பைப் பெற்றிருத்தலால் இவை பொறுப்புள்ள முறையிலும் நடந்து கொள்ளுகின்றன. கட்சிப்பற்று மிக்கவர்கள் இரண்டு கட்சிகளிலும் சமமான அளவில் இருப்பதால் தேர்தலில் வெற்றிபெற ஒரு கட்சி, கட்சிச் சார்பில்லாத வாக்குகளைக் கைப்பற்ற வேண்டும். இத்தகைய வாக்காளர்கள் தேர்தலுக்குத் தேர்தல் தம் ஆதரவை மாற்றிக் கொள்ளுகிறவர்களாகையால் இவர்களின் வாக்குகள் ஐயப் பாடான வாக்குகள் எனப்படுகின்றன.

இரண்டு பெரிய அரசியல் கட்சிகள் மாறிமாறி அதிகாரத்தை ஏற்றுக் கடந்த ஒரு நூற்றாண்டு அரசாங்கத்தை நடத்தி வந்துள்ளது ஓர் அரிய காட்சியாகும். தொடர்ந்து மூன்று தடவைகள் கன்சர்வேடிவ் கட்சியினர் தேர்தெடுக்கப்பட்ட 1959ஆம் ஆண்டிற்குமுன் 90 ஆண்டுகளில் எந்த அரசாங்கமும் தொடர்ந்து இரண்டு தடவை பதவியில் இருந்ததில்லை. அடுத்தடுத்து நிகழ்கின்ற கட்சிச் செல்வாக்கு மாறுதலுக்கு ஐயப்பாடான வாக்குகளே காரணம் என்பது தெளிவாகும்.

முந்திய தேர்தலில் ஒருவர் எப்படி வாக்களித்தாரோ அப்படியே இத் தேர்தலிலும் வாக்களித்தாலும் கட்சியின் அரசியல் செல்வாக்கில் மாறுதல் ஏற்படலாம். முன் வாக்களிக்காதவர்கள் பட்டியலில் 100 லட்சம் பேர் இருக்கலாம். இவர்களில் 70 லட்சம் பேர் வாக்களிக்கச் செல்லாதிருந்திருக்கலாம். 30 லட்சம் பேர் 21 வயதையொட்டி வாக்காளர்களாகி இருக்கலாம். இவர்களில் நாம் முதலில் குறிப்பிட்டவர்களில் சிலரைத் தமக்கு வாக்களிக்குமாறு எதிர்க்கட்சியினர் தூண்டினாலும் இளம் வாக்காளர்களை தம் பக்கம் திருப்பினாலும் இக் கட்சி வெற்றி பெறலாம்.

ஆனால் முந்திய தேர்தலில் வாக்களித்தவர்களில் சிலர் தம் ஆதரவை இப்பொழுது மாற்றிக் கொள்ளலாம். ஆனால் இப்படிப் பட்டவர்களின் எண்ணிக்கை மிகச் சிறியதாகவே உள்ளது. ஓர் அரசியல் கட்சியின் செல்வாக்கு மிகக் குறைந்த நிலையில் இருக்கும் பொழுதும் தம் பற்றுறுதிமிக்க கட்சியினரின் ஆதரவை கட்சிகள் பெறலாம். ஆகவே, கட்சிச் சார்பற்ற வாக்காளர்கள்தான் பெருமளவு தேர்தலின் முடிவுகளை முடிவு செய்கின்றனர். இவர் களில் சிலர் லிபரல் கட்சிச் சார்புடையவர்களாக இருப்பினும் இரு பெரும் கட்சிகளில் ஒன்றிற்கு ஆதரவளிக்கும் கட்டாயத்திற் குள்ளாகி இருக்கலாம். லிபரல் கட்சி வேட்பாளர் ஒருவர்

போட்டியிட்டாலும் மற்றவர்களில் பெரும்பாலோர் எந்த முடிவிற்கும் வர இயலாதவர்களாக இருப்பர். இப்படிப்பட்ட வாக்காளர்கள் ஏறக்குறைய 30 லட்சம் பேர் இருக்கலாம். இவ் வாக்காளர்கள் மிகச் சிறந்த அரசியல் முயற்சியுடையவர்களாக இருக்கவேண்டுமென்பதில்லை. அப்படி ஒரு வேளை இருந்திருந்தால் பல்கலைக் கழகங்களுக்கான இடங்களுக்கு முதலில் ஒரு கட்சியினரையும் அடுத்து மற்றொரு கட்சியினரையும் படித்த வாக்காளர்கள் தேர்ந்தெடுத்திருக்கலாம். ஏனெனில் சமூகத்தில் மற்றவர்களைவிடக் கற்றவர்கள் அரசியலை நன்கறிந்தவர்கள். இருப்பினும் ஒரு சில சுயேச்சைகளையும், லிபரல்களையும் தவிர இத் தொகுதிகள் கன்சர்வேடிவ்களையே பாராளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுத்தனுப்பியுள்ளனர்.

மாறாக, ஐயப்பாடான வாக்காளர்கள் பல காரணங்களுக்காக தம் ஆதரவை மாற்றிக் கொள்ளலாம். இக் கட்சிகளின் குறிக்கோள்களில் மாறுபாடுகள் இல்லாததோடு இவற்றை அடைய இக் கட்சிகள் மேற்கொள்ளும் வழிகளும் ஒரே மாதிரியானவை. இரு கட்சிகளின் மிதவாதிக்களுக்கிடையே பொதுவாகப் பல இருக்கின்றன. உண்மையில் ஒரு கட்சியின் வலது சாரிகளுக்கும் இடதுசாரிகளுக்குமிடையில் தான் பெரும் வேறுபாடுகள் இருக்கின்றன. இம் மிதமான போக்கைக் கட்சித் தலைவர்களிடம் காணலாம். கன்சர்வேடிவ் தலைவர்கள் மத்தியிலிருந்து இடப் பக்கம் நோக்கியும் தொழில் கட்சித் தலைவர்கள் மத்திக்குச் சிறிது வலப்பக்கம் ஒதுங்கி இருப்பதையும் பார்க்கலாம். மேலும், அரசாங்க மாற்றத்தினால் முன் பெற்ற நன்மைகளில் ஏதேனும் இழப்பு இருக்காதென்பதை வாக்காளர் அறிவர். ஏனெனில், ஒரு சிலவற்றைத் தவிர முந்திய அரசாங்கத்தின் நடவடிக்கைகளை கட்சி ஏற்றுக் கொள்ளுகிறது.

தன் நலம் கருதி அல்லது ஆழ்ந்த சிந்தனையால் அல்லது முறைகேடு காரணமாக வாக்காளர் ஒருவர் தம் வாக்கினை மாற்றி அளிக்கலாம். பதவிக் காலத்தில் ஓர் அரசாங்கம் வழக்கமாக தம் உள்ளுரத்தில் சிறிதளவை இழந்து விடுகிறது. அரசாங்கம் பதவி ஏற்கக் காரணமாக இருந்த திட்டங்கள் நிறைவேற்றப்பட்டவுடன் தளர்ச்சியுற்று விடுகிறது. இதன் செயல் வேகத்தைத் தக்க வைத்துக் கொள்ளும் பொருட்டு புதிய கருத்துகள் கட்சியில் புகுத்தப்படவில்லையென்றால் ஐயப்பாடான வாக்காளர்கள் எதிர்க் கட்சியை ஆதரிக்க முற்படலாம். மிகப் பயனுள்ள அரசாங்கம் ஒன்றை அளிக்கப் போவதாக எதிர்க் கட்சிகள் இவ் வாக்காளர்களுக்கு உறுதியளிக்கலாம். நேர்மை ஆர்வமிக்க

ஆங்கிலேயர்களும் 'இக் குறிப்பிட்ட அரசியல் கட்சி அதிகாரத்தில் இருக்கையில் என்ன செய்யும் என்பதை நாம் அறிவோம்; இப்பொழுது நாம் மாற்றுக் கட்சிக்கு ஒரு வாய்ப்பளிப்போம்', என்று நினைக்கிறார்கள்.

இவற்றிற்கெல்லாம் மேலாக உறுப்பினர் ஒருவரின் சொந்த கருத்துகள் வாக்களிப்பில் ஐயப்பாட்டை உண்டாக்கலாம். இரு பெரும் அரசியல் கட்சிகளும் வாக்காளர்களின் வகுப்பு நலன் களோடு தொடர்பு கொண்டிருந்த போதிலும் தொழிலாளர் களிடமிருந்தும் நடுத்தர வகுப்பினரிடமிருந்தும் இக் கட்சிகள் ஒவ்வொன்றும் கணிசமான ஆதரவைத் திரட்டலாம். 1964ஆம் ஆண்டு பொதுத் தேர்தலுக்கு முன் வாக்காளர்களின் கருத்தை முன் கூட்டியதாயும் சோதனை வாக்கெடுப்பொன்றில் தொழில் கட்சி 9% மேல் நிலை நடுத்தர வகுப்பினரின் வாக்குகளையும் 22% நடுத்தர வகுப்பினர் வாக்குகளையும் பெற்றது; கன்சர்வேடிவ் கட்சி 33% தொழிலாளர் வாக்குகளையும் 32% வறிய நிலையில் உள்ளவர்களின் வாக்குகளையும் பெற்றது. தேசிய, தனிப்பட்ட அல்லது தல நலன்களையொட்டி கட்சிகள் மதிப்பிடப்படுகின்றன வெனினும் தேவைக்கதிகமான பளுவைச் சுமப்பதாக கருதும் சிலர் வகுப்பு நலன்களை மீறி வாக்களிக்கலாம். நடுத்தர வகுப்பைச் சேர்ந்த ஐயப்பாடான வாக்காளர்கள் தொழில் கட்சியின் நல் வாழ்வு அரசின் இடர்க் காப்புறுதிக்காக 1945-ல் நடந்த தேர் தலில் வாக்களித்தனர். இதன் விளைவாக செலுத்த வேண்டி வந்த அதிகமான வரிக்காக இவர்கள் விரைவில் வருந்தவேண்டி யிருந்தது. இதே தேர்தலில் தொழிலாளர்கள் முழுவேலை வாய்ப்புத் திட்டத்திற்கு வாக்களித்தனர். ஆனால் நாட்டுடைமைத் திட்டத்தின் செயல் வேகத்தைக் கண்டு இவர்கள் அஞ்சினர். சிறிய தொழில் வினைகளில் ஈடுபட்டிருந்தோரும் உயர்நிலை அலுவலர் களும் வாழ்க்கைத் தொழிலில் முதிய நிலையில் இருந்தவர்களும் பெரும் தொல்லைக்குள்ளாயினர். ஆயினும் 1945-ல் இருந்து 1951க்கும் இடைப்பட்ட காலத்தில் 5 லட்சம் வாக்குகளின் மாற்றத்தை இவைகள் உண்டாக்கினவெனலாம். மாறாக இதே காலத்தில், ஏறத்தாழ 20 லட்சம் வாக்குகளை கன்சர்வேடிவ் கட்சியினர் கைப்பற்றினர். ஆகவே ஒவ்வொரு வகுப்பிலும் இத் தகைய ஐயப்பாடான வாக்காளர்களின் எண்ணிக்கை மிக அதிக மாக இருப்பதை அறியலாம். இதன் விளைவாக, ஒரு குறிப்பிட்ட வகுப்பினருக்கும் மிகையான ஆதரவை அளிக்கக் கூடிய அரசாங்க நடவடிக்கையெதுவும் இத்தகைய வாக்காளர்களுக்குக்குள் ஒரு பெரும் மாற்றத்தை உண்டாக்கி விடலாம்.

ஒரு பொதுத் தேர்தலின் முடிவுகளுக்கு பெரும் முக்கியத் துவம் அளிப்பது ஐயப்பாடான வாக்காளர்களின் நேர்முக வாக் களிப்பாகும். பதவியில் இருக்கும் அரசாங்கம் முந்திய தேர்தலில் மிகப் பெரும்பான்மை பலத்தோடு பதவிக்கு வந்திருக்கவில்லை யெனில் 2% வாக்குகளின் ஊசலாட்டம் எட்டுத் தொகுதிகளில் ஒன்று என்ற கணக்கில் எதிர்கட்சியினர் ஆளும் கட்சியினரை அகற்றிவிடலாம். இதனால் ஊசலாடும் வாக்குகளின் விளைவு பெரிதாக்கப்பட்டுள்ளது.

ஐயப்பாடான (ஊசலாடும்) வாக்கு ஒரு கலப்பற்ற நன்மை யாகாது. சில வேளைகளில் வாக்காளர்களின் மனமாற்றம் உறுதி யற்றதாக இருந்துள்ளது. இந்நிலை 1964–ல் ஏற்பட்டது. இதனால் அரசியலில் செயல்பட முடியாத ஓர் இக் கட்டான நிலை ஏற் பட்டது. மேலும், வாக்காளர்களின் இந்த ஊசலாட்டம் அடுத் தடுத்து அரசாங்க மாற்றத்தை ஏற்படுத்தலாம். இதனால் ஆட்சியில் அமைதிக் குலைவு உண்டாகிறது. நீண்ட காலத்திற்கான திட்டமிடலும் இதனால் தடைபடுகிறது. ஆனால், இரு கட்சிகளை யும் இடையறு விழிப்பு நிலையில் வைப்பதால் இரு கட்சி முறை வெற்றியோடு செயல்பட இது உறுதி செய்கிறது. அடுத்து வரும் தேர்தலில் மிக எளிதாகத் தோல்வியடையலாம் என்ற எண்ணம் அரசாங்கம் மெத்தனமாகச் செயல்படுவதைத் தடுக்கிறது. சபை விவாதத்தின் வாயிலாகவன்றித் தேர்தலின் விளைவாக அரசாங்கம் பதவி விலக்கப்படலாகும் நிலை பொறுப்புடைய எதிர்க் கட்சியை உருவாக்க வழி செய்கிறது. இவற்றிற்கெல்லாம் மேலாக, அதிகாரத்தைக் கைப்பற்றுதலென்பது ஐயப்பாடான வாக்காளர் களின் ஆதரவைத் திரட்டுவதைச் சார்ந்திருக்கிறது. இப்படிப் பட்ட வாக்காளர்கள் எல்லா வயதினரிடையேயும், தொழிலின ரிடையேயும், சமூக வகுப்பினரிடையேயும் காணப்படுவதால் ஒரு தனிப் பிரிவினருக்காக கட்சி செயல்படுவதையும் சிறுபான்மை யினரின் கருத்துகள் புறக்கணிக்கப்படுவதையும் இவர்கள் தடுக் கின்றனர். 'கட்சி முறையைப் போல் ஐயப்பாடான வாக்கு இந் நாட்டின் அரசியல் வாழ்க்கைக்கு இன்றியமையாததாக இருக்கிறது. தன்னலக் கும்பலாகக் கட்சி இழி நிலையடைவதைத் தடுக்கவும் இது உதவுகிறது.

### கட்சி முறையின் வளர்ச்சி

கட்சிகளுக்கும் கட்சி முறைக்கும் உள்ள வேறுபாட்டை அறிய வேண்டும். பெரும்பாலும் மக்களின் நிரந்தரமான பிரிவின் தொகுப்பைக் கட்சி கொண்டிருக்கிறதெனலாம். அரசியலோடு அல்லது தனிப்பட்ட ஒன்றைப்பற்றி இத் தொகுப்புகள்

தொடர்பு கொள்ளும் போது இவை அனைத்தும் ஒரு கட்சியாக உருவெடுக்கிறது. பாராளுமன்ற அரசாங்கத்திற்கு அடிப்படையாக இருக்கும் கட்சி முறை மிக விரிவானதாகும். பிரிட்டனில் கட்சிகள், கட்சி முறையைக் காட்டிலும் பழமையானவை. ஆயினும் 1832ஆம் ஆண்டு சீர்திருத்தச் சட்டம் நிறைவேறிய பின்னர் அரசாங்கத்தோடு தொடர்பு கொண்டதால் கட்சிகளின் வளர்ச்சி முதிர்ச்சியடைந்தது.

அரசியல் கட்சிகளின் தாயகமாக இங்கிலாந்து விளங்குகிறது. பொது நலம் கருதி அமைதியான வழிகளில் செயல்பட குழுக்கள் அமைக்கப்பட்டன. இக் கருத்தின்படி அரசியல் கட்சிகள் பிரிட்டனில் தோன்றினவெனக் கூறலாம். ஏனெனில் இங்குதான் பொறுப்புடைய அரசாங்க முறையும் தோன்றியது. கட்சி முறையையும் பொறுப்புடைய அரசாங்கத்தையும் பிரிக்க முடியாது. ஒன்று மற்றொன்றைத் தழுவியே இருக்கிறது. அரசியல் சமுதாயத்திலிருந்து கட்சிகளையும் கட்சி முறையையும் அகற்றி விட்டால் உலகத்திற்கு நல்லது என்று முன்னுய்வற்றவர்கள் கூறுகிறார்கள். இது ஓரளவு வெற்றி பெற்றாலும் தனி நபர் உரிமைகள் மறைந்து விடுகின்றன. ஒரு மேம்பட்ட கட்சியைத் தவிர மற்ற கட்சிகள் ஒழிக்கப்பட்ட ரஷியா, ஜெர்மனி, இத்தாலி போன்ற நாடுகளில் எல்லாம் இந் நிலை ஏற்பட்டுள்ளதைக் காணலாம்.

கட்சிகள் ஒரு நாட்டில் தவிர்க்க முடியாதவை. ஏனெனில் ஒரு நாட்டின் மக்கள், தம் அரசாங்கம் செயல்படுவது பற்றி மாறுபடும் உரிமை பெற்றிருக்கும் பொழுது இதை இவர்கள் பயன்படுத்திக் கொள்வர் என்பது உறுதியாகும். அரசாங்கம் எப்படிச் செயல்பட வேண்டுமென்பது பற்றி இவர்கள் ஒரு மித்த கருத்துடையவர்களாக இருக்க முடியாது. மாறாக, இவர்கள் எண்ணற்ற சிறு குழுக்களாக பிரிந்து விடுவதுமில்லை. இவர்கள் நான்கு, ஐந்து அல்லது சிறு கட்சிகளாகப் பிரிந்து இணைந்துசெயல்படுவர். ஏனெனில் ஒன்றுக்கு மேற்பட்ட அரசியல் பிரச்சினைகளில் இத்தனை கருத்துப் போக்குகள்தான் இயல்பாக இருக்கலாம். ஒவ்வொரு பிரச்சினையும் இரு தன்மையுள்ளது என்பது பொதுவான கருத்தாகும். ஆனால் அரசியலில் ஒரு பிரச்சினைக்கு ஒன்றுக்கு மேற்பட்ட கருத்துக்கள் இருக்கலாம். எடுத்துக் காட்டாக, காப்பு வரியை எடுத்துக் கொள்ளலாம். இதை உயர்த்தலாம், குறைக்கலாம், மாற்றியமைக்கலாம் அல்லது இதை முன்னிருந்தபடியே விட்டு வைக்கலாம். இந்த அரசியல் பிரச்சினையை நான்கு கோணங்களில் இருந்து பார்க்கவேண்டும். இதன் விளைவாக அரசியல் கருத்துகளையொட்டி நான்கு குழுக்களாவது அமைய வாய்ப்பு ஏற்படுகிறது.

மாற்றம் காண விரும்பும் தாராளக் கருத்துடைய ஒரு பிரிவினரும், தொடர்ச்சியைப் பேணுவதில் விருப்பம் காட்டுகின்ற இயல்பான பிற்போக்குக் கருத்துடைய ஒரு பிரிவினரும் அரசியலில் இருக்கின்றனர். ஆயினும் 19ஆம் நூற்றுண்டு வரை இவ் வியற்கையான பிரிவு கட்சிப் பற்றுறுதியின் அடிப்படையாக வில்லை. இக் காலம் வரை, நிரந்தரமான அரசியல் வேறுபாடுகளைக் காட்டிலும் அரசியல் கட்சிகள் வரலாற்றுச் செயல் விளைவுகளால் பிரிக்கப்பட்டிருந்தன.

அரசியல் கட்சிகள் இங்கிலாந்தில் இரண்டாம் சார்லஸ் அரசரின் ஆட்சிக் காலத்தில் தோன்றின. இதற்கு முன், பாராளு மன்றத்தில் சில பிரிவுகள் காணப்பட்டன. தேசிய திருச்சபையை விரும்புகிறவர்களும் அரசரையும் இவரது அரசவையையும் ஆதரிப்பவர்கள் ஒரு கட்சியாகவும், ரோமன் கத்தோலிக்க திருச்சபை முறைகளை மேற்கொண்டிருந்த தேசிய திருச் சபையைத் தாக்கிய கடுஞ் சீர்திருத்தச் சமயவாதிகள் ஒரு கட்சியாகவும் சபையில் இருந்தனர். இருப்பினும், இவ்விரு கட்சியினரும் அரசர் இறையுரிமை கோரிய பொழுது இதை எதிர்த்துப் பாராளு மன்றத்தின் இறைமையை நிலை நாட்ட விரும்பினர். திருச் சபையின் ஆதரவாளர்கள் புரட்சி செய்ய விரும்பாமல் போருக்குத் தயாரான போதுதான் திருச்சபை அரசர் பக்கம் சேர்ந்து கொண்டது. இதற்குப் பின், காவேலியர்களுடனும் (Cavaliers) பின்னர் ராயலிஸ்டுகளுடனும் (Royalists) இது மிக நெருங்கித் தொடர்பு கொண்டது. எட்வர்டு ஹைடு என்பவரின் தலைமையில் இக் கட்சி வெளியேறி பிரான்சு நாட்டில் இருந்து வந்தது.

முடிவாகப் பாராளுமன்றத்தின் இறைமை நிலை நாட்டப் பட்டவுடனும் அரசர் அரியணையில் அமர்த்தப்பட்டவுடனும் மற்ற பிரச்சினைகளையொட்டியே பிரிவுகள் காணப்பட்டன. 1660க்குப் பிறகு, நாடு திரும்பிய கவேலியர் ஒரு புறத்திலும், கடந்த காலப் போராட்ட நினைவுகளை மறக்காதவர்களும் பாராளு மன்றத்தின் இயைமையை கண்ணும் கருத்துமாகப் பேணிய நிலக் கிழார்களும் மறுபுறம் இருந்தனர். முதலாம் சார்லஸ் மன்னரை பதவி நீக்கம் செய்வதில் உதவியாக இருந்தவர்களோடு இணங்காக் கருத்துள்ள நடுத்தர வகுப்பினரும் லண்டன் நகரையும் மற்ற பெரிய நகரங்களையும் சேர்ந்த வணிகர்களும் இவர்களோடு சேர்ந்து கொண்டனர். பல்வேறு பொருள்களையொட்டித் தகராறுகள் தோன்றின. எனவே, 1678-ல் கத்தோலிக்க அரசர் ஒருவரை கண்டஞ்சியவர்கள் வருங்கால இரண்டாம் ஜேம்ஸ் மன்னரை விலக்கக் கூடிய ஒரு மசோதாவைக் கொணரத் திட்ட

மிட்டனர். இத் திட்டத்திற்கு இணக்கம் தெரிவிக்க மறுத்தவர்கள் 'டோரிகள்' எனவும் ரோமன் கத்தோலிக்கத் திருச் சபையோடு இரகசிய இணைப்புக் கொண்டவர்கள் எனவும் இவர்கள் மீது குற்றம் சாட்டப்பட்டது. தூற்றும் நோக்கத்தோடு இச் சொல் பயன்படுத்தப்பட்டது. நாடு கடத்தப்பட்டவர்களையும் ரோமன் கத்தோலிக்கரையும் அயர்லாந்தின் மத்திய சதுப்பு நிலத்தில் இருந்து கொண்டு ஆங்கிலோ ஐரிஸ் குடியானவர்களைச் சுரண்டி வாழ்ந்தவர்களையும் இச் சொல் குறிப்பிட்டது. இதற்கு மாறான விக்குகள் (Whigs) என்ற சொல்லும் இழிவு படுத்தும் நோக்கத்தோடு பயன்படுத்தப்பட்டது. அர்கில் ஷயர், மேற்கத்திய தாழ் நிலங்களில் வசித்த ஸ்காத்லாந்திய தேசிய ஒப்பந்தச் சார்பாளர்களுக்கு முதலில் இப் பெயர் கொடுக்கப்பட்டது. பிற்காலத்தில் பொது ஆட்சி முறைத் திருச் சபை வெறியர்களை இச் சொல்லால் குறிப்பிட்டனர். பின்னர், அரசருக்கெதிராப் பாராளுமன்றத்தை ஆதரித்தும் மக்களின் உரிமைகளை வலியுறுத்தியும் ரோமன் கத்தோலிக்கரைத் தவிர மற்றெல்லோருக்கும் சமயப் பொறையை வலியுறுத்துவும் வந்த அரசியல்வாதிகளுக்கு இப் பெயர் வழங்கப்பட்டது.

'மாண்புமிகு புரட்சிக்குப்பின் கட்சிகள் குறிப்பிடத்தக்க வளர்ச்சியடைந்தன. பலதரப்பட்ட கருத்துகளைக் கொண்ட அமைச்சர்களை உட்குழுவாகக் கொண்ட ஆதரவாளர்களை இரண்டாம் சார்லஸ் அமர்த்திக் கொள்ள முடிந்தாலும் வில்லியம் ஆன் போன்றவர்கள் காலத்தில் இத்தகைய செயல்கள் தோல்வியடைந்தன. 1695-ல் வில்லியம் டோரிகளை அமைச்சவையிலிருந்து அகற்றிவிட்டு விக் 'குறுங்குழு' ஒன்றை அமர்த்தினர். பிரான்சோடு நடந்த போரை முடிவிற்குக் கொண்டு வருவதற்காக மார்ல்பரோவையும் கொடோல்பினையும் நீக்கிவிட்டு டோரிப் பெரும்பான்மையினரின் ஆதரவோடு தம் எஞ்சிய பதவிக் காலம் முழுதும் டோரி அமைச்சவையின் ஆதரவோடு ஆன் அரசியார் ஆட்சி செய்தார். கலப்பு அமைச்சவைகள் செய்வினைமிக்க கட்சிகளோடு இணங்கிச் செயல்படாதென்பதை வில்லியமும் ஆனும் உணர்ந்தார்கள். விக்குகளும் டோரிகளும் இப்பொழுது ஓர் உறுதியான உருவைப் பெற்றனர். இரு கட்சிகளுக்கும் சொந்தமான துண்டு வெளியீட்டு எழுத்தாளர்கள் இருந்தனர். அடிசன் (Addison) டிபோ (Defoe), ஸ்டீல் (Steele), லாக் (Locke) போன்றோர் விக்கு கட்சியிலும் டோரிக்கட்சியில் சுவிஃப்ட் (Swift) போலிங்புரோக்கும் (Bolingbroke) இருந்தனர். கட்சிகளின் கருத்துகளை இவர்கள் தெளிவாக வெளிப்படுத்தினர். சிறப்பதிகாரங்களை மேலும் குறைக்கவும் சமய எதிர்ப்புவாதிகளுக்கு (Protcstants) எல்லா

உரிமைகளை அளிக்கவும் நிலக்கிழார்களுக்கெதிராக பணக் காரர்களை ஆதரிக்கவும் விக்குகள் விரும்புவதாக சுவிஃட் உரிமை கொண்டாடினர். மறுபுரம், 1688ஆம் ஆண்டின் புரட்சி ஏற்பாடுகளை மாற்றியமைக்கவும் இணங்காச் சமயத்தினர் மீது இன்னும் சில கட்டுப்பாடுகளை விதிக்கவும் நிலக்கிழார் முறையை வளர்க்கவும் ஐரோப்பாவில் தலையிடாமையையும் டோரிகள் விரும்பிப் பற்றி நிற்பதாக போலிங்புரோக் கூறினர்.

விக்கு, டோரிக் கட்சிகள் இரண்டும் 17ஆம் நூற்றுண்டின் இறுதியிலிருந்து வளர்ச்சியடைந்திருந்தாலும் இவைகளின் மரபு களும் முற்கோள்களும் அடுத்து வந்த 200 ஆண்டுகளில் வளர்ச்சி யடைந்ததையொட்டி மாற்றமடைந்தன. இரு கட்சி முறையைப் போல் ஏதும் இதற்கும் காணப்படவில்லை. முதலாவதாக, மக்களை இரண்டாகப் பிரிக்கும் முயற்சி எதையும் மக்கள் வெறுத் தனர். கட்சிகளுக்கும் தனிக் குழுக்களுக்கும் இடையேயான வேறு பாடுகளை இன்னும் இவர்கள் பகுத்துணரவில்லை. இத்தகைய பிரிவுகளால் முதற்காலத்தில் அடைந்த துயரங்களை இன்னும் இவர்கள் நினைத்துக் கொண்டார்கள். இரண்டாவதாக இரண்டு கட்சிகளுக்கிடையேயான வரையறைகள் வேறுபட்டன. அரசாங்கத்தின் பிரச்சினைகளைத் தீர்க்கும் குறிப்பிட்ட முறைகளுக் கொப்ப இக்காலத்திய கட்சிகள் பிரிக்கப்பட்டுள்ளன. ஆனல் 18ஆம் நூற்றுண்டின் கட்சிகள் அரசியல் கருத்துகளால் இணைந்து செயல்படுகின்றன என்பதைக் காட்டிலும் வரலாற்று, குடும்ப, தலத் தொடர்புகளால் ஒருங்கிணைந்து செயல்பட்டன எனலாம். ஆகவே இந் நூற்றுண்டின் முற்பகுதி வரை ஹனேவர் மரபினர் அரசுரிமை பெறுவதை நிலைப்படுத்தும் விருப்பமே விக்குகளின் ஒற்றுமைக்கு முக்கிய காரணமாக இருந்து வந்தது. மூன்றுவதாக ஒழுங்கைக் குலைக்கும் இடர்பாடுகளை கட்சிகள் எதிர்நோக்க வேண்டியிருந்தன. தனி உயர்வை நாடும் தனிப்பட்டவர்களுக் குள்ளான குடும்பச் சண்டைகள், கட்சி வேறுபாடுகளை மீறிய அரச ஆதரவை இவைகள் எதிர்க்க வேண்டியதும், கட்சியைத் தாக்கவோ எதிர்கட்சியை அமைக்கவோ இவைகள் முற்படாததும், ஒரு திட்டவட்டமான கொள்கையால் இவைகள் ஒற்றுமையடை யாததும் இவ் விடர்பாடுகளுள் அடங்கும். நான்காவதாக, ஒரு குறிப்பிட்ட பிரச்சினையைப் பற்றிய எல்லா முக்கியமான கருத்து களோடும் சிறப்பாக தொடர்பு கொள்ளும் செயற்திட்டங்களையும் கொண்டுள்ள இக்காலக் கட்சிகளைப் போலன்றி, 18ஆம் நூற் றுண்டில் விக்குக் கட்சியும் டோரிக் கட்சியும் பதவிக்கு வந்தால் இவைகளின் குறிப்பிட்ட கொள்கையை நிறைவேற்றுவதாக உறுதி கூறவில்லை. மாறுக, பதவிக்கு வரும் வாய்ப்புக் கிடைத்து பதவிக்கு

வருமாயின் பதவியின் பயன்களை அனுபவிக்கலாமென்பது இவை களின் நோக்கமாக இருக்கிறது. இறுதியாக, கட்சிகள் பாராளு மன்றத்தில்தான் இருந்தன. நாடு முழுவதிலும் இவை பரவலாம் என்ற கருத்து அக்காலத்தில் இருக்கவில்லை. அரசியல் நடவடிக்கைக் கான உறுதிமொழிகளைக் கூறி வாக்காளர்களை வசப்படுத்துவதற்கு பதிலாக வாக்காளர்களை விலைக்கு வாங்கும் பொழுது தொகுதி யினரின் விருப்புகளை வேட்பாளர்கள் கருத்தில் கொள்ள தேவை யில்லை. எவ்வாறுயினும், ஒரு சில இடங்களுக்கே தேர்தலில் போட்டியிருந்தது. இப்பொழுதுள்ள பொதுத் தேர்தலைப் போல் அப்பொழுது ஒன்றுமிருக்கவில்லை. 19ஆம் நூற்றுண்டின் தொடக் கத்தில், வருங்காலத் தேர்தல் போராட்டங்களின் செலவிற்காக விக் கட்சி நிதி திரட்டினுலும் இதிலிருந்து கொடுக்கப்பட்ட பணம் லஞ்சமாகவே இருந்தது.

நாம் முன் பார்த்தது போல், பல செயல் விளைவுகளால் இம் முறை முடிவிற்கு வந்தது. ஆனுல் பாராளுமன்றத்தில் கட்சிகளின் நன்கிணைந்த வளர்ச்சி முதன்மையானதாக இருந்தது. மூன்றும் ஜார்ஜ் மன்னரின் ஆட்சிக் காலத்தில் விக்கு (Whigs) களுக்கெதிராக அரசியல் ஆதரவு பயன்படுத்தப்பட்டபொழுது இம் முறை முழுவதையும் சீர்திருத்துமாறு இவர்கள் கேட்டுக் கொண்டார்கள். அரசியல் கட்சிகளின் ஒரு தனிச் சிறப்பான வரையறைக்கு இவர் களின் பொதுவான நோக்கம் உதவியனதெனலாம். 'எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட சில குறிப்பிட்ட கருத்துக்களின் மீது தம் கூட்டு முயற்சியால் நாட்டின் நலனை மேம்படுத்துவதற்காக ஒன்றுபட்ட மனிதர்களின் கூட்டமே' கட்சியென பர்க் என்பார் கூறினுர். ஒட்டிணைவான கட்சிகள் இப்பொழுது பாராளுமன்றத்திற்கு வந்து விட்டன. ஆனுல் விஞ்சிய ஆற்றலுடையனவாகக் கருதப்படும் அளவிற்குப் பெரிதாக இல்லை. 19ஆம் நூற்றுண்டு முடியும் வரை சுயேச்சை (உறுப்பினர்) களால் தான் பொதுமக்கள் சபையில் பெருபான்மை முடிவு செய்யப்பட்டது. இவர்களின் மீது எந்த அமைச்சராலும் (பிட் உள்பட) தம் கொள்கையைத் தணிக்க முடியவில்லை.

இந் நூற்றுண்டில் அரசியல் கட்சிகள் மக்களிடையே பெருமளவு அரசியல் கட்சிகள் பரவவில்லை. உரிமை மசோதா ஆதரவாளர் கழகம், யார்க்ஷயர் மன்றம், அரசியலமைப்புத் தொடர்புடையன பற்றிய தகவல் வளர்ச்சிக் கழகம், குறிப்பிட்ட சீர்திருத்தங்களைப் பாராளுமன்றம் நிறைவேற்ற ஆர்பாட்டம் செய்யும் சங்கங்கள் போன்ற பல்வேறு குழுக்கள் பல இருந்தன. நாட்டிலுள்ள கழகங்களுக்கும் பாராளுமன்றத்தில் இருந்த கட்சி

களுக்கும் தொடர்பு இருக்கவில்லை. இக் கழகங்கள் குறிப்பிட்ட சில குறிக்கோள்களை வளர்க்க அமைந்திருந்தனவேயன்றி தேசிய வாழ்க்கையின் எல்லா அம்சங்களையும் கொண்ட செயற்திட்ட மேம்பாட்டிற்கென இவைகள் செயல்படவில்லை.

1832-ல் கார்ல்டன் சங்கத்தை டோரிகளும் 1836-ல் சீர் திருத்த சங்கத்தை விக்குகளும் நிறுவியது, அரசியல் பாகு பாட்டின்படி விழிப்புணர்வு வளர்ச்சியை எடுத்துக் காட்டியது. மக்கள் சார்புடைய செய்தித்தாள்களின் வளர்ச்சியும் நாட்டுப்புற மாவட்டங்களுக்கிடையே போக்குவரத்து முறைகள் வளர்ச்சி யடைந்ததும், பீல், டிசரெலி, கிளாட்ஸ்டன் போன்ற பெருந் தலைகளின் தோற்றமும் அரசியல் கட்சியமைப்புகளை வளர்த்தன. ஆனால் உண்மையான வளர்ச்சிப் பெருக்கம் 1832ஆம் ஆண்டு சீர் திருத்தச் சட்டத்தினால் ஏற்பட்டது. இலஞ்சம் தொடர்ந்திருந்து வந்தாலும் பாராளுமன்றத்தில் போதிய அளவு பெரும்பான்மை வாக்குகளை விலைக்கு வாங்க இயலவில்லை. ஆகவே தேர்தலில் வெற்றி பெற ஆதரவு திரட்ட அவசியமாயிற்று. பாராளு மன்றத்தில் உள்ள அரசியல் கட்சிகளும் நாடு முழுவதும் சென்று பரவின. ஒருவர் வாக்களிப்பதற்கு முன் அவரது பெயர் வாக் காளர் பட்டியலில் இருக்க வேண்டுமென்ற ஒரு விதி இருந்தது. கல்வியறிவில்லாத ஒருவர் தம் வாக்குரிமைத் தகுதிகளை நிலை நாட்டுவதென்பது எளிதன்று. ஆகவே, இரு கட்சிகளும் 'பதிவுச் சங்கங்களை நிறுவி' இவைகளின் வழியாக வாக்காளர் பட்டியல்களை தொகுத்தும் திருத்தியும் வந்தன.

ஆனால் இப் பதிவுச் சங்கங்கள் வேட்பாளர்களை அமர்த்துவதில் அல்லது தேர்தல் போராட்டங்களை நடத்துவதோடு தொடர்பு கொள்ளவில்லை. மேலும், மத்திய அமைப்பிற்கும் தல அமைப் பிற்குமிடையில் இருந்த தொடர்பு செம்மையாக இல்லை. 1867ஆம் ஆண்டு சீர்திருத்த சட்டத்தின் விளைவாக முக்கியமான மாற்றம் ஏற்பட்டது. பர்மிங்ஹாம், மான்செஸ்டர், லிவர்பூல் போன்ற நகர் ஒவ்வொன்றிற்கும் இச் சட்டம் மூன்று உறுப்பினர்களை பாராளு மன்றத்திற்கனுப்ப வழி செய்தது. ஒவ்வொரு வாக்காளருக்கும் இரண்டு வாக்குகள் அனுமதிக்கப்பட்டன. ஒரு கட்சியின் இரண்டு அல்லது மூன்று வேட்பாளர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்றால் வாக்குகள் கவனமாக ஒதுக்கி அளிக்கப்பட வேண்டும். இதனால் ஒருவருக்குத் தேவைக்கதிகமான ஆதர வளித்து வாக்குகளை வீணாக்குவதைத் தவிர்க்கலாம். டோரிகள் இம் முறையை ஏற்கவே தொடங்கி விட்டனர். ஆனால் முற்போக்கு வாதிகள் பர்மிங்ஹாமில் இம் முறையை வெற்றிகரமாய் செயல்

படுத்தி 1868-தேர்தலில் மூன்று இடங்களையும் கைப்பற்றிக் கொண்டனர். பின்னர் இம் முறை நகராட்சித் தேர்தல்களிலும் வெற்றியோடு பயன்படுத்தப்பட்டது. இதன் பயனாக, நாடு முழு வதற்கும் இம் முறை அமைப்பை இரு கட்சிகளும் நீட்டித்தன.

இவ்வாறு பதிவுச் சங்கங்கள் தலக் கட்சிக் கழகங்களாக வளர்ச்சியடைந்தன. தேர்தல் போராட்டத்திற்கென இவைகள் கவனமாக அமைக்கப்பட்டதோடு மத்திய அமைப்போடு தொடர்புபடுத்தப்பட்டன. 1867-ல் உருவாகிய கன்சர் வேடிவ்களின் தேசிய யூனியனும் அரசியலமைப்புக் கழகமும், 1877-ல் தோன்றிய லிபரல் கூட்டமைப்பும் தேசிய நிலையில் ஒன்றாக இணைந்தன. 1883ஆம் ஆண்டின் நெறிகேடான, சட்ட முரணான செயல்கள் தடுப்புச் சட்டத்தால் இவைகளின் வளர்ச்சி உறுதிப்பட்டது. இச் சட்டம் செலவினத்திற்கு ஒரு வரம்பு கட்டி யதால் தம் விருப்பில் சேவை செய்யக் கூடிய தொண்டர்களிட மிருந்து ஆதரவு நாடுவது அவசியமாயிற்று. தனிப்பட்ட பற்றுறுதி யிலன்றி கொள்கை, கருத்து, செயற்திட்டம் ஆகியவற்றில் சார்ந் திருந்த தலைவர்களின் நிலையிலிருந்து கட்சிகளின் வலிமைப் பெருக்கம் விளங்கிற்று. கிளாட்ஸ்டன், டிசரெலி போன்ற இத் தலைவர்கள் பேச்சோடு தம் தேர்தல் முயற்சிகளை அடக்கிக் கொள் ளாமல் நாட்டு மக்களுக்குத் தம் கொள்கைகளைத் தனிப்பட்ட முறையில் விளக்கினார்கள்.

பாட்டாளி மக்களின் தொழில் சங்கங்களின் வளர்ச்சியில் தொழில் கட்சி தோன்றியதெனலாம். 1900-வரை இக் கட்சி தோன்றவில்லை யெனினும், சமதர்ம சனநாயக கூட்டமைப்பு (1881), ஃபேபியன் கழகம், (1883), சுதந்திர தொழில் கட்சி (1893) ஆகிய மூன்று சோசலிச அமைப்புகளும் 64 தொழில் சங்கப் பிரதிநிதிகளோடு தம் பிரதிநிதிகளையும் அனுப்பி தொழி லாளர் பிரதிநிதித்துவக் குழுவை அமைத்த பொழுது 1906-ல் தொழில் கட்சியென மறு பெயரிடப் பெற்றது. 'உற்பத்தி சாதனங்கள் பொது உடைமை' ஆக வேண்டுமென்பதில் சோசலிஸ்ட் அமைப்புகள் நம்பியிருக்கையில், தொழில் சங்கங்கள் தம் உறுப்பினர்களுக்கு ஆதாயம் தேடித் தரும் பொருட்டுத் தொழிலாளர்களுக்குப் பாராளுமன்றத்தில் பிரதிநித்துவத்தைப் பெருக்க விரும்பின. 1918ஆம் ஆண்டு வரை தல அமைப்புகள் கணிசமாக மாற்றமடைந்தன. இணைக்கப்பட்ட ஓர் அமைப்பு வழியாகத்தான் தொழில் கட்சியில் உறுப்பினர் சேர முடிந்தது. எவ்வாறாயினும், அவ் வாண்டின் மாநாடு, ஆர்தர் ஹென்டர்சன், சிட்னிவெப் ஆகிய இருவராலும் வரையப்பட்ட அமைப்புச்

சட்டத்தை ஏற்றுக் கொண்டது. இதனுல் தனிப்பட்ட உறுப்பினர் களின் தலக் கழகங்கள் தொழில் கட்சியில் சேர முடியும். இணைக் கப்பட்ட கழகங்களின் கூட்டமைப்புகளிலிருந்து இவ்வாறு தொழில் கட்சியாக மாற்றியமைக்கப்பட்டு இதன் கிளையமைப்புகளோடு ஒரு தேசிய அமைப்பாக மாறியது. இப்பொழுது ஒவ்வொரு தொகுதி யிலும் இப்பொழுது தலக் கட்சிக் கழகம் ஒன்றிருக்கிறது. ஆனுல் தொழில் சங்கங்கள்தான் இந்த இயக்கத்தில் மேம்பட்டு நிற்கின் றன. தொழில் கட்சிஉறுப்பினர் $6\frac{1}{2}$ மிலியனில் $5\frac{1}{2}$ மிலியன் தொழில் சங்கத்தினராக உள்ளனர்.

### அரசியல் கட்சிகள்: அமைப்பு, செயற்திட்டம், முறைகள்

ஒரு குறிப்பிட்ட கொள்கை அடிப்படையில் அரசாங்கம் செயல்பட வேண்டுமென்று மக்கள் விரும்புவதால் அரசியல் கட்சி கள் இருக்கின்றன. தேர்தலில் வெற்றி பெறுதல் இவைகளின் முதன்மையான நோக்கமாக இருக்கிறது. எனவே, தல நிலையி லும் தேசிய நிலையிலும் செயல் திறமுள்ள ஓர் அமைப்பை இவைகள் அளிக்க வேண்டும்; தேர்தல் போரட்டத்திற்கு போதிய நிதி அளிக்க இவைகள் உறுதி செய்ய வேண்டும்; தொகுதியினர் பெரும் பாலோரைக் கவரத்தக்க கொள்கையை இவைகள் உருவாக்க வேண்டும்.

பிரிட்டனில் கன்சர்வேட்டிவ் கட்சியினர் என்றுமே பிற்போக் காளர்களாக இருந்தார்கள் என்று சொல்வதற்கில்லை. இதே போல் லிபரல் கட்சியினர் பொதுப் பிரச்சினைகளைப் பொறுத்த வரையில் தாராளவாதிகளாக இருந்ததுமில்லை. சில சமயங்களில் கன்சர்வேட்டிவ் கட்சியினர் சீர்திருத்தங்களை ஆதரித்த பொழுது லிபரல்கள் இவர்களை எதிர்த்தனர். இரு கட்சியினருக்குள் மாறு பட்ட கருத்துகள் என்றுமே இருந்து வந்துள்ளன. எனினும், பொதுவாக, பிற்போக்கு மனப்பான்மையுடைய ஆண்களும் பெண் களும் கன்சர்வேட்டிவ் கட்சியைப் பற்றி நின்றனர். தாராளக் கருத்துடைய மக்கள் லிபரல் கட்சியையும் தொழில் கட்சியையும் நாடினர். ஆனுலும் இவைகளுக்கு விதி விலக்காகப் பல லட்சம் மக்கள் இருந்தனர். 'ஒரு கட்சி எதற்காகச் செயல்படுகிற'தென் பதைச் சரி நுட்பமாகச் சொல்ல முடியாது. வழக்கமாக, பதவியைப் பெறுவதும் பின் அதைத் தொடர்ந்து வைத்துக் கொள் வதும் கட்சியின் முதன்மையான நோக்கமாகும். கட்சி தனக் காகவும் தன் நண்பர்களுக்காகவும்தான் இருக்கிறது. எதிர் கட்சியில் இருக்கும் பொழுது ஒன்றிற்காகவும் அதிகாரத்தில் இருக்கும் பொழுது முற்றிலும் மாறுபட்ட ஒன்றிற்காகவும் இது இருக்கலாம். பதவியில் உள்ள கட்சிக்கும் பதவியில் இல்லாத

கட்சிக்கும் இடையில் செயல் திட்டத்தில் பெருமளவு வேறுபாடு இருப்பதாகத் தோன்றினும் ஒரு கட்சி பதவி விலகி இன்னொரு கட்சிக்குப் பதவியளிக்கும் பொழுது கொள்கையில் பெரு மாற்ற மெதுவும் காண்பதில்லை.

### கன்சர்வேட்டிவ் கட்சியினர்

இதன் பெயருக்கேற்றவாறு இக் கட்சி இருந்த காலம் உண்டு. ஆனால் இங்கிலாந்தின் அரசியல் வரலாற்றை அறிந்த எவரும் இக் கட்சி பிற்போக்குக் கட்சியாகவும் முன்னேற்றத்திற்குத் தடையான கட்சியாகவும் இருந்ததென வாதிக்க மாட்டார். பீல், (Peel) டிசரெலி (Disaraeli) ஆகிய இருவரின் தலைமையில் இது பெரும் முற்போக்குக் கட்சியாக இருந்தது. கடந்த எண்பதாண்டுக் காலத்தில் பாராளுமன்றத்தில் நிறைவேறிய சீர்திருத்தங்களைக் கணக்கிட்டால் இவைகளில் பல சீர்திருத்தங்கள் கன்சர்வேட்டிவ் அமைச்சர்களால் கொண்டு வரப்பட்டதை அறியலாம். கன்சர் வேட்டிவ் கட்சியினர் சீர்திருத்தவாதிகளெனவும் ஆனால் இவர்கள் கவனமும் எச்சரிக்கையும் உள்ளவர்களான ஒரு தலைவர் குறிப் பிடுகிறார்.

இக் கட்சியின் உறுப்பினர் தொகுதியைக் கருத்தில் கொண்டு பார்த்தால் இதன் தன்மை ஒருவாறு விளங்கும். போருக்கு முன்னும் பின்னும் பெருமக்களும், நிலக் கிழார்களும், நிறுவப் பெற்ற திருச் சபையின் குருமார்களில் பலரும் திருச் சபையினரின் ஆதரவாளர்களாகிய பொதுமக்கள் பலரும் இதன் உறுப்பினராக இடம் பெற்றிருந்தனர். இங்கிலாந்தின் நாட்டுப்புறங்களில் இக் கட்சி என்றுமே வலிமையோடு விளங்கியது. குறிப்பாகத் தென் மாவட்டங்களில் இக் கட்சி பெரும் செல்வாக்குப் பெற்று விளங் கிற்று. வழக்குரைஞரில் பெருமளவினரும், பாங்கர்களும், பெரும் தொழிலதிபர்களும் படையினரும் இக் கட்சி உறுப்பினராக இருந்திருக்கின்றனர்.

பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்றவர்கள் பலர் இக் கட்சியில் இருந்தனர். *1885—1918*-க்கும் இடைப்பட்ட காலத்தில் பொது மக்கள் சபைக்கு பல்கலைக் கழகங்களிலிருந்து லிபரல் உறுப்பினர் ஒருவர் கூட தேர்ந்தெடுக்கப்படவில்லை. ஆயினும், பல்கலைக் கழக கல்வியறிவு இளைஞர்களின் தாராளக் கொள்கையை நீக்கி விட்டதாகப் பொருள் கொண்டு விடலாகாது. போருக்கு முன், அரசியலில் கன்சர்வேட்டிவ் ஆதரவாளர்களின் குடும்பத்தினரைப் பல்கலைக் கழகங்கள் கவர்ந்தது தான் இதற்குக் காரணமாக இருக்கலாம். ஒரு வேளை, பழமை பேணும் பற்றுளர்களின் சமூகச்

சூழலில் நுழைந்து இதன் செல்வாக்கிற்குள்ளாகப் பட்டதாரிகள் விரும்பி இருக்கவும் கூடும். எவ் வகையினும், லிபரல் அல்லது தொழில் கட்சியில் சேரும் பட்ட முன் நிலை மாணவர்கள் முதிர்ச்சி யடைந்து சமூக முதன்மை நிலை அடையும் பொழுது கன்சர் வேட்டிவ் கட்சியை நோக்கிச் செல்கின்றனரெனக் கூறப்படுகிறது. பல்கலைக் கழகத்தில் பயின்ற ஒருவரின் அரசியல் சாய்வு நாட்டம் அவருடைய அறிவெளியால் முடிவு செய்யப்படுவதில்லை எனத் தெரிகிறது. ஆனால் ஒருவருடைய பெற்றோரின் அரசியல் தொடர் பாலும், படித்த பின் வாழ்க்கையில் ஒருவர் எய்தும் நிலையாலும் இது பெரும்பாலும் உறுதி செய்யப்படுகிறது.

தொழில் கூட்டு நிறுவனங்கள், பெரும் தொகையை வருமான வரியாகச் செலுத்துவோர், மதுபானங்கள் விற்போர் ஆகிய நலன்களை' கன்சர்வேட்டிவ் கட்சி பெரிதும் கவர்ந்தது. சிறிய உற்பத்தியாளர், வணிகர்கள், கடைக்காரர்கள் ஆகியோர் அடங்கிய நடுத்தர வகுப்பினரிடையே இக் கட்சி சிறிது செல் வாக்கு பெற்றிருந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டு முழுவதும் இவ் வகுப்பினர் லிபரல் கட்சியைச் சார்ந்திருந்தனர். இங்கிலாந்தின் அரசியல் வாழ்க்கையில் 'நடுத்தர வகுப்பினர் என்ற சொல் பெரிதும் பயன்பட்ட போதிலும் சரி நுட்பமாக இச் சொல் வரையறை செய்யப்படவில்லையெனலாம்.' பணத்தையே வாழ்க்கையின் முதன்மைத் தகுதியாகவும் கருவியாகவும் கொண் டிருக்கும் சமூகத்தின் ஒரு பிரி'வென இதை ஒருவர் வரையறை செய்தார். இது தெளிவற்றது. தொழில் கட்சியின் எழுச்சிக்கு முன், பொறித்துறை வினைஞர்களையும் நகர கூலி வேலையரையும் நாட்டுப்புற பண்ணை தொழிலாளரையும் கன்சர்வேட்டிவ் கட்சி கவர்ந்தது. இதற்குப் பின்னும், கூலி வேலையரில் ஒரு கணிசமான அளவை இக் கட்சி தன் பிடியில் வைத்திருப்பதைப் பொதுத் தேர்தலின் முடிவுகள் தெளிவுபடுத்துகின்றன. பொதுவாக, பிரிட்டிஷ் வாக்காளர்களின் எல்லாப் பிரிவினரையும் இக் கட்சி கவர்கிறது. சமூகத்தின் கீழ் நிலையிலின்றி சமூக, பொருளாதார மட்டத்தின் மேல் நிலையில் உள்ளவர்களிடம் இக் கட்சியின் வலிமை நிலை பெற்றிருக்கிறது.

### லிபரல் கட்சியினர்

சீர்திருத்தம், கட்டுப்பாடற்ற வணிகம் ஆகியவை பற்றிய கட்சியாக லிபரல் கட்சி இருந்தது. தாராள வணிகத்தில் நம்பிக்கை கொண்டிருப்பதாக இன்றும் இது கூறிக் கொள்கிறது. ஆனால் தலையிடாக் கொள்கையைப் பற்றி நிற்பதைப் பல ஆண்டு

களுக்கு முன்பே இது கைவிட்டுவிட்டது. நாட்டின் தீமைகளுக்குத் தாராள வணிகம் வழி வகுக்கும் என்ற பழைய கருத்தை இக் கட்சி இன்று பற்றி நிற்க விரும்பவில்லை. தொடக்கக் காலத்தில் இருந்ததைப் போல் நல்லெண்ணத்துடன் குடிகளின் உரிமைகள் மீது தேவையற்ற கட்டுப்பாடுகளைச் சுமத்துஞ் சட்டங்களைக் கண்டு இக் கட்சி இப்பொழுது கலவரமடைவதில்லை. வணிகத்தைத் தனியே விட்டுவிட இவர்கள் விரும்பினும் தொழில் சாலைகளை தனியே விட விரும்பவில்லை. குறைந்த பட்ச ஊதியத்தாலும் சமூகக் காப்புறுதியாலும் தொழிலாளரைப் பாதுகாப்பதற்கு இவர்கள் பின்வாங்கவில்லை. செல்வர்களின் தனியுரிமையிலும் வறியவர்களின் கூட்டாண்மையிலும் இவர்களுக்கு இப்பொழுது நம்பிக்கையுண்டு. போருக்குப் பின் லிபரல் கட்சி நலிவுற்றதற்கு முதன்மையான காரணங்களில் இது வொன்றாகும். 1918க்குப் பின் இங்கிலாந்தில் உடனடியான பொருளாதார சமூகப் பிரச்சினைகள் தோன்றின. ஆனால் இவைகளைத் தீர்க்க லிபரல்களிடம் திட்டவட்டமான, பொருத்தமான செயற் திட்டமெதுவுமில்லை. இரு திசைக் கோடிகளுமில்லாத இடைநிலை வழியில் செல்ல இவர்கள் முயன்றார்கள். ஆனால் இப்போதைக்கு இப்படிப்பட்ட கட்சிக்கு இடமில்லை.

போருக்கு முன் லிபரல் கட்சியின் உறுப்பினர் சமூகத்தின் பரவலான பிரிவைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். தொழில், வணிக வகுப்புகளில் ஒரு கணிசமான பகுதியினரும், நகரிலுள்ள சிறிய கடைகாரர்களும் வணிகர்களும், நாட்டின் வேளாண்மைப் பகுதியில் இருந்த வாக்காளர்களில் ஒரு சிலரும் நகரத் தொழிலாளர்களில் ஒரு பெரும் பகுதியினரும் இக் கட்சியின் உறுப்பினராக இருந்தனர். கடந்த இருபத்தைந்தாண்டு காலத்தில் இவர்களில் பெருமளவினர் மற்ற இரு கட்சிகளிலும் சேர்ந்து கொண்டனர். மேலும் இணங்காச் சமயத்தினரை மிதவாதம் (லிபரலிசம்) எப்பொழுதுமே கவர்ந்ததெனலாம். அதாவது நிறுவப் பெற்ற திருச் சபையோடு இணைக்கப்படாத சமயவாதிகளும் குருமார்களும் ஆங்கில திருச் சபைக் கொள்கையை ஒப்புக் கொள்ளாதவர்கள் இவ் விணங்காச் சமயத்தினராவர்.

## தொழில் கட்சி

தொழில் சங்க உறுப்பினர் தொழில் கட்சியின் முதுகெலும்பாவர். பிரிட்டனில் உள்ள தொழில் சங்கத்திற்குட்பட்டவர்களில் பெருமளவினர் தொழில் கட்சியணியில் இடம் பெற்றுள்ளனர். இக் கால சோசலிஸ்டுகள் (சமதர்மவாதிகள்) தொழில் கட்சியைச் சார்ந்திருக்கவில்லையெனினும் சோசலிச வாக்காளர்களின் பெரும்

பகுதியை தொழில் கட்சி கவர்ந்திழுத்துக் கொண்டுள்ளது. கீழ் நிலைச் சமூகப் பொருளாதார வகுப்பினர்தான் தொழில்கட்சி உறுப்பினரில் பெருமளவில் இருக்கின்றனர். ஆனால் உயர்நிலை வகுப்பிலிருந்துதான் இதன் தலைமையும் அறிவாற்றலும் உருவாயின. வாழ்க்கை தொழிலர், அறிஞர், அரசாங்க ஊழியர், முதலாளிகள், பிரபுக்கள் ஆகியவர்களில் பெருமளவினரைத் தொழில் கட்சி தெரிந்தெடுத்துக் கொண்டுள்ளது. புதிதாக வாக்குரிமை பெற்ற பெண்களையும் வாக்காளர் தொகுதியில் குறிப்பாக உணர்ச்சி வசப்படுகிறவர்களையும் வியக்கத்தக்க வகையில் இக் கட்சி கவர்ந்துள்ளது. கூட்டுறவுச் சங்கங்களி லிருந்தும் அமைப்புகளிலிருந்தும் பெரும் எண்ணிக்கையில் உறுப்பினர்களை இக் கட்சி உவந்தேற்றுக் கொண்டுள்ளது. 1931-ல் கட்சியில் ஏற்பட்ட பிளவிற்குப்பின் கட்சி சோசலிசத்தை நோக்கிச் சென்றுள்ளது. படிப்படியாக முன்னேற வேண்டுமென்னும் கொள்கையை இக் கட்சி இறுதியாகவும் முடிவாகவும் தள்ளி விட்டது. சிறிது சிறிதாகப் பொருளாதாரத்தை மாற்றியமைப் பதையும் இது கைவிட்டுவிட்டது. பொருளாதார அதிகாரத்தின் அடித்தளத்தை நேர்முகமாகத் தாக்க இக் கட்சி இப்பொழுது உறுதி கொண்டுள்ளது.

அமெரிக்காவில் உள்ளதைப்போல, இங்கிலாந்திலும், புவியியலை ஒட்டியே கட்சியின் பற்றுறுதியும் இருக்கிறது. போருக்கு முன் ஸ்காட்லாந்தும் வேல்சும் வழக்கமாக லிபரல் கட்சிக்குத்தான் ஆதரவளித்தன. இன்று இவ் விரு நாடுகளின் தொழில் பகுதி களில் தொழில் கட்சி பெரும் வலிமை பெற்றுள்ளது. அல்ஸ்டர் (வட அயர்லாந்து) என்றுமே கன்சர்வேட்டிவ் கட்சிக்குப் பெரும் ஆதரவளித்தது. இங்கிலாந்தில் வன்மையான கன்சர்வேட்டிவ் சார்புப் பகுதிகள் இருப்பதுபோல் தொடர்ந்து தொழில் கட்சியை ஆதரிக்கும் பகுதிகளுமிருக்கின்றன. பொதுவாக இங்கிலாந்தின் வடக்கு, நடுப்பகுதிகள் கன்சர்வேட்டிவ் கட்சிக்கு எதிராகவும் தெற்கு, கிழக்கு பகுதிகள் வழக்கமாக இக் கட்சிக்கு ஆதரவாகவும் இருந்து வந்துள்ளன. இருப்பினும், பிரிட்டனின் தெற்குப்பகுதி முழுவதும் இக் கட்சியை ஆதரிக்கிறதெனச் சொல்ல முடியாது. சுரங்க உற்பத்தித் தொழில்கள் உள்ள பகுதிகள் பெரும் எண்ணிக்கையில் தொழிலாளர்களை அமர்த்துகின்றன. இவர்கள் வழக்கமாகத் தொழில் கட்சியை ஆதரிக்கிறார்கள். மாறாக, வளமிக்க வேளாண்மைப் பகுதிகள் நிலையாகக் கன்சர்வேட்டிவ் கட்சியை ஆதரிக்கின்றன.

பழங்காலப் படையைப்போல், நிலைப் போர்வீரர்கள், துணைப் படை வீரர்கள், தொண்டர்கள், கூலிப்படையினர், பரிவாரத்தினர்

ஆகியோரைக் கொண்டதாக அரசியல் கட்சி இருக்கிறது. சில சமயங்களில், நிலையானவர்களைத் தவிர மற்றெல்லோரும் அல்லது ஒரு பிரிவினரும் கட்சியை விட்டுச் செல்லக் கூடியவர்களே. அமெரிக்காவில் இருப்பதைப்போல் இங்கிலாந்தில் நிலை உறுப்பினரின் எண்ணிக்கை அதிகமாக இல்லை. திட்ட வட்டமான கொள்கையடிப்படையில் பொதுத் தேர்தல்கள் இங்கிலாந்தில் நடைபெறுவதோடு அமெரிக்காவைப் போல் இயல் நெறி முறைகளையொட்டி தேர்தல் போராட்டம் நடைபெருதது ஒரு காரணமாக இருக்கலாம். இது அமைச்சவைப் பொறுப்புடைமையையொட்டி யெழுந்த ஒரு விளைவாகும். ஒரு தலையாய பிரச்சினையை யொட்டி அரசியல் கட்சிகள் மோதுவதற்குப் பொதுத் தேர்தல் ஒரு வாய்ப்பாகும். அமெரிக்காவில் பொதுத் தேர்தல் நடக்கும்போது பொதுமக்களைக் கவரக் கூடிய பெரிய பிரச்சினைகள் எழாமல் இருக்கலாம். பின், கட்சித் தலைவர்கள் ஒரு காரணத்தைக் கண்டு பிடிக்க சுற்றித் திரிய வேண்டியுள்ளது.

எவ்விதத்திலும், இங்கிலாந்தில் இயல்பாக இப்படி நடப்பதில்லை. அரிதாகவே நடைபெறுகிறது. ஏனெனில் இங்கிலாந்தில் ஒரு பிரச்சினைதான் தேர்தலைக் கொண்டு வருகிறது. பாராளுமன்றத்தின் முழுமையான ஐந்தாண்டு பதவிக் காலம் முடியும் வரை பொதுத் தேர்தல் நடைபெறுவதில்லை. சில சர்ச்சைக்குறிய பிரச்சினைகள் எழுந்து அவைகளைத் தீர்ப்பதற்காகப் பொதுத் தேர்தல் நடந்தாலன்றி பாராளுமன்றத்தின் ஐந்தாண்டு பதவிக் காலம் முடிவடையும் வரை தேர்தல் நடைபெறுவதில்லை. இருப்பினும், இத்தகைய பிரச்சினைகள் எழும்போது மூன்றுண்டில் மூன்று பொதுத் தேர்தல் 1922-ல், 1923-ல், 1924-ல் நடைபெற்றன. தேர்தலை அவசியமாக்கிய உடனடியான பிரச்சினையைப் பற்றிய தம் கருத்தையொட்டியே இவர் வாக்களிக்கிருர். நியு ஹாம் ஷயரில் எந்த அளவிற்குக் கட்சியின் பற்றுறுதி அவசியமாகிறதோ அந்த அளவிற்கு இது ஹாம் ஷயரில் தேவைப்படுவதில்லை. குறைந்த கால அளவிற்குள் இங்கிலாந்தின் தேர்தலில் பங்கு பெற்றும் வாக்காளர்களின் அளவற்ற வளர்ச்சியால் இது தெரிகிறது. எடுத்துக் காட்டாக, 1923ஆம் ஆண்டு தேர்தலில் கன்சர்வேட்டிவ் கட்சி $5\frac{1}{2}$ மிலியன் வாக்குகளைப் பெற்றது. 1924ஆம் ஆண்டுத் தேர்தலில் இக் கட்சி 8 மிலியன் வாக்குகளைப் பெற்றது.

குறிப்பிட்ட அடிப்படையான கருத்துகளையொட்டி இம் மூன்று கட்சிகளுக்குள் பொதுவானதோர் உடன்பாடு காணப்படுகிறது. மூன்று கட்சிகளும் முடியாட்சி தொடர்ந்திருக்க

வேண்டுமென்பதை ஆதரிக்கின்றன. பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகள் பாதுகாக்கப் படவேண்டுமென்பதிலும் நிலைபெற வேண்டுமென்பதிலும் ஒன்றுபடவேண்டுமென்பதிலும் இவைகளுக் கிடையே கருத்தொற்றுமை காணப்படுகிறது. லிபரல், தொழில் கட்சிகளைக் காட்டிலும் கன்சர்வேட்டிவ்கள் ஏகாதிபத்திய மனப் பான்மையுடையவர்களாகவும் வெளிநாட்டுக் கொள்கையில் போர் ஆர்வமிக்கவர்களாகவும் பிரிட்டனின் அதிகாரத்தை உலகெங்கும் பரப்புவதில் ஆர்வமுடையவர்களாகவும் இவர்கள் இருந்தார்கள் என்று சொல்லக்கூடிய காலமொன்று இருந்தது. டிசரெலி கிளாட்ஸ்டோன் காலத்தில் இப் போக்கு இருந்ததைக் காணலாம். ஆனல் இப்பொழுது கட்சிகளுக்கிடையில் வெளி நாட்டுக் கொள்கை, குடியேற்ற நாட்டுக் கொள்கையில் உண்மை யான வேறுபாடு எதும் தோன்றவில்லை, வெளிநாட்டு, குடியேற்ற நாட்டுக் கொள்கை பற்றிய பிரச்சினைகள் கட்சிகளுக்கப்பாற் பட்டதாகி விட்டன. எக் கட்சி ஆளுங் கட்சியாக இருந்தாலும் சிறந்த் குறிக்கோள்கள் ஒரே மாதிரியாகத்தான் இருந்துள்ளன.

உலகப் பெரும் போருக்கு (1914—18) பிற்பட்ட காலத்தில் இப் பொதுக் கருத்து உருவாகியுள்ளது. இந்த இடைவெளிக் காலத்தின்போது, மூன்று கன்சர்வேட்டிவ் அமைச்சவைகளையும், இரண்டு தொழிற்கட்சி அமைச்சவைகளையும் தவிர மூன்று கலப்பு அமைச்சவைகள் பதவியில் இருந்தன. ஆனல் பிரிட்டிஷ் வெளி நாட்டுக் கொள்கையும் குடியேற்ற நாட்டுக் கொள்கையும் கணிச மான அளவிற்கு மாற்றமடையவில்லை. முதல் தொழில் கட்சி அமைச்சவை பதவியேற்கு முன், தொழில்கட்சி அரசாங்கம் அரச தந்திரத்தில் குழப்பம் உண்டாக்குமெனவும் குடியேற்ற நாடுகளின் நட்புறவை இழந்து விடுமெனவும் எல்லா இடங்களிலும் பிரிட்டி ஷாரின் உயர்மதிப்பு நிலையைத் தாழ்த்திவிடுமெனவும் தாராள மாக சிலர் முன் மதிப்பிட்டுரைத்தனர், இப்படியொன்றும் நடை பெறவில்லை. எந்தக் கட்சி பதவியில் இருந்தாலும், வெளியுறவு அலுவலகம், இந்திய அலுவலகம், டொமினியன், குடியேற்ற நாடுகளின் அலுவலகங்கள் ஆகியவைகளில் பணியாற்றும் அலுவலர்கள் தொடர்ந்து பணியாற்றியது ஒரு காரண மாகும். புதிய அமைச்சர்கள் பதவியேற்ற பொழுது சிறிதளவு கொள்கைப் போக்கில் மாற்றம் செய்யக் கூடும். ஆனல் பெரிய புரட்சிகரமான மாற்றங்கள் கருத்தில் கொள்ளப்படுவ தில்லை. இந்த மூன்று பிரிட்டிஷ் கட்சிகளும் சர்வ தேச சங்கத்தை ஆதரித்தன. ஆனல் தொழில் கட்சி இதைப் பொறுத்த வரையில் மிக்க நேர்மையோடு நடந்து கொண்டதெனலாம். கொள்கை யளவில் போருக்கான பெரிய ஏற்பாடுகளை தொழில் கட்சி

எதிர்த்தது. ஆனால் நிலைமைக்கேற்றவாறு நடந்து கொள்வதன் அவசியத்தை இக் கட்சி அண்மைக் காலத்தில் உணர்ந்திருக்கிறது.

பல ஆண்டு காலமாகப் பிரிட்டிஷ் தேர்தல் போராட்டத்தில் அயர்லாந்தின் தன்னாட்சிப் பிரச்சினை மனக் கசப்பையும் வெறுப்பையும் உண்டாக்கி வந்தது. ஆனால் எல்லாக் கட்சிகளும் இப்பொழுது அயர்லாந்து உடன்பாட்டை ஏற்றுக் கொண்டு இங்கிலாந்தின் பங்குப் பணியை நிறைவேற்ற உறுதியளித்துள்ளன. பிரிட்டிஷாரின் மனச் சான்றைத் தூண்டிவிடும் இப் பிரச்சினை குமுறிக் கொண்டிருக்கும் ஓர் எரிமலையின் தன்மையைப் பெற்றுள்ளது. வடக்கு அயர்லாந்து தென்பகுதியோடு இணைவது வற்புறுத்தப்படுமாயின் எந் நேரத்திலும் எரிமலை வெடிப்பு போன்ற பேரிடர் விளையலாம். எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் ஸ்ட்ராங்போவ் (Strongbow) என்பவர் இப் பிரச்சினைக்கு தீர்வு கண்டார் அல்லது தீர்வு கண்டதாக நினைத்தார். ஒலிவர் கிராம் வெல்லும் தம் விருப்பை யொட்டி இப் பிரச்சினையைத் தீர்த்து வைத்தார். அவ்வாறே பிட்டும் செய்தார். கிளாட்ஸ்டோன் என்பவரும் இதைத் தவிர்க்க முயன்றார், ஆனால் இவரும் வெற்றி காணவில்லை. பின்னர், வாய்ப்புமிக்க லாயிட் ஜார்ஜ் சுதந்திர அயர் அரசை நிறுவினார். ஆனால் இது ஓர் இறுதியான முடிவாக இருக்குமென உறுதி கூற முடியாது. ஐக்கிய அயர்லாந்து கோரிக்கையை இப்பொழுது டப்ளின் எழுப்பியுள்ளது. கட்டாயமாக அல்ஸ்டர் தென் அயர்லாந்தோடு இணைவதை இங்கிலாந்து விருப்போடு ஏற்காது.

உள்நாட்டுப் பிரச்சினைகளை யொட்டித்தான் இப்பொழுது மூன்று கட்சிகளுக்கிடையில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. தங்களுடைய கட்சியின் அமைப்பு முறையினால் பெருங்குடி மக்கள் நிறுவப்பட்ட திருச் சபை ஆகியவைகளின் நலன்களுக்குச் சாதகமாக இயல்பாகவே கன்சர்வேட்டிவ் கட்சியினர் நடந்து கொள்ளுகிறார்கள். தொழில் கட்சியினரும் லிபரல் கட்சியினரும் நடுத்தர வகுப்பு, தொழில் சங்கம் திருச் சபை விதிமுறைக்கு இணங்காச் சமயத்தினர் ஆகியோரை பெரிதும் பற்றி நிற்கின்றன. கல்வியைப் பாதிக்கக் கூடியவை பாராளுமன்றத்தின் பார்வைக்கு வருகிற பொழுது இவ் வேறுபாடுகள் வழக்கமாக வெளிப்படுகின்றன. ஆங்கில இளைஞரின் கல்வி வளர்ச்சியில் பங்கு பற்றும் பள்ளிகள், திருச் சபைகள் ஆகியவற்றோடு கன்சர்வேட்டிவ் கட்சியினர் நட்புறவு கொண்டுள்ளனர். பள்ளிகள் பொது நிதியிலிருந்து தாராளமாக உதவி பெற இக் கட்சியினர் சிறிது சிறிதாக வற்புறுத்தினர். தனியார் பள்ளிகளுக்கு பொது நிதியிலிருந்து

உதவியளிப்பதை முற்றிலும் நிறுத்தி விட வேண்டுமென்று லிபரல் கட்சியினரும் தொழில் கட்சியினரும் வற்புறுத்தவில்லை யெனினும் 'பொதுப் பள்ளிமுறை'யை மேம்படுத்துவதில் இவர்கள் பெரிதும் அக்கறை காட்டினர். இங்கிலாந்தில் பொது பள்ளியென்பது தனியார் நடத்தும் ஈட்டன் (Eton) ஹாரோ (Harrow) போன்ற பள்ளிகளைக் குறிப்பிடும்.

காப்பு வரிக் கொள்கை பற்றியதில் தொழில் கட்சி உறுப்பினருக்குள்ளும் லிபரல் கட்சியின் இடதுசாரிகளுக்குள்ளும் பெருமளவு தடையிலா வணிக மனப்பான்மை இன்னும் இருந்து வருகிறது. ஆனால் கன்சர்வேட்டிவ் கட்சியினர், தேசிய லிபரல்கள், தேசிய தொழில் கட்சியினர் ஆகியோரின் கலப்பு அமைச்சவையின் கீழ் நாடு கட்டுப்பாடுகளை ஏற்றுக் கொண்டது. 1931ஆம் ஆண்டு தேர்தலுக்குப் பின் பாராளுமன்றம் காப்பு வரியை விதித்தது. கட்டுபாடில்லா வணிகம் உலகத்தில் மற்றெல்லா நாடுகளிலும் பிரிட்டிஷ் டொமினியனிலும் கைவிடப்பட்டதோடு, பிற நாட்டுப் பொருள்களின் குவிப்பிடமாக இங்கிலாந்து மாறிவிடலாகாதென உணரப்பட்டது.

சமீப காலத்தில் மிக முக்கியமாகிக் கொண்டு வரும் சமூகப் பொருளாதாரச் சீரமைப்பையொட்டிய பல்வேறு பிரச்சினைகள் பற்றி பிரிட்டிஷ் அரசியல் கட்சிகளின் போக்கை தெளிவாக வரையறை செய்வது கடினமாகும். ஏனெனில் கட்சிகள் ஒருங்கிணைந்த நிலைப் பேறு பெற்ற நிறுவனங்களாக இல்லை. கன்சர்வேட்டிவ் கட்சியினரில் பிற்போக்காளரும் இருக்கின்றனர். ஆனால் முற்போக்கும், சமதர்ம மனப்பான்மையுமுள்ளதும், படிப்படியாகப் பெருகிக் கொண்டு வரும் பெருமளவிலான வாக்காளரையும் இக் கட்சி தன்னகத்தே கொண்டுள்ளது. தொழில் சங்கத்தினர், சமதர்மவாதிகள், சமதர்மவாதிகளல்லாத கத்தோலிக்கத் தொழிலாளர்கள், அமைதி நாடுநர், புரட்சிக்காரர்கள் போன்ற முற்போக்குக் கருத்துகளின் எல்லா வடிவங்களையும் தொழில் கட்சி தன் அணியில் கொண்டிருக்கிறது. கன்சர்வேட்டிவ் இடதுசாரிகளுக்கும் வலதுசாரி தொழில் கட்சியினருக்கும் இடையில் பொதுவாகப் பல இருந்தன. இப்பொழுது இருக்கும் பாராளுமன்ற முறை அரசாங்கம், தொழிற்றுணிவு, தனியுடைமை ஆகியவற்றின் கட்டமைப்பிற்குள் சமூகப் பொருளாதாரச் சீரமைப்பு நிறைவேற வேண்டுமென கன்சர்வேட்டிவ் கட்சியினரும் இவர்களின் தோழமைக் கட்சிகளும் நம்புகின்றன. கடந்த சில ஆண்டுகளின் போது பிரிட்டனின் கலப்பு அரசாங்கம் நிறைவேற்றிய சமூக

பொருளாதார நடவடிக்கைகள் ரூசவெல்டின் (Roosevelt) சமூக, பொருளாதார ஏற்பாட்டிற்கு ஒப்பானவைகளாகும்.

பிரிட்டனில் சமதர்மப் பொதுநல உறவு அரசை நிறுவ தொழில் கட்சி உறுதி செய்துள்ளது. மற்றெந்தக் கட்சியும் கருத்தில் கொள்ளாத வகையில் சமூக, பொருளாதாரச் சீரமைப்பை மிக முற்போக்கான தாக்க இதன் செயற்திட்டம் முற் படுகிறது. வலதுசாரிகள் முன் விரும்பியது போல் படிப்படியான முன்னேற்றக் கொள்கையை விட்டுவிட்டு இச் சீரமைப்பை விரைந்து செயல்படுத்த இக் கட்சி திட்டமிட்டுள்ளது. சாத்வீக முறைகளால் சமதர்ம அரசை நிறுவ இவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருக்கையில், இந்த முடிவை அடைவதில் முதலாளித்து வத்திற்கு இக் கட்சி இணங்காதென்பதை தொழில் கட்சியினர் தெளிவுப்படுத்தியுள்ளனர். சிறப்பாக, பொதுமக்கள் சபையில் தொழில் கட்சி பெரும்பான்மை பலம் பெற்றால் எல்லா அடிப் படையான தொழில் சாலைகளையும் சேவைகளையும் ஏற்று நாட் டுடைமையாக்க அரசாங்கம் உடனடியாக முற்பட வேண்டுமென திட்டமிடப்பட்டுள்ளது. வேளாண்மை, நிலக்கரி, இரும்பு, எஃகு, நீர் நிலைகள், மின்சக்தியும் மின்ஒளியும், ரயில்பாதைகளும் மற்ற போக்குவரத்து வழிகளும், நாடு முழுவதின் பாங்கியலும், கடன் கொள் வசதிகளும் இவற்றுள் அடங்கும். அரசாங்கக் கட்டுப் பாட்டின் கீழ் உள்ள இத்தகைய எல்லாத் தொழில் துணிவுகளும் ஒரு கமிஷன் அல்லது குழு ஒன்றின் மேலாண்மையின் கீழ் இருக்கும். இக் குழு அல்லது கமிஷன் கேபினெட் அமைச்சர் ஒருவருக்குப் பொறுப்புடையதாக வேண்டும். உடனடியாக நாட்டுடைமை யாக்கப்படாத தொழில் சாலைகள், சேவைகள் ஆகியவற்றின் தொழிலாளர்கள் மேலாண்மையில் பங்கு பெற சட்டம் கொணரத் தொழில் கட்சியின் செயற் திட்டம் வகை செய்துள்ளது. சமூகப் பாதுகாப்பு முறையை மேலும் விரிவாக்கவும், தொழிலாளர் களுக்கு வீட்டு வசதியளிக்கவும், தொழில் நகர்களில் இன்றும் காணப்படும் சேரிகளை ஒழிக்கவும் இப்பொழுது உள்ள முறைகளை விரிவாக்கவும் இக் கட்சி திட்டமிட்டுள்ளது. தேசிய அரசாங்கத் தின் நிதி உதவியோடு கூடிய, விரிவாக்கப்பட்ட பொதுப் பணித் திட்டத்திற்கும் இக் கட்சி உறுதி அளித்துள்ளது. கட்டாயக் கல்வி பெறும் வயதைப் பதினாறாக உயர்த்தி இவ் வயதினருக்கு முற்றிலும் இலவசக் கல்வி வசதியளிக்கவும் இக் கட்சி திட்டமிட் டிருக்கிறது.

அடிப்படைத் தொழில்சாலைகளையும் சேவைகளையும் இக் கட்சி நாட்டுடைமையாக்கத் திட்டமிட்டிருப்பினும், தனியார்

உடைமைகளைப் பறிமுதல் செய்து இதை நிறைவேற்ற வேண்டு மென்று தொழில் கட்சியின் செயற்திட்டம் தீட்டப்படவில்லை. இழப்பீடு கொடுக்கப்படும். அரசாங்கம் பெருமளவில் இதற்கான கடன் பத்திரங்களை வெளியிட வேண்டியிருக்கும். பிரிட்டனில் ஒரு கம்யூனிஸ்டு கட்சியும் இருக்கிறது. தொழிலாளர்களின் வல்லாட்சியை இது வலியுறுத்துகிறது; தனியுடைமையைப் பறி முதல் செய்யவும் இது திட்டமிட்டுள்ளது. இதன் உறுப்பினரும் பெரும் எண்ணிக்கையில் இல்லை. இதனுடைய ரஷியத் தொடர்பு காரணமாகத் தொழில் கட்சியினர் கூட இதன் மேல் நம்பிக்கை வைக்கவில்லை. ஃபாசிஸ்டுகளின் ஒருங்கிருப்புக் கட்சி அல்லது ஃபாசிஸ்டு கட்சி ஒன்றும் பிரிட்டனில் இருக்கிறது. ஆஸ்வால்டு மோஸ்லி (Oswald Mosely) என்பவரை இக் கட்சி தலைவராகக் கொண்டிருக்கிறது. ஒரு காலத்தில் இக் கட்சியின் உறுப்பினர் எண்ணிக்கை உயர்ந்தது. ஆனால் கடந்த சில ஆண்டுகளில் இது நலிந்து விட்டது. இது விரிவடைந்த காலத்தில் எல்லாக் கட்சி யிலிருந்தும் உறுப்பினர்களை பிரிட்டிஷ் ஃபாசிஸம் கவர்ந்தது. வேலையில்லாதிருந்த தொழிலாளர்கள் இக் கட்சியில் சேர்ந்தனர்.

## கட்சிகளின் அமைப்பு

**கன்சர்வேட்டிவ் கட்சியின் அமைப்பு:** தொகுதிச் சங்கம்

தலத் தொகுதிச் சங்கங்களின் தன்னாட்சியை கன்சர்வேட்டிவ் கட்சியின் அமைப்பு வலியுறுத்துகிறது. தலக் கட்சி நிதிக்குத் தவறாமல் பணம் செலுத்துபவர்களை உறுப்பினராக இச் சங்கம் கொண்டுள்ளது. ஒவ்வொரு தொகுதியிலும் ஒரு தலச் சங்கம் இருக்கிறது. அமைப்பு நோக்கத்தைக் கருத்தில் கொண்டு இதை வட்டங்கள் அல்லது வாக்களிப்பு வட்டங்கள் எனப் பிரித்துள்ளனர். இதன் அலுவலர்களை இது தெரிவு செய்து கொள்ளுகிறது. இதன் விதிகளை இது வரைந்து கொள்ளலாம்; திருத்திக் கொள்ளலாம். நன்கொடைகள், நடனங்கள், சந்தாக்கள் வாயி லாகத் தேர்தல் நிதி திரட்டுதல், உறுப்பினரைச் சேர்த்தல் தேர்தலில் போட்டியிடல், பதிலாளை அமர்த்தல். வேட் பாளர்களைத் தெரிவு செய்தல் ஆகியவை இதன் பணிகளாகும். வேட்பாளர்கள் பற்றிய தேசிய ஒன்றியத்தின் நிலையறிவுரைக் குழுவின் ஒப்பிசைவோடு இச் சங்கம் வேட்பாளர்களைத் தெரிவு செய்தல் வழக்கமாகும். தொகுதிச் சங்கங்கள் கட்சியின் ஆணி வேராகும். அரசாங்கப் பளுத் திட்டத்தை ஏற்றுக் கொள்ளுகிற வர்கள் இவர்களுக்காதரவாக வலிமை மிக்க, விஞ்சிய ஆற்றலுடைய, உறுப்பினர்கள் பின்னணியில் இருக்க வேண்டும்.

ஒரு நிருவாகக் குழுவின் வழியாகத் தொகுதிச் சங்கம் செயல்படுகிறது. சங்க அலுவலர்கள், வட்டங்களின் (Ward) பிரதிநிதிகள், வாக்களிப்பு வட்டக் கிளைகளின் பிரதிநிதிகள், கன்சர்வேட்டிவ் இளைஞர்கள், சந்தா செலுத்தும் கன்சர்வேட்டிவ் மன்றங்கள், குறிப்பிட்ட ஒத்துத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் ஆகியோர் நிருவாகக் குழுவில் அடங்குவர். பெண்கள், இளம் கன்சர்வேட்டிவ்கள், கல்வி, தொழில் சங்கங்கள், தல அரசாங்கங்கள் ஆகியவை பற்றிய பல்வேறு உட் குழுக்களை ஒவ்வொரு நிருவாகக் குழுவும் கொண்டிருக்கிறது.

### வட்டாரக் கழகங்கள் (Area Councils)

பன்னிரெண்டு வட்டாரங்களாகத் தொகுதிகள் மாநிலத்தோடு இணைப்படுகின்றன. தொகுதிகளின் குழு அடிப்படையில் இவைகள் அமைக்கப்படுகின்றன. வ்ட்டார வளங்களை ஒருங்கிணைத்தலும் வட்டார மட்டத்தில் செயல் திறமூட்டுதலும், மத்திய அலுவலகத்திற்கு அறிவுரை கூறலும் வட்டாரப் பணிகளாகும்.

### தேசிய யூனியனின் மத்திய கழகம்

கட்சித் தலைவரும், கட்சியின் அலுவலர்களும், பாராளுமன்ற கட்சியும், வேட்பாளர்களாக ஏற்றுக் கொள்ளப்பட்டவர்களும், தொகுதிச் சங்கம் ஒவ்வொன்றிலிருந்து நான்கு பிரதிநிதிகளும் மத்திய கழகத்தில் இடம் பெறுகின்றனர். இவர்களில் 3500 பேர் கூட்டத்தில் கலந்து கொள்ளுகின்றனர். கொள்கையளவில் தேசிய நிலையில் இது ஒரு நிருவாகக் குழுவாயினும் முக்கியமான நிருவாக நடவடிக்கைகளைச் செயல்படுத்த இது பெரியதொரு சபையாக நடைமுறையில் இருக்கிறது. பாராளுமன்ற உறுப்பினர்களுக்கும் நாட்டு மக்களுக்குமிடையில் இது ஓர் இணைப்பாக உள்ளது. கன்சர்வேட்டிவ் நலன்களின் ஒரு மையக் கூடு முனையாக இது செயலாற்றுகிறது. பாராளுமன்றக் கட்சியின் மத்திய அலுவலகத்தை இது கட்டுப்படுத்துவதில்லை. ஆனால் வேட்பாளர்களாகத் தகுதியுள்ளவர்களை இது தணிக்கை செய்கிறது.

தேசிய யூனியனின் நிருவாகக் குழு பெரும்பாலும் வட்டார உறுப்பினர் உள்பட இதில் 150 உறுப்பினர்கள் இருக்கின்றனர். ஆனால் இதில் தலைவர்களும் மற்ற முதன்மையான அலுவலர்களும் அடங்குவர். வட்டாரக் கூட்டங்களுக்கிடையில் மத்திய கழகத்தின் செயல்களை இது செய்கிறது. தேசிய யூனியனின் மத்திய கழக அலுவலர்களுக்கு இது பரிவுரை செய்கிறது. வட்டார மட்டத்தில்

உள்ள குழுக்களை தேசிய நிலையில் அமையும் உட் குழுக்கள் ஆராய்கின்றன.

## தலைவர்

பாராளுமன்றத்தின் கன்சர்வேட்டிவ் உறுப்பினர்கள் தலைவரைத் தேர்ந்தெடுக்கின்றனர். ஆனால் பாராளுமன்ற உறுப்பினர்களும், வேட்பாளாராகக் கூடியவர்களும், பிரபுக்களும், தொகுதிச் சங்கப் பிரதிநிதிகளும் இதை உறுதிப்படுத்த வேண்டும். பதவியிலிருந்து விலகிக் கொள்ளும் வரை இவர் தலைவராகத் தொடர்ந்திருந்து வருகிறார். இவர் கட்சித் தலைவரைத் (Chairman) தெரிவு செய்கிறார். கட்சித் தலைவர் மத்திய அனுவலகத்தின் தலைவராக இருக்கிறார். கட்சியின் மற்ற முதன்மையான உறுப்பினரோடு நடைமுறையில் இவர் கலந்து கொள்ள வேண்டுமென்றாலும் பின்னணி உறுப்பினர்களின் கருத்துகளைக் கருத்தில்கொள்ள வேண்டுமெனினும் அப்போதையப் பிரச்சனைகளையொட்டிய கொள்கையையும் கட்சியின் செயற் திட்டத்தையும் இவர் வரையறை செய்கிறார்.

## மத்திய அலுவலகம்

1870ஆம் ஆண்டில் டிசரெலியால் இது தோற்றுவிக்கப் பட்டது. கட்சித் தலைவரின் நெருக்கமான கட்டுப்பாட்டின் கீழ் இது இருந்து வந்திருக்கிறது. கட்சியின் நிலையான தலைமையகமாக இது இருக்கிறது. ஒரு தேர்தல் போராட்டத்திற்கான எல்லா ஏற்பாடுகளையும் வளங்களையும் பணியாட்களையும் இது ஒருங்கிணைக்கிறது. கட்சியின் பொதுக் கூட்டங்களுக்கும் தலச் சங்கங்களுக்கும் இது பேச்சாளர்களை ஏற்பாடு செய்கிறது; பொதுப் பிரச்சினைகளை ஆய்கிறது; தகவல் அளிக்கிறது. தேசிய மட்டத்தில் கட்சியின் நிதிப் பொறுப்பை இது ஏற்றுக் கொண்டிருக்கிறது. தேர்தல் போட்டிக்கான செலவிற்காகத் தொகுதிகளுக்கு இது பண உதவி செய்யலாம். அமைப்பாளர்களையும் ஊதியம் பெறும் பதிலாட்களையும் இது தெரிவு செய்து அமர்த்துகிறது.

## தொகுதிப் பதிலாட்கள் (Agents)

தனிப்பட்டத் தொகுதிகளால் முழு நேரப் பணிக்காக கட்சியின் அலுவலர்களாக அமர்த்தப்பட்டவர்களே இவர்கள். ஆயினும், இவர்கள் மத்திய அலுவலகத்தால் பயிற்சி பெற்றவர்கள். செயல் திறமைச் சான்றிதழ்களை இது ஆய்ந்தளிக்கிறது. கன்சர்வேட்டிவ் யூனியனிஸ்டுகளின் தேசிய சபையில் (Society) இவ்

வலுவலர்கள் இணைத்துருவாக்கப்படுகிறுர்கள். பெண் அமைப் பாளர்களும் இருக்கிறுர்கள்.

தொகுதியின் அரசியல் பணியை ஒழுங்கமைத்தல், தலைமை யகத்தை நடத்துதல், ஊதியம் பெற்றுச் செயலாற்றும் கட்சித் தொண்டர்களுக்கு வழி காட்டுதல் வேட்பாளர்களின் சொற் பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்தல் ஆகியவை இப் பதிலாட்களின் பணிகளாகும். தேர்தல் பதிலாளாக இவர் அமர்த்தப்படுகிறுர். தேர்தலில் செலவிடப்படும் பணத்திற்கு இவர் கணக்குக் காட்டப் பொறுப்புடையவராவார். நடைமுறையில், உறுப்பினருக்கும் தொகுதிச் சங்கத்திற்கும் இடையில் இவர் ஓர் இணைப்பாக இருக்கிறுர். பாராளுமன்ற உறுப்பினரைக் காட்டிலும், தலப் பற்றைத் தூண்டும் அரசியல் பிரச்சினைகளை பற்றி இவர் நன்கறிந்திருக்கலாம். உறுப்பினர் தம் நேரத்தின் பெரும் பகுதியை வெஸ்ட்மினிஸ்டரில் அல்லது வேறெரு இடத்தில் உள்ள தம் வீட்டில் கழிக்கலாம். ஒரு நல்ல பதிலாள் தல கட்சித் தொண்டர்களை மகிழ்ச்சியோடும் ஊக்கத்தோடும் வைத்துக் கொள்ளுவார்.

பெண்களின் நடவடிக்கைகள், விளம்பரம், இளைஞர்களின் அணிகள், போன்றவைகளுக்கு வட்டார அலுவலகத்திலிருந்து தலப் பதிலாட்கள் உதவி பெறுகிறுர்கள். மத்திய அலுவலகத்தால் அமர்த்தப்பட்ட ஒருவரின் பொறுப்பில் தலப் பதிலாள் இருக்கிறுர்.

### கட்சியின் ஆண்டு மாநாடு

தேசிய யூனியனின் மத்திய சபையின் எல்லா உறுப்பினர் களும், தொகுதிப் பதிலாட்களும், ஒவ்வொரு தொகுதிச் சங்கத்தி லிருந்தும் கூடுதலாக மூன்று பிரதிநிதிகளும் கட்சியின் ஆண்டு மாநாட்டில் கலந்து கொள்ளுகின்றனர். எனவே இப்படிப்பட்ட 5600 பேர்கள் மாநாட்டில் கலந்து கொள்ளுகிறுர்கள். பல்வேறு குழுக்களின் பிரதிநிதிகளாக வந்திருப்போர் தீர்மானங்களைக் கொண்டு வருகிறுர்கள். மாநாடு இவைகளை விவாதிக்கிறது. கட்சித் தலைவர்கள் இவைகளைப் பற்றிய தம் கருத்துக்களை எடுத்துரைக்கிறுர்கள். இம் மாநாட்டில் தீர்மானங்கள் தலைவர் களைப் பாதிக்கலாமெனினும் இவைகள் தலைவர்களைக் கட்டுப் படுத்துவதில்லை. ஏனெனில் மாநாடு கொள்கை உருவாக்கும் நிறுவனமன்று. கருத்துகளை வெளிப்படுத்தும் கட்சியின் பேரணியாக மாநாடு செயலாற்றுகிறது. தலைவர்களை அமர்த்தி உறுப்பினர்களின் ஊக்கத்தையும் ஒற்றுமையுணர்வையும் புதுப் பிப்பதும் இதன் பணியாகும்.

தொழில் கட்சி: தொகுதி அமைப்பு

1918-க்கு பிறகு ஒவ்வொரு தொகுதியின் தொழில் கட்சியும் பல அமைப்புகளின் கூட்டு அமைப்பாக இருந்திருக்கிறது. தொகுதிக் கட்சியின் தனிப்பட்ட உறுப்பினரும் இளம் சோசலிஸ்டுகளும், தொழில் சங்கங்களின் தலக் கிளைகளும், சோசலிச சங்கங்களின் பிரதிநிதிகளும் கூட்டுறவு சங்கங்கள், கட்சிகள் ஆகியவற்றின் தலக் கிளைகளும் இதில் அடங்கும். இணைக்கப்பட்டப் பிரிவுகளின் பிரதிநிதிகளும் பொது மேலாண்மைக் குழுவில் சேவை செய்கின்றனர். தொகுதிக் கட்சியின் செயற்குழுவையும் அலுவலர்களையும் இக் குழு தெரிவு செய்கிறது. நகரக் கட்சிகளிலும் நகரத் தொகுதிகளிலும் தனிப் பட்ட உறுப்பினர்கள் வட்டங்களாக (Ward) அமைகிறார்கள்; சிறு நகர்களில் தல தொழில் கட்சிகளாகவும் கிராமங்களில் மாவட்டக் குழுக்களிலும் அமைத்து செயல்படுகிறார்கள். தொகுதி மட்டத்தில் தனிப்பட்ட உறுப்பினர்கள் ஒன்றாகக் கூடுவதில்லை. ஆனால் வட்டக் (கமிட்டி) குழுக்களின் வாயிலாகத்தான் இவர்கள் பங்கு பற்றுகிறார்கள்.

தொகுதி தொழில்கட்சி தலைமை அலுவலகத்தோடு தொடர்பு கொள்ளுகிறது. நிதி திரட்டுகிறது. தேர்தலில் போராடுகிறது. தல நிறுவனத் தேர்தலுக்கு வேட்பாளர்களைத் தெரிந்தெடுக்கிறது, பாராளுமன்றத் தேர்தலுக்கு உறுப்பினரை நிறுத்துகிறது. இதன் முக்கியமான அலுவலர் செயலராவார். தொகுதி பதிலாளை அமர்த்தினால் இவரே இரு பதவிகளையும் வகிப்பது வழக்கமாகும்.

பதினோரு வட்டாரங்களின் வசதிகளையும் பதினோரு வட்டாரக் குழுக்கள் ஒருங்கிணைக்கின்றன. கட்சி மாநாட்டிலும் இதே முறையில் இவைகள் செயல்படுகின்றன. பல்வேறு கூட்டுறவு சங்கங்கள், சோசலிச அமைப்புகள், தொகுதித் தொழில்கட்சிகள், பெண்களின் வட்டாரக் குழுக்கள் ஆகியவற்றைப் போல் தொழில் சங்கங்களின் வட்டார, பிரிவுக் குழுக்கள் இதில் பிரதிநிதித்துவம் பெறுகின்றன. ஒரு வட்டார நிருவாகக் குழு தேர்ந்தெடுக்கப் படுகிறது. வட்டார அடிப்படையில் கல்வி பற்றியதும் மற்ற நட வடிக்கைகளையும் இது ஏற்பாடு செய்கிறது. வட்டாரத்திற்குள் கட்சிப் பணிகளை ஒருங்கிணைக்கிறது.

கட்சியின் ஆண்டு மாநாடு

இணைப்புப் பெற்ற அமைப்புகளிலிருந்து 1,100க்கு அதிகமான வகையாட்கள் (Delegates) இம் மாநாட்டில் கலந்து கொள்ளு

கிறார்கள். கட்சிக்குப் பணம் செலுத்தும் அடிப்படையில் வகை யாட்கள் வாக்களிக்கின்றனர். ஆகவே, நடைமுறையில் ஆறு பெரிய தொழிற் சங்கங்களின் வாக்களிப்புதான் எந்த முடிவையும் செய்கிறது. பாராளுமன்ற உறுப்பினர், வேட்பாளர்களாக அமர்த்தப்பட இருப்பவர்கள் தேசிய செயற் குழுவின் உறுப் பினர்கள் இத் தகுதி பற்றி மாநாட்டில் உறுப்பினராகின்றனர்.

கட்சியின் பொதுவான கொள்கையை மாநாடு முடிவு செய்கிறது. தேசிய செயற் குழு வரைந்த ஒரு செயல் திட்டத்தை விவாதிக்கிறது. குறிப்பாக, இது மிதமான ஒரு கொள்கையைப் பின்பற்றுகையில் மாநாடு நிறைவேற்றிய தீர்மானங்களோடு தொழில் கட்சியின் அமைச்சவை மாறுபடலாம். ஆயினும், சோசலிஸ்டு சங்கங்களிலிருந்தும் தொகுதிச் சங்கங்களிலிருந்தும் தீவிரமான திட்டங்கள் வழக்கமாக வருதலால், இந்த இக் கட்டான நிலையிலிருந்து அரசாங்கத்தைக் காப்பாற்ற வலிமை வாய்ந்த தொழில் சங்கங்களின் தனி மொத்த வாக்குகள் பயன்படுத்தப் படலாம். மேலும், தேசிய செயற் குழுவும் பாராளுமன்றக் கட்சியும் தேர்தல் அறிக்கை எதையும் வரைவதில் முதன்மையான செல்வாக்குப் பெறுகின்றன.

### தேசிய செயற் குழு

தேசிய செயற் குழுவைத் தேர்ந்தெடுப்பது கட்சியின் ஆண்டு மாநாட்டின் முதன்மையான பணியாகும். இதில் 28 உறுப்பினர் கள் இருக்கின்றனர். இவர்களில் 12 பேரை தொழிற் சங்கங்களும் 7 பேரைத் தொகுதிச் சங்கங்களும் மாவட்டக் கூட்டமைப்புகளும் சோசலிஸ்டுகளும் கூட்டுறவுச் சங்கங்களும் ஒருவரையும் தேர்ந் தெடுக்கின்றன. மாநாட்டின் எல்லா உறுப்பினர்களும் 8 பெண் களைத் தேர்ந்தெடுக்கின்றனர். கட்சியின் தலைவரும் துணைத் தலைவரும் அலுவல் சார்புடைய உறுப்பினராவர். கட்சியின் பொருளாளராகிய மற்றொரு உறுப்பினரைக் கட்சியின் மாநாடு தேர்ந்தெடுக்கிறது.

தேசிய செயற்குழு தவறாமல் கூடுகிறது. கட்சியின் ஆண்டு மாநாட்டின் முடிவுகளை விளக்கம் செய்வதும் செயற்படுத்துவதும், கட்சியின் நிதியைத் திரட்டுதலும், பாராளுமன்றக் கட்சியோடு தொடர்பு கொள்ளுதலும், தலச் சங்கங்களை மேற்பார்வை யிடலும், கட்சியின் ஒழுங்குமுறையைச் செயல்படுத்தலும் இதன் பணிகளாகும்.

### தலைவர்

பாராளுமன்றத் தொழில் கட்சியால் தலைவர் ஒரு சமயத்தில் ஓராண்டிற்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். ஆனால் இவரை மறு

படியும் தேர்ந்தெடுத்தல் வழக்கம். இவர் பெரும் செல்வாக்கோடு இயங்கினாலும், கன்சர்வேட்டிவ் தலைவரைப் போல் இவர் முதன்மையான இடத்தைப் பெறவில்லை. போக்குவரத்துத் துறை அலுவலர்களின் மீது இவருக்கு ஆட்சி அதிகாரமில்லை.

### கட்சியின் தலைமை அலுவலகம்

தொழில் கட்சியின் பொதுச் செயலரின் மேற்பார்வையில் இது செயல்படுகிறது. இவரைத் தேசிய செயற்குழு அமர்த்துகிறது. கட்சியின் நிதி ஆராய்ச்சி, பன்னாட்டு விவகாரங்கள், பெண்களின் அமைப்புகள், செய்தித்தாள்கள், விளம்பரம் ஆகியவற்றோடு இது செயற் தொடர்பு கொண்டிருக்கிறது, அமைப்பு, பேச்சாளர்களை ஏற்பாடு செய்தல், தேர்தல் பதிலாட்களின் பயிற்சி போன்றவைகளில் இது தொகுதிச் சங்கங்களுக்குப் பொது உதவியளிக்கிறது.

வட்டாரக் குழுக்களுக்கு முழுநேர ஊழியர்களை அளிக்க பதினொரு வட்டார அலுவலகங்களைத் தலைமை அலுவலகம் பெற்றிருக்கிறது.

### மேலும் படித்தற்குரிய நூல்கள்

R. T. Mekenzie, 'British Political Parties,'(1963)
Lord Morrison, 'Government and Parliament'(1964)
A. I. Hanham, 'Election and Party management' (1959)
Baily, SydneyD. 'Political Parties and Party system in Britain,' (1953)

# 7. கட்சி ஒழுங்குமுறை

இரு கட்சி முறையில் தவிர்க்க முடியாத ஒன்று கடுமையான கட்சி ஒழுங்குமுறையாகும். தொகுதியினுலும் பாராளுமன்றக் கட்சியினுலும் இது ஏற்படுகிறது.

தேர்தலில் வெற்றி பெற கட்சியின் ஒழுங்குமுறை அவசிய மாகிறது. பொதுத் தேர்தலில் கட்சிகளின் செயற் திட்டங்களில் ஒன்றை வாக்காளர்கள் தேர்ந்தெடுக்கிருர்கள். வாக்காளர்கள் தம் பணிப் பொறுப்பை நன்குணர்ந்திருக்கின்றனர். குறிப்பாக ஐயப்பாட்டிற்குட்பட்ட வாக்காளர்கள் முக்கியமான பிரச்சினை களில் ஒற்றுமை காணுத கட்சிக்கு வாக்களிக்கத் தயங்குகிருர்கள். எனவே, எல்லா வேட்பாளர்களின் ஆதரவு பெற்ற செயற்திட்ட மொன்றைப் பெற்றிருத்தல் தேவையாகும். போட்டியிடும் வேட்பாளர் இதை ஆதரிக்கத் தொகுதிச் சங்கம் உறுதி செய்ய வேண்டும். கட்சியின் கொள்கைகளை வேட்பாளர்கள் ஏற்றுக் கொள்வதை மெய்ப்பிக்க ஒவ்வொரு வேட்பாளரின் கருத்தும் ஆராயப்படுகிறது. கட்சிப் பிரச்சினைகளின் மீது பொதுவாக, தொகுதிகள் தனிப்பட்ட போக்குகளைக் கொண்டிருப்பதில்லை. விண்ணப்பதார் ஒருவர் ஐயப்பாட்டிற்குரியவராயின் மத்திய அமைப்பு இறுதியான முடிவெடுக்கும்.

தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னரும், உறுப்பினர் தொகுதிச் சங்கத்தின் கட்டுப்பாட்டிற்குள்ளாகிருர். தாம் செயல்படுவது பற்றி அடிக்கடி இவர் பொறுப்பேற்றுக் கொள்வதோடன்றி பாராளுமன்றக் கட்சியோடு உறுப்பினர் கொண்டிருக்கும் தொடர்பு பற்றியும் சங்கம் அக்கறை கொண்டிருக்கிறது. கட்சியின் தேர்தல் வாக்குறுதிகளை நிறைவேற்ற அரசாங்கம் உறுப்பினரின் ஆதரவை நாடுவது முக்கியமானதாகிறது. கட்சியின் கொள்கைகளை ஒன்று சேர்ந்து தாக்குவதும் மாற்றுச் செயற்

திட்டங்களை எடுத்துக் கூறுவதும் கட்சி முறையின் இன்றியமையாப் பண்பாகிறது. கட்சிக் கொள்கை பற்றியதாக இல்லாத பிரச்சினைகளைத் தவிர, விவாதத்திலும் வாக்கெடுப்பிலும் உறுதியான ஆதரவை இது வலியுறுத்துகிறது. கட்சிக் கொள்கையோடு தொடர்பில்லாப் பிரச்சினைகளையொட்டி ஓர் உறுப்பினர் சரியெனக் கருதுவதற்குத் தம் வாக்கினை அளிக்கலாம். மாருக, கட்சியோடு இவர் மாறுபடுகையில், இவர் வாக்கெடுப்பின்போது சபைக்கு வாராதிருக்கலாம். இதையும் இவரது பற்றுறுதியின்மைக்குச் சான்ருகக் கருதலாம். தலத் தொகுதிக் கட்சித் தன் கருத்தைச் சொல்ல உரிமை பெற்றிருக்கிறது. அடங்கா உறுப்பினர் ஒருவர் பதவி விலகு மறுப்பாராயின் இவர் அடுத்த தேர்தலில் நிறுத்தப்படுவதில்லை.

இரு சபைகளின் உறுப்பினர்களும் பாராளுமன்றத்தில் பாராளுமன்றக் கட்சியின் வாயிலாகத் தொடர்பு கொள்கிருர்கள். கொள்கையின் விபரங்களையும் செயல்திற முறைகளையும் பாராளுமன்றக் கட்சி முடிவு செய்கிறது. கட்சிக் கருத்துகளுக்கு ஆதரவு தேடும் வகையில் இது உறுப்பினர்களை நெறிப்படுத்துகிறது. கட்சியின் விதிகளைப் பற்றி நிற்பது உறுப்பினரின் கடமையாகும். முதன்மையான விதிகளில் ஒன்று கட்சியின் ஆணைக்குப் (Whip) (கொறடாவுக்கு) பணிவதாகும். கன்சர்வேட்டிவ் கட்சியாயினும் தொழிற்கட்சியாயினும் இதனுடைய அமைப்பு ஒரே மாதிரியான விதிகளையொட்டியே இயங்குகிறது.

கட்சி, ஆளும் கட்சியாக இருந்தால் பிரதமர் இதன் தலைவராகிருர். எதிர்கட்சியாக இருந்தால் எதிர்கட்சித் தலைவர் அதன் தலைவராகிருர். குறிப்பிட்ட கொள்கைபற்றியவைகளை விவாதிக்க குழுக்களை (அல்லது கமிட்டிகளை) அமைத்துக் கொள்ளலாம். இவைகள் தலைவர்களைக் கட்சியின் கருத்துப் போக்குகளோடு தொடர்பு கொள்ளச் செய்கின்றன.

அதிகாரத்தில் இருக்கையில், கட்சித் தலைவர்கள் கேபினெட் அமைச்சவையை உருவாக்குகின்றனர். இல்லையெனில் 'மாதிரி காபினெட்' ஒன்றை உருவாக்குகின்றனர். கன்சர்வேட்டிவ் கட்சியில் இரண்டையும் தலைவரே செய்கிருர். ஆனுல் தொழில் கட்சியில், பதவிச் சார்புடைய உறுப்பினர்கள் 5 பேரும், தொழில் கட்சியின் பாராளுமன்ற உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட 12 பேர்களும், தொழில் கட்சிப் பிரபுக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருவரும் அடங்கிய பாராளுமன்றக் கட்சி மாதிரி கேபினெட்டாக இருக்கிறது. கேபினெட் இரகசியமாக விவாதிக்க

வேண்டியிருப்பதால் பின்னணி உறுப்பினரோடு தொடர்பு கொள்ள ஏற்பாடு செய்ய வேண்டி இருக்கிறது. 1922ஆம் ஆண்டின் டோரிக் கட்சிக் கமிட்டிக் கூட்டத்தில் அமைச்சர்கள் கலந்து கொள்ள அனுமதிக்கப்படவில்லை. அழைப்பின் பேரில் இவர்கள் கலந்து கொள்ளலாம். தொழில்கட்சியில் ஒரு தொடர்புக் குழு (Liaison Committee) இருக்கிறது. இக் குழுவின் கூட்டத்தில் அமைச்சர்களும் கலந்து கொள்கின்றனர். தெரிவிக்கப்பட்ட கருத்துகளையொட்டி திட்டங்களை மாற்றியமைப்பது தலைவர்களைப் பொறுத்ததாகும். அப்படிச் செய்ய வில்லையெனினும் ஆதரவளிக்கப்பட வேண்டுமென்பது தொடர்புக் குழுவின் நிலைக் கட்டளைகளைக் கொண்டு அறியலாம்.

அன்றாட ஒழுங்குமுறையை கட்சிக்குள் பேணுவது தலைமைக் கொறடாவையும் 8 முதல் 10 உதவிக் கொறடாக்களையும் பொறுத்ததாகும். இவர்களனைவரும் பாராளுமன்ற உறுப்பினர். 1769–ல் பர்க் என்பார் இச் சொல்லை முதலில் பயன்படுத்தினார். வேட்டைக்கென விலங்குகளைத் திரட்டும் வழக்கத்தில் இருந்து பர்க் இக் கருத்தைப் பெற்று சொல்லாட்சி செய்தார். கட்சி மயைப்பில் இன்று கொறடாக்கள் சிறப்பிடம் பெற்றுள்ளனர். இப் பதவியில் இருக்கும் ஆளும் கட்சிக் கொறடாக்களுக்கு ஊதியம் அளிக்கப்படுகிறது. வேறு சில இடங்களில் எதிர்க் கட்சியின் தலைமைக் கொறடா மட்டுமே ஊதியம் பெறுகிறார். அரசாங்கத் தலைமைக் கொறடா, கருவூலத் துறையின் பாராளுமன்றச் செயலராக இருக்கிறார். சில வேளைகளில் இவர் ‘மானியம் அளிக்கும் செயலர்’ எனவும் வழங்கப்பட்டார். 18ஆம் நூற்றாண்டில் சேவைக்குக் கைமாறாக அரசாங்கம் பதவிகளையும் பண உதவிகளையும் செய்ததை இச் சொற்றொடர் குறிப்பிடுகிறது. கருவூல லார்டு கமிஷனர், தணிக்கையாளர், அரண்மனைப் பொருளாளர், துணைக் காப்பாளர், போன்ற பதவிகளை அரசாங்கத்தின் சில துணைக் கொறடாக்கள் பெற்றிருந்தனர். இளநிலைத் துணைக் கொறடாக்கள் இப்பொழுது ஊதியம் பெறுகின்றனர்.

அரசியல் நடவடிக்கை தேவைப்படும் பொழுது உறுப்பினரின் ஆதரவையும் கொள்கை பற்றிய ஒருமித்த கருத்தையும் உறுதிப் படுத்துவது கொறடாக்களின் முதன்மையான பணியாகும். ஆகவே, ஒரு குறிப்பிட்ட பிரச்சினையையொட்டி பின்னணி உறுப் பினர்கள் எத்தகைய கருத்தைப் பின்பற்ற வேண்டுமெனத் தலைவர்கள் எதிர்பார்ப்பதை இவர் அறிவிக்க வேண்டும். தக்க சமயத்தில் இவர்களின் வருகையால் கொள்கைக்கு செயலாதரவு அளிக்குமாறு உறுப்பினர்களை இவர் நெருக்குகிறார். தொகுதிகளை

வட்டார அடிப்படையில் பிரித்துக் கொண்டு, ஒவ்வொரு பிரிவை யும் ஒரு துணைக் கொறடாவின் பொறுப்பில் வைக்கிறார்கள். ஒவ் வொரு வாரமும் தம் கட்சியைச் சேர்ந்த பாராளுமன்ற உறுப் பினருக்குக் கட்சிக் கொறடா, அடுத்த வாரத்திற்கான வேலைத் திட்ட அறிக்கையை அனுப்பிவைக்கிறார். இவைகளின் முக்கியத் துவத்தைக் குறிப்பிடும் வகையில் ஒன்று, இரண்டு, மூன்று அடிக் கோடுகள் இடப்படுகின்றன. வாக்கெடுப்பு இருக்கலாமெனின், இதில் கலந்து கொள்ளுமாறு உறுப்பினர் கேட்டுக் கொள்ளப் படுகிறார். இவ்வழைப்பு அறிக்கை மூன்று முறை அடிக் கோடிடப் பட்டிருக்கும் இவ்வறிக்கையை மூன்று (அடி) கோடிட்ட கட்டளை (three-line whip) யென குறிப்பிடுவது வழக்கம். பாராளுமன்றக் காரியமாக ஓர் உறுப்பினர் வெளியூர் சென்றிருந்தால் அல்லது உடல் நலமின்றி இருந்தால் அல்லது மற்றெந்த தவிர்க்க இயலாத அவசரக் காரணங்களையொட்டி வாராதிருந்தால் கொறடா இதைப் பொறுத்துக் கொள்வார். இவர் தம் அனுமதியை அளிக்குமுன், எதிர்க் கட்சிக் கொறடாவோடு கலந்து கொண்டு இப்படிப்பட்ட வேண்டுகோள் எதுவும் வந்துள்ளதா வென்பதை அறிந்து கொள்வார். அப்படி எதுவுமிருந்தால் அவர்களையும் 'இணைந்து' நிலையை இவர் சமப்படுத்திக் கொள்ளக் கூடும். சட்ட மன்றத்தில் எதிர் உறுப்பினர் இருவர் 'ஒத்து' வராமலிருக்கக் கூடும். ஆனால் இவ்வாறு ஒத்துவராமல் இருப்பதை கொறடா விடம் பதிவு செய்து கொள்ள வேண்டும். ஒரு கோடிட்ட கட்டளை களாயின் இசைவு எளிதாகக் கிடைக்கலாம். மூன்று கோடிட்ட கட்டளைக்கு மிக்க நெருக்கமான நிலைகளிலன்றி இசைவு கிட்டா திருக்கலாம். அரசாங்கத்திற்கும் எதிர்க்கட்சிக்கு மிடையில் நிலவும் நல்லெண்ணம் நன்நம்பிக்கை அடிப்படையில் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையில் அரசியலமைப்பு செயல் படுவதை நாம் காணலாம். ஒத்து (சபைக்கு) வராதிருத்தல் உறுப்பினரின் தொல்லைகளைக் குறைக்கிறது. வாக்கெடுப்பில் தம் கட்சியின் நிலைபற்றி நிலவும் உறுதியற்ற தன்மையை அகற்றி கொறடாக் களுக்கு இது உதவியாக இருக்கிறது. வாக்கெடுப்பின் போது இரு மருங்கிலும் செல்லும் உறுப்பினரைக் கணக்கிட்டுச் 'சொல்லுபவர்' களாக இவர்கள் செயல்படுகின்றனர். இப் பணியை கொறடாக்கள் செய்யவில்லையெனில் இதைத் 'தன்னியல்பான' வாக்களிப்பென்பர்.

•

பயனுள்ள முறையில் திறனாய்வு செய்ய அவகாசமளிப்பதோடு அரசாங்கத்தின் காரியங்களை முடிப்பதற்கு உதவுவதில் கொறடாக்கள் முக்கியமாக பங்கு பற்றுகிறார்கள். சபைத் தலைவரின் செயலாட்சியின் கீழ் அரசாங்கத்தில் தலைமை கொறடா

கூட்டத் தொடருக்கான கால அட்டவணையை ஏற்பாடு செய்கிறார். மேலும், காரியம் ஒழுங்காக நடக்க வேண்டுமென்றால், வாராந்திரச் செயற் திட்டம் பற்றி பாராளுமன்றத்தின் கட்சிகளுக்கிடையில் தொடர்பு இருக்க வேண்டும். ஆகவே, அரசாங்க அலுவல்களுக்கு நேரம் ஒதுக்கவும் எதிர்க்கட்சி திறனாய்வு செய்ய நேரம் ஒதுக்கவும், கொறடாக்கள் இணங்க வேண்டும். எடுத்துரைக்கப்பட்ட கால அட்டவணையையும் பொருள்களையும் சபாநாயகரின் ஏற்பிக்கு வைக்க வேண்டும். விவாதங்களின் வரிசை முறை கூட பெரும் பாலும் முன்கூட்டியே 'வழக்கமான வழிகளில்' முடிவு செய்யப் படுகிறது. முதன்மையான பேச்சாளர்களின் பெயர்களைக் கொறடாக்கள் சபாநாயகருக்கு கொடுக்கின்றனர்.

கொறடாக்கள் புகுத்தும் ஒழுங்குமுறையை ஏற்றுக் கொள்ள உறுப்பினர்கள் வழக்கமாக இசைவர். கட்டுப்பாட்டை அகற்றிக் கொள்வதென்பது உண்மையில் கட்சியில் இருந்து விலக்கப் பட்டதாகப் பொருள்படும். இப்படிப்பட்ட கடுமையான நடவடிக்கை தேவைப்படுவதில்லை. ஏனெனில், அரசாங்கத் தரப்பு கொறடாக்கள் உறுப்பினருக்குச் சில சலுகைகள் அளிக்கின்றனர். சிறப்புப் பட்டங்கள் பெறவும் வெளி நாடு செல்ல பாராளுமன்ற குழுவினரின் பெயர்களைப் பிரதமருக்கு இவர் பரிந்துரைக்கிறார். மேலும், அரசியல் முன்னேற்றத்தை நாடுபவர்கள் கொறடாக் களுக்கு இடர் அளிக்க மாட்டார்கள். ஏனெனில், இள நிலை அமைச்சர் பதவிகளுக்கான பின்னணி உறுப்பினர்களைப் பிரதமரின் கவனத்திற்குக் கொண்டு வருபவர் இவரே. வேறு சில சிறிய வழிகளிலும் உறுப்பினர்களுக்குக் கொறடாக்கள் உதவலாம். தனியார் உறுப்பினர் மசோதா ஒன்றினை தெரிவு செய்வதில் ஒருவர் வெற்றி பெற்றால், வெள்ளிக்கிழமை பிற்பகல் நேரத்தில் கூட்டம் நடத்தத் தேவையான 'குறை நிறைவெண்; (Quorum) உறுப்பினரை இவர் திரட்டித் தரலாம். தனி உறுப்பினரிடம் மசோதா தயாராக இல்லையென்றால் இவர் ஒன்றை அளிக்கிறார்.

ஆனால் கட்சியின் கொள்கையை ஏற்கச் செய்வது மட்டும் கொறடாவின் பொறுப்பாகாது. இவர் தலைவரின் 'கண்களாகவும் காதுகளாகவும்' இருக்கிறார். அதாவது, 'கண்டதும் கேட்டதும்' பற்றி இவர் தலைவருக்குச் சொல்ல வேண்டும். ஏனெனில் குறிப்பிட்ட திட்டங்கள் பற்றிய மனவமைதியின்மையையும் தொகுதியினர் கருத்துகளையும் பின்னணி உறுப்பினர்கள் இவர் வாயிலாகத் தான் வெளிப்படுத்துகின்றனர். பாராளுமன்றத்தின் முழுமையான கூட்டத்தில் கன்சர்வேட்டிவ் கட்சித் தலைவர்கள் கலந்து கொள்ளாததால் இப் பணி குறிப்பாகச் சிறப்படைகிறது.

பின்னணி உறுப்பினரின் தனி நலக் குழுக்களின் கூட்டங்களில் ஒரு கொறடா எப்பொழுதும் தவருமல் கலந்து கொள்ளுகிறார். பாராளுமன்றத் தனிச் செயலர்களோடு சேர்ந்து இவரும் பணியாற்றுகிறார். ஏனெனில் இவர்களின் தலைவராகிய பிரதமர், பின்னணி உறுப்பினரின் வெறுப்பிற்கு ஆளாகாமல், சரியான நேரத்தில் முன் வரிசையில் இருந்து கொண்டு விவாதங்களுக்கு விடையளிக்கவும் கேள்களுக்குப் பதில் கொடுக்குமாறு இவர்கள் பார்த்துக் கொள்ளுகிறார்கள்.

ஒரு சிறப்பான பதவியைக் கொறடா வகிக்கிறார். கேபினெட்டில் ஓர் உறுப்பினராக இல்லையெனினும் வழக்கமாக இவர் முன் வரிசையில் வலக்கோடியில் அமர்ந்து கொள்ளுகிறார். நிலைக்கேற்ற உறுதியையும் திறத்தையும் காட்டித் தன்னுடைய கட்சிக்காரர்களோடும் மாற்றுக் கட்சி உறுப்பினரோடும் இவர் நல்லபடியாக நடந்து கொள்ள வேண்டும். உறுப்பினர் இவரது கட்டளைக்கு இணங்கவில்லையென்றால், தலைவர், கட்சிச் செயலர், அல்லது மற்ற செல்வாக்குள்ள உறுப்பினர், தேவையென்றால் கட்சியின் ஆதரவை இவர் நாடலாம். தனிப்பட்ட உறுப்பினரின் முன் துணிவை இம் முறை அழிக்கிறதெனினும், கட்சிப் பாராளுமன்ற அரசாங்கம் வெற்றியோடு செயல்படப் பெருமளவு ஒழுங்கு முறை தேவைப்படுகிறது.

### கட்சிகளின் பணிகள்

நாட்டு மக்களின் ஆதரவை ஒருங்கமைப்பதும் பாராளுமன்ற உறுப்பினரின் ஒழுக்கமுறையைப் பேணுவதும் கட்சி அமைப்பின் அடிப்படையான தன்மைகளாகும். இவைகளைச் செய்து முடித்த பின், தேசிய அமைப்பின் வாயிலாகத் தொகுதியினரையும் பாராளுமன்ற உறுப்பினரையும் இணைத்தல் அடுத்த பணியாகும்.

ஆனால் இச் செயல் முறையை இன்னும் ஒரு நிலைக்கு உயர்த்தலாம். கட்சி அமைப்பால் பாராளுமன்றத்தோடு மட்டு மின்றி அரசாங்கத்தோடும் தொகுதியினர் நேர்முகமாக இணைக்கப் படுகின்றார்கள். இதைத்தான் நாம் 'கட்சி முறை'யென்கிறோம். ஒருங்கிணைப்பின் ஒவ்வொரு நிலையிலும் மக்களாட்சி அரசாங் கத்திற்குரிய இன்றியமையாப் பண்புகளை கட்சிகள் நிறைவேற்று கின்றன.

**தேசிய விவகாரங்கள் பற்றிய பொதுக் கருத்தை கட்சிகள் உருவாக்கு கின்றன.**

மக்கள் மாறுபட்ட கருத்துடையவர்களாக இருக்கின்றனர். ஒருமித்த கருத்துடையவர்கள் ஒரு சங்கமாக அமைகின்றனர்.

ஆனால் இவைகள் தேசிய வாழ்க்கையின் எல்லாப் பண்புகளேயும் கொண்டிருப்பதில்லே.

மாருக, இயன்ற வரை பெருமளவு ஆதரவாளர்களேக் கவரும் வகையில் அரசியல் கட்சிகள் செயல் திட்டங்களே உருவாக்கித் தேர்தலில் வெற்றியை நாடுகின்றன. எனவே, பல்வேறு படி நிலேயில் உள்ள கருத்துகளே இவைகள் தெளியச் செய்கின்றன; பலதரப்பட்ட கூறுகளே ஒன்று திரட்டுகின்றன. பிரிட்டனில் இருக்கும் இருபெரும் அரசியல் கட்சிகளிலும் இடம் பெற்றிருக்கும் பல்வேறு நலன்களேயும் ஒருங்கிணேத்துச் செயல்படுத்துவது ஒரு சாதனேயாகும். ஒரு குறிப்பிட்ட பிரச்சினேயை யொட்டிய கருத்துகளே ஒரு கட்சி கொள்கையாக வெளியிடுகிறது. இதைப் பற்றிய திட்டங்களே சுருக்கமாகக் கட்சி வெளியிடுகிறது. தொகுதியினரின் அக்கறையை எழுப்பி மெத்தப் போக்கை முறியடிப்பது மட்டுமன்றி, ஒரு கட்சிக்கு வாக்களிப்பதெனும் எளிய முறையால், பல கொள்கைகளில் ஒன்றை பயனுடைய முறையில் தெரிவு செய்யக் கட்சி உதவுகிறது.

### பொதுக் கருத்துகளே கட்சிகள் பேணி வளர்க்கின்றன

கருத்துகளே கட்சிகள் பரப்புவதால், வாக்காளர்கள் வாதத்தையும் எதிர்வாதத்தையும் அறிந்து கொண்டு தக்க முடிவெடுக்க கட்சிகள் உதவுகின்றன. ஆகவே, அரசியலே அணுகும் கருத்தாழமான குறிக்கோள் சார்ந்த முறைகளே கட்சிகள் பேண உதவுகின்றன. பொதுக் கருத்து, தீவிரக் கருத்துப் போக்கு ஆகியவைகளில் நம்பிக்கையின்மையை கட்சிகள் வளர்க்கின்றன. மேலும் கருத்து அடிப்படையிலன்றி குடிமகனின் சுதந்திரத்தை மதிப்பதென்பது பிரிட்டனின் அரசியல் வாழ்க்கையின் தனிச் சிறப்புப் பண்பாகும். இப்பண்பை அரசியல் கட்சிகள் கட்டிக் காக்கின்றன. இதற்கேற்ப கட்சித் தலேவர்கள் வாக்காளர்களேப் பொறுப்பாகவும் நேர்மையாகவும் நடத்த வேண்டுமென எதிர்பார்க்கப்படுகிறது. 1945ஆம் ஆண்டுத் தேர்தலில் கன்சர்வேட்டிவ் கட்சினர் எழுப்பிய 'சர்ச்சில் செய்து முடிக்கட்டும்' எனும் போர்க் குரல் வாக்குகளேப் பாதித்ததெனலாம்.

நாட்டு மக்களுக்கும் பாராளுமன்றத்திற்குமிடையே நிலேயான அரசியல் இணேப்பை அரசியல் கட்சிகள் ஏற்படுத்துகின்றன. பாராளுமன்றத்தில் இருந்த அரசியல் கட்சிகள் தம் அமைப்பை நாடு முழுவதும் பரப்பியபொழுது 1832-வரையிலும் இதற்குப் பின்னும் பாராளுமன்றத்தின் சட்ட இறைமையை மக்களின் அரசியல் இறைமையோடு இணக்குவிக்க இயலவில்லே. கட்சி

யமைப்பின் விரிவான வளர்ச்சியும் ஒழுங்குமுறையும் பிற்காலத்தில் இச் செயற் பாங்கை நிறைவு செய்தன. இன்று மக்கள் ஒரு தனி மனிதனுக்கு வாக்களிப்பதைவிட ஒரு கட்சிக் கொள்கைக்கு வாக் களிக்கின்றனர். பொதுமக்கள் சபையில் பெரும்பான்மையான இடங்களைப் பெற்றிருக்கும் கட்சியின் வழியாகத்தான் அரசாங்கம் அமைக்கப்படுமென்பதை இவர்கள் அறிவர்.

தேர்தல்களுக்கிடையில் வாக்காளர் வலிமையற்றுப் போவ தில்லை. பத்திரிகை, அக்கறைக்குழு, பொதுக் கூட்டங்கள், வானெலி, தொலைக்காட்சி, ஆர்பாட்டங்கள் போன்ற வழிகளில் கருத்துகளை அரசாங்கம் உணரும்படி செய்வதைத் தவிர தலத் தொகுதிச் சங்கங்களின் வழியாகக் கருத்துகளை வெளியிடலாம்; முறையிடலாம். ஆகவே அரசாங்கத்திற்கும் மக்களுக்கும் இடையில் ஓர் இணைப்பை கட்சிகள் அளிக்கின்றன.

கட்சிகள் உலைவின்மையையும் ஒட்டிணைவாற்றலையும் பாராளு மன்ற உறுப்பினருக்களிக்கின்றன. சுயேச்சை உறுப்பினரையும் சிறிய கட்சிகளையும் கொண்டு சட்டசபை அமையுமாயின் அரசாங்கம் இவைகளின் ஆதரவை உறுதியாக நம்பி இருக்க முடியாது. ஆனல் பாராளுமன்றத்தில் கட்சிமுறை ஓர் அரசியல் தொடர்பை ஏற்படுத்துகிறது. கொள்கையைச் செயல்படுத்த இது உதவுகிறது. அரசாங்கத்தை ஆதரிக்கக் கட்சிப்பற்று பெரும் பாலோரை ஒற்றுமைப்படுத்துகிறது. எஞ்சியிருப்போர் அரசாங் கத்தை எதிர்த்து நிற்கிறுர்கள். மூன்று முக்கியமான முடிவுகள் இதிலிருந்து தோன்றுகின்றன. ஒன்று கட்சியின் செயற்திட்டம் நிறைவேற்றப்படலாம். ஏனெனில் பாராளுமன்ற நடைமுறை களில் தேவையான ஆதரவிற்கு அரசாங்கங்கள் உறுதி பெறுகிறது. இரண்டு, அடுத்த பெரிய கட்சியிலிருந்து ஆற்றல்மிக்க எதிர்க்கட்சி ஒன்று அமைகிறது. மூன்று, தேசிய பிரச்சினைகள் நிதானமாக ஆராயப்படுகின்றன. எல்லா உறுப்பினர்களுக்கும் குறிப்பிட்ட அக்கறைகள் இருக்கின்றன. ஒருவர் வெளிநாட்டு விவகாரங்களில் அக்கறை கொண்டிருக்கலாம்; இன்னெருவர் தல ஆட்சியில் அக்கறை கொள்ளலாம்; மற்ருெருவர் கல்வியில் அக்கறை காட்டலாம். ஆகவே அரசாங்கச் செயற்பாடுகளின் மற்ற முக்கியமான இயல்புகளை இவர்கள் கவனிக்காமல் இருக்கலாம். தேசிய கொள்கையின் பரவலான இயல்புகளை புறக்கணிப்பதற்கு சுயேச்சையாளர்களை முதன்மையாகக் கொண்டிருக்கும் பாராளு மன்றம் தனிப்பட்டவர்களின் கருத்துகளை கலந்தாராய எளிதாக அனுமதிக்கலாம். மறுபுறம், தேசிய விவகாரங்களின் முழுப் பரப்பையும் கட்சி முதன்மையான செயற் திட்டமாகக் கொள்ள

வேண்டும். ஆகவே, தனிப்பட்ட ஆர்வத்தைக் கட்சியின் ஆதரவு தக்க இடத்தில் வைத்து அக் கறைக் குழுக்களை எதிர்க்க தனிப் பட்ட உறுப்பினர்களுக்கு வலிவூட்டுகிறது. பாராளுமன்றத்தில் 'சபாநாயகருக்குப்பின்' உள்ள கட்சியின் அமைப்பு பாராளுமன்ற நடைமுறைகள் செயல்பட உதவுகின்றன என்பதையும் நாம் மறக்கலாகாது.

கொள்கை மாறுமையைக் கட்சிகள் அரசாங்கத்திற்களிக் கின்றன. கட்சி முறையைச் சார்ந்து கேபினெட் முறை இருக்கிறது. பொதுமக்கள் சபையின் பெரும்பான்மை ஆதரவைப் பெற்றுள்ள கட்சியின் தலைவர் பிரதமராகிறார். இவர் தம் கட்சியினரிலிருந்து அமைச்சர்கள் தெரிவு செய்யப்படுவதால் ஒத்த கருத்துகளைக் கொண்டிருப்பவர்களைக் கொண்டு அரசாங்கம் அமைக்கப்பட்டிருக் கிறது. மாறுத கொள்கையை உருவாக்க இது உதவுகிறது. செயற்பாட்டிற்கான காலத்தைப் பற்றி உடன்பாடு காணவும் இது உதவுகிறது.

அரசாங்கத்தின் திட நிலையைக் கட்சிகள் மேம்படுத்துகின்றன. ஒத்த கருத்துடையவர்களைக் கட்சி இணைப்பதோடன்றி, கேபினெட்டின் குறிப்பிட்ட முடிவொன்றை ஒரு தனிப்பட்ட அமைச்சர் ஆதரிக்க இயலவில்லையெனில் இவர் பதவி விலக வேண்டுமென 'கூட்டுப் பொறுப்பு' வலியுறுத்துகிறது. அரசாங்கம் அமைவதும் வீழ்வதும் ஒருங்கே நடைபெறுகிறது. ஆனால் கட்சி முறையின் காரணமாகவும் கட்சியோடு அரசியல் முன்னேற்றம் பிணைக்சப்பட்டுள்ளதாலும் அரசாங்கம் வழக்கமாக நிலை பெறுகிறது. ஆகையால் குறிப்பாக இரு கட்சி முறையில் பொது மக்கள் சபையில் பெரும்பான்மை பெற்றுள்ள நல்ல ஒழுங்கு முறைக்குட்பட்ட ஒரு கட்சி, தொடர்ந்து பதவியில் இருக்க எதிர் பார்க்கக் கூடும். எனவே, நீண்டகாலக் கொள்கையை நிறை வேற்றுவதற்கான பொறுப்பையும் இதனால் ஏற்க முடிகிறது. உட் பகையால் பிளவுபட்ட 18ஆம் நூற்றாண்டின் கேபினெட்டின் வலுக் குறைவோடு 20ஆம் நூற்றாண்டின் கேபினெட்டுகளை ஒப்பிடும் பொழுது, இக் கால அரசாங்கத்தின் திட நிலைக்கு கட்சி முறை எவ்வளவு உதவுகிறது என்பதை நாம் நன்குணரலாம்.

ஓர் அரசாங்கத்தை மாற்ற கட்சிகள் பயனுள்ள வழிகளைக் காட்டுகின்றன. அரசாங்கத்தைக் கட்டுப்படுத்துவது பாராளு மன்றத்தின் முதன்மையான பணியாக என்றுமே இருந்து வந்திருக் கிறது. ஆயினும், 19ஆம் நூற்றாண்டு வரை, தக்க முறைகளின் குறைபாடு இப் பணியைக் கடினமாக்கிற்று. நிதியளிக்க மறுத்து கொள்கைக்கு தடங்கல் செய்யும் முறையைப் பாராளுமன்றம்

கையாள வேண்டியிருந்தது அல்லது நேராக, தனிப்பட்ட அமைச்சர்களை கடுமையான அரசியல் குற்ற விசாரணைக்குட் படுத்த வேண்டியிருந்தது. இரு முறைகளும் செயல் நயமற்றதாகக் காணப்பட்டன. ஏனெனில், மாற்றுக் கொள்கைக்கு இவைகள் வழி செய்யவில்லை.

ஆனால் செயலுரமிக்கக் கட்டுப்பாடு ஒன்றைக் கட்சி முறை நிறுவியுள்ளது. எதிர்க்கும் கட்சியின் பதவி இழப்பைக் குறிப்பிடும் இது அரசியல் சார்புடையதாகும். பொதுத் தேர்தலில் மக்களின் ஆதரவை இழந்து விடுவதால் அல்லது ஒரு முக்கியமான பிரச்சனையையொட்டி பொதுமக்கள் சபையில் தோல்வியடைந்து விடுவதால் இத்தகைய அரசாங்க மாற்றம் ஏற்படலாம். காரணம் எதுவாயினும் ஒரு புதிய அரசாங்கத்தை கட்சி முறை தாமாகவே அளிக்கிறது. ஏனெனில் தன் சொந்த, தனிப்பட்ட கொள்கை யோடு (கூடிய) பதவியேற்கத் தயாராக உள்ள எதிர்க் கட்சித் தலைவர்களின் குழு (Shadow Cabinet) வொன்று எதிர்க் கட்சியின் முன் வரிசையில் இருக்கின்றனர்.

## கட்சி முறையின் குறைகள்

மக்களாட்சி அரசாங்கத்திற்கு கட்சிமுறை இன்றியமை யாததாக இருப்பினும் அன்றித் தவிர்க்க இயலாததாக இருப்பினும் இதன் வளர்ச்சியில் குறைபாடுகள் இல்லாமல் இல்லை. ஒரு குறிப்பிட்ட கட்சிக் கொள்கைக்குக் கட்டுப்படாத சுயேச்சை உறுப்பினர்கள் பொதுமக்கள் சபையிலிருந்து முற்றிலும் களையப் படுவதற்கு இது வகை செய்துள்ளது. கட்சியினது ஆதரவின்றி அல்லது இதனுடைய நிதி உதவியின்றி இவரது தேர்தல் போராட்டம் நடைபெற வேண்டியிருக்கிறது. மெய்யாக இரு பெரும் அரசியல் கட்சிகளும் வழக்கமாகத் தன் சொந்த வேட்பாளர்களை சுயேச்சை உறுப்பினருக்கெதிராக நிறுத்து கின்றன. எனவே, இவர் தேர்ந்தெடுக்கப்படுவது இயலாததாகி விடுகிறது. 1948க்கு பின் பல்கலைக் கழகத்திற்கான இடங்கள் ஒழிக்கப்பட்டபின் பாராளுமன்றத் தேர்தல் ஒன்றில் ஒரு உண்மை யான சுயேச்சையாளர் வெற்றி பெற்றதில்லை.

தேர்தலில் சுயேச்சையாளர் வாய்ப்புக் குறைவான நிலையில் இருத்தப்படுவதோடன்றி பாராளுமன்றத்தில் இவர் பல குறை பாடுகளினால் அவதிப்படுகிறார். கட்சிக் கொறடாவிடமிருந்து இவர் கட்டளைகளைப் பெறுததினால் கட்சித் தொடர்பின் பயனாக கட்சிக் கொறடா அளிக்கக் கூடிய உதவியை இவர் இழக்கிறார்.

எனவே, கொறடாவின் அலுவலகத்திலிருந்துவரும் பாராளுமன்றச் செயல்கள் பற்றிய அறிவிப்புகளையும் தகவலையும் இவர் பெறுவதில்லை. ஒரு விவாதத்தில் பங்குபற்ற இவருடைய சொற்பொழிவைத் தயாரித்தளிக்க ஒரு மத்திய அலுவலகம் முன் வருவதில்லை. எதிர்க் கட்சியினருக்கெதிரான ஒரு நகைச் சுவையையொட்டி எழும் சிரிப்பொலியைப் பெறும் அல்லது ஒரு நல்ல கருத்தைச் சொல்லும் பொழுதும் இவர் கட்சியினர் தார்மீக ஆதரவு கூட அளிப்பதில்லை. தனி உறுப்பினர் மசோதா ஒன்றைப்பற்றி விவாதிக்கும் வாய்ப்பை இவர் பெற்றாலும் மசோதாவை இவரே வரைந்து உருவாக்க வேண்டும்; இதற்கு ஆதரவாளர்களைத் தேடவேண்டும்; இது வாசிக்கப்படும் பொழுது சபையில் குறை வெண்ணிற்கு ஏற்பாடு செய்யவேண்டும்.

தொழில் முறை அரசியல்வாதி எவரும் இப்பொழுது சுயேச்சையாளராக அமரவியலாது. உறுப்பினர் என்ற முறையில் தம் ஊதியத்தை இவர் நம்பி இருப்பாராயின் தம் கட்சியின் ஆதரவோடு உறுப்பினர் பதவியைத் தக்கவைத்துக் கொள்ளலாம். 19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் உறுபபினர் பலர் ஏன் சுயேச்சைகளாக இருந்தனர் என்பதற்கான காரணம் அரசியலை இவர்கள் பொழுதுபோக்காக வைத்துக் கொண்டதாகும். இருப்பினும், கட்சியினர் மட்டுமே அமைச்சர் நிலைக்கு உயர்த்தப் பட்டது மிக முக்கியமாகும். ஆகவே உயரவாமிக்க உறுப்பினர் ஒருவர் சுயேச்சையாக இருப்பாராயின் நல்ல எதிர்காலம் இராது

ஆனால் சுயேச்சையாளரின் ஒழிப்பு வருந்தத் தக்கதாகும். தம் சொந்தத் திறமையினால் இவர் ஒரு தேர்தலில் வெற்றிபெற வேண்டியதால் இவரது ஆற்றல் மற்ற பாராளுமன்ற உறுப்பினரை விட மேலாக இருந்தது. மேலும், கட்சியின் பெயரை மட்டும் பார்க்காமல் வாக்காளர்கள் ஒருவரது தனிப் பண்புகளையும் கருதிப் பார்க்க வேண்டியுள்ளது. கட்சி நலன்களால் கட்டுப்படாமல் பாராளுமன்றத்தில் இவர் தம் உள்ளத்தின் உறைப்பையொட்டி வாக்களிக்கலாம். மேலும், இவர் பேசும் பொழுது, கட்சியின் கருத்தைத் திரும்பத் திரும்ப வெளியிடாமல் தம் சொந்தக் கருத்தைக் தெரிவிப்பதால் மிக்க மரியாதையோடு இவர் கருத்தைக் கேட்கின்றனர். இவர் ஒரு மசோதாவைக் கொண்டு வரும் பொழுது சபையின் எல்லாப் பிரிவினர்களின் ஆதரவையும் பெறலாம். ஏனெனில் சில அரசியல் நோக்கங்கள் இருப்பதாக எந்த உறுப்பினரும் ஐயப்படுவதில்லை. ஆனால் எதிர்க் கட்சி உறுப்பினர் ஒரு மசோதாவைக் கொணரும் பொழுது ஐயப்பாடு ஏற்படுவது இயல்பாகும். எனவே, சில முக்கியமான சீர்திருத்த

மசோதாக்களை சுயேச்சை உறுப்பினர் பாராளுமன்றத்தில் கொண்டு நிறைவேற்றியுள்ளனர்.

கட்சி முறை கட்டுக்கோப்பில் இடம் பெற இயலாததால் சுயேச்சை உறுப்பினர் மறைந்து விட்டனர். நம்ப இயலாதவர் களாகக் கட்சிகள் இவர்களைக் கருதுகின்றன. இரு பெரும் அரசியல் கட்சிகளுக்குமிடையிலான எதிர்ப்பு அடிப்படையில் பாராளு மன்றத்தில் முக்கியமான வேலைகள் நடைபெறுகின்றன. தம் உறுப்பினரின் ஆதரவை இரு கட்சிகளும் பற்றி நின்று செயல் படுகின்றன. சுயேச்சை உறுப்பினர் இத்தகைய கட்சி ஒழுங்கு முறைக் கட்டுப்பாடுகளுக்கு உட்படுவதில்லை. மேலும், பாராளு மன்றத்தில் பெரும் போராட்டங்களில் இவர்கள் பங்கு பற்று வதில்லை. கட்சி மாநாடுகள் பாராளுமன்றக் கட்சிக் கூட்டங்கள் ஆகியவற்றின் வழியாகக் கொள்கையை உருவாக்குவதில் இவர்கள் பங்கு பெறுவதில்லை.

ஆகவே, சுயேச்சை உறுப்பினர்களின் நலிவு ஒரு குறிப்பிடத் தக்க இழப்புயெனினும், கட்சி முறையின் நன்மைகளை அடைய இது பெரிதும் தேவையாகிறது. தொடர்பற்ற பல சுயேச்சையினரைக் காட்டிலும் கட்சி அடிப்படையில் அமைந்திருக்கும் எதிர்க் கட்சி யினர் அரசாங்கத்தின் குறை நிறைகளை ஆய்வது பயனுடையதாக இருக்கும். மேலும், பின்னணி உறுப்பினரின் கருத்துகள் புறக்கணிக்கப்படுவதில்லை. கட்சி கருத்துகளையொட்டி இவர் ஆதரவளிக்க வேண்டுமென்றாலும், தம் கருத்துகளை வெளியிடவும் கொள்கையை மாற்றியமைக்க முயலவும் இவருக்கு வாய்ப்புக்கள் இருக்கின்றன. கட்சிக் கூட்டங்களில் கலந்துரையாடிக் கருத்துகளை மாற்ற முயலலாம். பாராளுமன்றக் கட்சியின் பல்வேறு குழுக் களும் ஆய்வுக் குழுக்களும், பாதுகாப்பு, வீட்டு வசதி, தல ஆட்சி, நல்வாழ்வு, கல்வி, பொருளாதார விவகாரங்கள் ஆகியவைகளைப் பற்றிய கட்சியின் கொள்கையை ஆராய்கின்றன. அறிக்கை நிலையில் உள்ள மசோதாக்களை ஆராயும் நிலைக் குழுக்களும் இருக் கின்றன. உண்மையில், சுயேச்சை உறுப்பினர் ஒருவர் தம் சொந்த முறையில் செயல்படுவதைக் காட்டிலும் கட்சியின் வாயிலாகச் செயல்படும் உறுப்பினர் ஒருவர் பயனுறுதி மிக்கச் செல்வாக்கைப் பெற்றிருக்கிறார்.

உறுப்பினரின் தனித் தன்மையைக் கட்சி முறை அழித்து விடுகிறதென்னும் இரண்டாவது குறைபாடு இதுவரை நாம் பார்த்தவைகளால் உறுதியாகிறது. ஒற்றை உறுப்பினர் தொகுதி யின் நலச்சிறப்பை இது குறைத்து விடுகிறது. தம் உறுப்பினரை

அறிந்து கொள்ள இம் முறை அனுமதிக்கிறதெனும் வாதம் வலிவிழந்து விடுகிறது. எனினும் கட்சி உறுப்பினர் தொகுதியினரின் விருப்புகளை புறக்கணித்து விட இயலாது. கட்சி நெறிக்கு ஆதரவில்லையென இவர் அறிந்தால், கட்சிக் கொறடாவிற்கு இதை எடுத்துக் கூறித் தலைவர்களுக்கு அறிவுறுத்த வேண்டும்.

கட்சி முறையின் விளைவாக சில பொருள்கள் புறக்கணிக்கப்படுகின்றன. கட்சியோடு நேர்முகத் தொடர்பில்லாதவைகளாக இருப்பதால் புதிய சாலைகளை அமைத்தல், தல ஆட்சி சீர்திருத்தம் ஆகியவை புறக்கணிக்கப்படலாம், மணவினை சீர்திருத்தம், சூதாட்டக்க ட்டுப்பாடு போன்றவைகள் கட்சிக்கு அப்பால் பட்டதாக இருக்கலாம். அரசியல் கட்சிகளால் புறக்கணிக்கப்படுகின்ற இப்படிப்பட்டவைகளை சுயேச்சையினர் எடுத்துக் கொள்ளலாம்.

முழு முக்கியமானதாகவும் விருப்பானதாகவும் மாறுகிற ஆபத்து கட்சிக்கு எப்பொழுதும் இருக்கிறது. சில தொகுதிக் கட்சிகளில் இந் நிலை ஏற்கனவே ஏற்பட்டுள்ளது. இருப்பினும், பொதுமக்கள் சபையினருக்குக் கட்டளையிடத்தக்க உட்குழு ஒன்று பாராளுமன்றத்திற்கு வெளியே வளர்ச்சியடையும் ஆபத்து இருந்து வருகிறது. நல்ல வேளையாக, எந்த அளவிலும் இது இங்கிலாந்தில் ஏற்படவில்லை. 1944-ல், தொழில் கட்சியின் தேசிய செயல் குழுவின் தலைவராகிய பேராசிரியர் லாஸ்கி, திரு. அட்லிக்குச் சில கருத்துகளை எடுத்துரைத்த பொழுது இவர் அவற்றை ஏற்கமறுத்து விட்டார். இருப்பினும், ஆஸ்திரேலியாவில் தொழிற் கட்சியின் அமைச்சவையில் யார் உறுப்பினராக இருக்க வேண்டுமென்பதை கட்சி முடிவு செய்கிறது. துறைப் பொறுப்புகளைப் பகிர்ந்தளிக்கும் அளவிற்குக் கட்சி சென்று விடுகிறது. இத்தகைய உட் குழு முறை இங்கிலாந்தில் தோன்றினுல் பாராளுமன்ற முறை அரசாங்கத்திற்குப் பெரும் இன்னல் விளைக்கும். ஏனெனில் பெரும்பான்மையினர் நிதானத்துடன் நடந்து கொள்வதோடு விட்டுக் கொடுப்பதில் விருப்பம் காணவேண்டுமெனும் அடிப்படைக் கருத்தை இது தாக்கலாம். நாட்டு விவகாரங்களை விவாதித்துக் கொள்கைகளை ஆராயும் பேரவையாகும் பாராளுமன்றம். ஒரு குறிப்பிட்ட நடவடிக்கையை மேற்கொள்ளக் கூடிய வகையாட்களாகக் கூடாமல் பிரதிநிதிகளாக உறுப்பினர் இதில் கூடுகின்றனர். மாருக, கட்சியின் உட் குழு முறை தனிப்பட்ட கட்சிக் கூட்டத்திற்குக் கொள்கை முடிவுகளை மாற்றி விடுகிறது. இக் கூட்டத்தில் சிறிய பெரும்பான்மை வாக்குகளைப் பெற்றுத் தீவிரவாதிகள் வெற்றியடையலாம். பின்னர், இது கட்சிக் கொள்கையாகப்

பாராளுமன்றத்தில் திருத்தமோ உடன்பாடோ இன்றி நிறைவேறி விடுகிறது. இத்துடன் உட் குழுக்களின் கட்டளைகளால் பாராளு மன்றத்தில் உள்ள தலைவர்களும் கடினமாகக் கட்டுப்படுத்தப் படுகின்றனர். அச் சமயத்தில் உள்ள நிலையை மதிப்பிட்டு நடவடிக்கை மேற்கொள்ள சிறிதும் இடமின்றி போய் விடுகிறது.

1960-ல், எதிர்க் கட்சித் தலைவர் என்ற முறையில் திரு. கெயிட்ஸ்கில் இந் நிலையை எதிர் நோக்க வேண்டியிருந்தது. தொழில் கட்சியில் மாநாடு ஒரு தலையாக நீரகக் குண்டுகளை நிராகரித்து வாக்களித்தது. இக் கொள்கையை பாராளுமன்றக் கட்சி ஏற்கவில்லை. இம் முடிவை கெயிட்ஸ்கில் ஏற்க மறுத்தார். கட்சியின் அமைப்பு விதிகள் இவருக்குத் துணை நின்றன. கட்சியும் முன் செய்த முடிவை மாற்றிக் கொண்டது.

மேலும் படித்தற்குரிய நூல்கள்

ஆறும் அத்தியாயத்தைப் பார்க்கவும்.

# 8. மாண்புமிகு அரசியாரின் எதிர்க்கட்சி

**எதிர்க்கட்சி ஏன்?**

அரசாங்கத்தின் மீது மக்களின் கட்டுப்பாடு தொடர்ந்திருக்க வேண்டுமென்ருல், அதிகாரத்தில் இருப்பவர்கள் அவ்வப்போது தம் நடத்தைக்குப் பொறுப்புடையவர்களாக இருக்க வேண்டும். இதைப் பெறுவதற்கு, சில நாடுகள் அரசியலமைப்பில் சில வழிகளை வரைந்து கொண்டிருக்கின்றன. எடுத்துக் காட்டாக, குறிப்பிட்ட பிரச்சனைகளையொட்டி குடியொப்பம் நடத்தப்படுகிறது. நெகிழ்வை நாடும் பிரிட்டிஷார் இத்தகைய அதிகார மிகுதியை தடையீடு முறையால் குறைக்க முயல்கின்றனர். தொடக்க காலத்தில் அரசரின் அதிகாரம் சிறிதளவு பாராளுமன்றத்தின் கட்டுப்பாட்டில் இருந்தது. ஆனல் ஆர்வமிக்க கீழ் சபை இன்று இதைச் செய்வதை நாம் அறிவோம். அரசாங்கத்தை ஒழுங்காக எப்படி செயல்படச் செய்வதென்னும் பிரச்சினை எதிர்க் கட்சியால் தீர்க்கப்படுகிறது. அரசாங்கத்தின் செயல்களையும் கொள்கைகளையும் வெளிப்படுத்தி பொதுமக்களின் பார்வையில் வைப்பதும் இடையருத தாக்குதலுக்கு உள்படுத்துவதும் அரசியாரின் எதிர்க் கட்சியின் பொறுப்பாகிறது.

அதிகார பூர்வமாக எதிர்க் கட்சி ஏற்றுக் கொள்ளப் பட்டிருப்பதால் இதன் இயல்பான சிறப்பு நிலை குறிப்பிடத் தக்கதாக உள்ளது. ஒரு புறம், நாம் மேதகு அரசியாரின் அரசாங்கத்தைப் பெற்றிருக்கிறோம், மறுபுறம், அரசியாரின் எதிர்க் கட்சியையும் பெற்றிருக்கிறோம். ‘அரசியாரின் மாற்று அரசாங்கமாகவும் இதைக் கருதலாம். 1937-ல் பிரதமருக்கு ஊதியம் அளிக்கப்பட்டபோது எதிர்க் கட்சித் தலைவருக்கும் ஊதியம் கொடுக்கப்பட்டது. இவருக்குக் கொடுக்கப்படும் 4500 திரண்ட நிதியிலிருந்து அளிக்கப்படுகிறது.’ அரசியாரின்

அரசாங்கத்திற்கு எதிராக சபையில் உள்ள கட்சியின் தலைவரென எதிர்க் கட்சித் தலைவர் பதவிக்கு 1937ஆம் ஆண்டுச் சட்டம் வரையறை செய்திருக்கிறது. ஐயப்பாடு எழுமாயின் அதை சபாநாயகர் முடிவு செய்கிறார்.

பிரிட்டிஷ் அரசாங்க முறையில் இப்பொழுது இவ்வளவு சிறப்பாகப் பங்கு பற்றும் எதிர்க் கட்சி எதிர்ப்பாரா வகையில் தோன்றியதெனலாம். 1820-ல் ஒரு விக் கட்சித் தலைவர் இதன் செயற்பாடுகளை எதிர்மறைப் பண்புடையன எனக் கருதினார். எதிர்க் கட்சியின் கடமை எதையும் எடுத்துரைக்காமல் எல்லாவற்றையும் எதிர்த்து அரசாங்கத்தை பதவியிலிருந்து வெளியேற்றுவதென இவர் கூறினார். வழக்கமாக இரண்டிற்குட்பட்ட நன்கு அமைந்த கட்சிகள், எதிர்க் கட்சி ஒரு நிறுவனமாக வளரவும் இதனுடைய முதன்மையான பணிகளை நிறைவேற்றவும் உதவியுள்ளன. 1832ஆம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டம் நிறைவேறிய காலம் வரை, அரசாங்கத்தைத் திறனாய்வு செய்யும் பொறுப்பு பொதுமக்கள் சபையிடம் நிலை பெற்றிருந்தது. இதன் பின், கட்சியின் வழியாகப் பொதுமக்கள் சபையை முற்றிலும் அரசாங்கம் பெருமளவிற்குக் கட்டுப்படுத்தியது. எனவே, ஆட்சியில் இல்லாத கட்சியிடமிருந்து அரசாங்கத்திற்கு எதிர்ப்பு தோன்றியது. மேலும், அடுத்து வரும் தேர்தலை கருத்தில் கொண்டதாகத் திறனாய்வு இருப்பதால், அரசாங்கத்தின் கொள்கைக்கு மாற்றாக எடுத்துரைக்கப்படுகின்ற கொள்கை ஆக்க முறையில் இருக்க வேண்டும். பல நாடுகளின் எதிர்க் கட்சிகளிலிருந்து மேதகு அரசியாரின் எதிர்க் கட்சி இதில் வேறுபடுகிறது.

### எதிர்க் கட்சியின் செயல் முறைகள்

(1) அரசாங்கத்தின் அதிகாரங்கள் செயல்படுத்தபடுவதில் இது தொடர்ந்த பொறுப்புடைமையைப் பெறுகிறது.

இசைவு அடிப்படையில் இங்கிலாந்தில் மக்களாட்சி நடைபெறுகிறது. இங்கு சுயேச்சையான வாக்களிப்பு இருக்கிறது; மக்கள் சிந்தித்து செயல்பட வழி இருக்கிறது. வன்முறையாலன்றி வாதங்களால் முடிவுகளை மாற்றலாம். இருப்பினும், 'எல்லோரையும் பாதிக்கிறதை எல்லோரும் ஏற்கவேண்டு'மென்ற கருத்தை முழுமையாகப் பயன்படுத்துவது இயலாதென்பதில் கருத்துகள் வேறுபடுகின்றன. சிறுபான்மையினரின் விருப்புகள் கருத்தில் கொள்ளப்பட்டாலும் பெரும்பான்மையினரது ஆட்சி நிலவ வேண்டும். எவ் வழியிலும், கொள்கை கருத்தையொட்டியதாக

இருப்பதால் எளிதாக 'உண்டு அல்லது இல்லை' யென்று எளிதாகச் சொல்லிவிட முடியாது. கொள்கையை உருவாக்க வேண்டியிருக்கிறது. இதில் எதிர்க் கட்சியும் பங்கு பெறுகிறது. பொதுவாகக் கருதுவது போல், கொள்கையென்பது பெரும்பான்மைக் கட்சி ஆட்சியில் விளைவன்று. இது விவாத அடிப்படையில் அமையும் அரசாங்கத்திற்குரியது. எதிர்க் கட்சியின் எதிர்ப்பிற்கும் ஆய்விற்கும் இடையில் நடைபெறும் இடைவிளைவுக்கும் அரசாங்கப் பெரும்பான்மைக்குரியதாகும்.

இருப்பினும், அடுத்த தேர்தலில் அதிகாரத்தைக் கைப்பற்றுவது எதிர்க் கட்சியின் உண்மையான நோக்கமாக இருக்கிறது. ஆகவே, அரசாங்கத்தின் குறிப்புரைகளை இது ஆய்கிறது. இதனுடைய கொள்கைகளைத் திறனாய்கிறது, இதனுடைய ஆட்சியைத் துருவி ஆய்கிறது. அரசாங்கத்தின் பதில்களை இது சரி பார்க்கிறது. எடுத்துக் கொள்ளப்பட்ட நடவடிக்கை பற்றிய எல்லா எதிர்ப்புகளையும் இயன்றவரை ஓர் ஆற்றல் மிக்க எதிர்க் கட்சி வெளிக் கொணரவேண்டும். விரும்பத்தகாததாகத் தோன்றும் அரசாங்கத் திட்டம் எதற்கும், சிறப்பாக, தீவிரமானவைகளாக இருப்பவை அல்லது தனியாட்சி முறைக்கு வழிகோலுபவை ஆகியவற்றில் இது கவனம் செலுத்த வேண்டும். சிறுபான்மையினரின் நலனுக்காக அரசாங்கம் கொள்கைகளை மாற்றியமைக்க இது முயலவேண்டும், தனி மனித உரிமைகளை ஆட்சித்துறை அழிக்க முற்படும் பொழுது எதிர்க் கட்சி இச் செயலை பொதுமக்கள் கவனத்திற்குக் கொண்டு வரவேண்டும். விவாதங்களும் வினாக்களும் பாராளுமன்றத்தில் இதன் போர்க் கருவிகளாகும். பாராளுமன்றத்திற்கு வெளியே பொதுக் கூட்டங்கள், தொலைக்காட்சி, வானொலி, பத்திரிகை ஆகியவற்றின் வழியாக கட்சிப் பிரசாரம் இதன் கருவியாகிறது.

மேலே குறிப்பிட்டுள்ள கடமைப் பொறுப்புகளை நிறைவேற்றுவதில், அரசாங்கம் மெத்தனமாக இருக்காமலும், இதனுடைய அதிகாரங்களைச் செயல்படுத்தும் பொழுது பொதுக் கருத்தை இது கருத்தில் கொள்ளவும் எதிர்க் கட்சி உறுதியளிக்கிறது. மறுபுறம், கேள்விகள், விவாதங்கள் வழியாக அரசாங்கம் தன் செயற்பாட்டை ஏற்கத் தக்க முறையில் மெய்ப்பிக்க வாய்ப்புகள் அளிக்கப்பட்டுள்ளன. குறிப்பிட்ட குறை கூறல்களுக்கு விரிவான விளக்க விடைகளை அரசாங்கம் அளிக்கலாம். வாக்கெடுப்பிற்கு வற்புறுத்தப்படும் பொழுது சபைக்குள் அரசாங்கத்திற்குள்ள ஆதரவை இது வலியுறுத்தலாம். பத்திரிகைகள் பல்வேறு நலன்கள் ஆகியவற்றின் எதிர் விளைவுகளைக் கொண்டு இது பொதுக் கருத்தை

மதிப்பிடலாம். எனவே, அரசாங்கத்திற்கும் எதிர்க் கட்சிக்கும் இடையிலான இடை விளைவு பொதுமக்கள் சபைக்கு மட்டுமின்றி முழுமையாகப் பிரிட்டிஷ் அரசியலுக்கும் உயிர் மூச்சாக இருக் கிறது.

(2) வாக்காளர்கள் கொள்கையில் மாற்றம் விரும்பும் பொழுது ஆட்சிப் பொறுப்பை இது ஏற்றுக் கொள்ளுகிறது.

ஒரு சில சமயங்களில் மட்டுமே எதிர்க் கட்சியின் திறமுறைகள் முற்றிலும் இருக்கிறது. 'மேதகு அரசியாரின் மாற்று அரசாங்க மாக இதை வாக்காளர்கள் கருதுவதை இது சரியாகத் தெரிந்து கொண்டுள்ளது. எனவே இதன் திறனுய்வு நம்பத்தக்கதாகவும் ஆக்கவியல்புடையதாகவும், பொறுப்புடையதாகவும் இருக்கிறது. பிரிட்டிஷ் அரசியலமைப்பின் அடிப்படையான கருத்துகளை ஏற்றுக் கொள்வதால் இது நம்பத்தக்கதாக இருக்கிறது. பேராசிரியர் ஏ. பி. கீத் (Prot A. B. Keith) சொல்லுவது போல், 'விரும்பும் மாற்றத்தை ஏற்படுத்த எதிர்க்கட்சி அதிகாரத்தை நாடுகிறது'. 'விளையாட்டு விதிகளை'யொட்டி அரசாங்கத்தோடு இது உட்படு கிறது என சுருக்கமாகச் சொல்லலாம். இரு கட்சி முறையில். அரசாங்கத்தை வெளியேற்றுவதில் இது வெற்றி பெற்று இதனு டைய கொள்கைகளை செயல் படுத்துவதால் இதை ஆக்க முறை யிலான தென்கிறோம். இதன் முதல் நிலை உறுப்பினர்களை முன்னணியில் வைத்து, குறிப்பிட்ட அமைச்சுப் பதவிகளுக்கு இவர்களை குறிப்பிட்டு, கொள்கைகளையும் திறமுறைகளையும் முடிவு செய்யக் கூடி, இன்று இது தன் 'மாற்று அமைச்சவையை' வெளிப் படுத்துகிறது. பிரிவிகவுன்சிலர்கள் உறுப்பினரோடு இருத்தலால் மட்டுமின்றி, இறுதியாக அதிகாரத்தைக் கைப்பற்றுவதில் ஓரளவு வாய்ப்புப் பெற்றிருத்தலால் இது பொறுப்புடையதாக இருக்கிறது முக்கியமான பிரச்சினையையொட்டி அரசாங்கம் தோல்வியுறல், அல்லது தேர்தலில் வெற்றி பெறல் ஆகிய இரு வழிகளில் இது நேரலாம். முன்னது பெறவரும் வாய்ப்பு, ஏனெனில் கட்சிப் பிளவை இது சார்ந்திருக்கிறது. ஆனல் பின்னது உண்மையாக நிகழக்கூடியது. பிரதமரும் மற்ற அரசாங்க உறுப்பினரும் சட்ட சபை உறுப்பினர்கள். சபையின் எதிர்தரப்பில் உள்ளவர்கள் இவர்களின் வாதங்களுக்கு எதிர் வாதமிடலாம். ஏனெனில் எதிர்க் கட்சி நல்ல அரசாங்கம் ஒன்றை உருவாக்க முடியுமென் பதை ஐயப்பாட்டிற்குரிய வாக்காளர்களுக்கு இதைத் தெளிவுப் படுத்தவேண்டும். பிரிட்டனை மற்ற நாடுகளோடு ஒப்பிடுகையில் எதிர்க் கட்சியின் பொறுப்புடைமையை நன்கு உணர முடிகிறது, எடுத்துக் காட்டாக, பிரான்சில் நான்காவது குடியரசின் கீழ்

இத்தகைய எதிர்கட்சியை இரு நிபந்தனைகள் தவிர்த்தன. ஒன்று, கம்யூனிஸ்ட், பௌசாடிஸ்டு போன்ற சில கட்சிகள் அரசியலமைப்பு முறைகளின் அதிகாரத்தை பெற முடியாது. எனவே புரட்சி செய்ய விரும்புகின்றன. இரண்டு, கட்சிகள் பலவாகவும் ஒழுங்கின்றியும் இருப்பதால் எந்த ஒரு கட்சி அல்லது குழு, ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு தலைவரின் நிற்கவும் மாற்று அரசாங்கமாகத் தன்னைக் காட்டிக் கொள்ளவும் முடிவதில்லை.

பிரிட்டிஷ் எதிர்க்கட்சி பொறுப்புடையதாக இருக்கிறது. ஏனென்றால், ஆட்சியை ஏற்குமாறு இது அழைக்கப்படலாம் என்று அறிந்து எதிர்பார்த்து இது திறனாய்வு செய்கிறது. இது பொறுப்புடையதாக இருப்பதால் வருங்காலத்தில் வாக்காளர்கள் இதை ஆதரிப்பார்கள் என்று எதிர்பார்ப்பது மட்டுமின்றி அரசாங்கம் இப்பொழுது இதை நம்பிச் செயல்படுகிறது. வெளியுறவுகள், பாதுகாப்புக் கொள்கை காமன்வெல்த் விவகாரங்கள், கட்சிச் சார்பில்லா சட்ட ஆக்கம் போன்ற குறிப்பிட்ட துறைகளில் பிரதமர் தம் கருத்தை வெளியிடும் முன் எதிர்க் கட்சித் தலைவரையும் கலந்து கொள்ளலாம்; குறிப்பாக வருங்கால அரசாங்களின் மீது இம்முடிவுகள் சில கடமைப் பொறுப்புகளை சுமத்தும் என்று தெரிந்தால் பிரதமர் எதிர்கட்சியினரைக் கலந்து கொள்ளலாம், பெரும் தேசிய நெருக்கடி காலங்களில் குறிப்பாக வெளியரசுகளைப் பொறுத்த வரையில் அரசாங்கத்தின் குறிப்பிட்ட கொள்கையை யொட்டி எதிர்க்கட்சி நாட்டின் ஒற்றுமையைக் குறித்துக் காட்டும். அரசாங்கத்தின் கொள்கையை எதிர்க்கட்சி வெளிப்படையாக ஆதரிக்கும்.

3. பாராளுமன்ற அலுவல்களில் இது அரசாங்கத்தோடு ஒத்துழைக்கிறது.

மக்கள் அரசாங்கத்தின் உள்ளார்ந்த மதிப்பினை அரசாங்கமும் எதிர்த்தரப்பும் ஏற்றுக் கொண்டுள்ளதால் ஒத்துழைக்க இருக்க முடிகிறது, நிறைவேற்ற கடமைகளையும் முடித்து வைக்கத் திட்டங்களும் அரசாங்கத்திற்கு இருப்பதை எதிர்த்தரப்பு ஏற்றுக் கொள்ளுகிறது. அரசியலமைப்பில் எதிர்க்கட்சி திட்டவட்டமான ஆக்க முறையான பங்குப்பணி பெற்றிருப்பதை அரசாங்கம் உணர்கிறது. இவைகளை நிறைவேற்ற அவகாசமளிக்க அரசாங்கம் தயாராக இருக்கிறது. அரசியாரின் பேருரையின் மீதும் சப்ளை நாள்கள் மீதும் விவாதங்களை நடத்தப் பொருள்களை தெரிவு செய்வது எதிர்க்கட்சியின் வழக்கமாக இருக்கிறது எதிர்க் கட்சியின் வேண்டுகோளின் பேரில் கண்டனப் பிரேரணையைக் கொண்டு அரசாங்கம் அனுமதிக்கிறது. மேலும், இருதரப்பையும்

கலந்து கொண்டு சபாநாயகரின் இசைவோடு அன்ருட அலுவல் களுக்கு ஏற்பாடு செய்யப்படுகிறது. ஏனெனில் கிடைக்கும் நேரம் மிகவும் குறைவானதே.

சட்டமியற்றுவதிலும் நிதிக் கட்டுப்பாட்டிலும் எதிர்க் கட்சிக்கும் பொறுப்பிருக்கிறது. சட்டம் செயல்படத் தக்க தாகவும் செயல்படுத்தக் கூடியதாகவும் ஏற்கத்தக்கதாகவும் இருக்க வேண்டும். எதிர்க்கட்சியின் முயற்சிகளும் இதேபோல் இருக்கும்படி பார்த்துக் கொள்ளப்படுகின்றன. அவசரமான அல்லது உருப்பெரு மசோதா இதனுடைய திறனாய்வினால் மறு ஆய்வு செய்யப் பெறலாம் அல்லது சிறுபான்மையினரின் நலன் கருதி மாற்றியமைக்கப்படலாம். நிலைக்குழுக்களிலும் தனி மசோதாக் குழுக்களிலும் கடினமான பணிகள் நிறைவேற்றப் படுவதற்கு உறுப்பினர்களுக்கு உதவ இது வழி செய்கிறது. ஒப்படைக்கப்பட்ட சட்ட ஆய்வில் இது பெரும் பங்கு பற்றுகிறது. பொதுமக்கள் சபையின் வழக்கமான பணியாகிய நிதிக் கட்டுப் பாடு எதிர்க்கட்சியின் வேண்டுகோளின் பேரில் பெருமளவு நிறை வேற்றப்படுகிறது. விவாதிக்க வேண்டியவைகளை இது தெரிவு செய்கிறது. மதிப்பீட்டுக் குழு, பொதுக்கணக்குக் குழு உள்பட எல்லா ஆய்வுக் குழுக்களிலும் இதன் உறுப்பினர் பணியாற்று கின்றனர். பொதுக்கணக்குக்குழுவின் தலைவர் எதிர்க்கட்சியி லிருந்து தேர்ந்தெடுக்கப்படுவது இப்பொழுது மரபாகியுள்ளது.

### (4) பேச்சுரிமையை இது வெளிப்படுத்துகிறது

சுயேட்சையான மக்களாட்சியை எதிர்க்கட்சி அறிவிக்கிறது. மக்களாட்சித் தத்துவத்தை இது கொண்டிருக்கிறது. இங்கிலாந்தில் எந்த அரசாங்கமும் பாராளுமன்றக் கட்டுப்பாட்டின் வழியாக பரவலான அதிகாரத்தைப் பெற்றிருக்கிறது. சில வேளைகளில், அரசாங்கம் தன்னிச்சையாக அதிகாரத்தைப் பெற முனைகிறதா இல்லையா வென்பதை எப்பொழுதும் அறிவது இயலாததாகும். இருப்பினும், ஒரு வல்லாட்சி எல்லாத் திறனாய்வுகளையும் ஒழித்துக் கட்ட வேண்டியிருக்கும். இங்கிலாந்தில் இது பத்திரிகைத் தணிக் கையில் கொண்டு போய்விடலாம். எல்லாவற்றிற்கும் மேலாக மேதகு அரசியாரின் எதிர்க்கட்சி ஒழிக்கப்பட்டு விடலாம். ஆகையால், எளிதில் கண்டுணரக் கூடிய உரிமையின் சின்னமாக எதிர்க்கட்சி இருக்கிறதென்பது முக்கியமாகும். இதன் மீதான எந்தத் தடை வரம்பும் ஆங்கிலேயரின் வழக்கமான உரிமை அரசாங்கத்தால் கவரப்பட்டதாக கொள்ளப்படலாம். உரிமையைப் பாதுகாப்பது உடனடியானதாக இருப்பினும் உள்ளார்ந்த கட்டுப்பாட்டினால் இது வெகுவாகப் பயனுடையதாக

இருக்கிறது. வல்லாட்சியை நாம் பார்க்கும்பொழுது அரசியாரின் எதிர்க்கட்சிக்கு ஒப்பான ஒரு நிறுவனத்தின் நிலையை ஆய்வது ஒரு சுயேச்சையான நாட்டின் சோதனையாகும் என்பதை நாம் உணர்கிறோம்.

### பிரிட்டிஷ் முறை எதிர்க் கட்சியின் குறைபாடுகள்

இதன் உயர் பண்புகள் இதன் குறைபாடுகளை மிஞ்சி நிற்கின்றனவெனினும், அலுவல் சார்புடைய பிரிட்டிஷ் எதிர்க் கட்சி முறை நிகரற்ற வெற்றியென நாம் கருதிவிடலாகாது.

முதலில் அடுத்தடுத்துக் குறை கூறுவதால் அரசாங்கத்தை எதிர்க்கட்சி சில வேளைகளில் மந்தமாக்கி விடுகிறது. ஆனால் இதன் விளைவுகளை மிகையாக மதிப்பிடலாகா, விவாதமும் கலந்துரையாடலும் நடைபெறுகையில், ஒரு திட்டத்தின் செயற் பாட்டிற்கான கருவி தயாராகி விடுகிறது. மேலும், மக்கள் விருப்பையொட்டிய அரசாங்கமென்பது இரு வழிச் செயல் பாடாகும். தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட ஆக்க நிறுவனத்தால் சனநாயக முறையில் ஒரு மசோதாவை முற்றிலும் விவாதித்து நிறைவேற்ற மக்கள் உறுதிபெறும் பொழுது 'விளையாட்டு விதிகளால்' இவர்களும் கட்டுப்பட்டிருப்பதாக உணர்கிறார்கள். கொள்கையை சொந்த முறையில் ஏற்க விரும்பாதவர்களும் இதைத் தடை செய்வதில்லை.

இரண்டாவதாக, எதிர்க்கட்சியின் பணிகளை நிறைவேற்றும் வகையில் இதனுடைய கருத்துகள் இருந்த சமயமும் உண்டு. இங்கிலாந்திற்கு நன்மை பயக்கா வகையில் அல்லது எடுத்துக் கொண்ட கொள்கையின் வெற்றி வாய்ப்புகளை கீழறுக்கும் வகையில் எதிர்க்கட்சியின் கருத்துகள் செயல்பட்டதுண்டு. எனவே. 1949-ல் ஆர்ஜென்டையின் இறைச்சியின் விலைபற்றிய பேச்சு வார்த்தை நடக்கையில் தொழில்கட்சி அரசாங்கத்தின் குறைகூறல் பெரானின் (Peron) போக்கைக் கடினமாக்கியது. 1956-ல் அராங்கமும் எதிர்க்கட்சியும் ஐக்கிய முன்னணியாகச் செயல்பட்டதைச் சார்ந்தே சுயெஸ் நடவடிக்கையின் வெற்றி யிருந்தது. மறுபுறம், எதிர்க்கட்சி பொறுப்புடையதாகக் காட்டிக் கொள்வதில் பெரும் சிரத்தை காட்டுகிறது. சூழ்நிலை களுக்கேற்பக் குறை காணுதலும் பெருமளவு பாழ்படுத்துவதாக இருப்பதில்லை. இருந்தபோதிலும், பல விவகாரங்களில் எதிர்க் கட்சி திறனாய்விற்கான காரணங்களை காண முடியாததால், சில முக்கியமான சமயங்களில், அரசாங்கத்தின் கொள்கையோடு முற்றிலும் இது ஒத்துப் போகும்பொழுது இதன் பயனாக உள் நாட்டிலும் வெளிநாட்டிலும் மனக்கிளர்ச்சி உண்டாக்கப்படுகிறது.

இறுதியாக, பிரிட்டிஷ் அரசியலமைப்பில் எதிர்க் கட்சியின் பங்குப் பணிபற்றித் தவ்றாக வெளி நாடுகள் தம் கொள்கைகளை அமைத்துக் கொள்ளுகிற நிலை என்றும் இருந்து வருகிறது. சிறு பான்மையினரின் கருத்துகளை வெளியிடவும் கேபினெட் குறிப் புரைகளை எல்லா வகையிலும் திறனாய்வு செய்யவும் வழி செய்ய வேண்டியது எதிர்க்கட்சியின் கடமையாகும். அரசாங்கத்தை மாற்றுவதற்குரிய தன் சொந்தக் கொள்கைக்குப் பெரும் ஆதரவு கிடைக்காதென்பது தெரிந்திருந்தாலும் எதிர்க்கட்சி எதிர்ப்பு களைக் கிளப்பலாம்: ஆனால் இவைகளை மிகக் கடினமான முறையில் தெரிவிக்க வேண்டும். இவைகளைச் சில நாடுகள் தவறாகப் புரிந்து கொள்ளலாம். ஏனெனில் இந் நாடுகள் அரசியலைப் புரிந்து கொள்ளும் அளவிற்கு முதிற்சி பெற்றிராதிருக் கலாம். அல்லது இவைகளின் அரசாங்கங்கள் மக்களாட்சியை வெறுப்பதால் இது எப்படிச் செயல்படுகிற தென்பதை இவைகள் புரிந்து கொள்ளத் தவறிவிடுகின்றன. எதிர்க்கட்சியால் தெரி விக்கப்பட்ட கருத்துகளையெல்லாம் வாக்காளர்களில் பாதிப்பேர் ஆதரிப்பதாக இவைகள் கற்பனை செய்து கொள்ளுகின்றன. இத்தகைய தவறான மதிப்பீடு கண்மூடித்தனமான நடவடிக்கை களில் இவைகளை ஈடுபடத் தூண்டி துக்கமான முடிவுகளில் ஆழ்த்தி விடலாம். போலந்து தாக்கப்படுவதற்கான காரணத்தை யொட்டி ஆங்கிலேயர்கள் ஒற்றுமையோடு இருப்பதை ஹிட்லர் அறிந்திருப்பாராயின் இவர் போலந்தை 1939-ல் தாக்கி இருப்பாரா என்பது இன்னமும் ஐயப்பாட்டிற்குரியதாகவே இருந்து வருகிறது. 'ஓரத்தில் நின்று ஊடாடும்' கொள்கை இடரானதாக இருந்தாலும் ஒரு தரப்பினர் இன்னொரு தரப்பின ரின் முடிவை குறைத்து மதிப்பிடலாம்.

1937-ல் எதிர்க்கட்சித் தலைவருக்கு ஆண்டுக்கு£2000 ஊதியம் அளிக்கப்பட்டது.

மேலே படித்தற்குரிய நூல்கள்

Quintin Hogg, 'The Purpose of Parliament' (1946)
Ivor Jennings, 'Parliament,' Chapters 6 & 15.,
'Cabinet governments,' Chapter 15.

# 9. சட்டமியற்று முறை

பொதுமக்கள் சபையின் தொடக்க நிலையில் முறையாகச் சட்டமியற்றும் பணியில் இது பங்கு பற்றவில்லை. சட்டமியற்ற இது அரசருக்கு விண்ணப்பித்தது. இவ் விண்ணப்பங்களின் மசோதா உருவில் சட்டமியற்றும் முறை வளர்ச்சியடைந்த தென்பதை நாம் முன் பார்த்தோம். சில சமயங்களில் பாராளு மன்றக் குழுக்களிடமிருந்து விண்ணப்பங்கள் வந்தன. சில சமயங்களில் பாராளுமன்றத்திற்கு வெளியே இருந்த குழுக்களிட மிருந்து அல்லது தனிப்பட்டவர்களிடமிருந்து விண்ணப்பங்கள் வந்தன. முன் குறிப்பிடப்பட்டவை பொது மசோதாக்கள் எனவும் பின் குறிப்பிடப்பட்டவை தனி மசோதாக்களெனவும் பெயர் பெற்றன. பொது மசோதாக்கள் பொதுச் சட்டத்தைப் பற்றியதாகவும் தேச நலன்கள் பற்றியதாகவும் இருந்தன. தனி மசோதாக்கள் தனி நலன்கள் பற்றியதாகவும் தல நோக்குடையன வாகவும் இருந்தன. மசோதாக்களுக்கிடையில் இன்னும் இவை முதன்மையான பிரிவுகளாக இருந்து வருகின்றன. இவ் விரண்டு வகை மசோதாக்களுக்கெனத் தனிப்பட்ட நடைமுறைகள் இருக்கின்றன.

இவ் விண்ணப்பங்களின் அடிப்படையில் அரசரின் விருப்பை யொட்டி சட்டங்கள் உருவாக்கி நிறைவேற்றப் பட்டன. ஆனால் இச் சட்டங்கள் சில சமயங்களில் விண்ணப்பங்களையொட்டி அமையவில்லை. எனவே சபையினர் அடிக்கடி இக் காரணத்திற்காக எதிர்ப்புத் தெரிவித்தனர். 1414-ல் இறுதியாக, 'பொதுமக்கள் சபையின் விண்ணப்பத்தில் கேட்டிருந்ததற்கு மாறாக இனி மேல் எதையும் (சட்டமாக) இயற்றுவதாகா'தென்பதற்கு அரசர் இணங்கினார். இதன் பின், விரைவில் சபையினர் மசோதா உருவில் விண்ணப்பங்களைக் கொடுக்கத் திட்டமிட்டனர். இம் மசோதாக்களை அரசர் அப்படியே ஏற்றுச் சட்டமாக்கி விடலாம்,

இந் நடவடிக்கையால் பாராளுமன்ற நடைமுறை யொன்று தேவையாயிற்று. எனவே, ஒரு மசோதாவிற்கு மூன்று வாசிப்பு கொடுப்பதும், குழுவிற்கு அனுப்புவதும் கருத்து வேறுபாடு எழும் போது விவாதத்திற்கு ஏற்பாடு செய்வதும் ஆகிய முறைகள் இப்பொழுது வளர்ச்சி யடைந்துள்ளன.

மசோதாக்கள் பொது மசோதாக்கள் எனவும் தனி மசோ தாக்கள் எனவும் பிரிக்கப்படலாம். இவைகளை மேலும் வசதிக் காக உட்பிரிவு செய்யலாம். இவையாவன :

1. பொது மசோதாக்கள்

அரசாங்க மசோதாக்கள்

(i) பண மசோதாக்கள்

(ii) மற்ற மசோதாக்கள்

தனி உறுப்பினர் மசோதாக்கள்

2. தனிச் சட்டம்

தனி மசோதாக்கள்
தற்காலிகக் கட்டளை உறுதிப்பாட்டு மசோதாக்கள்,
சிறப்பு நடைமுறைக் கட்டளைகள்

பண மசோதா நீங்கலாக எந்த மசோதாவையும் இரு சபை களில் எதில் வேண்டுமாயினும் கொண்டு வரலாம். எனினும், பெரும்பாலும் எல்லா முக்கியமான மசோதாக்கள் பொதுமக்கள் சபையில் கொண்டு வரப்படுகின்றன. ஆகையால் பொதுமக்கள் சபை வழியாக ஒரு மசோதா முன்னேறுவதை விவரிப்பது வசதி யாக இருக்கும். பெருமக்கள் சபையில் ஒரு மசோதா கொணரப் படும் பொழுது ஒரு சிற்சில வேறுபாடுகளே குறிப்பாக உள்ளன.

அமைச்சரவையினரால் கொண்டு வரப்படும் பொது மசோதாக்கள் அரசாங்க மசோதாக்களெனப்படுகின்றன. எல்லாப் பண மசோதாக்களும் அரசாங்க மசோதாக்களாகவே கொண்டு வரப்படுகின்றன. பணம் திரட்டல், செலவிடல் ஆகிய வைகளைத் தவிர மற்ற பொது மசோதாக்களை தனியுறுப்பினர் எவரும் கொண்டு வரலாம். அதாவது அமைச்சரவை உறுப்பின ரல்லா சபை உறுப்பினர் ஒருவர் இவ் வகைப் பொது மசோதாக் களைக் கொணரலாம். இத்தகைய மசோதாக்கள் தனி உறுப்பினர் மசோதாக்கள் எனப்படும். அரசாங்க மசோதாக்கள், பண

மசோதாக்கள், தனி உறுப்பினர் மசோதாக்கள் ஆகியவை பொது மசோதாக்களாகும். நேர்முக அக்கறை கொண்டுள்ள குழுவினரின் விண்ணப்பங்களை அடிப்படையாகக் கொண்டு உருவாகும் மசோதாக்கள் தனி மசோதாக்களாகும். பண மசோதாவைத் தவிர, தனி அல்லது பொது மசோதாவை பொதுமக்கள் சபையில் அல்லது பெருமக்கள் சபையில் கொண்டு வரலாம். தனி மசோதாக்கள் சிறப்பு நடைமுறை விதிகளையொட்டி நிறைவேறும்.

**அரசாங்கச் சட்ட ஆக்க அடிப்படைகள்**

இயல்பான ஒரு கூட்டத் தொடரில் பொதுச் சட்ட ஆக்கத்திற்கு 110 நாள்கள் கிடைக்கின்றன. 10 நாள்கள் தவிர மற்ற நாள்களை அரசாங்கம் தனதாக்கிக் கொள்ளுகிறது. இருப்பினும் அரசாங்கத்திற்கு நேரம் போதவில்லை. நிதி மசோதாக்கள், திரண்ட நிதியும் பண ஒதுக்கீடும் பற்றிய மசோதாக்கள், முடிவடைந்து கொண்டிருக்கும் மசோதாக்களை நீட்டிக்கும் மசோதாக்கள் ஆகியவை போன்ற ஆண்டுதோறும் நிறைவேற்றப் படவேண்டிய மசோதாக்கள், அரசாங்கப் பணிகள் தொடர்ந்து நடக்க, நிறைவேற்றப்பட வேண்டியதோடு மட்டுமின்றி எதிர் பாரா நிகழ்ச்சிகளும் நெருக்கடி நிலைகளும் சட்ட ஆக்கத்தை வற்புறுத்தலாம். இதனுல் புதிய சட்டங்களுக்கு ஆறு நாட்கள் மட்டுமே கிடைக்கின்றன.

தேர்தல் வாக்குறுதிகளை நிறைவேற்றத் தேவையான சட்டங்களை இயற்ற முதலிடம் தரப்பட வேண்டும். கட்சியின் செயற் திட்டம் பல பொருள்களைப் பற்றியதாக இருப்பதாலும் நல்ல பெரும்பான்மை ஆதரவுடைய அரசாங்கம் ஐந்தாண்டு பதவிக் காலத்தை எதிர் பார்ப்பதாலும் மசோதாக்கள் கொண்டுவரப் படவேண்டிய காலத்தையும் முன்னுரிமையையும் வரையறை செய்ய அரசாங்கத்திற்கு பரந்த வாய்ப்பெல்லை இருக்கிறது. தொழிற் கட்சி அரசாங்கத்தின் கீழ் கேபினெட்டின் குழுவாகிய வருங்கால சட்ட ஆக்கம் பற்றிய குழு பூர்வாங்க வேலைகளைச் செய்தது. மசோதாக்களுக்கு முன்னுரிமை அளிப்பதில் இயன்ற வரை நடுநிலையைப் பேண துறைக்குரிய அமைச்சர் எவரும் இதில் இடம் பெறவில்லை.

எனினும், எந்த அரசாங்கமும் தன் சட்ட ஆக்கத் திட்டத்தை ஆராய பாராளுமன்றத்தின் இரு சபைகளுக்கும் போதுமான வாய்ப்பளிக்க வேண்டும். சர்ச்சைக்குரிய பிரச்சினைகளில் தடைகளைத் தவிர்க்க இயலாது. அரசாங்கத்திற்கு ஒரு சிறிய பெரும்பான்மை மட்டும் இருந்தால் இதன் இடர்கள் பெருகும்.

விவாதங்களை முடிவிற்குக் கொண்டுவரும் முறையை மிகையாகப் பயன் படுத்துவதைக் காட்டிலும் இதனுடைய குறிப்புரை களுக்குள்ள எதிர்ப்பைக் குறைக்க இவற்றை இது தளர்த்திக் கொள்ளும். உடன்பாட்டிற்கான பரப்பை விரிவாக்கிக் கொள்ளு தல் என்றுமே நலமாகும். குறிப்பிட்ட நலன்களோடு அரசாங்கம் கலந்து கொள்வது ஒரு மரபாக இருக்கிறது. சில சமயங்களில் அரசாங்கம் தன் குறிப்புரைகளை விளக்கி ஒரு விரிவான அறிக்கை விடுகிறது. இதைப் பாராளுமன்றம் விவாதிக்கிறது. இயன்ற வரை வெளியிடப்பட்ட கருத்துகளை சட்ட ஆக்கம் பயன்படுத்திக் கொள்ளுகிறது.

கட்சியின் முதன்மையான திட்டங்கள் ஒரு புறமிருக்க, குறிப்பிட்டவைகளில் துறைகள் சட்டமியற்ற விரும்புகின்றன. இப்பொழுதுள்ள சட்டங்களோடு கூடுதலான சட்டங்களும் திருத்தங்களும் தேவையென காணப்படுகின்றன. துறைப் பணி பற்ற அறிவுரை அளிக்கும் சிவில் பணியாளர்களும் நிபுணர்களும் அடங்கிய ஆலோசனைக் குழுவிடமிருந்து சட்ட ஆக்க விருப்பம் தோன்றலாம். அல்லது அரச ஆய்வு குழுவின் முடிவுகளிலிருந்து திட்டங்கள் உருவாகலாம். சட்டமியற்றுமாறு சில நலன்கள் துறைகளை வேண்டிக் கொள்ளலாம். இவைகளின் திட்டங்கள் ஒரு தனி உறுப்பினரின் மசோதாவில், பத்திரிகைப் பிரசாரத்தில், பாராளுமன்ற அக்கறைக் குழுக்களில், அரச ஆய்வுக் குழு முன் அளிக்கப்படும் சான்றுகளில் இடம் பெறுத வரையில் இவைகளுக்கு ஆதரவு கிட்டுவதில்லை. இவைகளுக்கு ஆதரவு தேட ஆண்டுகள் பலவாகலாம். கிடைக்கும் நேரத்திற்கேற்ப துறை சார்ந்த பல மசோதாக்கள் ஒவ்வொரு கூட்டத் தொடரிலும் கொண்டுவரப் படலாம். ஆனால் இவைகளில் எதை எடுத்துக் கொள்வதென்பது, அரசாங்கத்தில் அமைச்சரின் செல்வாக்கு, கேபினெட்டின் கொள்கைக் குழுவின் கருத்துகள், வருங்காலச் சட்ட ஆக்கக் குழுவின் கருத்து, இம் மசோதா எந்த அளவிற்குச் சர்ச்சையைக் கிளப்பும் என்பவைகளையொட்டியே இருக்கிறது.

ஒரு மசோதாவைக் கொண்டு வரும் முன் இக் காலத்தில் அரசாங்கம் குறிப்பிட்ட நலன்களை கலந்தாராய்கிறது. பெரும் பான்மையினரின் அரசாங்கம் சிறுபான்மையினரின் விருப்புகளை மனதில் கொள்ள வேண்டுமெனும் அடிப்படையான கருத்தை செயல்படுத்துவதோடன்றி, எதிர்ப்பைக் குறிக்கும் சிறு மாறுதல் களைச் செய்து மசோதாவின் நிறைவேற்றத்தை இம் முறை விரைவு படுத்துகிறது. ஒரு மசோதாவின் நிறைவேற்றத்தின் போது ஒரு 'நலன்' தன் குறைகளை எடுத்துக் கூறலாம். அமைச்சரும் உறுப்

பினரும் செல்வாக்குக் குழுக்களின் நெருக்கத்திற்குள்ளாக்கலாம். அமைச்சர் விட்டுக் கொடுக்கவில்லே யென்ருல் பாராளுமன்றத்தில் உள்ள 'நலனி'ன் பிரதிநிதியொருவர் ஒரு திருத்தத்தைத் தோல்வி யுறச் செய்யலாம் அல்லது குழு நிலேயில் சில சலுகைகளே நாடலாம்.

### வரைதல்

சட்டப்படி ஒரு மசோதா செவ்வையாக இருக்க வேண்டு மாதலின் வழக்கறிஞர்களால் இது கவனமாக வரையப்பட வேண்டும். கருவூலத்தின் ஒரு கிளேயாகிய பாராளுமன்ற ஆலோசகர் அலுவலகத்தால் அரசாங்க மசோதாக்கள் வரையப் படுகின்றன. ஒரு மசோதா கொண்டிருக்க வேண்டிய குறிப் புரைகளேத் (கருத்துகளே) துறை இந்த அலுவலகத்திற்குத் தான் விளக்குகிறது.

வரைதல் என்பது ஒரு நீடித்த செயற் திறமிக்க தொடர் பணியாகும். துறைக்கும் மசோதாக்களே உருவாக்குவோருக்கு மிடையில் கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்யப்படுகின்றன. மசோதா சரிநுட்ப நிலேயை எய்துமுன் இருபதுக் குறையாத வரைவுகள் தயாரிக்கப் படுகின்றன. எனவே, ஒரு மசோதாவை முழுவதாக வரைவதற்கு நான்கு மாதங்களாகின்றன. இதன் பின்னும், பெருமக்கள் சபையிலும் குழுவிலும் சொல்லாட்சியில் சில திருத்தங்கள் தேவைப்படலாம். பாராளுமன்றத்தின் பார்வையில் ஒரு மசோதா இருக்கையில் பாராளுமன்ற ஆலோசகர் இதற்கு பொறுப்புடையவராவார். மசோதாப் பொறுப்புடைய அமைச்சராகிய சபை உறுப்பினரொருவர் திருத்தங்களேக் கொண்டு வருகிருர்.

வரைவு முடிந்த பின், கேபினெட்டின் சட்ட ஆக்கக் குழுவிற்கு மசோதா செல்கிறது. செயல்படக் கூடியதாகையால் பொதுவாக ஏற்கக் கூடியதென உறுதியளிக்க இம் மசோதாவின் அமைப்பையும் விபரங்களேயும் குழு ஆய்கிறது.

எழுத்துருவிலான வரைவின் உருவை ஒரு மசோதா பெறு கிறது. ஒரு நீண்ட பெயரையும் இது கொண்டுள்ளது. மசோதாவின் நோக்கங்களேயும் பொருள் அடக்கத்தையும் இப் பெயர் குறிப்பிடும். பொதுவாக இதற்குரிய சிறிய பெயரையும் இது பெற்றிருக்கும். ஒரு முகப்பினுல் முற்படும் செயல் முறையையும் இது கொண்டிருக்கும். 'மேதகு அரசியாரால் இது செயல்படுத்தப்படு'மென இம் முகப்பு தொடங்கும். முக்கியமான

கருத்துகள் முதலில் வருமாறு முக்கியமான பிரிகவுளைக் கொண்டிருக்கும் வாசகம் வரிசைப்படுத்தப் பட்டுள்ளது. பாதிக்கப்பட்ட சட்டங்களின் பட்டியலைக் கொண்டிருக்கும் அட்டவணைகளும் இதனுடன் இணைக்கப்பட்டிருக்கும். இதன் பிரதான பிரிவுகளின் விளைபயனுகிய நடைமுறை நிறுவனம் ஆகியவை பற்றிய விபரங்களையும் இது கொண்டிருக்கும்.

### நடைமுறை

முதலில் நடைமுறை மிக எளிதாக இருந்தது. சபையின் செயலால் அல்லது வழக்காற்றின் வளர்ச்சியால் ஆண்டு தோறும் புதிய சிக்கல்கள் சேர்க்கப்பட்டன. சட்ட ஆக்க நடைமுறைகள் பழமை ஆகும் பொழுது இன்னும் சிக்கலாக முற்படுகின்றன. இப்பொழுது இருக்கும் சட்டமியற்றும் நடைமுறை சபையின் வளர்ச்சி மேம்பாடு ஆகியவற்றின் விளைவாகும். மற்ற நாடுகளின் சட்ட ஆக்க நடைமுறைகள் இந் நாட்டின் நடைமுறைகளை மாதிரியாகக் கொண்டிருக்கின்றன.

### மசோதா சட்டமாதல்

#### மசோதா கொண்டு வரப்படுவதும், முதல் வாசிப்பும்

ஒரு மசோதாவை அரசாங்கம் கொண்டு வந்தாலும். தனி உறுப்பினர் கொண்டு வந்தாலும் முன்னரே அறிவிக்க வேண்டும். பண மசோதாக்களுக்கும் மற்ற மசோதாக்களுக்கும் நடைமுறையில் குறிப்பிட்ட சில வேறுபாடுகள் இருக்கின்றன. பண மசோதாவின் நோக்கம் வரி விதிப்பது அல்லது செலவிட அதிகாரமளிப்பதாகும். பண மசோதாக்கள் பொதுமக்கள் சபையில் தான் முதலில் கொண்டு வரப்பட வேண்டும். 1938ஆம் ஆண்டு வரை, பண மசோதா கொண்டுவரப்படுமுன் சபையின் முழுக் குழு ஒரு தீர்மானத்தால் இதற்கு ஒப்புதல் அளிக்க வேண்டும் இருப்பினும் இன்று நிலைக்கட்டளை 84-ன் கீழ் அரசாங்கம் தன்னுடைய பண மசோதாக்களைக் கொண்டு வருகிறது.

சபையின் கட்டளையால் கொண்டு வரப்படும் மசோதாக்கள் இன்று மிகக் குறைவு. 'பத்து நிமிட விதியின்' கீழ் தனி உறுப்பினர்கள் கொணரும் மசோதாக்கள் இதற்கு விதி விலக்கு. பதிலாக, அரசாங்க மசோதாக்களாயினும் தனி உறுப்பினர் மசோதாக்களாயினும் இன்று பல மசோதாக்கள் நிலைக்கட்டளை 37 (1)-ன் கீழ் பிரேரணை இன்றி கொண்டு வரப்படுகின்றன. வழக்கமாக உறுப்பினராக இருக்கும் ஓர் அமைச்சர் தாம் ஒரு மசோதாவை கொண்டுவர விரும்புவதாக அறிவிக்கிறார். குறிப்பிட்ட நாளில்

'அலுவல் அட்டவணையில்' (Order Paper)இது இடம் பெறுகிறது. சபாநாயகர் உறுப்பினர் பெயரைக் கூறுகிறார். சபையின் எழுத்தருக்கு ஒரு 'வெற்று' மசோதா கொடுக்கப்படுகிறது. இவர் மசோதாவின் குறுகிய பெயரைப் படிக்கிறார். இது முதல் வாசிப்பாக அமைகிறது. இதன் இரண்டாவது வாசிப்பிற்கென ஒரு நாள் குறிக்கப்படுகிறது. மசோதாவை வாசிக்கும் வழக்கம் அச்சடிப்பு கண்டு பிடிப்பதற்கு முன் ஏற்பட்டிருக்கலாம்.

முதல் வாசிப்பு முற்றிலும் ஒரு முறையாயினும் சபையையும் பாதிக்கப்பட்ட பல்வேறு நலன்களையும் இது எச்சரிக்கிறது. மசோதாவை ஆய்வதற்காக, பொது மசோதா அலுவலகம் இதை அச்சிட ஏற்பாடு செய்கிறது. ஒரு மாற்றக்தைப் புகுத்துவது இதன் நோக்கமா என்பதையும், தனி மனிதன் உரிமைகளை இது பாதிக்கிறதா என்பதையும் இதன் நீண்ட பெயரில் பொருள்கள் அடங்குகின்றனவா என்பதையும் இக் கூட்டத் தொடரில் சபையால் முன்னரே முடிவு செய்யப்பட்ட மசோதாவைப் போல் இது இருக்கிறதா என்பதையும் அறிந்து கொள்ளும் பொருட்டு மசோதா ஆராயப்படுகிறது.

இரண்டாவது வாசிப்பு குறிப்பிட்ட நாளில், பொறுப்பில் இருக்கும் ஓர் உறுப்பினர் மசோதாவின் பின்னணியையும் நோக்கங்களையும், இதனுள்ளாகும் கொள்கையின் முதன்மையான பிரச்சினைகளையும் விளக்கி விட்டு, 'மசோதா இரண்டாவது தடவையாக வாசிக்கப்படட்டு'மென முன் மொழிந்து முடிக்கிறார். மசோதாவின் பொதுக் கருத்துகளையொட்டிப் பின் ஒரு விவாதம் தொடர்கிறது. இரண்டு நிமிடங்களிலிருந்து இது இரண்டு அல்லது மூன்று நாள்கள் கூட நடக்கலாம். விபரங்கள் பற்றிய விவாதங்கள் இந்நிலையில் அனுமதிக்கப்படுவதில்லை. விவாத முடிவில் 'இம் மசோதா இரண்டாவது தடவையாக வாசிக்கப்படட்டு'மென பிரேரேபிக்கப்படுகிறது. மசோதாவை ஒத்திவைப்பதால் அல்லது திருத்தம் கொண்டு வருவதால் தோல்வியுறச் செய்தல் வழக்கமான வழியாகும். முதல் நிலையில், ஆறு மாதங்களுக்குப் பின் இந் நாளில் இம் மசோதா இரண்டாவது தடவை வாசிக்கப்படட்டும்' என்று எதிர்க் கட்சி ஒரு திருத்ததை கொண்டு வருகிறது. அல்லது 'மூன்று மாதங்களுக்குப்பின் இந் நாளில்' என்று பிரேரணை செய்யலாம். கூட்டத் தொடரில் சபை இல்லாத காலத்திற்கு இதைத் தள்ளி வைக்கும். இது காலவரையில்லாத் தள்ளி வைப்பிற்குச் சமமாகும். இரண்டாவது நிலையில், 'இச் சபை இம் மசோதாவிற்கு இரண்டாவது வாசிப்பளிக்க மறுக்கிற'தென ஒரு திருத்தத்தைக் கொணரலாம். இத் திருத்தம் தோல்வியடைந்தால்

மசோதா இரண்டாவது (மூன்ருவது) தடவையாக வாசிக்கப்பட்டு விட்டதென உடனடியாக சபாநாயகர் அறிவிக்கிருர். மசோதாவிற்கு எதிராக ஒரு தீர்மானத்தை எதிர்க் கட்சி கொணரலாம் இந் நிலையில் மசோதாவையொட்டி நீண்ட விவாதங்கள் நடைபெறுகின்றன. இவ் விவாதங்களையொட்டி வாக்கெடுப்புகள் நடைபெறுகின்றன. மசோதாவின் கருத்தை சபை ஏற்கிறதா அல்லது ஏற்க மறுக்கிறதாவென்பதை இவைகள் முடிவு செய்கின்றன. அரசாங்க மசோதாவாக இருந்தால், இந் நிலையில் தோல்வி அமைச்சவையில் சபைக்குள்ள நம்பிக்கை இன்மை வெளிப்படும். இதன் விளைவாக அரசாங்கம் பதவி இழக்க நேரிடும். இருப்பினும், அரசாங்க மசோதாக்களுக்கு இரண்டாவது வாசிப்பு மறுக்கப்படுவது மிக மிகக் குறைவேயாம். இரண்டாவது வாசிப்பிற்குப் பின் வாசகத்திற்கான திருத்தங்கள் குழுவின் ஆய்விற்கென ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

நடைமுறை பற்றிய ஆய்வுக் குழுவின் பரிந்துரையின் விளைவாக, சர்ச்சைக்குட்படா மசோதாக்களை, முப்பதிலிருந்து எண்பது உறுப்பினரைக் கொண்ட இரண்டாவது வாசிப்புக் குழுவிற்கு இப்பொழுது அனுப்ப இயலும். இரண்டாவது தடவையாக இது வாசிக்கப்பட்டதா இல்லையாவென்பதை இக் குழு முடிவு செய்கிறது. இந் நிலையிலும் பத்துநாள் முன் அறிவிப்போடு சபையின் அலுவல் அட்டவணைக்கு வரும் பொழுது இருபது உறுப்பினர் எழுந்து நின்று தம் எதிர்ப்பைத் தெரிவித்தால் இரண்டாவது வாசிப்பை முழுச் சபை எடுத்துக் கொள்ளுகிறது.

நிலைக் கட்டளை 84-இன் கீழ் கொண்டுவரப்படும் பண மசோதாக்களைப் பொறுத்த வரையில் இவைகளை குழுவிற்குச் அனுப்புமுன் ஒரு சிறப்பு நடைமுறையை மேற்கொள்ள வேண்டும். செலவினம் ஒரே பணக் கொடுப்பாக இருந்தாலும் அல்லது திரண்ட நிதியில் நிரந்தரமாகச் சாட்டப்பட்டாலும் அல்லது வருங்கால மதிப்பீட்டில் சேர வேண்டியதாயினும் அது அரசரால் சிபாரிசு செய்யப்பட்டதாக இருக்க வேண்டும். அதாவது ஓர் அமைச்சரால் பரிந்துரைக்கப்பட வேண்டும்.

குழு நிலை: மசோதாக்கள் இப்பொழுது ஒரு குழுவிற்கு, வழக்கமாக நிலைக் குழுவிற்கு, அனுப்பப்படுகிறது. மசோதாவைப் பிரிவு. பிரிவாக குழு ஆராய்கிறது. தேவையானல் சொல், சொல்லாக ஆய்கிறது. திருத்தங்கள் கொண்டு வரலாம். அமைச்சர் அல்லது மசோதாப் பொறுப்புடைய ஓர் உறுப்பினர் மசோதாவை மேம்படுத்தவும் ஏற்றுக் கொள்ளத் தக்கதாகச் செய்யவும் திருத்தங்களைக் கொண்டு வரலாம்.

இயல்பாக, பண மசோதாக்களைத் தவிர, எல்லா மசோதாக் களும் நிலைக் குழுக்களுக்கு அனுப்பப்படுகின்றன. இயல்பு கடந்த நிலைகளில் சபை மசோதாவை ஆய்வுக் குழுவிற்கு அனுப்பலாம். மசோதாவில் சேர்க்கப்பட்டிருக்கும் சில புதிய கருத்துகளை ஆராய ஆய்வுக் குழுக்களுக்குப் பொது மசோதாக்கள் அனுப்பப்படுவது வழக்கமாகும். மசோதா, பண மசோதாவாக இருந்தால், இரண் டாவது வாசிப்பிற்குப் பின் உடனே முழுச் சபைக் குழுவிற்கு அனுப்பப்படுகிறது. மேலும், எச் சமயத்திலும் எக் காரணத்திற் காகவும் பண மசோதா அல்லாத ஒரு மசோதாவை முழுச் சபைக் குழுவிற்கு அனுப்பப்படலாம். ஆனால் இது அரிதாகும்.

இர்ண்டாவது வாசிப்பின் போது மசோதாவின் கருத்துகளை சபை ஏற்றுக் கொண்டுள்ளதால் குழு மசோதாவைத் திருத்தலா காது. பொருத்தமில்லாத் திருத்தங்களை இது ஏற்கவும் முடியாது. நிலைக் குழுவில் அரசாங்கத்தின் தோல்வியை நம்பிக்கை இழப்பாகக் கருதுவதில்லையாயினும் இத்தகைய தோல்விகளும் அரிது. அரசாங் கத்தின் மாண்பை இவைகள் தாழ்த்தி விடலாம்.

மசோதாக்கள் முன்னே, பின்னே குழுக்களிலிருந்து சபையை அடைகின்றன. திருத்தப்பட்ட, அச்சிடப்பட்ட நிலையில் இவைகள் சபை முன் வைக்கப்படும் பொழுது, இதை அறிக்கை நிலையை அடைவதாகக் கொள்ளலாம். முழுச் சபைக் குழுவிற்கு ஒரு மசோதா அனுப்பப்பட்டுத் திருத்தங்கள் எதுவும் செய்யப்பட வில்லையென்றால் மசோதாவின் அறிக்கை நிலையில் விவாதம் நடைபெறுவதில்லை. சில வேளைகளில், உடனடியாக மசோதாவை சபை மூன்றாவது வாசிப்பிற்கு எடுத்துக் கொள்ளுகிறது. குழுக்கள் மற்றெல்லா மசோதாக்களையும் சபைக்கு அறிக்கை கொடுக் கின்றன. சபைக்குச் சபாநாயகர் தலைமை வகிக்கிறார். முறையான விதிகளை யொட்டி விவாதங்கள் நடக்கின்றன. ஆகவே, ஓர் உறுப்பினர் ஒரே பொருளை பற்றி ஒரு தடவைதான் பேசலாம். மசோதாப் பொறுப்பை ஏற்றுக் கொண்டுள்ளவர்களும் திருத்தம் கொண்டு வருகிறவர்களும் இவ் விதியிலிருந்து விலக்குப் பெறுகின் றனர். குழுவின் பரிந்துரைகள், ஏற்கப்படுகின்றன அல்லது தள்ளப்படுகின்றன. இறுதி நிலையில் குழுவின் கருத்தை மட்டு மின்றி சபையின் பெரும்பான்மைக் கருத்தை வெளிப்படுத்த மசோதா உறுதியளிக்கிறது. ஆனால் அறிக்கை நிலையில் சபை மேலும் திருத்தங்களைச் செய்யலாம். குழு கருத்தில் கொள்ளாத புதிய கருத்துகளை ஆராயலாம்; புதிய பிரிவுகளைச் சேர்க்கலாம். அமைச்சரின் ஆலோசனையின் பேரில் குழுவில் தெரிவிக்கப்பட்ட குறைகளை நீக்கும் பொருட்டு இவைகள் செய்யப்படுகின்றன.

இருப்பினும் நடைமுறையில் அறிக்கை நிலை, இரண்டாவது குழு நிலையாக உருக் கொண்டு விடுகிறது. குழு அறிக்கையிலிருந்து பல மாறுபாடுகள் இருந்தால் மசோதாக்கள் மறுபடியும் குழுக்களுக்கு அனுப்பப்படலாம். மேலும், மசோதாவிற்குச் செலவிடப்படும் நேரத்தை, திருத்தங்களை தெரிவு செய்வதால் குறைக்கலாம்.

**மூன்றுவது வாசிப்பு :** அறிக்கை நிலைக்குப்பின் மசோதா உடனே மூன்றுவது வாசிப்பைப் பெறுகிறது. இது இறுதியான விவாதமாகும். சொல் திருத்தங்களோடு மசோதாவின் பொருளுக்கு இது வரையறுக்கப்படுவதால் நீண்டநேரம் எடுப்பதில்லை.

**பெருமக்கள் சபை :** பொதுமக்கள் சபையில் ஒரு மசோதா எல்லா நிலைகளையும் கடந்து விடுவதால் சபையின் எழுத்தாரால் பெருமக்கள் சபைக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. இங்குள்ள சபையின் எழுத்தர்களில் ஒருவர் இதை ஏற்றுக் கொள்ளுகிறுர்.

பெருமக்கள் சபையில் மசோதா அதே நிலைகள் வழியாகச் செல்கிறது. ஆனுல் மிக்க விரைவாகப் பல நிலைகளையும் கடக்கிறது. குழு நிலையை முழுச் சபைக் குழு ஏற்றுக் கொள்ளுகிறது. பண மசோதாக்களைத் தவிர பெருமக்கள் சபை ஒரு மசோதாவை சட்டப்படி திருத்தலாம் அல்லது தள்ளிவிடலாம். நடைமுறையில் இந் நிலை மிக நுட்பமானதாகும்.

திருத்தப்பட்ட மசோதாவைப் பெருமக்கள் சபையின் எழுத்தர் பொதுமக்கள் சபைக்கு எடுத்துச் செல்லுகிறுர். பொதுமக்கள் சபை ஒவ்வொரு திருத்தத்தையும் ஏற்றும், தள்ளியும் அல்லது திருத்தியும் விவாதிக்கிறது. பின்னர் மசோதா பெருமக்கள் சபையின் விவாதத்திற்கு அனுப்பப்படுகிறது. சபைகளுக்கிடையில் இங்கும் அங்குமாக இது மூன்று அல்லது நான்கு தடவைகள் போகலாம். உடன்பாடு கிட்டவில்லையென்றுல், உடன்பாடு காணும் நோக்கத்தில் ஒரு மாநாடு கூட்டப்படலாம். இல்லையெனில், மசோதா கைவிடப்பட வேண்டும் அல்லது பாராளு மன்றச் சட்டத்தின் நடைமுறை மாற்றப்பட வேண்டும்.

**அரசர் அல்லது அரசியாரின் இசைவு :** அவசரமாக இருந்தால் மசோதா அரசியாரின் இசைவுபெற உடனே அனுப்பிக் கொடுக்கப் படுகிறது. ஆனுல் மசோதாக்கள் ஒரு நீண்ட தள்ளி வைப்பிற்கு முன் அல்லது ஒரு கூட்டத் தொடரின் முடிவிற்குப்பின் அனுப்பப் படுவது வழக்கம். அரச இசைவு இன்று ஒரு சடங்காகி விட்டது.

பிரிவிசீல் பிரபுக்களால் இது வழங்கப்படுகிறது. பொதுமக்கள் சபையின் அலுவல்களைத் தடுத்து நிறுத்தாமல் இருப்பதற்காக, 1967ஆம் ஆண்டு அரச இசைவுச் சட்டம், பொதுமக்கள் சபையில் சபாநாயகரும் பெருமக்கள் சபையில் சான்சலர் பிரபுவும் சட்ட ஆக்கத்திற்கான அரசியாரின் ஒப்புதலை அறிவிக்க அனுமதிக்கப் படுகிறார்கள். ஆனால் பழைய சடங்கு இன்னும் பயன்படுத்தப் படலாம். இது ஆண்டு நிகழ்ச்சியாக வரலாம். இச் சட்டத்தின் கீழ் சபாநாயகரும் பொதுமக்கள் சபையினரும் பெருமக்கள் சபை முன் வருமாறு அழைக்கப்படுகிறார்கள். மூன்று லார்டு கமிஷனர் களும் அரியணைக்கு முன் அமர்ந்திருக்கின்றனர். ஒவ்வொரு சட்டமும் வாசிக்கப்படுகையில் அரச இசைவை (ஒப்புதலை) சபை களின் எழுத்தர்கள் குறித்துக் கொள்ளுகின்றனர்.

ஒரு மசோதா இந் நிலைகளைக் கடந்து செல்ல நீண்ட நேரமா கிறது. ஆனால் பண மசோதாக்களைப் பற்றியவைகளைத் தவிர, இரண்டுக்கு மேல்பட்ட நிலைகளை ஒரு மசோதா ஒரே நாளில் கடக்கலாம். நெருக்கடிக் காலங்களில் ஒரு சில மணிகளில் எல்லா நிலைகளையும் கடக்கலாம்.

### தனி உறுப்பினரின் மசோதா

தனி உறுப்பினர் மசோதா ஒரு பொது மசோதா. சபையில் இதைத் தனி உறுப்பினர் ஒருவர் கொணர்கிறார். தனி உறுப்பினர் எவரும் விரும்பினால் மசோதாவைக் கொணரலாமெனினும் நடை முறையில், வாக்கெடுப்பு நடத்த வேண்டியிருந்தாலும் அல்லது அரசாங்கத்தின் கொள்கைக்கு மாறுபட்டிருந்தாலும் கொறடாவின் எதிர்ப்பை இவர் எதிர் நோக்க வேண்டியிருக்கும். பணச் செலவாகும் மசோதாவிற்கு அமைச்சர் பரிந்துரை செய்யாமல் தனி உறுப்பினர் மசோதாவை அரசாங்கம் தடுத்து விடலாம்.

ஆகவே, தனி உறுப்பினர் கொணரும் மசோதாக்கள் பெரும் சிறப்பிற்குரியனவாக இருப்பதில்லை. ஓர் உறுப்பினர் தாம் மிகவும் விரும்பும் ஒரு பொருளை யொட்டிய மசோதாவை வைத் திருக்கலாம். ஆனால் தக்க சட்டத்தால் தம் குழு நலனை மேம் படுத்த இவரால் இயலாது போகலாம். உறுப்பினரிடம் மசோதா இல்லையென்றால் இவருக்கு ஒரு மசோதா அளிக்கப்படும். அல்லது இவர் ஒரு நல்ல கட்சிக்காராக இருக்கலாம். இந் நிலைகளில், அரசாங்கம் சட்டமாக்க விரும்புகிற குறைந்த ஆட்சி முக்கியத் துவமுடைய மசோதாவொன்றை கொறடாக்கள் வரைந்தளிக்கத் தயாராக இருக்கின்றனர்.

ஆனல் மசோதாவை விவாதிக்கப் போதிய நேரத்தைப் பெறுவதில் தனி உறுப்பினர் இடருக்குள்ளாகிருர். இரு வழிகளில் மசோதாக்கள் கொணரப்படுகின்றன. நிலைக்கட்டளை (13) இன் 'பத்து நிமிட விதி'யின் கீழ், ஒரு செவ்வாய் அல்லது புதன் கிழமையில் ஒரு மசோதா கொண்டுவர அனுமதிகோரி ஒருவர் எடுத்து மொழியலாம். எடுத்து மொழிபவர் மசோதாவை ஆதரித்துப் பத்து நிமிடம் பேசலாம். எதிர்த்து இன்னெரு உறுப்பினர் இதே நேரம் பேசலாம். பின் சபாநாயகர் இதை சபையின் முடிவிற்கு விடுகிருர். பிரேரணையை சபை ஆதரிக்க முடிவு செய்கிறதென்ருல் முதல் வாசிப்பு முடிந்ததாகக் கருதப் படுகிறது. உறுப்பினர் சபாநாயகரை நோக்கிச் சென்று மும்முறை சிரம் தாழ்த்தி வெற்று மசோதாவை சபையின் எழுத்தருக்கு அளித்து இதனுடைய இரண்டாவது வாசிப்பிற்கான நாளை அறிவிக்கிருர். இம் மசோதாவைக் கொணர்வதில் உறுப்பினருக்கு ஓரிரு நோக்கங்கள் இருக்கலாம். இப்போதைக்கு மசோதா முன்னேராதென்பதை உணர்ந்து விளம்பரத்தை [illegible]டும் இவர் இப்பொழுது விரும்பலாம். அல்லது பொதுவாக ஏற்கத் தக்கதாக மசோதாவை வரைந்து இரண்டாவது வாசிப்பில் எதிர்ப்பில்லாமல் நிறைவேற்ற இவர் நினைக்கலாம். அப்படி யாயின், 'எதிர்ப்பில்லா அலுவ'லாக இதைப் பிற்பகல் 10 மணிக்கு மேல் எடுத்துக் கொள்ளலாம். வழக்கமாக இது சாத்தியமில்லை. ஏனெனில் பெரும்பாலான மசோதாக்கள் ஓர் உறுப்பினராலாவது எதிர்க்கப் படுகிறது.

நிலைக்கட்டளை 37 (i)-இன் கீழ், அறிவிப்பு செய்து மசோதாவைக் கொண்டுவருவது இரண்டாவது முறையாகும். மசோதா நிறைவேறுதற்கு நல்ல வாய்ப்பு இருக்கிற பொழுது இந் நடைமுறை பயன்படுத்தப் படுகிறது.

மசோதாவிற்கு எதிர்ப்புகள் இருந்தால் ஒவ்வொரு கூட்டத் தொடரின் போதும் சீட்டுக் குழுக்களில் வெற்றி பெறும் மசோதாவின் விவாதத்திற்கு நேரம் பெறுவதற்கு இதனல் தான் இயலும். கூட்டத் தொடரின் போது பத்து வெள்ளிக் கிழமைகள் மட்டுமே தனி உறுப்பினர் மசோதாக்களுக்கு ஒதுக்கப் படுவதால், முதல் இருபது இடங்கள் தான் முக்கியமானவை. இவைகளில் மொத்த உறுப்பினர்களில் பாதிக்கு மேற்பட்டவர்கள் பங்கு பற்றுகின்றனர். இவ் வுறுப்பினர்களில் ஏறத்தாழ இருபது பேர் தம் சொந்தத் திட்டங்களை யொட்டி மசோதாக்களை வைத்திருப்பார்கள். தம் நண்பர்களுக்கு ஒரு வாய்ப்பளிக்க அல்லது கட்சிக் கடமைக்காக இதில் மற்றவர்கள் பங்கு பற்றுகின்ருர்கள்.

கிடைக்கும் ஒவ்வொரு வெள்ளிக் கிழமைக்கும் மூன்று மசோதாக்கள் ஒதுக்கப்படுகின்றன. சீட்டுக் குழுக்களில் முதல் இடம் பெற்றவர்கள் முன்னுரிமை பெறுகின்றனர். மற்றவர்கள் இரண்டாவது அல்லது மூன்ருவது இடத்தைப் பெறுகின்றனர். முன்னர் கொணரப்பட்ட மசோதாக்கள் சீக்கிரம் கவனிக்கப் படும் என நம்பபடுகிறது.

வெற்றி பெற்ற உறுப்பினர் தம் மசோதாவை நேரில் கொடுக்கிருர். இதன் இரண்டாவது வாசிப்பிற்கு ஒரு வெள்ளிக் கிழமையைக் குறிப்பிடுகிருர். ஆனுல் இவர் இன்னும் இடருக் குள்ளாகலாம். பாராளுமன்ற ஆலோசகரின் அலுவலகம் இவருக்கு இறுதியில் உதவினுலும் தம் மசோதாவை இவர் தாம் வரைந்து கொள்ளவேண்டும். பாராளுமன்ற நடைமுறையோடு இவர் எதிர்த்து சமாளிக்க வேண்டும். உறுப்பினர்கள் தம் தொகுதிக்கும் வீடுகளுக்கும் செல்ல விரும்பும் பொழுது ஒரு வெள்ளிக்கிழமை இவர் சபையின் குறைநிறைவெண்ணைப் பெற்றுப் பின் பெரும்பான்மையும் பெறவேண்டும். மேலும் மசோதா அரசாங்கத்தின் கொள்கையை பாதித்தால் கொறடாக்கள் இதற் கெதிராகச் செயல் படுவார்கள். இறுதியாக அன்றைய அலுவல் அட்டவணையில் இது முதல் இடம் பெருதவரையில், பின்வரும் மசோதாவிற்கு நேரம் குறைவாகக் கிடைக்கும் படி செய்ய எதிர்க் கின்றவர்கள் முந்திய மசோதாவை விரிவாக விவாதிப்பார்கள்.

### தனி மசோதா

பொதுமக்கள் பற்றிய பொது மசோதாக்களை நிறைவேற்று வதோடு, ஒருவருக்கு, அல்லது ஒரு குழுவினருக்கு, கம்பெனி க்ளுக்கு, சிறப்பாகத் தல நிறுவனங்களுக்கு, பொதுமக்கள் பயன் பாட்டு கூட்டு நிறுவனங்கள், நாட்டுடமையாக்கப்பட்ட தொழில்கள் ஆகியவைகளுக்குப் பாராளுமன்றம் அதிகாரங்களை அல்லது நன்மைகளை அளிக்கலாம். மாவட்ட நகராக உயர்த்தப் படுவதற்கு ஒரு நகர் ஒரு மசோதாவைக் கொண்டு வரலாம். தனியாரிடமிருந்து கட்டாயமாக நிலத்தைப் பெறுவதற்கு அல்லது துணை விதிகளை இயற்றுவதற்குப் பொதுமக்கள் பயன் பாட்டு கூட்டு நிறுவனம் அதிகாரம் கேட்கலாம். இது தனிச்சட்ட ஆக்கம் எனப்படுகிறது. போட்டியிடுகின்ற நலன்களுக்கிடையே பாராளுமன்றத்தின் நடைமுறையில் சம நிலையை ஏற்படுத்த இது முயல்கிறது. விரும்பத் தக்கதாயினும், ஒரு பிரினருக்குச் சிறப்பு நிலை அளிப்பதும் மற்றவர்களின் உரிமைகளில் தலையிடுவ்தும் ஆகியவை டரந்த செயல் விளைவுடையனவாகும். இதன் விளைவாக, தேசீய நலன்களை அல்லது தனி நலன்களை தனிச்சட்ட

ஆக்கம் நேர்மையற்று தீங்கு விளைக்காமல் பார்த்துக் கொள்வதற்குப் பாராளுமன்றத்தின் நிலைக் கட்டளைகள் வகை செய்கின்றன.

தனி மசோதாக்கள்

குறிப்பிட்ட ஒரு நலனுக்கு அல்லது தனியொரு மனிதர் அல்லது மனிதர்கள் ஆசியோரின் நன்மைக்கான மசோதா தனி மசோதாவாகும். இம் மசோதா கொண்டு வரப்படுவதற்கான பொருள்களின் பரப்பு மிக விரிவானதாகும்.

1798 வரையில், பொது மசோதாக்களுக்கும் தனி மசோதாக்களுக்கும் உள்ள வேறுபாடு தெளிவாக்கப்படவில்லை. தனியொருவர் அல்லது சமூகம் ஆகியவர்களின் குறைகளைத் தீர்ப்பதற்கான விண்ணப்பங்களை யொட்டி முற்காலத்தில் சட்டம் இயற்றப்பட்டது. உண்மையில், பொதுத்தன்மை வாய்ந்த சட்டங்களில் ஒருவரின் குறைகளைத் தீர்க்கும் நடவடிக்கைகள் இடம் பெற்றிருந்தன. ஏனெனில் இவை எல்லோருக்கும் பொருந்துவதாக இருந்தன. எழுத்துருவில் சட்டமியற்றப்பட்டபொழுது, பொது இயல்பான சட்டங்களுக்கும் தனி முறையிலானவைகளுக்கு மிடையில் ஒரு வேறுபாடு வளர்ந்தது. ஆனல் 18ஆம் நூற்றுண்டு வரையில் தனி மசோதாக்கள் மாறுபட்ட முறைக்கு உட்படுத்தப்படவில்லை. இதற்குப் பின், தல நிறுவனங்களும் கால்வாய் கம்பெனிகளும் தல ரயில் பாதை அமைப்புகளும் வேகமாகப் பெருகின. இவையணைத்தும் சிறப்பான ஆட்சி அதிகாரங்களைப் பெற்றிருந்தன. 16ஆம் 17ஆம் நூற்றுண்டுகளில் இத்தகைய அதிகாரங்களை அரசர்கள் தவருகப் பயன்படுத்திக் கொண்டது. இன்னும் பாராளுமன்றத்தின் நினைவில் இருந்தது. இந்த அதிகாரங்களை வரையறுக்க சிறப்பு நடைமுறைகள் வரையப்பட்டன.

19ஆம் நூற்றுண்டின் மத்தியில் ஒவ்வொரு கூட்டத்தொடரிலும் 600, 700 மசோதாக்கள் தாக்கல் செய்யப்பட்டன. ஆனல் இன்று இவைகள் 50 க்கு மேல் இல்லை. இவைகளில் பெரும்பாலானவை தல நிறுவனங்களால் கொண்டு வரப்படுகின்றன. நில அடைப்பும், கால்வாய், ரயில் பாதை வளர்ச்சி போன்றவை இப்பொழுது நின்று விட்டன. மின்சக்தி, தந்தி, விமானம் போன்றவை தூரத்தை அழித்தன. குறிப்பிட்ட திட்டங்களைத் தல நிறுவனங்கள் விரும்பினல் அனுமதிக்கப் பொதுவான பல சட்டங்கள் இப்பொழுது இயற்றப் பெற்றன. பாராளுமன்றம் இப்பொழுது ஆட்சி அதிகாரத்தின் தேவையை ஏற்றுக் கொள்ளு

கிறது. தற்காலிகக் கட்டளை மசோதாக்களும் சிறப்பு நடைமுறைக் கட்டளைகளும் பல நிகழ்வுகளில் தனி மசோதாக்களை தள்ளி வைக்க அனுமதிக்கப்படுகின்றன.

மசோதா கடந்து செல்லும் நிலைகள் விண்ணப்பம், பூர்வாங்க விளம்பரம், ஆய்வுத் தனி மசோதாக்கள் விண்ணப்பங்கள் உருவில் கொடுக்கப்படுகின்றன. இவைகளோடு மசோதாவும் இணைக்கப்பட்டிருக்கும். அறிவிப்பு கொடுப்பதால் மட்டும் இவைகளைக் கொண்டுவர இயலாது. தனி மசோதாக்களுக்கான விண்ணப்பங்களின் ஆய்வாளர்களாகிய பாராளுமன்ற அலுவலர்கள் முன் இவைகள் முதலில் செல்ல வேண்டும். இரு சபைகளுக்குமாக இருவர் இருப்பர். மசோதாவினால் பாதிக்கப்படும் தனி நலன்களுக்குத்தகவல் கொடுக்கும் வகையில் வெளியிடப்பட்ட அறிவிப்புகளுக்குப்பின் மசோதா கொண்டு வரப்படவேண்டும். தொடர்புடைய அரசாங்கத் துறைகளுக்குப் படிகளை முன்னதாக அனுப்பி வைக்க வேண்டும். தேவையான தகுதிப்பாடுகளை மசோதா பெற்றிருக்கிறதென்றால், இரு சபைகளில் ஒன்றிற்கு அனுப்ப ஆய்வாளர்கள் சான்று அளிக்கலாம்.

எல்லாத் தனி மசோதாக்களும் கொண்டுவரப்பட்டவுடன் முதல் வாசிப்பிற்கு எடுத்துக் கொள்ளப்பட்டு இரண்டாவது வாசிப்பிற்கு அனுமதி பெறுகின்றன. எதிர்ப்பில்லையென்றால் இரண்டாவது வாசிப்பிற்குப்பின், எதிர்ப்பில்லா மசோதாக்கள் பற்றிய குழுக்களுக்கு இவைகள் வழக்கமாக அனுப்பப்படுகின்றன. பற்றற்ற உறுப்பினர்களைக் கொண்ட இக் குழுக்கள் சிறியவை. கட்சிக் கொறடாக்கள் தயாரிக்கப்பட்ட ஒரு பட்டியலிலிருந்து தெரிவுக் குழுவினால் இவைகளின் உறுப்பினர்கள் அமர்த்தப்படுகிறார்கள். தனிமசோதா பற்றிய பொதுமக்கள்சபையின் ஒவ்வொரு குழுவிலும் நான்கு உறுப்பினர்கள் இருக்கிறார்கள். பெருமக்கள் சபையில் உள்ள ஒவ்வொரு தனி மசோதா பற்றிய குழுவில் ஐந்து உறுப்பினர்கள் இருக்கிறார்கள். குழுத் தலைவருக்கு முடிவுசெய் வாக்கு உண்டு. மூன்று உறுப்பினர் சபையின் குறை நிறை வெண் ஆகும். ஒரு தனிப்பட்ட மசோதாவை ஆராய தனி மசோதாக் குழு ஒன்று அமர்த்தப்படலாம். ஆனால் பெரும்பாலும் இத்தகைய ஒவ்வொரு குழுவும் இப்படிப்பட்ட பல மசோதாக்களை ஆராய்கிறது. ஆயினும், தனி மசோதாக் குழுவில் இடம் பெறுமுன் ஒவ்வொரு உறுப்பினரும் ஆராயப்படவிருக்கும் மசோதாவில் தமக்குச் சொந்த நலன் இல்லையென்றும் தம் தொகுதியினருக்குத் தல நலன் இல்லையென்றும் அறிக்கை செய்து ஒப்பமிட வேண்டும்.

மசோதாவில் நிலையான அக்கறை கொண்ட அனைவரின் கருத்துகளையும் தனி மசோதாக் குழுக்கள் கேட்கும் இக் கருத்துகள் மசோதாவை ஒட்டியும் எதிர்த்தும் இருக்கலாம். மசோதாவின் நோக்கங்களை எடுத்துரைக்கும் முகப்பு ஒன்றோடு தனி மசோதா ஒவ்வொன்றும் தொடங்குகிறது. நோக்கங்கள் விரும்பத்தக்கவை தாமா வென்பதற்கான விவாதங்களையும் சான்றுகளையும் குழு முதலில் கேட்டறியும். முகப்பு மெய்ப்பிக்கப்படுவதையும் மெய்ப் பிக்கப்படாததையும் பின் குழு முடிவு செய்கிறது. மெய்ப்பிக்கப் படவில்லை யெனில் மசோதா கைவிடப்படுகிறது. மெய்ப்பிக்கப் படுகிறதெனில் மசோதாவின் பிரிவுகள் பற்றிய கருத்துகளை குழு கேட்டறிகிறது. இவ் விசாரணைகள் நேர்மையாகவும் நடுநிலை தவறாலும் நடக்கின்றன. ஊதியம் பெற்ற வழக்கறிஞர்களால் இருதரப்பிலும் விசாரணை நடத்தப்படுகிறது. சான்றுகளோடு வாதங்கள் நடைபெறுகின்றன. நீதிமன்றத்தைப் போல் குழு செயல்படுகிறது. மசோதாவில் அக்கறையுள்ளவர்கள் மட்டுமே குழு முன் கருத்துகளைக் கூற அனுமதிக்கப்படுகிறார்கள்.

உடனடியாகப் பாதிக்கப்படும் மத்திய போக்குவரத்துத்துறை வணிகக் கழகம், சுகாதார அமைப்பு ஆகியவைகளின் அறிக்கைகளை தனி மசோதாக் குழு ஆராயலாம். அரசாங்கத்தின் பொதுக் கொள்கையோடு இம் மசோதா மோதாதவாறும் அல்லது விரும்பத் தகாத முன் நிகழ்வுகளை உண்டாக்காதவாறும் குழு பார்த்துக் கொள்ளுகிறது. தனி மசோதாவின் கருத்தாய்வில் கட்சி அரசியலுக்கு இடமில்லை.

தனி மசோதாக் குழு முடிவு செய்தவுடன் திருத்தமுடன் அல்லது திருத்தமின்றி, ஆதரவாக அல்லது எதிராக சபையினருக்கு அறிக்கை கொடுக்கிறது. சபை விரும்பினால் தனி மசோதாப் பற்றிய குழு அறிக்கையை இருசபைகளும் தள்ளிவிடலாமெனினும் இதைப் பெரும்பாலும் சபை ஏற்றுக் கொள்ளுகிறது. ஆனால் குழு நடுநிலை தவறா முறையில் அமைக்கப்பட்டிருப்பதை உறுப்பினர் அறிவர். இரு தரப்பினரையும் குழு கேட்டறிந்து கொண்டுள்ள தென்பதையும் நிபுணர்களைக் கலந்தாராய்ந்துள்ள தென்பதையும் உறுப்பினர் அறிவர். ஆயினும் சில சமயங்களில் உடனடியாக பிரச்சினைகளைத் தனி மசோதா எழுப்பலாம். இதன்பின் குழு அறிக்கையை யொட்டி சபை வாக்கெடுப்பு நடத்தலாம். ஆனால் குழுவின் அறிக்கையை வழக்கமாக சபை ஏற்றுக் கொள்ளுகிறது. இதன்பின் தனி மசோதா, பொது மசோதாவின் போக்கை மேற் கொள்ளுகிறது.

தனி முறையிலானவைகளாக இல்லை யென்ருல் மசோதாக்கள் பெருமக்கள் சபையில் கொண்டு வரப்படுகின்றன. காலம் கடந்த மசோதாக்களாக இல்லையெனில் சபையின் சிறப்பு அனுமதியின் பேரில் கொண்டுவரப்படுகின்றன. விண்ணப்பம் மசோதாவின் ஒரு படி (நகல்) மற்ற பொருத்தமான பத்திரங்கள் ஆகியவை ஒவ்வொரு ஆண்டிலும் நவம்பர் 27ந்தேதி வாக்கில் தனி மசோதா அலுவலகத்தில் சேர்க்கப்பட வேண்டும். பணிகள் மேற்கொள்ளப் பட்டிருந்தாலும் அல்லது கட்டாயமாக நிலம் வாங்கப்பட்டிருந் தாலும் மாவட்ட குழுவின் எழுத்தரிடம் அல்லது மாவட்ட நகர எழுத்தரிடம் திட்டங்கள் நவம்பர் 20ந் தேதி வாக்கில் கொடுக்கப் பட வேண்டும். தலச் செய்தித் தாள்களிலும் லண்டன் அரசிதழிலும் மசோதாதையும் இதன் நோக்கங்களையும் இரண்டு தடவைகள் டிசம்பர் 11ந் தேதி வாக்கில் விளம்பரம் செய்ய நிலைக்கட்டளைகள் விதிக்கின்றன. நிலைக்கட்டளைகள் உடன் படுத்தப்படவில்லையென்று மசோதாவை எதிர்ப்பவர்கள் கருதினுல் டிசம்பர் 17ந் தேதி வாக்கில் ஆய்வாளர்களுக்குக் குறிப்புகளைக் கொடுக்கலாம்.

டிசம்பர் 18ந் தேதி அல்லது பிறகு ஆய்வு தொடங்குகிறது. சபாநாயகரால் அமர்த்தப்பட்ட ஒருவரும் பெருமக்கள் சபையால் அமர்த்தப்பட்ட ஒருவரும் ஆய்வை நடத்துகிருர்கள். முன்னெழுங்குகள் பற்றிய நிலைக்கட்டளைகள் உடன்படுத்தப் படுவதை இவர்கள் கவனித்துக் கொள்கிருர்கள். மாருன கருத்துகள் இருந்தால் நிலைக்கட்டளைகள் பற்றிய குழுவின் ஆய்விற்கு அனுப்பப்படுகின்றன. நிலைக்கட்டளைகளை நீக்கி விடுவதா வேண்டாமா என்பதைப் பற்றி இவர்கள் முடிவு செய்து சபைக்குத் தெரிவிக்கிருர்கள். ஜனவரி 8ந் தேதி வாக்கில், வழித் துறைகள் பற்றிய குழுத் தலைவர்களும் குழுக்களின் தலைவர் பெருமக்களும் (Lord Chairman) இரு சபைகளுக்கும் மசோதாக்களைப் பிரித்துக் கொடுக்கிருர்கள். மசோதாக்களை எதிர்ப்பவர்கள் சனவரி 30ந் தேதி வரையில் தம் எதிர்ப்பிற்கான காரணங்களை விண்ணப்பங்ளாகக் கொடுக்கலாம். இதன் பின், நாம் முன் குறிப்பிட்ட நிலைசளைத் தனி மசோதாக்கள் கடந்து அரசியாரின் இசைவு பெற்றுச் சட்டமாகிறது. ஆனுல் எழுத் துருவில் இருக்கும் தனிப்பட்ட' சடடத் தொகுதியோடு இச் சட்டம் சேர்த்துக் கொள்ளப்படுகிறது.

பெருமக்கள் சபையில் கொண்டு வரப்படும் மசோதாக்களும் இதே முறையில் சிற்சில மாறுபாடுகளோடு நிறைவேற்றுகின்றன.

தனி மசோதா பற்றி நடைமுறைகள் சில நன்மைகளைப் பெற்றிருக்கின்றன. முதலில், பாராளுமன்றத்தின் நேரத்தில் பெருமளவை இவை எடுத்துக் கொள்வதில்லை. ஏனெனில் ஒருசில உறுப்பினர்கள் இம் மசோதா பற்றி அக்கறை காட்டுகிறார்கள். இவைகளை குழுக்கள் நன்றாக ஆய்கின்றன. இரண்டாவதாக நீதி மன்ற நடைமுறைகளைப் போல் இதன் நடைமுறைகளும் இருப்ப தால் இவைகளில் அரசியல் செல்வாக்கு இடம் பெறுவதில்லை. மூன்றாவதாக இதற்காகும் செலவு அதிகமானாலும், இது சில சலுகைகளை வலியுறுத்துகிறது. இதனால் பரவலான உடன்பாட்டு அடிப்படையொன்று வழக்கமாக இயல்பாகிறது.

### தற்பொழுதுக்கான கட்டளை உறுதிப்பாட்டு மசோதாக்கள்

பாராளுமன்றத்தால் கொடுக்கப்பட்ட பொதுவான அதிகாரங்களை விரிவுப்படுத்துவதற்காக பல முற்போக்குத் தல நிறுவனங்கள் மசோதாக்களை கொண்டுவந்தன. ஆனால் இதனால் இவைகள் பெரும் செலவிற்கு உள்ளாயின. எனவே 1870ஆம் ஆண்டிலிருந்து, எளிய, சுருக்கமான, மலிவான நடைமுறையைத் தற்பொழுதுக்கான கட்டளை முறை புகுத்தியது. தல நிறுவனங்கள் தற்பொழுதுக்கான கட்டளைகளை பெரும்பாலான அரசாங்கத் துறைகள் பிறப்பிக்க பாராளுமன்றம் அனுமதித்தது. செயற்பரப்பில், இவைகள் நடைபெற மசோதாக்களே. ஆனால் பாராளுமன்ற இசைவை இவை பெறும் வரையில் இவை செயற் படுத்தப்படுவதில்லை யாகையால் இவைகள் தற்பொழுதுக் கானவை என்று சொல்லப்படுகின்றன. கீழ்க்கண்டவாறு இதன் நடைமுறை இருக்கிறது.

அரசாங்கத் துறையொன்று தற்பொழுதுக்கான கட்டளை யைப் பிறப்பிக்க வேண்டுமென ஒரு தல நிறுவனம் விண்ணப்பிக் கிறது. இத் தற்பொழுதைக்கான கட்டளையின் நோக்கம் பற்றித் தல விளம்பரம் லண்டன் அரசிதழில் வெளியிடப்பட வேண்டும். பாதிக்கப்பட்ட துறையினால் பூர்வாங்கமான தொருதல் விசாரணை நடத்தப்படுகிறது. விசாரணைகள் திருப்தியாக இருந்தால் தற் பொழுதுக்கான கட்டளை பிறப்பிக்கப்படுகிறது. கட்டளைகள் பின் வரிசைப்படுத்தப்படுகின்றன. தனி மசோதாவிற்கான நேரத்தில் இக் கட்டளைகளைக் கொண்ட பொது ,மசோதாவென்று அமைச்ச ரால் கொண்டு வரப்படுகிறது. முதலாவது வாசிப்பிற்கும் இரண் டாவது வாசிப்பிற்கு மிடையில் மசோதா ஆய்வாளர்களின் கருத் தறிய அனுப்பப்படுகிறது. நிலைக் கட்டளைகளுக்கு இவை உட்படுத்தப்பட்டனவா வென்பது பற்றி இவர்கள் தெரிவிக் கிறார்கள். இவர்களின் அறிக்கை ஏற்றுக் கொள்ளத்தக்கதாக

இருந்தால் அடுத்த நாள் மசோதா இரண்டாவது வாசிப்பிற்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது.

மசோதாவின் குழு நிலை, தனி மசோதாவின் குழு நிலையைப் போலவே இருக்கிறது. 'எதிர்க்கப்படும்', 'எதிர்க்கப்படாத' மசோதாக்களென இவைகள் பிரிக்கப்படுகின்றன. பெரும் பான்மையானவை எதிர்ப்பில்லா வகையைச் சேர்ந்தவைகளாக இருக்கின்றன. ஒரு மசோதா எதிர்க்கப்பட்டாலும், இது தோல்வி யடையக் கூடிய வாய்ப்புக்கள் மிகக்குறைவு. ஏனெனில் பாராளு மன்றம் எதிர்க்கக் கூடிய தற்பொழுதுக்கான கட்டளைகளை அரசாங்கத் துறைகள் பிறப்பிப்பது மிகக் குறைவே, இருந்த போதிலும், தல நிறுவனமொன்றின் நேர்மையற்ற செயலில் இருந்து தனி மனிதனைக் காக்கும் பொறுப்பு அரசாங்கத் துறைக்கு மாற்றப்பட்டிருக்கிறது. பாராளுமன்றத்திற்கு முறையிடம் உரிமை இவைகளுக்கு இருக்கிறது.

ஸ்காட்லாந்தின் அரசுச் செயலர் ஸ்காட்லாந்திற்காக தற் பொதுக்கான கட்டளைகளைப் பிறப்பிக்கும் அதிகாரம் தனி மசோதா நடைமுறைச் சட்டத் (1936)தின் படி அளிக்கப்பட்டிருக் கிறது. இன்று இதை முறை எளிதான உருவில் தனிச்சட்ட ஆக்கத்திற்காக ஸ்காட்லாந்திற்கு மட்டும் பயன்படுத்தப்படுகிறது.

சிறப்பு நடைமுறைக் கட்டளைகள் சிறப்பு நடைமுறைக் கட்டளை முறையால் தற்பொழுதுக்கான கட்டளை பெரும்பாலாக நிறைவு செய்யப்படுகிறது. 1015-ல் இது கொண்டு வரப்பட்டது. இப்பொழுது எழுத்துருவிலான கட்டளைகள் (சிறப்பு நடைமுறை) சட்ட(1945) மாக இது செயல்பட்டு வருகிறது. தேசிய கொள் கையின் முடிவுகளை செயல்படுத்தப் பிறப்பிக்கப்பட்ட துறைக் கட்டளைகளை விரைந்தேற்பது இதன் நோக்கம். ஆனால் இக் கட்டளைகள் தனி உரிமைகளைப் பாதிக்கலாம். இருப்பினும் 1963-ல் இருந்து இக் கட்டளைகள், தலச் சட்டங்களைத் திருத்தும் அமைச்சரின் சட்டப்படியான அதிகாரத்திற்காக பயன் படுத்தப் படவில்லை. தற்பொழுதுக்கான கட்டளைகள் இதை அகற்றி விட்டன. சிறப்பு நடைமுறைக் கட்டளைகளால் பாதிக்கப்பட்ட வர்கள் அறிவிப்புச் செய்யப்படுகிறார்கள் தேவையானால் தல விசாரணை நடத்தப்படுகிறது. பின்னர் 21 நாட்களுக்கு அமைச்சர் கட்டளையைச் சபையின் பார்வைக்கு வைக்கிறார். இக் காலத்தில் விண்ணப்பத்தால் இது ஆராயப்படுகிறது. இத்தகைய விண்ணப் பத்தை வழி, துறைபற்றிய குழுத் தலைவரும் குழுக்களின் தலைவர் பெருமகனும் சேர்ந்து ஆராய்கின்றனர்

கட்டளைக்கெதிரான விண்ணப்பங்கள் கொடுக்கப்பட்டனவா வென்றும், அப்படிக் கொடுக்கப்பட்டிருந்தால் இவைகள் சட்டத்திற்கும் நிலைக் கட்டளைகளுக்கும் உடன்படுகின்றனவா வென்பதையும் குழுத் தலைவர்கள் சபைக்கு அறிக்கை கொடுக்க வேண்டும். கட்டளையின் முதன்மையான நோக்கத்திற் கெதிராகப் பொதுவான எதிர்ப்பாக விண்ணப்பம் இருக்கிறதா அல்லது திருத்தத்திற்கான விண்ணப்பமாக இருக்கிறதா வென்பதையும் இவர்கள் அறிவிக்கிறார்கள்.

பின்வரும் 21 நாட்களுக்குள் கட்டளையை இரு சபைகளில் எச் சபையும் திருத்தலாம். செல்லத் தக்க விண்ணப்பமெதும் வந்து சேரவில்லை யென்றால் பின், இது தானாகவே செயல் படுகிறது.

இக் கட்டளைக் கெதிராக ஒரு விண்ணப்பம் இருந்தால், இரு சபைகளில் எச் சபையும் இக் கட்டளையை செல்லுபடி ஆகாதென அறிவிக்கவில்லை யென்றால், கூட்டுக் குழுவின் ஆய்விற்குக் கட்டளை அனுப்பப்படுகிறது. மறுப்பு பொதுவான தாயின் இதை சபை முடிவு செய்கிறது. நிலைக்கேற்ப கட்டளை ஏற்கப்படலாம், ஏற்க மறுக்கப்படலாம், அல்லது திருத்தப்படலாமெனக் கூட்டுக் குழு சபைக்கு அறிக்கை கொடுக்கிறது. திருத்தங்களை ஏற்பதா கட்டளையைத் திரும்பப் பெற்றுக் கொள்வதா, அல்லது பொது மசோதா உருவில் உடன் படுத்துவதா வென்பதை அமைச்சர் முடிவு செய்ய வேண்டியிருக்கிறது.

### மேலும் படித்தற்குரிய நூல்கள்

Lord Campion, 'An introduction to the Procedure of the House of Commons' (1958) Chapters 6 & 9.
Ivor Jennings 'Parliament', Chapters, 6, 8, 13 & 14, (1957)
Gordon Strathearan, 'The British Parliament'.
H. H. Hanson & H. V. Wiseman, 'Parliament at Work'. (1962).

# 10. நிதிக் கட்டுபாடு

பொது நிதித் துறையில் சட்ட சபைக்கும் நிருவாகத் துறைக்கும் இடையிலான உறவுமுறை பிரிட்டிஷ் அரசியல் அமைப்பில் மிகத் தெளிவாகக் காணப்படுகிறது. ஒரு புறம் அரசாங்கம் எடுத்து மொழிகிறது; மறு புறம் பாராளுமன்றம் திறனாய்கிறது. தேவையான வருவாய்யைத் திரட்டுவது பற்றியும் இவ் வருவாய் செலவிடப் படவேண்டிய வழிகளையும் அரசாங்கக் குறிப்புரைகள் சுட்டிக் காட்டுகின்றன. விதிக்கப்படும் வரிகளின் இயல்பைப் பற்றியும் வருவாய் திரட்டப்படுவதற்கான நோக்கங் கள் பற்றியும் செலவினத்தில் வினழிவுச் சாத்தியம் பற்றியும் பாராளுமன்றத்தின் திறனாய்வு செல்கிறது.

பொதுமக்கள் சபையால் மட்டுமே செயல் படுத்தப்படும் நிதிக் கட்டுப்பாடு மூன்று நிலைகளில் நிகழ்ந்தது. முதல் நிலை பதினேழாம் நூற்றாண்டின் மத்திய பகுதியை உள்ளடக்கிக் கொள்கிறது. தேவைப்படும் பொழுது நிதி உதவியளிக்க முதலில் பொதுமக்கள் சபை அரசரால் கூட்டப்பட்டது. இதைப் பயன் படுத்திக் கொண்டு சபை தன் அதிகாரத்தை நிறுவிக் கொண்டும் விரிவு படுத்திக் கொண்டும் குறைகளை அகற்ற முயன்றது. இதன் வேண்டுகோளை நிறைவேற்ற அரசர் தயாராக இல்லையென்றால் பாராளுமன்றத் தொடர்க் கூட்டத்தைத் தள்ளி வைப்பது நாடிய பண உதவி இன்றி சமாளிப்பது அல்லது தம் சொந்த அதிகாரத் தின் பேரில் அரசர் வரிகளை விதிப்பது.

பின் குறிப்பிட்ட வழக்கத்தை முற்காலத்திய அரசர்கள் பலர் பின் பற்றினார்கள். பாராளுமன்றம் மட்டுமே நிதி உதவி யளிக்க லாம் என்ற அடிப்படையான கருத்தை இந்த வழக்கம் மீறியது. இதற்கெதிராக மகா சாசனம் எதிர்ப்பு தெரிவித்தது. ஆனால் பாராளுமன்றத்தின் அதிகாரம் பெருகியதால், கூடுதலான வரிகளை

விதிக்கும் இதற்கே உரிய உரிமையை அரசர்கள் பொதுவாகத் தலையிட்டுக் குறைக்க விரும்பவில்லை. பட்டங்களை விற்றல், தனியுரிமை அளித்தல் நகர்தொகுதிகளைப் படைத்தல், மிகையான தண்டப்பணம் விதிப்பதற்காக மறந்துபோன சட்டங்களை உயிர்ப்பித்தல் போன்ற ஐயுறத்தக்க முறைகளைப் பயன்படுத்தி பாராளுமன்றம் இன்றியே முதலாம் ஜேம்ஸ் சமாளித்தார். இருப்பினும், தம் சிறப்பதிகாரத்தால் வரி விதிக்க முடியுமென்று கூறி முதலாம் சார்லஸ் ஒரு மோதலுக்கு வழி கோலினர். உரிமைகள் பற்றிய விண்ணப்பத்தில் தெரிவித்த எதிர்ப்புகள் பெரும்பாலும் பயனற்றிருந்தன, கப்பற் பணம் பற்றிய ஜான் ஹாம்டன் (John Hampdon) மேற்கொண்ட உறுதியான முயற்சி இதைப் பிரச்சினை ஆக்கியது. வரி விதிப்பில் பாராளுமன்றத்திற்குள்ள முழுமையான அதிகாரத்தைத் உள் நாட்டுப் போர் தெளிவாக உறுதிப்படுத்தியது. உரிமை மசோதாவில் (1689) இக் கருத்து எழுத்துருவில் மீண்டும் வலியுறுத்தப்பட்டது.

பதினேழாம் நூற்றாண்டின் இடைப் பகுதிவரை குறைபாடுகளை அகற்றுவது பற்றிய அரசரின் வாக்குறுதிக்கு ஈடாக நிதி உதவியளிக்கும் மசோதாவை சபை நிறைவேற்றி அரசருக்கு நிதி அளித்தது. வரி விதிக்கச் சபை அரசருக்கு அதிகாரமளிக்கையில், வரித்தொகை பற்றி இதற்கு கட்டுப்பாடு இல்லை எனவே, அரசரின் கொள்கையின் விபரங்கள் பற்றி இதற்கு எவ்வித அதிகாரமுமில்லை. எனவே, நிதி ஒதுக்கீடு செய்யும் நடைமுறையோடு நிதிக் கட்டுப்பாட்டின் இரண்டாவது நிலை தொடங்குகிறது. அதாவது பல்வேறு செலவினங்களுக்குப் பொதுமக்கள் சபை நிதி ஒதுக்கியது. 1665-ல், வரிப் பணத்தைப் பொதுமக்கள் சபை ஹாலந்தோடு போர் செய்வதற்கு ஒதுக்கியது. மூன்றாம் வில்லியத்தின் ஆட்சிக் காலத்திலிருந்து நிதி ஒதுக்கல் ஒழுங்கான வழக்கமாயிற்று. அரசாங்கச் செலவு அதிகரித்ததால் பாராளுமன்றத்தால் அளிக்கப்பட்ட நிதி உதவியை அரசர் பெருமளவிற்கு நம்பி இருக்க வேண்டியிருந்தது. ஆகவே பாராளுமன்றத்தின் நிதிக் கட்டுப்பாடு பயனுரமிக்க தாயிற்று. மூன்றாம் ஜார்ஜ் மன்னர் தம் நில வருவாய்யை விட்டுக் கொடுத்தபோது, பாராளுமன்றம் தேசிய வருமானம் அனைத்தையும் அளித்தது. தனக்குத் தேவையான நிதியை அரசாங்கம் இப்பொழுது பாராளுமன்றத்திடமிருந்து பெற வேண்டியதாயிற்று.

மூன்றாவது நிலையில் பொதுமக்கள் சபை நிதிக் கட்டுப்பாட்டை முழுமையாக எடுத்துக் கொண்டது. நிதித் துறையில் பொதுமக்கள் சபையினர் எப்பொழுதுமே பெருமக்கள் சபையின் மீது சிறிது முன்னுரிமை கோரி வந்துள்ளது. எனவே முதலாம்

சார்லஸின் ஆட்சிக் காலத்தின்போது, உதவிக்கும் நிதி அளிப்புக்குமான மசோதாவை இயற்ற வழி செய்யப்பட்டது. பெருமக்கள் சபையின் அறிவுரையாலும் இசைவாலும், இதன் அறிவுரையோடும் இசைவோடும் பொதுமக்கள் சபை ஒரு வரியை வழங்கிற்று. மேலும் உதவியையும் நிதி அளிப்பையும் மாற்றியமைக்கப் பெருமக்கள் சபைக்கு உரிமை இல்லையென 1671-லும் 1678-லும் தீர்மானங்கள் வற்புறுத்தின. இவைகளை அளிக்கும் மசோதாக்கள் பொதுமக்கள் சபையில் தான் எழவேண்டுமெனக் கோரினார்கள். எனினும் பெருமக்கள் சபை தள்ளிவிடும் உரிமையை இன்னும் தக்க வைத்துக் கொண்டிருந்தது. காகிதத் தாள்கள் மீதான வரி விதிப்பை அகற்றும் தகராறைப் பற்றிய வழக்கில் இவ் வுரிமை ஏற்றுக் கொள்ளப்பட்டது (1860). இதன் பின் ஒரு மசோதாவில் அந்த ஆண்டிற்கான இதனுடைய எல்லா நிதி பற்றிய குறிப்புரைகளை சேர்த்துக் கொள்வதால் இந்த அதிகாரம் உண்மையில் செயல்படுத்தப் படாதென பொதுமக்கள் சபை உறுதியளித்திருக்கிறது. 1909-ல் பெருமக்கள் சபையினர் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தைத் தள்ளிய பொழுது, பண மசோதாவை இச் சபை தொடும் உரிமை பாராளுமன்றச் சட்டத்தால் முழுமையாக அகற்றி விட்டது. மெய்யாக, பொதுமக்கள் சபையின் சிறப்புரிமை மேலே செல்கிறது. நிதியலுவல்கள் பற்றிய விவாதங்கள் இப்பொழுது இங்குதான் நடைபெறுகின்றன. மேல் சபையின் திருத்தங்கள் இல்லாமல் இதன் குறிப்புரைகள் ஒரு சட்டத்தில் இடம் பெற்றுள்ளன.

### இக் காலக் கருத்துகள்

அரசாங்கம் முதலில் பண உதவி கேட்கிறது. குறைகள் தீர்க்கப்பட்ட பின் பொதுமக்கள் சபை இதை அளிக்கும் முற்காலத்திய நிதிக் கட்டுப்பாட்டுக் கருத்து இக் காலத்திய நடைமுறை வழக்கிலும் இடம் பெற்றிருக்கிறது. சபையின் நிலைக் கட்டளைகளில் இக் காலத்தில் பல கருத்துகள் குறிப்பிட்டுரைக்கப் பட்டுள்ளன. பணச் செலவிடும் எந்தக் குறிப்புரையும் அரசரின் அமைச்சரால் தான் எடுத்துரைக்கப் படவேண்டும் (S. O. 82); நிதி உதவி அளிப்பதற்காக 29 நாள்கள் ஒதுக்கப்படுகின்றன (நிலைக் கட்டளை 18).

வழக்கமான இந் நடைமுறையைப் பின்பற்றுவதற்குத் தொடர்ச்சியைத் தவிர நல்ல சில காரணங்களும் இருக்கின்றன. அமைச்சர் ஒருவர் செலவினத்தைப் பரிந்துரைப்பது வலியுறுத்தப் படுவது செலவை எடுத்துரைக்கும் அமைச்சரே பணத்தை எப்படித்

திரட்டுவது என்பதையும் குறிப்பிட இம் முறை வழி செய்கிறது. மேலும், நிதி உதவி அளிப்பதற்குக் குறிப்பிட்ட நாள்களை ஒதுக்கு வது கொள்கையை எல்லா உறுப்பினரும் திறனாய்வு செய்ய உறுதி யளிக்கிறது. நிதி பற்றிய பிரச்சினைகளில் அரசாங்கத் தரப்பின் பின்னணி உறுப்பினர்கள் அரசாங்கத்தைத் தாக்கலாம். இறுதியாக, நிதி நடைமுறை வழியாகத் தான் பொதுமக்கள் சபை அரசாங்கத்தின் மீது இறுதியான அதிகாரத்தைச் செயல் படுத்து கிறது. செலவினத்தின் பெரும் பகுதிக்கும் வருவாய்பில் ஒரு பெரும் தனிப்பட்ட இனத்திற்கும் (வருமான வரி) ஓராண்டிற்கு மட்டும் இசைவளிப்பதால், கொள்கை ஓராண்டிற்கு ஒரு தடவை யாவது மெய்ப்பிக்கப் படுவதற்கு சபை உறுதியளிக்கிறது. நிதி உதவ சபை மறுத்தால், சபையின் நம்பிக்கையை இழந்த அரசாங்கம் தொடர்ந்து ஆட்சி நடத்த இயலாது போய் விடும்.

## நடைமுறைச் சுருக்கம்

நிதியாண்டு ஏப்ரல் மாதம் தொடங்குகிறது. ஆனால் அரசின் துறைகள் அடுத்து வரும் ஆண்டிற்கான பணத்தேவைப் பற்றிய மதிப்பீடுகளைத் தயாரிக்கத் தொடங்கி விடுகின்றன. கருவூலத் துறையின் ஆய்விற்குப் பின் இம் மதிப்பீடுகள் சபை முன் வைக்கப்படுகின்றன. பாராளுமன்றம் அளித்த பணத்தைக் கொண்டு குறிப்பிட்டச் சில பொதுச் செலவுகள் செய்யப்படுவ தில்லை. ஆனால் திரண்ட நிதியில் இவை சாட்டப்படுகின்றன. இச் செலவுகளில் அரச மானியம் (Civil List), சபாநாயகர், கணக்குத் தணிக்கை நாயகம், நீதிபதிகள் ஆகியோரின் ஊதியங்களும் அடங்கும்.

அரசாங்கத்திற்கு இங்கிலாந்து வங்கியில் (Bank of England) இரண்டு கணக்குகள் இருக்கின்றன. நடப்பு வருமானங்களையும் செலவுகளையும் கொண்டிருக்கும் திரண்ட நிதியும், அரசாங்கத்தின் கடன் கொள்ளுதலையும் கடன் கொடுத்தலையும் பற்றியது தேசியக் கடன் நிதியாகும். இவை அரசாங்கத்தின் இரண்டு கணக்கு களாகும்.

பொதுமக்கள் சபையின் நிதி நடைமுறையின் ஆய்வின் தொடக்கம் திரண்ட நிதியாகத்தான் இருக்கிறது. வரி விதிப் பாலும் மற்ற வழிகளாலும் இந் நிதியின் குறை நிரப்புவதிலும் இதிலிருந்து எடுக்கும் பணத்திற்கு அதிகாரமும் இசைவும் அளிப்பதிலும் சபை அக்கறை கொண்டிருக்கும். இதில் பணம் அதிகம் இருப்பதில்லை. நிதியாண்டின் இறுதிவரையில் பணம் மெதுவாக வந்து கொண்டிருக்கையில் இந் நிதி நிரம்பியதைவிட

விரைவில் காலியாயிற்று. எனவே தொடக்க காலத்திய செலவைச் சமாளிக்கத் தேசியக் கடன் நிதியிலிருந்து அரசாங்கம் கடன் கொள்ளுகிறது.

புதிய வரிகளை விதித்தும் பழைய வரிகளைத் திருத்தியமைத்தும் நிதி திரட்டுவதற்கான குறிப்புரைகள் அரசரின் சார்பில் செயல் படும் அமைச்சர் ஒருவரால் எடுத்துரைக்கப்பட வேண்டு மென்பதை சபையின் வழக்கமும் நிலைக் கட்டளைகளும் வற்புறுத்து கின்றன. வழக்கமாக ஏப்ரல் மாதத் துவக்கத்தில் கருவூலத் துறைத் தலைவரால் (Chancellor of the Exchequer) நிகழ்த்தப்படும் ஆண்டு வரவு செலவு பற்றிய உரையில் இக் குறிப்புரைகள் இடம் பெறுகின்றன. இவ் வுரை மூன்று பிரிவுகளைக் கொண்டிருக்கும்.

(1) கடந்த ஆண்டின் கணக்குகளை சான்சலர் விளக்குகிறார். மதிப்பீடுகளிலிருந்து தொகை மாறுபடுவது ஏனென்றும் எப்படி யென்றும் இவர் விளக்குகிறார்.

(2) வரும் ஆண்டிற்கான மதிப்பீடுகளைக் கவனிக்கும்படி குறிப்பிடுகிறார். பொருளாதார நிலைபற்றியும் இவர் கருத்துரை வழங்குகிறார்.

(3) வரி விதிப்பில் மாற்றங்களுக்கான குறிப்புரைகளை அளிப்ப தோடு அதற்கான காரணங்களையும் சொல்லுகிறார். இவ் வரி விதிப்புக் குறிப்புரைகள் (திட்டங்கள்) உடனடியாகச் செயற் பாட்டிற்கு வந்து விடுகின்றன. வரவு செலவு பற்றிய ஆண் டறிக்கை பொருளாதாரக் கொள்கையின் ஒரு கருவியாகக் கருதப் படுவதால் சான்சலரின் அறிக்கையை யொட்டி நாட்டின் பொருளாதாரக் கொள்கை பற்றிய ஒரு பொது விவாதமொன்று நடைபெறுகிறது. இத் திட்டங்கள் ஆண்டு நிதிச் சட்டத்தில் பின்னர் இணைக்கப்பட்டு ஆகஸ்டு 5ந்தேதி வாக்கில் நிறைவேற்றப் படுகின்றன.

திரண்ட நிதியிலிருந்து செலவிடப்படும் இனங்கள் இருவகைப்படும்

**(1) திரண்ட நிதிப் பணிகள்**

இப் பணிகளுக்கான நிதி அளிப்பிற்கு ஒவ்வொரு ஆண்டும் பாராளுமன்றத்தின் ஒப்புதல் வேண்டியதில்லை. எனவே இவைகள் 'திரண்ட நிதியின் மீதிலான செலவுகள்' எனப்படுகின்றன. அரசியல் சர்ச்சைக்கு உள்ளாகக் கூடியவைகளிலிருந்து விலக்கப் பட்டனவாகக் கருதக் கூடியவை இவை. எடுத்துக்காட்டாக,

அரசமானியம், சபாநாயகர், அரசியாரின் எதிர்க்கட்சித் தலைவர், உயர்நீதிமன்ற நீதிபதிகள், கணக்குத் தணிக்கை நாயகம் ஆகியோரின் ஊதியங்களைக் குறிப்பிடலாம். நிதியளிப்புப் பணிகளைப் (Supply Services) போலன்றி திரண்ட நிதியில் சாட்டப் படுவன பாராளுமன்றத்தின் புதிய சட்டம் ஒன்றுல்தான் திருத்தப் படலாம். பண ஒதுக்கீட்டுச் சட்டத்திலிருந்து விடுபட்டு விட்டால் சப்ளைப் பணிகள் நிறுத்தப்பட்டு விடலாம்.

(2) சப்ளைப் பணிகள்

இவைகளுக்கான நிதியைப் பாராளுமன்றம் மதிப்பீடுகளின் அடிப்படையில் நடப்பு நிதியாண்டிற்கு மட்டுமே அளிக்கிறது.

வரும் ஆண்டில் செலவிடும் துறைகளுக்குத் தேவைப்படும் பணத்தின் தொகைகளை முன் கூட்டியே விரிவாகத் தெரிவிக்கும் அறிக்கைகள் மதிப்பீடுகள் எனப்படுகின்றன. இவைகளைத் தயாரித்து கருவூலத் துறையின் ஆய்விற்குத் துறை அனுப்புகிறது. இவைகளை டிசம்பர் மாதம் 15ந் தேதிக்கு முன் அனுப்பவேண்டும். அடுத்து வரும் பெப்ரவரி அல்லது மார்ச் மாதத்தில் இறுதி வடிவில் இவைகள் பொதுமக்கள் சபை முன் வைக்கப்படுகின்றன. பாது காப்பு, சிவில் துறையும் வருவாய்த் துறையுமென இரு தொகுப்பு களாகச் சபைக்கு அளிக்கப்படுகின்றன. பின்னது பத்துப் பிரிவு களாகப் பிரிக்கப் படுகின்றது. ஒவ்வொரு பிரிவிற்கும் சபை நிதி உதவியளிக்கிறது. அப்படியே ஒவ்வொரு தலைப்பின் கீழ் உள்ள இனத்திற்கும் நிதி அளிக்கிறது. இம் மதிப்பீடுகளை பொதுமக்கள் சபை 29 நாள்கள் விவாதிக்கிறது. துணை மதிப்பீடுகளும் மிகையான நிதி அளிப்பும் உள்பட சப்ளை நாள்கள் ஆகஸ்ட் 5ந் தேதிக்கு முன் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். ஈற்றியல் நாளில் விவாதம் முடிவிற்குக் கொண்டு வரப்படுகிறது. இறுதி நாளில் எஞ்சிய நிதி அளிப்புக்கள் எல்லாம் எடுத்துக் கொள்ளப் படுகின்றன. இவைகளை ஏற்கப் பரிந்துரைக்கும் தீர்மானங்கள் நிறைவேறுகின்றன. திரண்ட நிதியிலிருந்து தேவையான பணத்தை எடுத்துக் கொள்ள நிதி ஒதுக்கீட்டுச் சட்டம் அதிகார மளிக்கிறது.

பொதுமக்கள் சபையின் கூட்டத்தொடர் நவம்பரில் தொடங்கி நவம்பரில் முடிவடைகையில் நிதியாண்டு ஏப்ரலில் தொடங்கி மார்ச் 31-ல் முடிவடைவது பொதுமக்கள் சபையின் நிதி நடைமுறையை சிக்கலாக்குகிறது. புதிய நிதியாண்டிற்கான பணம் தேவைப்படும் பொழுது ஏப்ரல் முதல் நாளில் சபை எல்லா மதிப்பீடுகளையும் ஆராய முடிவதில்லை. ஆகஸ்ட் மாதம் வரைக்கும்

சிவில், வருவாய்த் துறைகளுக்குப் போதிய நிதி வழங்க மார்ச் 31ஆம் தேதிக்கு முன் 'கணக்கின் பேரில் நிதி அளிக்கப்படுகிறது. ஆண்டிற்கான நிதியைப் பண ஒதுக்கீட்டுச் சட்டம் ஆகஸ்டில் அளிக்கிறது. பாதுகாப்புத் துறைக்கு இம் முறைப்படி நிதி அளிக்க வேண்டியதில்லை. ஏனெனில் நிதி அளிப்பை மாற்றிக் கொள்ள அனுமதிக்கப்படுகிறது. ஆகவே ஒரு நிதியளிப்பு ஏற்றுக்கொள்ளப் பட்டால் ஆகஸ்டில் மற்ற நிதியளிப்பைப் பெறும் வரையில் ஒரு நிதியளிப்பில் பெற்ற பணத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம். கணக்கின் மீதான நிதியளிப்பு ஆண்டு நிதியளிப்பிலிருந்து கழித்துக் கொள்ளப்படுகிறது.

முந்திய நிதியாண்டின் போது ஒரு குறிப்பிட்ட நிதியளிப்பில் கொடுக்கப்பட்ட பணத்திற்கு மேல் அதிகமாகச் செலவிட்டிருக்க லாம். இத்தகைய மட்டுமீறிய செலவை முதலில் பொதுக் கணக் குக் குழு ஆராய்கிறது. இதை மிகையளவு நிதியளிப்பாகச் சபை நிறைவேற்றுகிறது. இது இறுதியாக திரண்ட நிதிச் சட்டத்தால் அளிக்கப்படுகிறது.

நிதியாண்டு தொடங்குவதற்கு ஐந்து அல்லது ஆறு மாதங் களுக்குமுன் மதிப்பீடுகள் தயாரிக்கப்படுவதால் ஒரு துறை, குறைத்து மதிப்பிட்டு விடலாம். வழக்கமாகத் துணை மதிப்பீடுகள் மார்ச்சு மாதத்தில் திரண்ட நிதி மசோதாவினுல் ஏற்றுக் கொள் ளப்படுகின்றன. ஆனல் அடுத்துவரும் நிதியாண்டிற்கான நிதி ஒதுக்கிட்டுச் சட்டத்தால் பணம் ஒதுக்கி வழங்கப்படுகிறது. ஒரு புதிய அல்லது எதிர்பாராத செலவிற்காகவும் துணை மதிப்பீடுகள் தேவைப்படலாம். இது ஜூலைக்கு முன் ஏற்பட்டால் இதற்கு பண ஒதுக்கீட்டுச் சட்டத்தில் வழி காணலாம். அப்படி இல்லையென்றல் கூடுதல் திரண்ட நிதி மசோதா ஒன்று தேவைப்படலாம். இதற் கிடையில் மசோதா நிறைவேற்றப்படும் வரையில் நிதி அளிப்பு களைப் பெற வேண்டும், திரண்ட நிதிச் சட்டத்தால் அனுமதிக்கப் பட்ட தொகைகளைப் பயன்படுத்திக் கொள்ளும் கருவூலத்தால்; எதிர்பாராத, தற்காலிக செலவிற்காகப் படைக்கப்பட்ட நிதியி லிருந்து பணம் எடுத்துக் கொள்ளுதல்; கருவூலத்தின் ஒப்புதலோடு மாற்றிக்கொள்ளுதல் போன்ற பல்வேறு வகைகளில் நிதியளிப்பு கள் அனுமதிக்கப்படுகின்றன. செலவினங்களை துறையின் விருப்பை யொட்டி மாற்றிக் கொள்ளலாம்.

செலவுத் தொகைக்குச் சபை நிதியளிக்கிறது. திரண்ட நிதிச் சட்டம் பணத்தை எடுத்துக் கொள்ள அதிகாரமளிக்கிறது. மார்ச்சு மாதம் நிறைவேற்றப்படும் சட்டம் கணக்கின் பேரிலான

நிதியளிப்பு பற்றியதாக இருக்கும். ஆகஸ்டில் நிறைவேற்றப்படுவது முதன்மையான சட்டமாகும். இது நிதி ஒதுக்கல் பற்றியதாக இருப்பதால் இது திரண்டநிதி (ஒதுக்கீட்டு) சட்டம் எனப் பெயர் பெறுகிறது.

### செலவினங்களின் மீது பொதுமக்கள் சபையின் கட்டுப்பாடு

செலவினங்களின் மீதான மேற்பார்வை பயனுரமிக்கதாக இருக்க வேண்டுமென்றால் செலவு விரும்பத்தக்கதா வென்பதையும் சிக்கனமானதா வென்பதையும் அதிகாரத்திற்குட்பட்டது தானு வென்பதையும் இது உறுதிப்படுத்த வேண்டும். பொதுமக்கள் சபையின் கட்டுப்பாடு எந்த அளவிற்கு இக் கருத்துகளோடு இணங்கி இருக்கிறதென்பதை ஆராயவேண்டும்.

#### 1. செலவினத்தின் விரும்பத் தகும் தன்மை

செலவு எந்த அளவிற்கு விரும்பத் தக்கதென்பது பெரும்பாலும் வாதத்திற்குரிய பொருளேயாகும். ஒரு குறிப்பிட்ட கட்சிக்கு வாக்களிக்கும்பொழுது இதை வாக்காளர்கள் வெளிப்படுத்துகின்றனர். ஏனெனில் பெரும்பாலான திட்டங்களுக்குச் செலவு செய்ய வேண்டி இருக்கும். எப்பொழுது சட்டங்களைக் கொணர்வதென்பதை கேபினெட் முடிவு செய்யும். இவைகளைப் பாராளுமன்றம் பின்னர் விவாதிக்கும். இவைகளை ஏற்பதால் இவைகளுக்கான செலவையும் பாராளுமன்றம் தானுகவே ஏற்றுக் கொள்ளுகிறது.

சட்டமின்றி கொள்கைகளைச் செயல்படுத்த வேண்டியவைகளில், மதிப்பீடு விவாதங்களில் பொதுமக்கள் சபை பொதுவான திறனாய்விற்கு ஒரு வாய்ப்பைப் பெறுகிறது. சர்ச்சைக்குரிய சட்டங்களின் தொடக்க நிலையில் கொள்கை இருமுறை விவாதிக்கப்படுகிறது. மசோதா நிறைவேறும் பொழுது ஒரு தடவையும், குறிப்பிட்ட மதிப்பீடுகள் விவாதிக்கப்பட்ட நிதி அளிப்பு பெறும்பொழுது இன்னொரு தடவையும் இது விவாதிக்கப்படுகிறது.

#### 2. சிக்கனம்

அரசாங்கச் செலவு விணழிவாக இருக்கலாகாதென்பதைப் பாராளுமன்றம் கவனிப்பதற்கு வசதியாக மதிப்பீடுகள் முதலில் தயாரிக்கப்பட்டன. ஆகவே மதிப்பீடுகள் விரிவான தகவல் அளிக்கின்றன. தலைப்பு வாரியாகவும் இனவாரியாகவும் தரப்படுவதோடன்றி ஒப்பு நோக்குவதற்காக முந்திய ஆண்டின் மதிப்பீடுகளும் கொடுக்கப்படுகின்றன. பாராளுமன்றத்திற்கு

அளிக்கு முன் இவைகளைக் கருவூலத்துறை கவனமாக ஆராய்கிறது. நடப்பு ஆண்டிற்குக் கூடுதலான மதிப்பீடுகள், விலை உயர்வு பற்றியோ அல்லது அரசாங்கத்தின் கொள்கை மாற்ற அடிப்படையிலோ, மெய்ப்பிக்கப்பட வேண்டும். கருவூலத்தின் இத் தணிக்கையதிகாரம் அரசரிடமிருந்து வரவில்லையெனினும் பாராளுமன்றத்திடமிருந்து இதைப் பெற்றது. ஆகையால், இதைப் பொறுத்தவரை பாராளுமன்றத்தின் பணிகளுக்குக் கருவூலம் துணை நிற்பதாகச் சொல்லலாம். ஒரு செலவு மட்டு மீறியதென்றோ, நேர்மையற்றதென்றோ கருவூலம் கருதுமாயின் அதைத் தள்ளி விடலாம். குறிப்பிட்ட துறையோடு இது எளிதில் தகராறு உண்டாக்கலாம். இதைக் கீழ் மட்டத்தில் முடிவு செய்ய இயலாதென்றால் கேபினெட் முடிவு செய்ய வேண்டியிருக்கும். மேலும், ஒரு துறையின் மதிப்பீடு நிதித்துறைத் தலைவரின் (Chancellor) முடிவுகளுக்கு உட்பட்டதாகும். இவருடைய திட்டங்கள் செலவினங்களைக் குறைப்பதாக இருக்கலாம். செலவினத்தைக் கருவூலம் பயனுள்ள முறையில் கட்டுப்படுத்துகிறது ஆனால் வீணழிவை குறிப்பிடுவதில் இது தவறி விடலாம்.

பெப்ரவரி மாதம் பொதுமக்கள் சபைக்கு மதிப்பீடுகள் கொடுக்கப்படுகின்றன. இவைகளின் மீதான விவாதங்கள் 29 நாள்கள் நடைபெறுகின்றன. விவாதங்கள் பொதுமக்கள் சபையில் சிறிது விதி முறையிலிருந்து நெகிழ்ந்து நடைபெறுகின்றன. நிதியுதவியளிக்கப்பட வேண்டிய இனங்களை எதிர்க்கட்சி தெரிவு செய்து கொள்ளுகிறது. திறனாய்வு செய்ய விரும்புகிற துறையை இது தேர்ந்தெடுத்துக் கொள்ளுகிறது.

மதிப்பீடுகள் விரிவாக எடுத்துரைக்கப்படினும் பல்வேறு துறைகள் செலவிடுவதில் சிக்கனம் பற்றி ஒன்றும் விவாதிக்கப் படுவதில்லை.

செலவின் விரிவான விபரங்களை விவாதிக்க 630 பேர்களைக் கொண்ட சபை மிகப் பெரியதாகும். பல்வேறு மதிப்பீடுகள், துணை மதிப்பீடுகள், பொதுக் கணக்குக் குழு அறிக்கைகள், மதிப்பீட்டுக் குழு அறிக்கை ஆகியவற்றை விவாதித்து ஆராயக் கொடுக்கப்பட்டிருக்கும் காலம் மிகக் குறைவாகும்.

சாதாரண உறுப்பினரால் புரிந்து கொள்ள முடியாத அளவிற்கு இம் மதிப்பீடுகள் பெரும் சிக்கலானவை.

விவாதங்களைச் சபைக் காலம் தாழ்த்தித் தொடங்குவதால் பாராளுமன்றத் தணிக்கை பயனுடையதாக இருப்பதில்லை.

இரு கட்சியினரும் வாக்காளர்களின் ஆதரவைப் பெறுவதில் நாட்டம் கொண்டிருப்பதால் செலவைக் குறைக்கும் சிக்கன நடவடிக்கைகளை வழக்கமாக இரு தரப்பினரும் குறிப்பிடுவதில்லை. இங்கும் அங்கும் சிக்கனம் மேற்கொள்ளப்பட வேண்டுமென்று பாராளுமன்ற உறுப்பினர் விரும்புவது உண்மையென்றாலும் பெரும்பாலானோர் எப்பொழுதும் அதிகமாகச் செலவிட விரும்புகின்றனரேயன்றிக் குறைத்துச் செலவிட விரும்புவதில்லை.

செலவினத்தில் பெருமளவு சர்ச்சையின்றி ஏற்றுக் கொள்ளத் தக்கதாக இருக்கிறது. பல்கலைக் கழகங்கள், தல ஆட்சி நிறுவனங்கள் முதியோர் ஓய்வூதியம் ஆகியவைகளுக்குக் கொடுக்கப்படும் மத்திய உதவித் தொகையின் மீது பாராளுமன்றம் சிறிதளவு கட்டுப்பாட்டையே பெற்றிருக்கிறது.

மேலும் வீணழிவைத் தவிர்க்க, இது தோல்விகளுக்கான காரணங்களை முன் கூட்டியே கண்டறிவதில்லை.

பணம் எங்கு செல்கிறதென்பதை பொதுமக்கள் சபை கண்டுபிடிக்கலாமென்றாலும் எங்கு சிக்கனம் மேற்கொள்ள வேண்டுமென்பதையும் பணம் அங்கு செல்வதைத் தடுக்கவும் இது கருத்துகளை தெரிவிக்க இயல்வதில்லை. செலவினங்களை விரிவாக ஆராய முடியாதவாறு இதன் குறைபாடுகள் தடுத்து விடுகின்றன. ஆகையால் மதிப்பீடுகளையொட்டிய கொள்கையின் திறனாய்வை மட்டும் இது செய்கிறது.

எப்படி இருந்தாலும், விவாதங்களால் சில நன்மைகள் ஏற்படுகின்றன. கேட்ட வாதங்களாக இருந்த போதிலும் எதிர்க் கட்சியால் எடுத்துக் கொள்ளப்பட்ட குறிப்பிட்ட கொள்கையை மெய்ப்பிக்க இவைகள் அரசாங்கத்தைத் தூண்டுகின்றன. அன்றைய முதன்மையான அரசியல் பிரச்சினைகளை விவாதங்கள் பொதுமக்களின் கவனத்திற்குக் கொண்டு வருகின்றன. நேரம் கிடைக்குமானால் தனி உறுப்பினர் விவாதங்களில் பங்கு பற்ற இவைகள் வாய்ப்பளிக்கின்றன.

சிக்கனத்தைப் பேண பொதுமக்கள் சபை கருவூலத்தின் கண்காணிப்பை பெருமளவு நம்பி இருக்க வேண்டியிருக்கிறது. ஆனால் பாராளுமன்றத்தின் கட்டுப்பாட்டிற்குக் கருவூலக் கட்டுபாடு ஒரு மாற்றாகாது. எனவே 1912-ல், பொதுமக்கள் சபை ஒரு மதிப்பீட்டுக் குழுவை அமர்த்தியது. சபைக்கு எடுத்துரைக்கப்பட்ட மதிப்பீடுகளில் ஆய்விற்குகந்தவைகளை குழு ஆய்ந்து சபைக்கு அறிக்கை கொடுக்கும். மதிப்பீடுகளில் பொதிந்திருக்கும் கொள்கை

யோடு பொருத்தமான சிக்கன நடவடிக்கைகளையும் இது எடுத்துரைக்கும். இக் குழுவில் எல்லாக் கட்சியிலிருந்தும் தெரிவு செய்யப்பட்ட 43 உறுப்பினர் இருக்கின்றனர். உட் குழுக்களை அமர்த்திக் கொண்டும், ஆட்களை அழைத்தும், பத்திரங்கள் பதிவுகள் ஆகியவற்றைப் பரிசீலனை செய்தும், தலத்தில் விசாரணைகள் நடத்தியும் இது பல்வேறு துறைகளின் மதிப்பீடுகளை ஆராய்கிறது. ஓராண்டில் சபைக்கு பல அறிக்கைகள் கொடுக்கப்படுகின்றன. இவைகளையும் சபை ஆராய்கிறது.

இருந்த போதிலும், இத்தகைய மதிப்பீடுகளை இது ஆழமாக ஆராய்கிறதெனினும் குழுவில் பல குறைபாடுகள் இருக்கின்றன.

கொள்கையால் செலவினம் பெருமளவு வரையறை செய்யப்படுகிறதெனினும் கொள்கை இதன் பார்வைக்கு அப்பாற்பட்டதாகும்.

இக் குழுவின் அறிக்கைகளை ஆராய்வதற்கு சபை போதிய அளவு நேரம் ஒதுக்குவதில்லை.

மதிப்பீட்டுக் குழு கருவூல அலுவலரை நம்பிச் செயல்பட வேண்டி இருக்கிறது. ஆனால் இதன் ஆய்விற்கான பொருள்களை வழிப்படுத்தும் உட்குழு தெரிவு செய்கிறது.

இதன் விளைவாக, முன்னரே செலவிடப்பட்ட தொகைகளை மதிப்பீட்டுக் குழு ஆய்கிறது. எனினும் இதன் பணி பொதுக் கணக்குக் குழுவின் பணியிலிருந்து வேறு படுகிறது. பொது கணக்குக் குழு தணிக்கை பற்றியது முழுமையான சிக்கன ஆய்வுகளை மதிப்பீட்டுக் குழு செய்கிறது. குறிப்பிட்ட துறைகளின் செலவினங்களில் காணப்படும் வீணழிவுகளைக் குறைக்கவும் பொதுப் பணத்தை சேமிப்பதற்கான புதிய முறைகளை இக் குழு எடுத்துரைக்கிறது.

3. கொடுக்கப்பட்ட அதிகாரத்தோடு நிதியாண்டின் இறுதியில், பண ஒதுக்கீட்டு சட்டத்தால் அனுமதிக்கப்பட்ட செயல் நோக்கத்திற்கப்பால் பணம் செலவிடப்படவில்லையென ஒவ்வொரு துறையும் தெரிவிக்க வேண்டும். துறைக்குப் பணம் கொடுக்கப்படுவதை பாராளுமன்றம் கவனிக்கிறது. துறையை இது ஊடுருவித் தணிக்கைக்குட்படுத்துகிறது.

ஒரு துறையின் செலவிற்கு நிதித்துறைக் கணக்கில் இங்கிலாந்தின் வங்கியிலிருந்து தொகைகளை எடுக்க வேண்டியிருக்கிறது. பணத் தேவையை எடுத்துரைத்துக் காரணம் கூறிக் கருவூலத்

திற்குத் துறை விண்ணப்பிக்கிறது. தணிக்கை நாயகத்தால் விண்ணப்பம் ஏற்றுக் கொள்ளப்படும் பொழுது துறையின் கணக்கிற்கு பணம் மாற்றப்படுகிறது. அரசாங்கத்திற்குப் பொருளாளராக இருக்கும் கருவூலத் துறையரங்கத் தலைவர் இப் பணத்தை வைத்திருக்கிறார். துறையினால் பணம் வேண்டப்படும் பொழுதெல்லாம் இவருடைய இருப்புப் பணத்திலிருந்து பணம் கொடுக்கிறார்.

பாராளுமன்றத்தின் சார்பில் முழுத் தணிக்கை உறுதிப் படுத்துவதற்காக, மதிப்பீடுகளைப் போல் அதே வடிவில் செலவுக் கணக்குகளையும் வைத்திருக்க வேண்டுமென இது வற்புறுத்துகிறது கணக்குத் தணிக்கை நாயகம், பொதுக் கணக்குக் குழு போன்ற நிறுவனங்களைப் பாராளுமன்றம் சொந்தமாகப் பெற்றிருக்கிறது.

கணக்குத் தணிக்கை நாயகம் முதலில் கிளாட்ஸ்டான் (Gladstone) என்பவரால் 1806-ல் அமர்த்தப் பெற்றார். திரண்ட நிதியிலிருந்து ஊதியம் பெறும் இவர் பொதுமக்கள் சபையின் ஓர் அலுவலர். இரு சபைகளின் பேருரையின் பேரில்தான் இவர் நீக்கப் படலாம். பண ஒதுக்கீட்டுச் சட்டத்தில் பாராளுமன்றத்தால் அனுமதிக்கப்பட்ட தொகைகளுக்கு ஒப்பாகக் கருவூலத்தின் கோரிக்கைகள் இருக்கின்றனவா வென்பதைச் சரி பார்த்து திரண்ட நிதியிலிருந்து பணம் அளிப்பதைக் கட்டுப்படுத்துவதும்; பாராளுமன்றத்தால் நிதி அளிக்கப்பட்ட நோக்கத்திற்கு மட்டுமே பணம் செலவிடப்பட்டிருக்கிறதென்பதை உறுதிப்படுத்துவதற்கு துறைகளின் கணக்குகளைத் தணிக்கை செய்வதும் இவருடைய இரண்டு முதன்மையான செயல்களாகும். இவர் பொதுமக்கள் சபையின் அலுவலராகையால் இவர் சபைக்கு நேர்முகமாக அறிக்கை செய்கிறார். பொதுக் கணக்குக் குழுவின் பணிக்கு இவரது அறிக்கை அடிப்படையாக அமைகிறது. துறையின் கணக்குகளில் காணப்படும் முறைகேடான, அளவு மீறிய, தேவை யற்ற வீண்செலவுகளை பொதுக்கணக்குக்குழு இதன் கவனத்திற்குக் கொண்டு வரத் தூண்டுவதால் இப்பொழுது கணக்குத் தணிக்கை நாயகம் ஒரு தணிக்கையாக மட்டும் இருப்பதில்லை.

பொதுக் கணக்குக் குழு முதலில் கிளாட்ஸ்டனால் 1861-ல் நிறுவப்பட்டது. இதில் பதினைந்து உறுப்பினர்கள் இருக்கிறார்கள். இவர்களில் பலர் பொது நிதி இயலில் அக்கறை உள்ளவர்கள். சபையின் கட்சி பலத்திற்கேற்ப இக் குழு அமைகிறது. இதன் தலைவர் எதிர்க்கட்சியின் உறுப்பினராக இருத்தல் ஒரு மரபாகும். கருவூலத்தின் முன்னாள் நிதி அல்லது பொருளாதாரச் செயலராக இவர் பணியாற்றியிருப்பார். கருவூல நிதிச் செயலராக இப்

பொழுது இருப்பவரும் மதிப்பீட்டுக் குழுவின் தலைவரும் இதன் முறையான உறுப்பினர்கள். இக் குழுவின் பணியில் கணக்குத் தணிக்கை நாயகம் பெரும் பங்கு பற்றுகிறார். ஒரு கூட்டம் கூடும் முன் தலைவரைக் கலந்தாராய்ந்தும் சான்றுகளைப் பெறும் பொழுது எப்பொழுதும் உடனிருந்தும் இவர் பணியாற்றுகிறார். கருவூலத்தோடு இவர் நெருங்கித் தொடர்பு கொள்ளுகிறார். இது ஒரு நிபுணர் குழுவாக இருப்பதால் கட்சி அரசியல் இதன் முதிர் சிந்தனைகளில் இடம் பெறுவதில்லை.

இதன் பணிகளாவன:

(1) பாராளுமன்றத்தின் அனுமதி பெறாத செயல் நோக்கங்களுக்காகப் பணம் செலவிடப்படவில்லையென்பதையும் அனுமதிக்கப்பட்டதை விட கூடுதலாக செலவிடப்படவில்லையென்பதையும் உறுதிபடுத்துவதற்காக ஒதுக்கீட்டுக் கணக்குகளை ஆய்வது;

(2) மிகையாக நிதியளிக்கப்பட்டிருப்பதையும், பாதுகாப்பு மதிப்பீட்டைப் பொறுத்த வரை, மற்ற நிதியளிப்பின் பற்றாக் குறைகளைச் சரிகட்ட தேவைக்கு மேற்பட்ட கையிருப்பைக் கேட்டுப் பெறல் பற்றி அறிக்கை கொடுப்பது;

(3) கணக்குத் தணிக்கை நாயகத்தின் அறிக்கையை ஆராய்வது;

(4) மேற் குறிப்பிட்டவைகள் பற்றிப் பாராளுமன்றத்திற்கு அறிக்கை கொடுப்பது;

(5) தேசிய கணக்கு வைப்புப் பற்றிய முறை, வடிவம் பற்றிய மேம்பாட்டிற்காக அவ்வப்போது பரிந்துரை செய்வது.

இக் கடமைப் பணிகளை நிறைவேற்றக் குழு ஆட்களையும், பத்திரங்களையும் பதிவுகளை கேட்டுப் பெறலாம். கணக்கு வைப்பு அலுவலராக இருக்கும் ஒரு துறையின் செயலர் இதன் முன் வருமாறு அழைக்கப்படலாம். இக் குழுவின் ஆய்வுகள் செயல் விளைவு மிக்கவைகளாக இருக்கின்றன. ஏனெனில், பாராளுமன்றத்தின் இதன் அறிக்கைகள் பெறுகின்ற கவனத்தாலன்றி துறைகளில் இவைகள் பெறுகின்ற கவனத்தால் இக் குழுவின் பயனுடைமையை அளவிட வேண்டும்.

கருவூலம், கணக்கு தணிக்கை நாயகம், பொதுக் கணக்குக் குழு ஆகியவற்றின் ஒத்துழைப்பின் வழியாக, கொடுக்கப்பட்ட அதிகாரத்திற்கிணங்க துறைகள் செலவிடுவதைப் பொதுமக்கள் சபை மிக்கப் பயனுள்ள முறையில் உறுதிப்படுத்துகிறது.

மேலும் படித்தற்குரிய நூல்கள்

Ivor Jennings 'Parliament, 'chapter 9.
Paul Eirzig, 'The Control of the Purse'. (1959).
H. I Robinson, 'The Power of the 'Purse,' (1928)
Fc. Deitz, 'English Public Finance', 1933.

# 11. பாராளுமன்றத்தின் சில விசித்திரமான பழக்கங்களும் மரபுகளும்

பழமையான பல பழக்கங்களையும் நடைமுறை விந்தைகளையும் பாராளுமன்றம் தக்க வைத்திருப்பதால் இது கவர்ச்சி மிக்கதாக மட்டுமின்றி அழகானதாகவும் இருக்கிறது. இதன் நடைமுறைகள் பல நூற்றுண்டு பழமையானவை. இவைகளின் தோற்றம் மிகத் திறமை வாய்ந்த பழம் பொருள் ஆய்வாளர்களையும் திணரச் செய்கிறது. வீரத் திருத்தகைகளையும் நகரினர்களையும் இச் சபை உறுப்பினர்களாகக் கொண்டிருந்த இடைக் காலத்திலிருந்து சில நடைமுறை வழக்காறுகள் மரபு வழியாக வந்திருக்கலாம். நகைப்பிற்குரிய பழைய வழக்கங்களை அகற்றி விட்டு புதியனவற்றைப் புகுத்த வேண்டுமென்று உயர் நாட்டமற்ற அரசியல் வாதிகள் கருதுகின்றனர். ஆனல் பழமைச் சான்றுகளாக இருக்கும் வழக்கங்கள், மாண்பையும் மதிப்பையும் அளிக்கின்றன. மிகப் பழமையான பிரதிநிதித்துவ சபையாக இருக்கும் பொதுமக்கள் சபை, சட்ட மியற்றுவதைக் காட்டிலும் கடந்த காலச் சூழ் நிலைகளின் நினைவுச் சின்னமாக இருக்கிறது. இதன் மாயக் கவர்ச்சி வெறும் 'பண்பற்ற பகட்டாரவார மட்டு மன்று'.

பொதுமக்கள் சபை கூடும் இடம் மிகப் பழமையான இடமாகும். இதன் கட்டிடம் தன்னேறில்லாதது. ஒவ்வோர் உறுப்பினரும் அமர்ந்து தலைமை தாங்கும் அலுவலரை நேருக்கு நேர் பார்க்கும் படி மற்றெல்லா நாடுகளிலும் சட்ட மன்றங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. உறுப்பினரில் மூன்றிலிரு பங்கினருக்குக் குறைவானவர்கள் இருக்கப் பொதுமக்கள் சபையில் நீள் இருக்கைகள் அமைக்கப் பட்டிருக்கின்றன. இவைகளில் இருப்ப

வர்கள் சபாநாயகரின் முகம் நோக்கி அமர்வதில்லை. இவர்கள் எதிர் தரப்பினரை நோக்கி அமர்கிறார்கள். தனிப்பட்ட இடங்கள் உறுப்பினருக்கு ஒதுக்கப்படுவதில்லை யென்பதைப் புதிய உறுப்பினர்கள் அறிவதில்லை. எனவே தனியிடம் கேட்டு எழுத் தருக்கு இவர்கள் விண்ணப்பிக்கிறார்கள். மேல் பார்வைக்கு சபை ஒரு திருக் கோட்டத்தின் தோற்றத்தைக் கொடுக்கிறது. மேலிருந்து பாயும் மென்மையான ஒளி இட முழுமைக்கும் இனிமை யூட்டுகிறது. இங்கு மாண்பும், சொல்லோய்வும், போற்றற்குரிய வசதியும் நிலவுகிறது.

சபை கூடும் நாளன்று காலையில் பழமை நலம் கனிந்த ஒரு சடங்கு நடந்தேறுகிறது. சபையின் துவக்க நாளன்று அதிகாலைப் பொழுதில் லண்டன் டவரில் இருந்து 12 பேர் அடங்கிய காவற் படைப் பிரிவொன்று வெஸ்ட்மின்ஸ்டரை நோக்கி அணிவகுத்துச் செல்கிறது. 1600ஆம் ஆண்டின் பாணியை யொட்டி எரியும் விளக்கை எடுத்துக் கொண்டு டியுடர் காலத்திய அரசுரிமைச் சின்னங்களோடும் அழகுச் செறுக்கோடும் வருகிறார்கள். இவ் விடத்தின் பொறுப்பாளராகிய பெருங் கோவள்ளுவரோடு (Lord Great Chamber Lain) சட்ட சபையின் வழியாக உலைந்து நடந்து அறைகளில் நுழைந்து அழகிய நீள் நெடுமாடத்தின் ஒவ்வொரு மூலை முடுக்கையும் பார்வையிடுகின்றனர். நிலக்கரித் தொட்டிக் குள்ளும் வெளியும், நிராவிக் குழாய்களையும், இன்தேறல் நிலவறை களையும், குப்பையறைகளையும் பார்த்து இக் காவல் வீரர் ஏறு போல் பீடு நடைபோட்டுச் செல்லுகின்றனர். அரசரின் எதிரிகள் எங்காவது ஒரு மூலையில் வெடி மருந்து வைத்திருக்கிறார்களா என்று இவர்கள் உற்று நோக்கிச் செல்கிறார்கள்.

முதலாம் ஜேம்ஸ் மன்னர் காலத்தில் ஸ்பானியப் படையில் பணியாற்றிய கைஃபாக்ஸ் (Gay Faukes) என்னும் இளம் ஆங்கி லேயர் ஒருவரைச் சதிக்காரர்கள் பாராளுமன்றத்தைத் தகர்க்க கூலிக்கமர்த்தினார்கள். கைஃபாக்ஸ் கவனமாகக் கட்டிடத்தின் அடித்தளத்தில் வெடி மருந்தை மறைவாக வைப்பதில் வெற்றி கண்டார். அரசரோடு பாராளுமன்றம் கூடும் பொழுது வெடி மருந்து வெடிக்க ஏற்பாடாயிருந்தது. தகவல் அறிந்த அரசாங்கம் வெடிமருந்து வெடிக்க இருந்த நவம்பர் மாதம் 5-ம் நாளன்று கைஃபாக்ஸ் கையும் களவுமாகப் பிடித்தது. இத்தகைய தீய நிகழ்ச்சி எதுவும் நடைபெறாமல் தடுப்பதற்குத்தான் இச் சோதனை இன்று நடக்கிறது.

இப்பொழுது முன்னெச்சரிக்கையாக எல்லா இடங்களும் அடிக்கடி சோதனை செய்யப்படுகின்றன. 1605-க்குப் பின் பாராளு-

மன்றம் புதிய கட்டிடத்தில் கூடுகிறது. விளக்கொளி இல்லாத நிலவறைகள் இப்பொழுது இங்கு இல்லை. ஆனாலும் காவற் படையினர் சோதனையை இன்றும் தொடர்ந்து செய்கின்றனர். கட்டிடத்தின் ஒவ்வொரு அங்குலமும் மின் விளக்குகளால் ஒளி யூட்டப் பெற்றிருப்பினும் இக் காவல் வீரர்கள் மங்கிய ஒளி விளக்குகளை ஏந்திச் செல்லுகிறார்கள். சோதனை முடிந்ததும் அரண்மனைக்கு 'எல்லாம் சரி'யென்று அறிக்கை கொடுக்கிறார்கள். பழமை நலம் சிறக்க அரசர் நலம் பாராட்டித் தேறல் அருந்திக் கடமையை முடிக்கிறார்கள்.

சபாநாயகரின் நுழைவோடு சபை கூடுகிறது. தன் மதகுரு, காவல் முகவர், சபையின் முத்திரைக் கோலைச் சுமந்து வருபவர் ஆகியவர்களோடு சபாநாயகர் அணிவகுத்து பெரிய பிரகாரத்தின் வழியே வந்து சபைக்குள் நுழைகிறார். பின் இறை வணக்கம் நடைபெறுகிறது. இச் சமயத்தில் சபையில் ஒரு சில உறுப்பினர் களே இருப்பர். வழிபாடு முடியும் வரை வெளியார் சபைக்குள் அனுமதிக்கப்படுவதில்லை. வழிபாட்டின் போது அரசாங்கத் தரப்பினர் (அமைச்சர்கள்) சபையில் இருப்பதில்லை. மற்றவர் களுக்கு வழிபாடு தேவை. அமைச்சர்களுக்கு தேவையில்லை யெனக் கருதலாகாது. அமைச்சர்கள் சபையில் இடம் பிடிக்க முன் கூட்டியே வர வேண்டியதில்லை. இவர்களுக்கான இடம் ஒதுக்கப்பட்டிருப்பதே இதற்குக் காரணமாகும்.

இறை வணக்கம் முடிந்ததும் வாயிற்காப்போன். 'சபாநாயகர் தலைமை வகிக்கிறார்' என்று குரலொலி எழுப்புகிறான். பணித் துறை முத்திரைக் கோல் (Mace) எல்லோருக்கும் தெரியுமாறு மேசையின் மீது வைக்கப்படுகிறது. இது சபை குழுவாகவன்றிச் சபையாகக் கூடுவதைக் குறிக்கிறது. சபை குழுவாகக் கூடும் போது காவற் முகவர் இம் முத்திரைக் கோலை மரியாதையோடு எடுத்து மேசையின் கீழ், பார்வையில் படாமல், வைக்கிறார். சபை தள்ளி வைக்கப்படும் பொழுதும் சபாநாயகர் வெளியேறும் போதும் இதையும் இவரோடு எடுத்துச் செல்கிறார்கள். இச் சிறப்பிற்குரிய இம் முத்திரைக் கோல் ஐந்தடி நீளமாகவும் தங்க இலையில் அழகாக ஒப்பனை செய்யப் பட்டதாகவும் ஒளிவீசும் மகுடத்தோடு கூடியதாகவும் இருக்கிறது.

அரசர்கள் பாராளுமன்றத்திற்கு வந்திருந்த இடைக் காலத்தில் இம் முத்திரைக் கோல் பயன்பாட்டில் இருக்கிறது. அரசர் பேரவைக்கு வருவது வழக்கமாக இருந்தது. பின் பாராளு மன்றத்திற்கும் இவர் வருகை தந்தார். பாராளுமன்றம்

இரு சபைகளாகப் பிரிந்தமர்ந்த போது அரசர் பெருமக்கள் சபையில் அமர்ந்தார். பொதுமக்கள் சபைக்கு ஏதாவது சொல்ல வேண்டுமாயின் இச் சபையைப் பெருமக்கள் சபை முன் வருமாறு கட்டளையிடுவார். புதிய பாராளுமன்றத்தைத் துவக்கும்போது அரசர் இப்படித் தான் செய்கிறார். பின் இவர்கள் பொதுமக்கள் (சபையினர்) சபைக்குச் சென்று இவர்களின் அதிகார வரம்பிற்குட்பட்டவைகளை, சிறப்பாக நிதி பற்றியவைகளை, விவாதிப்பார்கள். அரசர் சபையில் இல்லாததை ஈடு செய்ய இவரின் சின்னத்தை இவர்கள் வைத்துக் கொண்டு அரசரின் ஆணையால் கூடுவதாகவும் அரசரின் பாதுகாப்பில் செயல் படுவதாகவும் கருதிக் கொண்டார்கள். மகுடமுடைய இக் கோல் முத்திரைக் கோலாயிற்று. இக் கோல் மேசையில் இல்லாமல் சபை, சபையாக இயங்காது.

இப்படியாக இது குறைந்தது ஐந்து நூற்றாண்டு இருந்து வந்துள்ளது. இது தன் வரலாற்றைக் கூறுமாயின் அது ஒரு நீண்ட காவிய நயமுடைய சுவையான கதையாக இருக்கும். ஒரு சமயம் முத்திரைக்கோல் வெளியேற்றப்பட்டதை இது சொல்லலாம் பாராளுமன்றம் இதன் பதவிக் காலத்தை நீடிக்க விரும்பியதைக் கண்டு வெஞ்சினம் கொண்ட கிராம்வெல் 1653-ல் இதை அகற்றினார். படையணியொன்றோடு வெஸ்ட்மின்ஸ்டருக்கு சென்று உறுப்பினர்களை இவர் வெளியே ஒட்டினார். பின், மேசைமேல் இருந்த முத்திரைக் கோல் இவர் கண்ணில் பட்டது. ‘அகற்று அக் கோமாளிச் சின்னத்தை’ என்று சீற்றத்தினால் அலறினார். முத்திரைக் கோலும் மேசையிலிருந்து மறைந்தது. ஆனால் விரைவில் இது மறுபடியும் தோன்றியது.

பொதுமக்கள் சபையின் எழுத்தரால் பயன்படுத்தப்படுவதும் முத்திரைக் கோல் வைக்கப்படுவதுமான மேசை மிகத் திண்மையானதாகும். அரசாங்கத் தரப்பிற்கும் எதிர்த் தரப்பிற்கும் இடையேயுள்ள பெருமளவு இடத்தை இது கவர்ந்து கொண்டிருக்கிறது. இதன் மேல் அடுக்கடுக்காய் நூல்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. அமைச்சர்களும் எதிர்த் தரப்பினர்களும் தாம் சொற்பொழிவாற்றும் பொழுது இவைகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம். அரசாங்கத் தரப்பினரும் எதிர்த் தரப்பினரும் இவைகளை உரை மேடைகளாகப் பயன்படுத்திக் கொள்வதும், குறிப்புகளை இவைகளின் மேல் வைத்துக் கொள்வதும், கருத்துகளை வலியுறுத்த இவைகளை அறைந்து ஒலியெழுப்புவதும் வழக்கமாக இருந்து வருகிறது. பிரதமராக இருந்த நீண்ட காலத்திலும் எதிர்க்கட்சித் தலைவராக இருந்த காலத்திலும் கிளாட்ஸ்டன் இவ் வுரை மேடைகளை, இவருடைய முத்திரை மோதிரம் மோதிக்

குழி பறிக்கும் அளவிற்கு தண்டித்துள்ளார். இவ் வுறுப்பினர் தம் வாக்குவாதங்களே எவ்வளவு உயிர்த்துடிப்போடு அவை ஏற்குமாறு எடுத்துரைத்தார் என்பதற்கு இன்றும் இவை சான்று கூறும்.

சபாநாயகரின் வலப்பக்கத்தில் பொதுமக்கள் சபையின் உறுப்பினராக உள்ள அமைச்சர்கள் அமருகிருர்கள். இருக்கும் இடத்திற்கதிகமாக அமைச்சர்கள் இருந்தால் மூத்த அமைச்சர்கள் முன்னிருப்பர் மற்றவர்கள் அரசாங்கத் தரப்பினரோடு சபையில் ஓரிடத்தில் உட்கார்ந்து கொள்ளுகிருர்கள். ஆனுல் இங்கு இடமிருந்தால் அமைச்சர் உட்காரும் எல்லா உரிமைகளேயும் பெற்றிருக்கிருர். மேலும், பாராளுமன்ற வழக்கம் ஒன்றினுல் லண்டன் நகருக்கான இரு உறுப்பினர்கள் இந்த நீள் இருக்கையில் அமர உரிமை பெற்றிருக்கிருர்கள். ஆனுல் பாராளுமன்றத்தில் துவக்க நாளிலன்றி இவர்கள் அமைச்சர்களாக இருந்தாலொழிய இதில் அமருவதில்லே. அந் நாளில் தம் பழமையான உரிமையை வலியுறுத்தும் பொருட்டு இவர்கள் ஒரு சில நிமிடங்கள் இதில் அமருகிருர்கள். இவர்கள் எதிர்க் கட்சியினராக இருந்தாலும் அமைச்சர்களோடு இந் நீள் இருக்கையில் அமர உரிமை பெற்றிருக்கிருர்கள்.

எதிர்த்தரப்பு நீள் இருக்கையில் யார் அமரலாமென்பதை வழக்கம் வரையறை செய்யவில்லே. இருப்பினும், பொதுவாக இந் நீள் இருக்கை எதிர்த் தரப்பின் முதல் நிலேத் தலேவர்களுக்கு ஒதுக்கப்படுகிறது. இவ் வரம்பு நெகிழ்ச்சியானதாகும். நடைமுறை வழக்கில் எதிர்க்கட்சித் தலேவர் தம்முடன் யார் இதில் அமர்வதென்பதை முடிவு செய்கிருர். ஏனெனில் அழைப்பின்றி எவரும் இங்கமரச் செல்லமாட்டார். இவருடைய சில முதன்மையான உதவியாளர்கள் இவரோடு இருப்பர். ஒரு குறிப்பிட்ட விவாதத்தின்போது கலந்தாராய்வதற்காக மற்றவர்கள் இங்கமர்தல் விரும்பப்படுகிறது. இத்தகைய வாய்ப்பை இளம் உறுப்பினர் எதிர்நோக்கி இருப்பர்.

பெருமை ஒரு புறமிருக்க, சபையின் பிரகாரத் தலேப்பில் இந் நீள் இருக்கைகளில் இருந்து கொண்டு உரை நிகழ்த்துவதில் ஒரு குறிப்பிட்ட நன்மை இருக்கத்தான் செய்கிறது. இவ்விடத்தில் மட்டும்தான் பேச்சாளர் சாய்ந்து நின்று கொண்டு பேச வசதி இருக்கிறது. மேலும் மற்ற இடங்களிலிருந்து பேசும்போது உறுப்பினர்களே நேருக்கு நேர் பார்த்துப் பேச இச் சபையில் இருக்கை வசதிகள் இல்லே. இருப்பினும் நல்ல வேளேயாக, உறுப்பினர் சபையில் எங்கிருந்து பேசினுலும் நன்ருகக்கேட்கும்படி ஓசை நயப் பண்புகளே சபை பெற்றிருக்கிறது.

சபையின் இதே மட்டத்தில் சபாநாயகரின் வலப்பக்கத்தில் ஒரு நுழைமாடம் அல்லது ஒரு சிறிய அடைப்பிடம் இருக்கிறது. இங்கு சபையின் நிலையான அலுவலர்கள் அமருகிறார்கள். விவாதத்தின்போது இவர்களின் உதவி தேவைப்படலாம். தொல்லை தரும் எதிர்க் கட்சி பேச்சாளர் ஒருவர் ஒரு பிரச்சினையை எழுப்பலாம். பதில் தருவதற்கான கருத்துகளை அமைச்சர் இவ் வடைப்பிடம் சென்று பெறலாம். தொழில் சார்புடைய கீழ்நிலை அலுவலர்களின் குரலாகத்தான் அமைச்சர் இருக்கிறார் என்ற கருத்திற்கு இது இடமளிக்கிறது.

தொப்பிகளோடு தொடர்புடைய சில நடைமுறை விசித்திரப் பாங்குகள் இச் சபையில் இருக்கின்றன. தொப்பிகளோடு உறுப்பினர்கள் சபையில் அமர்ந்திருப்பது வருநர்களுக்கு வியப் புண்டாக்கலாம். படைக் கலந்தரித்த பெருமக்களும் வீரத்திருத் தகைகளும் சபையில் கலந்து கொண்டதிலிருந்து இவ் வழக்கம் தொடர்ந்து வந்திருக்கிறது. இருப்பினும் பெருமக்கள் சபையினர் விவாதங்களின் போது தொப்பியணிந்து கொள்வதில்லை. படைக் கலந்தரித்து சபைக்கு வந்தவர்களின் மரபு வழி வந்தவர்களாக இவர்கள் இருந்தபோதிலும் இவர்களிடம் இப் பழக்கம் இல்லை யெனலாம். இவர்கள் தொப்பியணிந்து கொண்டு சபையில் இருப்பதற்கு சபையில் வைப்பிடம் (Coat room) இல்லாமை ஒரு காரணமாக இருக்கலாம். பழங்காலத்தில் பாராளுமன்ற உறுப் பினர்கள் தொப்பியும் நெடுஞ்சட்டையும் அணிந்திருந்ததைப் படங்களிலிருந்து அறிகிறோம். ஆனால் 17ஆம் நூற்றாண்டில் இவர்கள் தொப்பியின்றித் தோன்றினர். 18ஆம் நூற்றாண்டில் இவர்கள் பொய் மயிர்த் தோகையைத் தலையணியாக அணிந்திருந் தார்கள். 19ஆம் நூற்றாண்டு வரையில் தொப்பி தோன்றவில்லை.

ஆனால் தொப்பியணியும் வழக்கம் சபையில் மறைந்து கொண் டிருக்கிறது. பட்டுத் தொப்பியணியும் ஒரு சில உறுப்பினரிடையே இப் பழக்கம் இருக்கிறதெனினும் இதுவும் விரைந்து மறைந்து கொண்டிருக்கிறது. மாறாக, பெருமக்கள் சபையில் தொப்பி யணியும் வழக்கம் பெரிதும் பரவலாகக் காணப்படுகிறது. இன்று சபைக்கு வருநர் பலர் தொப்பியோடு தோன்றுவதைப் பார்க் கலாம்.

பொதுமக்கள்சபையில் தொப்பியணிதலோடு தொடர்புடைய மரியாதைப் பண்புகள் கடுத்தமாகச் செயல்படுத்தபடுகின்றன. பேச எழும் வரையிலும் இடம் விட்டு இடம் பெயரும் வரையிலும் ஓர் உறுப்பினர் தொப்பியணிந்து கொண்டிருக்கலாம். பின் இவர் இதை விலக்கிக் கொள்ள வேண்டும். இவ் விதி பெண்களுக்குப்

பொருந்தா. முன்னிருக்கும் உறுப்பினரோடு மெல்லொலியில் பேசுவதாயினும் இவர் தம் தொப்பியை அகற்றிவிட வேண்டும். தொப்பியை உயர்த்துதல் சபாநாயருக்கு ஓர் அறிவிப்பாகவும் இருக்கிறது. விவாதம் முடிவுற்றதும், சபாநாயகர், மசோதாப் பொறுப்புடைய அமைச்சரை நோக்குகிறார். அமைச்சர் எழவில்லை யெனினும் பேசவில்லையெனிலும் தம் தொப்பியை உயர்த்துகிறார். சபாநாயகரும் இதையறிந்து அடுத்த நிகழ்ச்சிக்குச் செல்கிறார். சபாநாயகரும் ஒரு தொப்பியை சபைக்குள் கொண்டுவந்து, இருக்கைக் கைபிடியில் தொங்க வைத்திருந்து சபையிலிருந்து வெளியேறும் போது எடுத்துச் செல்லுகிறார். இது இவருடைய சீருடையில் ஓர் அங்கம். ஆனால் இவர் இதை அணிவதில்லை. பெருமக்கள் சபைத் தலைவராகிய சான்சலர் இதைத் தம் பொய் மயிர்த் தோகைக்கு மேல் அணிந்து கொள்ளுகிறார். ஆனால் சபையின் சிறப்பு நிகழ்ச்சிக் காலங்களில் தான் தொப்பியணிவது வழக்கமாகும்.

முன் வரிசையில் அமராத உறுப்பினர் எவரும் தம் இடத்தில் ஒரு தொப்பியை வைத்து இடம் ஒதுக்கிக் கொள்ளும் வழக்கம் எழுதப் பெறாத ஒரு விதியாகும். நூலகத்திற்கு, புகை பிடிக்கும் அறைக்கு உணவகத்திற்கு அல்லது மாடிக்குச் செல்ல விரும்பும் உறுப்பினர் தம் இடத்தில் தம் தொப்பியை விட்டுச் செல்லுகிறார். திரும்பி வரும் பொழுது தம் இடத்தில் எவரும் அமரார் என்ற நம்பிக்கையில் இவர் செல்லுகிறார். இயல்பான சபைக் கூட்டங் களில் இட நெருக்கடி ஏற்படுவதில்லை. கூட்டத் தொடரின் தொடக்க நாள் அல்லது ஒரு சிறப்பான விவாத நாள் போன்ற நாள்களில் இடத்திற்கு முந்தியடித்துக் கொண்டு செல்வது சுவை யான தொரு காட்சியாகும்.

இட ஒதுக்கல் முறையிலும் ஒரு மென்சுவைப் பண்பு வெளி யாயிற்று. பல ஆண்டுகளுக்கு முன் ஐரிஷ் தேசியவாதிகள் தம் கட்சியினர் அனைவருக்கும் இட ஒதுக்குவதற்குப் பொழுது புலரா முன் சபைக்கு வந்து பவதரப்பட்ட தொப்பிகளைத் தக்க இடவெளி களில் இட்டு இடம் ஒதுக்கினர். இந் நிகழ்ச்சியில் தோய்ந்திருந்த நகைச்சுவையை துய்த்துணரா டோரிக் கட்சியினர் எதிர்ப்புத் தெரிவித்தனர். இதையொட்டி, இனிமேல் உறுப்பினர்கள் தம் தொப்பியை கொண்டுதான் சபையில் இடம் ஒதுக்கிக் கொள்ள வேண்டுமென்று விதி செய்யப்பட்டது. புதிய விதிகளின்படி உறுப்பினர் தம் பெயர் அட்டையைத் தம் இடத்தில் விட்டுச் செல்லலாம்.

தொப்பிக்குத் தோழமை காட்டிய சபையின் வழக்காறு வாளுக்குப் பகைமை காட்டியது. எவரும் சபைக்குள் வாளையோ

அல்லது இதைப் போன்ற கருவியையோ கொண்டு வரலாகாதென விதி செய்தது. ஆங்கிலப் பெருங்குடியினர் கூரிய வாள் தரித்திருந்ததை இத் தடை நினைவூட்டுகிறது. கடும் சொற்போரில் ஈடுபடும் சினங் கொண்ட உறுப்பினர்கள் உடைவாளை பயன் படுத்தியது இயல்பாகும். எதிரே இருப்பவர் இவரை இதே முறையில் எதிர்க்கலாம். மோதலைத் தவிர்க்க இரு தரப்பு நண்பர்கள் இடைமறித்துத் துயரகற்றிய செய்திகள் பல இருக்கின்றன. சினங் கொண்ட நிலையில் சபை, இரு தரப்பு உறுப்பினரிடையே அமைதியைப் பேண, நீளிருக்கையின் கீழ்பகுதியில் நிலத்தில் 24 அங்குலம் விட்டு மென் சிவப்புக் கோடு கிழிக்கக் கட்டளையிட்டது. சபையில் உரை நிகழ்த்துகையில் உறுப்பினர் எவரும் இக் கோட்டைத் தாண்டலாகாதென சபை விதி வகுத்தது.

சபையில் கை கலப்பை இது குறைந்ததென்றாலும் நீள்மாடக் கூடத்தில் உறுப்பினர்கள் தம் வேறுபாடுகளை முடிவு கட்ட மற்போரைப் பயன்படுத்தலாம். இந் நிகழ்ச்சிகளுக்குப் பின் உடை வாள் தரித்தலை சபை அறவே தடை செய்தது. பெரும் புகழ் மிக்கப் படைத் தலைவர்கள் சபைக்கு வரும்பொழுது தம் படைக் கலன்களை வாயிற் காப்போனிடம் விட்டு வர வேண்டிய அளவிற்கு இத் தடை கடுமையாக செயல்படுத்தப்படுகிறது. அரசரின் கருத்துரையை (Speech from the throne) எடுத்து மொழி வரையும் அடுத்து மொழிபவரையும் இத் தடை கட்டுப்படுத்தாது. சபையின் காவல் முகவர் (Sergeant-at-arms) வாள் தரித்திருந்தாலும் இவர் சபையின் உறுப்பினரல்லர். இவருடைய இருக்கையும் சபைக்கு வெளியேதான் இருக்கிறது. மிகப் பழங்காலந் தொட்டு இவ் விருவரும் படைக் கலன் தரித்துச் சபைக்கு வருதல் பழக்கமாக வந்து கொண்டிருக்கிறது. அரசரின் பேருரைக்கு வழி மொழியும் நாளன்று மட்டுமே இவர்கள் சபைக்கு வருகிறார்கள்.

சபையின் பிரதான நுழை வாயிலைப் பாதுகாக்கும் சூழற் கதவுகளுக்குள், இருக்கும் பித்தளைச் செருகிழைக் கம்பித் தடை மத்திய பிரகாரத்தை மூடுவதற்கு பயன்படுகிறது. பாராளுமன்ற ஆண்டுத் தொகுப்பேடுகளில் 'சபையின் கம்பித்தடை' அடிக்கடி தோன்றி மறைகிறது. யாரையாவது சபை தன்முன் கொணருமாறு ஆணையிட்டால் காவல் முகவர் அவர்களை இங்கு கொண்டு வந்து நிறுத்துவார். சபையின் உரிமையை மீறியதற்காகத் தண்டிக்கப்பட வேண்டியவர்களும் இக் கம்பித் தடைக்கருகே கொண்டு வரப்படுகிறார்கள். சிறை வைக்கும் அதிகாரத்தைச் சபாநாயகர் 1880-வரை பயன்படுத்தவில்லை. 1880-ல் சார்லஸ் பிராட்லா (Charles Bradlaugh) ஒழுங்கீனமாக நடந்து கொண்ட

பொழுது சிறைப்படுத்தப்பட்டார். சபாநாயகரின் தண்டனைக்குள்ளாகும் உறுப்பினரைச் சிறைப்படுத்த இன்னும் மணிக்கூண்டில் சில அறைகள் இருக்கின்றன.

குற்றம் செய்தவர்கள் மட்டுமே சபை முன் கொண்டு வரப்படவில்லை. புகழ் பெற்ற உயர் நிலையாளர்கள் பலர் பல்வேறு சமயங்களில் வினவப்படவும், அறிக்கை கொடுக்கவும், தம் சார்பில் வாதிடவும், நாட்டிற்காக ஆற்றிய பணிகளுக்காகச் சபையின் நன்றியறிதலை ஏற்கவும் சபை முன் தோன்றினுர்கள். தீவக்குறைப் போர்களில் பெரும் பணியாற்றிய வெல்லிங்டன் கோமகன் சபையின் நன்றியையேற்க சபை முன் வருமாறு அழைக்கப் பெற்ருர். 1828-ல், டேனியல் ஓ காணல் (Daniel O' Connell)கத்தோலிக்கரின் விடுதலைக்காக சபை முன் தோன்றிப் வாதித்தார். இவ்வாறு இன்னும் பல வரலாற்று நிகழ்ச்சிகளை எடுத்துக் கூறலாம்.

சபையின் பேச்சு வழக்கில் அடிபடும் இன்னெரு சொல் 'இடைவழி'யாகும். ஆகவே, இடைவழிக்குக் கீழுள்ள நீள் இருக்கைகள், அல்லது இடைவழிக்கு மேலேயுள்ள நீள் இருக்கைகள் பற்றி அடிக்கடி சபையில் பேசப்படுகிறது. உறுப்பினர் உட்கார்ந்திருக்க வேண்டுமென விதி இல்லை. ஆனுல் இடை வழிக்குக் கீழ் இடம் பிடிக்க இளைய உறுப்பினர்கள் விரும்புகிருர்கள். இப் பின்னணி உறுப்பினர்கள் விரும்பினுல் அமைச்சர்களுக்குத் தொல்லை கொடுக்கலாம்.

பின்னணி உறுப்பினர் இப்பொழுதெல்லாம் மரபையொட்டி செயல் படுவதில்லை. தொழில் கட்சி உறுப்பினர் சிலர் இடைமறிப்பும் பேரொலி எழுப்பியும் சபை நிகழ்ச்சிகளைத் தடை செய்தனர். முதல் உலகப்போருக்கு அரை நூற்றுண்டிற்கு முன் ஐரிஷ் உறுப்பினர் தம் சுவையார்வமிக்கத் தனியியல்போடு சபையை நிறைத்தனர். சிறந்த சொற்பொழிவுகளையும் நகைச் சுவைகளையும் ஒழுங்கின்மையையும் இவர்கள் பெருமளவில் சபைக்களித்தனர். இடைமறிப்பால் தூண்டப்பட்ட நீண்ட நேரப் பேச்சாளர் ஒருவர், 'நான் உங்களுக்குச் சொல்லவில்லை, வருங்காலத்தினருக்காகச் சொல்லுகிறேன்', என்ற பொழுது, 'விரைந்து முடிக்க', இல்லையெனில் வருங்காலத்தினர் உங்கள் பேச்சைக் கேட்க உங்கள் முன் வந்து விடலா'மென ஐரிஷ் உறுப்பினர் ஒருவர் உரக்கக் கத்தினுர். நகைச்சுவை முற்றிலும் சபையிலிருந்து விடை பெற்றுக் கொண்டதென்று கருதி விடலாகாது, ஆயினும் இதன் பெருமளவு ஐரிஷ் உடன் படிக்கையோடு சென்றுவிட்டதென்பதையும் மறுக்க முடியாது.

வாக்குப் பதவிற்காக சபையினரின் பெயரை சொல்லி அழைக்கும் வழக்கம் இச் சபையில் இல்லை. வாக்களிக்குமாறு சபா நாயகர் கட்டளையிடுகிறுர். கருத்து அடிப்படையில் சபை உண்மை யிலேயே 'பிரிகிறது' (Divides) இரு வாக்களிப்பு அறைகளுக்குள் உறுப்பினர்கள் சொல்லுகிறுர்கள். ஆதரித்து வாக்களிக்கிறவர்கள் வலப் பக்கமுள்ள அறைக்கும் எதிர்த்து வாக்களிக்கிறவர்கள் இடப்பக்கம் உள்ள அறைக்கும் செல்கிறுர். வாக்கெடுப்பு நிகழ்ச்சியை அறிவிக்கப் பாராளுமன்ற அறைகளில் மணியோசை கேட்கும். ஆறு நிமிடங்கள் வரை வாக்களிப்பு அறைகளில் உறுப்பினர் அனுமதிக்கப்படுகிறுர்கள். பின்னர் உறுப்பினர் சாய்வு மேசையருகில் சென்று தம் வாக்குகளைப் பதிவு செய் கிறுர்கள். இது பத்து நிமிடங்களில் முடிவடையும்.

சபையின் செயலாண்மைப் பணியாளராகக் கட்சிக் கொற டாக்கள் இருக்கிறுர்கள். இவர்கள் தாம் உறுப்பினர்களை வாக் களிப்பு அறைக்குள் ஒன்று திரட்டி அனுப்புகிறுர்கள். ஒவ்வொரு கட்சிக்கும் மூத்த, இளைய கொறடாக்களோடு துணைக் கொற டாக்கள் பலரும் இருக்கின்றனர். ஒரு விஞடியில் பெரும்பான்மை யான உறுப்பினரை அரசாங்கத்தின் சார்பில் திரட்டக் கூடிய திறமிக்கவராக கொறடா இருக்க வேண்டும். வாக்கெடுப்பில் தோல்வியேற்பட்ட அமைச்சவைக்கு எல்லை இல்லாத் தொல்லைகள் உண்டாகும். எதிர்க் கட்சிக் கொறடாவும் இதே போல் எல்லாத் தந்திரங்களையும் கையாண்டு ஆளும் கட்சியினரைத் திணரடிக்க அயராது பாடுபடுவார். இவ் விரு பதவியாளர்கள் விழிப்புடனும், வகை முறை வாய்ப்பு வளமுடனும், நல்லிணக்கமுடனும், சாமர்த் தியமுடனும் இருக்க வேண்டும், சபை நிகழ்ச்சிகள் சுவையற்றிருப் பினும் இவர்கள் எப்பொழுதும் சபையில் இருக்க வேண்டும். ஏனெனில் எதிர்பாராத வகையில் சபை வாக்கெடுப்பில் ஈடுபட லாம். 'சபையைப் ஆக்கலும், சபையைப் பேணலும், அமைச்சர் களை மகிழ்வித்தலும்' அரசாங்கக் கொறடாவின் பணிப் பொறுப்பு களாகுமென டிஸ்ரெலி கூறினுர். இவர் கூற்று இன்றும் பொருந்தும்.

அவசர அழைப்பு வரும் போது தம்மை எங்கு தேடலாம் என்பதை உறுப்பினர் கொறடாவிற்கு அறிவிக்கும் கடமைப் பொறுப்புள்ளவர்கள், வாக்கெடுப்பு அடுத்து வர இருக்குமாயின் ஒவ்வொரு உறுப்பினரும் இணை சேர வேண்டும். கட்சிக் கொற டாக்கள் இணை சேர்க்கின்றுர்கள். இவர்களிடம் வரா உறுப் பினரின் பெயர் பட்டியலிருக்கும். இது வாக்குகளைச் சமப்படுத்தி விடுகிறது. அரசாங்கத் தலைமைக் கொறடா கருவூலத் துறையில்

பெயரளவுப் பதவியொன்றை வகிக்கிறார். இதற்கான ஊதியமும் பெறுகிறார். ஆனால் கருவூலத் துறையோடு இவருக்கு எவ்விதக் கடமைப் பொறுப்புகளுமில்லை. இவருக்குக் கீழ் உள்ள மூன்று உதவிக் கொறடாக்களும் கருவூலப் பதவி காரணமாக ஊதியம் பெறுகிறார்கள். இவர்கள் கருவூல இளம் பிரபுக்களென தரப் படுத்தப் பட்டுள்ளனர். எதிர்க் கட்சிக் கொறடாக்களுக்கு ஊதிய மில்லை. பதவிக்கு வந்தால் இவர்கள் ஊதியம் பெறலாம்.

சபையின் இக் காலத்திய பணிகளில் மிகப்பழமையானது விண்ணப்பங்களைப் பெற்றுக் கொள்வதாகும், முதலில் பொது மக்கள் சபை மக்களிடமிருந்து பெற்று அரசரிடம் அளித்தது. விண்ணப்பக் கோரிக்கைகளை அரசர் முடிவு செய்தார். இன்றும் இவைகள் வந்து கொண்டு இருக்கின்றன. ஆனால் இவைகள் அரசரிடம் செல்வதில்லை, ஒரு சில விண்ணப்பங்களை இப்பொழுது தொகுதியினர் அளிக்கின்றனர். ஆனால் இவைகள் சபையில் வாசிக்கப்படுவதில்லை விண்ணப்பத்தின் தன்மையையும் இதில் எத்தனை கையெழுத்துக்கள் உள்ளன வென்பதையும் இது சம்பந்தப் பட்ட உறுப்பினர் சபைக்கு அறிவிக்கிறார்.

சபையில் கைதட்டும் வழக்கமில்லை. அக் காலத்தில் கை தட்டலை பொது மக்கள் சபையினர் அறிந்திருக்கவில்லை. சபையில் குறிப்பிடப்பட்ட ஒரு கருத்தை ஒருவர் ஏற்றுக் கொள்ளுகிறார் என்றால், ‘கேளுங்கள்! கேளுங்கள்!’ என்று கத்துவார். இவரோடு இன்னும் பல சேர்ந்து கொண்டு பேரொலி எழுப்பலாம். அமைச் சரின் கூற்றுகளைக் கேட்டு உறுப்பினர் ஏளனச் சிரிப்பு சிரிக்கலாம். அல்லது ‘கேளுங்கள், கேளுங்கள்’ என்று எண்ணக் குரல் எழுப்ப லாம். சிறந்த சொற்பொழிவொன்றைத் தகர்க்கவும் இம் முறை யைப் பயன் படுத்தலாம். மற்ற குரலொலி இடைமறிப்பு களாகிய ‘ஒழுங்கு ஒழுங்கு’, என்ற சொற்களையும் பயன் படுத்த லாம். இதேபோல் ‘பதவி விலகு’ என்றும், ‘வாக்கெடுப்பு நடத்துக’ என்றும், ‘திருப்பிப் பெற்றுக் கொள்க’ என்றும் கூச்சல் போடலாம்.

சபையில் அமைதியையும் ஒழுங்கையும் நிலை நாட்ட சபா நாயகர் கைச் சுத்தி கொண்டு தட்டுவதில்லை. இவருக்குக் கைச் சுத்தி கிடையாது. இவருடைய ஒரே ஆயுதம் இவரது குரல்தான் குழப்பம் நிலவும் பொழுது இவர் எழுந்து நின்று கையுயர்த்தி அமைதியாக இருக்கும்படி உறுப்பினர்களுக்கு நிதானமாகக் கட்டளையிடுகிறார். வழக்கமாக இவருக்கு உறுப்பினர் பணிவர். சபாநாயகர் நிற்கும் பொழுது வேறெந்த உறுப்பினரும் நிற்கலா

காது. முன்னெல்லாம் சபாநாயகர் எழுந்து நின்றால் அமைதி நிலவும். ஆனால் இப்பொழுது இவர் பெருங்குரல் எழுப்பி அமைதி நிலவச் செய்ய வேண்டியிருக்கிறது. 'மன்றம் ஒவ்வாச் சொல்லை விலக்கி கொள்ளுமாறு இவர் ஓர் உறுப்பினரைக் கேட்டுக் கொள்ள லாம். அல்லது சபை உறுப்பினரைத் தரக் குறைவாகத்தாக்கிப் பேசியதற்காக இவரை மன்னிப்புக் கேட்கும்படி சபாநாயகர் கட்டளையிடலாம். இதற்கு உடன்பட மறுத்தால் உறுப்பினரை வெளியேறுமாறு சபாநாயகர் கட்டளையிடலாம். இதையும் உறுப்பினர் எதிர்ப்பாராயின் சபாநாயகர் இவர் பெயரைச் சுட்டு வார். இதையொட்டிய ஒரு பிரேரணையால் உறுப்பினரைச் சபையின் சேவைகளிலிருந்து அகற்றுவர். இப் பிரேரணை விவாத மின்றி ஏற்றுக் கொள்ளப்படுவது வழக்கம். இவ்வாறு விலக்கி வைக்கப்படுவது அகற்றிக் கொள்ளப்படவில்லை யெனில் சபையின் எஞ்சிய கூட்டத் தொடர் நாள்களுக்கு இவர் விலக்கி வைக்கப் படலாம்.

பொதுமக்கள் சபை பெரும்பாலும் இரவில் செயல்படுகிறது. இரவில் பின்னேரம் வரை இது கூடியிருக்கிறது. சில சமயங்களில் இரவு முழுதும் இடை ஓய்வின்றிக் இது கூடுகிறது. பெரும்பாலும் நடு இரவிற்குப்பின் இதன் கூட்டங்கள் முடிவடையும், இதன் பின் காவலர்கள், 'வீடு செல்பவர் யார்?' என வினவுகிறார்கள். இக்குரல், நூலகம், புகை பிடிக்குமிடம், நீள்மாடக் கூடங்கள், தேம்ஸ் ஆற்றையொட்டிய மன்றக் கட்டிட மாடிகள் ஆகிய இடங்களில் எதிரொலிக்கிறது. அக் காலத்தில் இரவுப் பயணம் பத்திரமாக இல்லையாதலால் காவலர்களின் துணையோடு உறுப்பினர் தம் இல்லம் நோக்கிச் சென்றனர். இப்பொழுது லண்டன் புற நகர்ப் பகுதிகளில் அச்சமின்றிப் பயணம் செய்யலாமாதலால் காவற் படையினர் துணையாகச் செல்லும் வழக்கம் அற்றுப் போய் விட்டது. இருப்பினும் மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்த காவற் படையினர் குரலொலி எழுப்பியது போல் இன்றும் காவற் படையினர் தம் குரலொலியால் கடமையை நிறைவேற்று கின்றனர்.

சபைக் கூட்டம் கலைந்து உறுப்பினர்கள் வீடு திரும்பும்போது காவலர்கள், 'நாளைக்கு வழக்கமான நேரத்திற்கு,' என்று கூறி வழியனுப்புகிறார்கள். இப்போதைய சபை உறுப்பினர்களுக்கு அடுத்த நாள் கூட்டத்தைப் பற்றி நினைவுபடுத்த வேண்டியதில்லை. ஏனெனில் கூட்ட நேரத்தைப் பற்றிய நிலைக் கட்டளைகள் இருக் கின்றன. நிகழ்ச்சித் திட்டத்தில் மாற்றமில்லையெனில் வழக்கம் போல் பிற்பகல் 2-45க்குச் சபை கூடும். கடந்த காலத்தில் நிலைக்

கட்டளைகள் இல்லாத போது இப்படிக் காவலர்கள் நினைவு படுத்தியது இயல்பேயாகும். இப்பழைய வழக்கத்தை விடாது சபை பற்றி நிற்பதற்கு இது ஒரு சான்றாகும்.

பொதுமக்கள் சபை உறுப்பினர் எளிதாகப் பதவியிலிருந்து விலக முடியாது. 1623ஆம் ஆண்டில் செய்யப்பட்ட விதியின்படி சபை உறுப்பினர் எவரும் தம் உறுப்பினர் பதவியை விட்டு விட முடியாது. தொகுதியினர் சார்பில் சேவை செய்ய எடுத்துக் கொள்ளப்பட்ட பின் இதன் பிரதிநிதியாக சபை கலைக்கப்படும் வரையில் இவர் இருந்து வர வேண்டும். சபையின் உறுப்பினர் பதவியை ஒரு சுமையாகக் கருதிய காலத்தின் மரபு வழிக் கருத்தாகும் இது. இன்று ஆங்கிலேயரால் எல்லாப் பிரிவினரும் சபையில் இருந்து சேவை செய்ய விரும்பினாலும், பதவியிலிருந்து விலகும் பழைய விதி மாற்றப்படாமலே இன்றும் இருக்கிறது.

இருப்பினும் ஓர் உறுப்பினர் தக்க காரணங்களுக்காக விலகிக் கொள்ள விரும்பினால் இவரை மேலும் தொடர்ந்து பணியாற்றுமாறு வற்புறுத்துதல் முறையாகாதென்பதை உணர்ந்து ஏற்றி வளைக்கும் முறையென்று பின்பற்றப் படுகிறது. 1705ஆம் ஆண்டுச் சட்டத்தின்படி பாராளுமன்ற உறுப்பினர் ஒருவர் அரசரின் கீழ் இலாபம் தரும் பதவி வகிப்பாரெனில் சபையில் சேவை செய்யும் தகுதியை இவர் உடனடியாக இழந்து விடுகிறார். இம் மசோதாவின் நோக்கம் என்னவென்றால், அரசர் திறமை மிக்க உறுப்பினரை பதவியளிப்பு வாயிலாக தம் பணியாளராக மாற்றி விடலாகதென்பதாகும். இவ்வாறு அமர்த்தப்படுபவர்கள் அரச ஆதரவாளராகவும் அரச உதவித் தொகை பெறுபவராகவும் ஆயினர். எனவே பாராளுமன்றம் தன் சுதந்திரத்தைப் பேணிக் கொள்ளும் பொருட்டு அரசரிடம் ஊதியம் பெறுபவர்கள் சபை உறுப்பினராகத் தொடர்ந்து இருக்கவியலாதென் விதி செய்தனர்.

அரசரின் கொடைச் சின்னமாக சில்ட்ரன் (Chiltern Hundreds) யின் மேற்பார்வையாளர் பதவியொன்று உள்ளது. இப் பகுதி ஒரு காலத்தில் அரசரின் நில உடைமையாக இருந்தது. இதைக் கவனிக்க ஒரு மேற்பார்யைாளர் (Steward) இருக்கிறார். இவர் அரசரால் அமர்த்தப்படுபவர். பின்னர் இப் பகுதி பூங்காக்களாக மாற்றப்பட்டது. ஆயினும் மேற்பார்வையாளர் பதவி தொடர்ந்திருந்து வருகிறது. இது ஒழிக்கப்படவில்லை. பொதுமக்கள் சபையிலிருந்து ஒருவர் வெளியேற இதை ஒரு வழியாக்கும் நோக்கத்தில் இப் பதவி வைத்துக் கொள்ளப் பட்டிருக்கிறது. ஆகவே, ஓர் உறுப்பினர் பதவி விலக விரும்பினால் தம்மை இப்

பெயரளவிலான பதவியில் அமர்த்தும்படி இவர் நிதித் துறைத் தலைவருக்கு எழுதி இசைவு பெறுகிறார். இவர் வேண்டுகோள் ஏற்றுக் கொண்டு அரசர் இவரை இப் பதவியில் அமர்த்துகிறார். இப் பதவியில் அமர்த்தப்பட்டவர் உறுப்பினர் பதவியை 1705ஆம் ஆண்டுச் சட்டப்படி இழந்து விடுகிறார். இதை அறிந்து கொண்ட சபாநாயகர் உறுப்பினரின் தகுதி இழப்பு காரணமாக பதவி இழப்பு காரணமாக பதவி இழந்து விட்டாரென அறிவிக்கிறார்.

சுற்றி வளைக்கும் தேவைப்படாத செயலாகத் தோன்றலாம். இப்படித் தான் ஆங்கிலேயர்களும் கருதினார்கள். 150 ஆண்டுகளுக்கு முன் ஒரு சிறந்த அரசியல் அறிஞர், உறுப்பினர் தாமாகவே சொந்த விருப்பில் பதவி விலக வழி செய்யும் மசோதா ஒன்றைக் கொணர சபையின் அனுமதியை நாடினார். ஆனால் இப் புதிய போக்கைச் சபையினர் வெறுத்தொதுக்கினர். பெரும்பான்மையான வாக்குகளால் இம் மசோதாவை சபையினர் ஏற்க மறுத்தனர். பழமையை ஆங்கிலப் பாராளுமன்றம் பற்றுறுதியோடு ஏற்றுக் கொண்டதற்கு இது ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும். பழைய வழக்கங்களை சபை துய்க்கிறது; இவைகளைப் பேணிக் காக்க இதுவும் ஒரு வழியாகும்.

பல நூற்றாண்டுகளாக அரசரே நேரில் வந்து சபையின் கூட்டத் தொடரைத் தள்ளி வைப்பது வழக்கமாக இருந்தது. சுடரொளி வீசும் உடை தரித்துக் கொண்டு மூடு வண்டியில் வெஸ்ட்மின்ஸ்டருக்கு வந்து பெருமக்கள் சபையின் அரியணையேறி, பொதுமக்கள் சபையை இங்கு அழைத்துப் பின் தம் கட்டளையை பிறப்பிப்பார். இப்பொழுது பாராளுமன்றக் கூட்டத் தொடர் ஓர் ஆணைக் குழுவால் தள்ளி வைக்கப்படுகிறது. சபையின் கூட்டத் தொடர் தள்ளி வைப்பாயினும் சபையின் கலைப்பாயினும் பின் பற்றப்படும் நடைமுறை எப்பொழுதும் ஒரே மாதிரியாக இருக்கும். இக் கடமையை நிறைவேற்ற சான்சலர் பிரபோடு ஐந்து உறுப்பினர்களை ஆணையர்களாக அரசர் அமர்த்துகிறார். பெருமக்கள் சபையில் இருக்கும் அரியணை முன் உள்ள நீள் இருக்கையில் ஒண் சிவப்பு உடையணிந்து இவ் வாணையர்கள் அமர்கிறார்கள். பின் பொதுமக்கள் சபையினர் சிவப்பு மன்றத்திற்கு அழைக்கப்படுகிறார்கள். கூடியுள்ளவர்களுக்கு சான்சலர் பிரபு அரசரின் உரையைப் படிக்கிறார். இது எப்பொழுதும் ஆழ் கவனமற்ற ஒரு சொற்பொழிவாக இருக்கிறது. ஏற்றுக் கொண்ட பணியைப் பாராளுமன்ற கூட்டத் தொடர் செய்து முடித்ததற்காக இவ் வுரை நன்றி கூறுகிறது. உரை கேட்ட பொதுமக்கள் சபையினர் சபைக்குச் சென்று பின் கலைந்து செல்லுகின்றனர்.

எவருக்கும் எதற்கும் தனித்தனியே நன்றி கூறுதல் இல்லை. புகழுரை தோய்ந்த சொற்பெழிவுகள் இல்லை. தம் இடத்திலிருந்து எழுந்து சபாநாயகர், நீள் இருக்கைகளுக்குகிடையில் பரந்த பிரகாரத்தில் பின் நோக்கி மெதுவாக நடந்து காலி இருக்கைக்கு சிரம் தாழ்த்திப் பின் வெளியேறுகிறார். ஸ்டீபன் திருச் சபையில் சபை கூடிய காலத்திலிருந்து இவ் வழக்கம் வந்துள்ளது. அக் காலத்தில் சபாநாயகர் வழிபாட்டிடத்தை நோக்கிச் சிரம் தாழ்த் தினார். வழிபடும் இடம் இல்லை. ஆனால் சிரம் தாழ்த்தி வணங்குதல் இருந்து வருகிறது. சபையினர் உள்ளே வந்தாலும் வெளி யேறினாலும் சபாநாயகரின் இருக்கை நோக்கிச் சிரம் தாழ்த்து கின்றனர். முத்திரைக் கோலைச் சுமந்த காவல் முகவர் சபா நாயகரைப் பின் தொடர்ந்து மெல்ல நடக்கிறார். அமைச்சர்களும் உறுப்பினர்களும் அரசியல் மகைமையை மறந்து கூடி விடை பெற்று அடுத்து வர இருக்கும் பொதுத் தேர்தலில் பெறற்கு வாழ்த்துக் கூறிக் கலந்து செல்லுகின்றனர். ''வீடு நோக்கிச் செல்வோர் யார்' என்னும் குரலோசை மீண்டும் ஒலிக்கிறது' வீடு நோக்கிச் செல்லும் சிலர் சென்று அங்கேயே தங்கி விடுகின்றனர். ஏனெனில் பாராளுமன்றத்தின் முடிவு எப் பொழுதும் பலரின் அரசியல் வாழ்வையும் முடிவிற்குக் கொண்டு வந்து விடுகிறது.

### மேலும் படித்தற்குரிய நூல்கள்

A. wright and P. Smith, 'Parliament Past and present,' (1902)

H. Smell, 'Daily Life in Parliment.'

W. B. Manro, 'Government of Europe.'

# 12. சட்ட ஆக்க அதிகார ஒப்படைப்பு

சட்ட மியற்றுவதற்கான விபரங்களை நிருவாகத் துறையிடம் ஒப்படைக்கும் வழக்கம் பழமையானது. இதற்குப் பாராளு மன்றத்தின் இசைவானே அவசியமாகிறது.

ஆனால் எங்கு, எப்பொழுது இது தொடங்க வேண்டுமென் பதையும், இதை ஒழுங்கு படுத்தும் முறையையும் வடிவையும் பாராளுமன்றத்தின் அதிகாரத்தோடு அரசரின் கவுன்சில் முடிவு செய்யுமென 1385ஆம் ஆண்டுச் சட்டமொன்று குறிப்பிட்டது. கவுன்சில் செய்யும் எத்தகைய முடிவும் பாராளுமன்றத்தின் பண்பையும் வலிமையையும் பெற்றிருக்குமென இச் சட்டம் அறிவித்தது. இச் சட்டம் தற்காலப் பாராளுமன்றச் சட்டத்தைப் போல் தோன்றுகிறது. ஒரு சட்டப் படியிலான நிறுவனம் தொழிலைக் கட்டுப்படுத்த விதிகளைச் செய்ய இப்பொழுது பாராளு மன்றம் அதிகாரமளிக்கிறது.

எட்டாம் ஹென்றியின் சட்டங்கள் சில இக் காலத்திய (அதிகார) ஒப்படைப்புச் சட்டங்களுக்கு வரலாற்று முன்னோடி களாக இருக்கின்றன. இச் சட்டங்களில் ஒன்று நிலச் சொந்தக் காரர்களின் மீது வரி விதிக்கவும், வரி கொடுக்காததற்காகச் சிறைப் பிடிக்கவும் தண்டம் விதிக்கவும் அதிகாரம் கொடுக்கப் பட்டது மன்றிச் சட்ட ஆக்க அதிகாரத்தையும் அளித்தது. இச் சட்டத்திற்கு முரணாகாத வகையில், கமிஷனரால் இயற்றப்பட்ட எல்லாச் சட்டங்களும், செயற் பாடுகளும் அவசரச் சட்டங்களும் இதுவரை விலக்கப் படவில்லை யென்றால் எக் காலத்திற்கும் பயனுறுதி உள்ளனவாக இருக்கும் என மேலும் இச் சட்டம் குறிப் பிடுகிறது. இதன் பின் சட்டமியற்றவும், அமைத்துச் செயல் படுத்தவும். அவசரச் சட்டங்களையும் கட்டளைகளையும் பிறப் பிக்கவும் கமிஷனர்கள் முழுவலிமையும் அதிகாரமும் பெற்றிருப்

பார்களென்றும், மேலும் இக் கமிஷனில் சொல்லப் பட்டிருக்கும் எல்லாவற்றையும் செய்ய வல்லவர்களென்றும் இச் சட்டம் குறிப்பிட்டுள்ளது.

எட்டாம் ஹென்றியின் ஒப்படைப்புச் சட்டங்கள் எல்லாவற்றிலும் மிகப் பெருமை வாய்ந்தது. 1539ஆம் ஆண்டின் பேரறிக்கைச் சட்டமாகும். பெரும்பாலான கவுன்சிலர்களின் அறிவுரையோடு அரசர் பிறப்பிக்கும் பேரறிக்கைகள் பாராளுமன்றச் சட்டத்தின் திறனுள்ளதாக இருக்கும் என இச் சட்டம் குறிப்பிட்டது. பாராளுமன்றம் தன் சட்டமியற்றும் அதிகாரத்தை விட்டுக் கொடுத்தற்கு இது குறிப்பிடத் தக்க தெளிவான சான்ருகுமென்பதைப் பலர் அறிவர். ஆனல் பேரறிக்கைகளைப் பிறப்பித்தல் அரசரின் சிலப்பதிகாரத்திற்குட்பட்டதென்பதும் இவைகள் சட்டத்தின் திறமுடையனவென்பதும் நாம் அறிந்ததேயாகும். ஆட்சியியல் நோக்கத்திற்கும் வேலைக்கும் இவைகளின் பயன்பாடு வரையறை செய்யப்பட்டன. பொதுச் சட்டம், எழுத்துருவில் இருக்கும். சட்டம், உடைமை உரிமைச் சட்டம் ஆகியவைகளைப் பாதிக்கும் வகையில் அரசரின் பேரறிக்கைகள் இருக்கலாகாதென 1539ஆம் ஆண்டின் சட்டம் சிறப்பாக வழி செய்துள்ளது. இச் சட்டம் பாராளுமன்றத்தின் சட்டமியற்றும் அதிகாரத்தை அரசருக்கு அளிக்கிறதென்பதை விட, அரசரின் சிறப்பதிகாரம் செய்யக் கூடியதை மிகத் தெளிவாக வரையறை செய்கிற தெனலாம். 1539-க்கு பிறப்பிக்கப்பட்ட பேரறிக்கைகள் முன் பிறப்பிக்கப் பட்டவைகளில் இருந்து வேறுபடுவதுமில்லை யெனலாம், நாணயம் அச்சிடல், விலைகள், உணவு, துணிகள், சுற்றித் திரிபவர்கள், வெளியார் போன்றவைகளைப் பற்றியும்; போர், அமைதி பற்றியும் பேரறிக்கைகள் குறிப்பிடலாம்.

பாராளுமன்றத்தின் அதிகாரமும் படைப்பு தல ஆட்சி நிறுவனங்களோடு தொடர்புடையது என்பது தெளிவு. இவைகளில் பல அரசாங்கத்தின் அதிகாரத்தையேற்றுச் செயல்படுகின்றன. ஏனெனில் பாராளுமன்றம் சட்டத்தால் இத்தகைய அதிகாரங்களை இவைகளுக்குத் திட்டவட்டமாக ஒப்படைத்திருக்கிறது. பாராளுமன்றம் இந்த அதிகாரங்களை அவ்வப்போது கூட்டலாம் குறைக்கலாம். பாராளுமன்றம் இவ் வதிகாரங்களை எடுத்து உள் துறைச்செயலால் அமர்த்தப்பட்ட வட்டார ஆணையர் களுக்களிக்கலாம்.

பாராளுமன்றம் இறையை உடையதாக இருப்பதால், தான் விரும்புகிறவர்களுக்கு அதிகாரமளிக்கலாம். இது ஒப்படைத்த

அதிகாரங்களை இதேபோல் இது விலக்கிக் கொள்ளலாம். இது அரிய செயல்களையும் செய்யலாம் சிறிய செயல்களையும் செய்ய லாம். ஒரு பரந்த பேரரசிற்கு பொதுவான சட்டங்களை இது செய்யலாம்; தனியொருவருக்காக இது தனியொரு விலக்கு மளிக்கலாம்.

சட்டமியற்றுவதில் ஈடுபாடு கொண்ட பாராளுமன்றம் சட்ட ஆக்க அதிகாரத்தை ஒப்படைப்பதில் தயக்கம் காட்டுவது இயல்பே. எனினும், பழங்காலம் தொட்டு பாராளுமன்றம் சில வேளைகளில் சட்டமியற்றும் அதிகாரத்தை ஒப்படைத்துள்ளது. 'அரசரும் அவருடைய கவுன்சிலும் மாற்று ஏற்பாடு செய்யும் வரையில், ஆட்டு ரோமம் ஏற்றுமதி செய்யப்படலாகாதென, பதினைன்காம் நூற்றுண்டுச் சட்டமொன்று அறிவித்தது. எப்பொழுது ஆட்டு ரோமத் தடையை அகற்றுவதென்னும் அதிகாரத்தை இச் சட்டம் அரசருக்கும் அவரது கவுன்சிலுக்கும் ஒப்படைத்தது,

கடந்த நூற்றுண்டில் பாராளுமன்றத்தின் சட்ட ஆக்க அதிகாரங்களின் ஒப்படைப்பு பெரிதும் வளர்ச்சியடைந்துள்ளது. அரசியல், சமூக, பொருளாதார மாற்றுகளுக்கேற்ப அரசாங்கம் பற்றிய கருத்துகளில் மாற்றங்கள் இருப்பது இயல்பேயாகும். நம் வாழ்க்கைச் சூழ்நிலை மாற்றங்களும் அறிவியல் கண்டுபிடிப்பு களின் விளைவுகளேயாகும். இவைகளால் சட்டத்தில் மாற்றங்கள் காண்பதும் இயல்பேயாகும். மேலும் ஒரு சட்டத்தில் மாற்றத்தின் கருத்தை முடிவு செய்ய, சட்ட ஆக்க ஒப்படைப்பு வசதியான, இயல்பான வழியாகவும் இருக்கிறது. ஆனால் நுட்பமான விபரங்களை இது துறைகளின் பொறுப்பிற்கே விட்டு விடுகிறது. சில சமயம், சிறு மாறுதல்களுக்குப் புதிய சட்டமியற்றத் தேவை இல்லாமல் போய் விடுகிறது.

சட்டப்படியிலான விதிகளில் பெரிய பொது நன்மைகள் இருக்கின்றன. ஏனெனில், ஒரு மசோதா சட்டமான பின் விபரங்கள் ஒழுங்குபடுத்தப்படலாம். பாராளுமன்றத்தில் மசோதா நிறைவேறியபோது இருந்ததைக் காட்டிலும் தல அல்லது தனிப்பட்ட சூழ்நிலைகளுக்கேற்ப பெரும் கவனத்தோடும் நுட்பத்திறனோடும் விதிகள் வகுக்கப்படலாம். ஒரு சட்டத்தைச் செயற்படுத்த முடியாதவாறு செய்யும் நெகிழ்வற்ற தன்மையை இவைகள் குறைக்கலாம். மேலும் சூழ்நிலைகளுக்கேற்ப மாற்றம் பெறும் தன்மையையும் இவைகள் பெறுகின்றன.

சட்ட ஆக்க அதிகார ஒப்படைப்பிற்கான மற்றொரு நன்மை என்னவென்றால், நெருக்கடி காலங்களில் தாமதமின்றியும்

நிருவாகத்திற்கு அதிகாரமளிக்கப் பாராளுமன்றத்திற்கு இது உதவுகிறது. நாட்டின் பாதுகாப்புச் சட்டமும் (1914). நெருக்கடி அதிகாரங்கள் (பாதுகாப்பு) சட்டமும் (1939) நிருவாகத்துறைக்கு தற்காலப் போரை நடத்துவதற்கு எல்லையற்ற அதிகாரமளித்தன. 1931ஆம் ஆண்டின் பொருளாதார நெருக்கடியின் போது அரசாங்கம் பரந்த செயல் விளைவுடைய அதிகாரங்களை நாடிப் பெற்றது.

இருப்பினும் சட்டமியற்றும் அதிகார ஒப்படைப்பு முறையில் ஆபத்தும் இருக்கிறது. 'தனிமனிதன்' அவனுடைய சுதந்திரம் ஆகியவற்றின் இழப்புப் பொறுப்பில் ஆட்சி இயல் வசதியையும் தேசிய நலனையும் பணித்துறை ஆட்சியாளர்கள் உயர்த்த முற்படலாம். விரும்பத்தகும் ஒரு முடிவை அடையும் ஆர்வத்தில் ஓர் அலுவலர் நேர்மையற்ற சுமையை குடிமகன் மீது சுமத்தலாம்.

சட்டத்தின் கீழ் விதி செய்யும் அதிகாரம் இவர் விரும்பும் நல் வாய்ப்பை இவருக்கு அளிக்கிறது. மேலும், அரசியலமைப் பின்படி அமைந்த அரசாங்கத்தை முழுமையாக விட்டொழிக்க சட்டமியற்றற்கான அதிகார ஒப்படைப்பு பயன்படுத்தபடலாம். தன்னுடைய வரம்பற்ற சட்ட ஆக்க அதிகாரத்தைப் பாராளு மன்றம் இன்னொரு நிறுவனத்திற்கு ஒப்படைப்பது பாராளுமன்ற அரசாங்கத்தையே நிறுத்தி வைப்பதாகும்.[1]

சட்ட ஆக்க அதிகாரத்தை ஒப்படைப்பது பற்றிய பொது மக்களின் கவலையை பிரதம நிதிபதி (Lord Chief Justice Hewart) எழுதிய 'புதிய வல்லாட்சி' (New Despotism) என்ற நூல் வெளி யிட்டது. ஒப்படைக்கப்பட்ட அதிகார முறையில் அரசியலமைப் பின்படியிலான அரசாங்கத்திற்குள்ள பேராபத்தை ஹிவாட் கண்டார். தன் விருப்பில் செயல்படுத்தப்படும் சட்டமியற்றும் அதிகாரம் கட்டுப்படுத்தப்படவில்லையென்றால் வல்லாட்சியில் கொண்டு விடுமென இவர் கருதினர்

அமைச்சரால் அல்லது அவரது செயலாட்சியின் கீழ் செயல் படுத்தப்படும் அதிகாரங்களை ஆராய்வதற்கு டொனேமோர் (Donoughmore) என்பவரின் தலைமையில் 1929-ல் அரசாங்கம் ஒரு குழுவை நிறுவியது. சட்டத்தின் தனி முதன்மை பாராளுமன் றத்தின் இறைமை ஆகியவற்றின் அரசியலமைப்புக் கருத்துகளை எய்துவதற்கு என்ன பாதுகாப்புகள் தேவை அல்லது விரும்பத் தக்கவை என்பதை ஆராய்ந்து அறிக்கை கொடுக்குமாறு குழு

---

[1] Molson, Hugh, 'Delegated Legislation'.

கேட்டுக் கொள்ளப்பட்டது. இது பெருமைக்குரிய குழு இதன் பரிந்துரைகள் பெரும் சிறப்பு வாய்ந்தவை.

'குறிப்பிட்ட நோக்கங்களுக்காக குறிப்பிட்ட வரம்பிற்குள், குறிப்பிட்ட பாதுகாப்புகளின் கீழ்'[2], ஒப்படைக்கப்பட்ட சட்டமியற்று முறை சட்டப்படியானதென குழு முடிவிற்கு வந்தது. விரும்பத்தக்கதெனக் கருதப்பட்ட பாதுகாப்புகளையும் வரம்புகளையும் அளிக்கும் நோக்கத்தோடு பல பரிந்துரைகளை குழு எடுத்துக் கூறியது. குழுவின் பரிந்துரைகளை உடனடியாகச் செயல் படுத்தாதது வியப்பாக இருக்கிறது.

சட்ட ஆக்க ஒப்படைப்பு எனும் பெயர் குழப்பமானதென டொனுேமோர் குழு குறிப்பிட்டது. பாராளுமன்றத்தின் அதிகாரத்தின் கீழ் ஆக்கப்பட்ட துணைச் சட்டங்களை விவரிப்பதற்கு பயன்படுத்தப்பட்ட 'குழப்பும் கதம்பப் பெயர்களுள்', ஒழுங்கு முறைகள், விதிகள், கட்டளைகள், ஆணைகள் (Warrants) குறிப்புகள், திட்டங்கள், உள் விதிகள் ஆகியவைகள் அடங்கும். இக் குழுவின் அறிக்கை வெளியிட்டபின் துணைச் சட்டங்களை விவரிக்க இன்னும் பல பெயர்கள் புத்தாக்கம் செய்யப்பட்டன. ஆனால் இத்தகைய துணைச் சட்டங்கள் எல்லாம் இனிமேல் சட்டமாக இயற்றப் பெற்ற கட்டளைகளென விவரிக்கப்பட வேண்டுமென்று சட்டமாக இயற்றப் பெற்ற கட்டளைகள் சட்டம் (1946) வழி வகுத்தது. இந்த அதிகாரத்தில் இனிமேல் இச் செயல்தான் பயன்படுத்தப்படுகிறது.

ஓர் அமைச்சருக்குச் சட்டம் செய் அதிகாரத்தைக் கொடுப்பதற்கும் அவ்வதிகாரத்தின் ஒவ்வொரு செயற்பாட்டை ஆராய்வதற்குமான குறிப்புரையைக் கொண்டிருக்கும் ஒவ்வொரு மசோதாவையும் ஆராய்ந்து அறிக்கை அளிப்பதற்கு பாராளுமன்றத்தின் இரு சபைகளிலும் நிலைக் குழுக்கள் நிறுவப்பட வேண்டுமென டொனுேமோர் குழு பரிந்துரைத்தது.

சட்டப்படியிலான எல்லாக் கட்டளைகளின் பிரிவுகள், கொள்கை அல்லது கருத்து பற்றிய பிரச்சினைகளை யெழுப்பினவாவென்றும், எந்த அளவிற்கு முன்னிகழ்வை யொட்டி இவைகள் அமைக்கப்பட்டனவென்றும் மேற்கொண்டு ஆய்வு எதுவும் இருக்க வேண்டுமாவென்பதையும் ஆய்வதற்குச் சில ஆண்டுகளுக்குமுன் பெருமக்கள் சபை ஒரு குழு அமர்த்தியது. மேலும் ஒப்படைக்கப்

---

[2] Report of the Committee on Ministers' Powers, P. 58.

பட்ட சட்ட ஆக்கத்தை எதிர்க்கும் பொது அதிகாரம் பெரு மக்கள் சபையில் எப்போதுமே இருந்து வந்திருக்கிறது.

1944-ல் பொதுமக்கள் சபையில் சட்டப்படியிலான கட்டளைகள் பற்றிய குழு ஒன்று நிறுவப்பட்டது. பொது மக்கள் சபை முன் வைக்கப்படும் ஒவ்வொரு கட்டளையும் கீழ்காணும் காரணங்களில் ஏதாவதொன்றிற்கு சபையின் தனிக் கவனம் ஈர்க்கப்பட வேண்டுமென்பதை உறுதி செய்யும் நோக்கத்தோடு இக் குழு அமர்த்தப்பட்டது.

1. பொது வருவாய்களின்மீது இது ஒரு சுமையைத் திணிக்கிறது அல்லது நிதித் துறைக்கு, அரசாங்கத் துறைக்கு இசைவு அல்லது வணிக இணக்கம் கருதி, அல்லது பணி எதுவும் செய்வதற்கு, அல்லது இத்தகை சுமை அல்லது பண அளிப்பிற்கு நிதித் துறைக்கு பணங் கொடுப்பதை வலியுறுத்துகிறது,

2. நீதி மன்றங்களின் மறுதலிப்பிலிருந்து இதை விலக்கும் பிரிவைக் கொண்டிருக்கும் சட்டத்தைப் பின் பற்றி இது செய்யப்பட்டிருக்கிறது.

3. இக் கட்டளையை உருவாக்கிய சட்டத்தால் கொடுக்கப்பட்ட அதிகாரங்களை எதிர்பாராது அல்லது வழக்கத்திற்கு மாருக இது பயன்படுத்தியதாகத் தோன்றுகிறது.

4. இதை வெளியிடுவதில் அல்லது பாராளுமன்றத்தின் முன் வைப்பதில் நேர்மையென நிலைநாட்ட முடியாத தாமதம் இருந்ததாகத் தோன்றுகிறது.

5. எக் குறிப்பிட்ட காரணத்திற்காகவும் இதன் வடிவிற்கு அல்லது நோக்கத்திற்கு விளக்கம் தேவைப்படுகிறது. எனவே, கட்டளைகளின் நற்கூறுகள் பற்றியின்றி வடிவம் பற்றியவைகள் பற்றியே இக் குழு எடுத்துரைக்கிறது.

சட்டப்படியிலான கட்டளைகளைப் பாராளுமன்றத்தின் பார்வைக்கு வைக்கப் படவேண்டுமென்று விதிக்கப்படுவதால், தவருக அல்லது எதிர்ப்புக்குரிய முறையில் சட்டஆக்க அதிகார ஒப்படைப்பைப் பயன் படுத்துவதற்கெதிராகப் பாராளுமன்றம் பாதுகாப்பு அளித்துள்ளதை டொனேமோர் குழு குறிப்பிட்டுள்ளது. ஆனல் பாராளுமன்றத்தின் முன் இக் கட்டளைகளை வைப்பதற்கான பல்வேறு முறைகளில் இருக்கும் உண்மையான நிலையை இவர்களால் கண்டுபிடிக்க இயலவில்லை. எனவே ஒரு தரமான

நடைமுறையை மேற் கொள்ளுமாறு இவர்கள் பரிந்துறைத் தார்கள். சட்டப் படியிலான கட்டளைகள் பற்றிய ஆய்வுக் குழுவும் இப்பொருளைப் பற்றி 1944-ல் கவனம் செலுத்தியது. பாராளுமன்றத்தின் முன் வைக்கப்படும் ஒழுங்கு முறைகள், விதிகள், கட்டளைகள் ஆகியவற்றை யொட்டி நடவடிக்கை எடுக்கப் பொருத்தமற்ற பல தரப்பட்ட கால வரையறை மேற் கொள்ளப்பட்டது. இக் கால வரையறை 20, 21, 28, 30, 40 நாள்களாக இருந்தன.

சட்டப்படியான கட்டளைகள் சட்டம் (1946), இப் பொருத்த மற்ற முறையை முடிவிற்குக் கொண்டு வந்தது. இதன்படி, சட்டப் படியிலான ஒரு கட்டளை பாராளுமன்றத்தின் பார்வையில் 40 நாள்கள் இருக்க வேண்டும். இக் காலத்தின்போது உறுப்பினர் ஒருவர் இக் கட்டளையை அகற்றிவிட 'வேண்டிக் கொள்ளலாம்'.

இயல்பு கடந்த சூழ்நிலைகளில் மட்டுமே நீதிமன்ற அதிகார வரம்பிலிருந்து ஒப்படைக்கப்பட்ட சட்ட ஆக்கம் விலக்களிக்கப் படவேண்டுமென டொனேமோர் ஆணைக் குழு பரிந்துரை செய்தது. நீதி மன்றங்களில் மறுத்தலிக்க முடியாத சட்டப் படியான கட்டளைகளுக்குப் பொதுமக்கள் சபையின் கவனத்தை ஈர்க்க ஆய்வுக் குழு இப்பொழுது உதவுகிறது.

சட்டம் செய்யும் அதிகாரங்களால் குறிப்பாகப் பாதிக்கப்படும் தனி நலன்களை, இயன்றவரை, துறைகள் கலந்தாராய வேண்டு மெனவும் ஆணைக் குழு கூறியுள்ளது. துறைகளுக்கு ஆலோசனைக் குழு ஏற்படுத்துவதாலும் கலந்தாராயப் படவேண்டிய குறிப்பிட்ட நலன்களை வரவிருக்கும் குறிப்பிட்ட கட்டளைகளில் குறிப்பிட்டுரைப்பதாலும் இது ஓரளவு நிறைவேறியுள்ளது.

தவருகப் பயன் படுத்துவதைத் தடுக்க இப் பாதுகாப்புகள் போதுமானவைதாமா என்பது குறித்து கருத்துகள் மாறுபடு கின்றன. சட்டஆக்க ஒப்படைப்பின் இயல்பிலும் அளவிலும் தான் உண்மையாக ஆபத்து இருக்கிறதென ஒரு சாரார் கூறு கின்றனர். சட்டமியற்றும் அதிகார ஒப்படைப்பு எல்லா வரம்பு களையும் கடந்து விட்டதென்றும், பாராளுமன்ற அதிகாரத்தை நிருவாகம் கைப்பற்றும் சீரிய நிலையை இது அடைந்துவிட்ட தென்றும் சிலர் கருதுகின்றனர். பாராளுமன்ற இறைமையையும் சட்டத்தின் ஆட்சியையும் சட்ட ஆக்க ஒப்படைப்பு அச்சுறுத்து கிறதெனும் உண்மையை, நடைமுறையைத் தரப்படுத்துவதாலும் நடைமுறை வழிகளைப் பயன் படுத்துவதாலும் மாற்ற முடியாது. இருந்தபோதிலும், சட்டமியற்றும் அதிகார ஒப்படைப்பைக்

கைவிடுவதாலன்றி இக் குறை கூறலை சமாளிப்பது கடினமாகும். மாற்றுக் கருத்துகளைக் கூறுவதைக் காட்டிலும் இக் கால நடைமுறையை தாக்குவதற்கு திறனாய்வாளர்கள் தயாராக இருக்கின்றனர்.

சட்ட ஆக்க ஒப்படைப்பின் வளர்ந்து கொண்டு வரும் அளவைத் திறனாய்வாளர்கள் வலியுறுத்தும் பொழுது இவர்கள் நிலையும் சரியாகத் தான் தோன்றுகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடுப் பகுதிக்கு முன், எப்போதோ தான் சட்ட ஆக்க அதிகார ஒப்படைப்பில் பாராளுமன்றம் ஈடுபட்டது. 1819-1820-ல் சட்ட ஆக்க அதிகார ஒப்படைப்புக்கு எடுத்துக் காட்டாக ஒரு சிறிய எண்ணிக்கையைத் தான் செசில் கார் (Cecil Carr) என்பவரால் கொடுக்க முடிந்தது. 'இந் நிலையில் இவ் வதிகார ஒப்படைப்பு பற்றி மக்கள் நன்குணர்ந்திருந்தனர். ஆனால் நாட்டுக்குத் தேவையான சட்டங்களை பாராளுமன்றத்தினால் இக் காலத்திலும் இயற்றித் தர முடிந்தது. துறைகள் விரிவாக அமைக்கப் பட்டபொழுது பாராளுமன்றத்தால் பிரிவி கவுன்சிலுக்குக் கொடுக்கப் பட்டிருந்த சட்டமியற்றும் அதிகாரத்தைப் பெருமளவு இவைகள் எடுத்துக் கொண்டன.'[3] 1920-ல் 82 சட்டங்களைப் பாராளுமன்றம் இயற்றியது. இதே ஆண்டில் இதைப் போல் பத்து மடங்கு பொது வியல்பான கட்டளைகளும் விதிகளும் பதிவு செய்யப்பட்டன.

ஒப்படைக்கப் பெற்ற சட்ட ஆக்கத்தின் வளர்ச்சியை கீழ் காணும் அட்டவணை [4] லிருந்து அறிந்து கொள்ளலாம்.

| ஆண்டு | பொது | தலம் | மொத்தம் |
|---|---|---|---|
| 1906 | 165 | 821 | 986 |
| 1926 | 448 | 1297 | 1745 |
| 1946 | 1291 | 996 | 2287 |

ஒப்படைக்கப்பட்ட சட்ட ஆக்க அதிகாரம் வளர்ச்சிப் போக்கில் இருக்கிறதென்பது தெளிவாகும். சட்ட ஆக்க அதிகாரத்தை ஒப்படைக்கும் வழக்கம் அல்லது பெருகி வரும் அளவிற்கு இத்தகைய அதிகாரங்களின் பயன்பாடு பாராளுமன்ற

[3] Carr, C.T., Delegated Législation, P. 41.

[4] SyDney D. Bailey, 'British Parliamentary Democracy'. P. 213.

மக்களாட்சியை அச்சுறுத்துகிறதெனக் கருதினால், இது ஒப்படைத்த அதிகாரங்களை இதுவே விலக்கிக் கொள்ளுவது இதற்கான பரிகாரமாகும்.

ஒப்படைக்கப் பட்ட சட்ட ஆக்கத்தின் மீது பொதுமக்கள் சபை செலுத்தும் கட்டுப்பாடுகள் பற்றிய நடைமுறையை மேம் படுத்த அல்லது குறையை நிறைவு செய்ய வேண்டியதின் தேவையை ஆராய்வதற்கு 1951-ல் பொதுமக்கள் சபையின் ஆய்வுக் குழு ஒன்று நிறுவப்பட்டது. 1953-ல் குழு அறிக்கை கொடுத்தது. இதன் பரிந்துரைகள் :

(அ) சட்டப்படியிலான கட்டளைகளை நடைமுறையிலிருந்து நீக்கி விடுவதற்கான வேண்டுதல்களுக்குரிய காரணங்கள் குறிப் பிடப் படவேண்டும்.

(ஆ) நீக்கிவிடல் பற்றிய விவாதங்கள் பிற்பகல் 11–30 மணி யோடு முடியவேண்டும். ஆனால் மற்றொரு நாளுக்குத் தள்ளி வைக்கும் அதிகாரம் சபாநாயகருக்கு இருக்க வேண்டும்.

(இ) ஆய்வுக் குழு தொடர்க் கூட்டத்திற்குரியதாக இருக்க வேண்டும். இது நிலைக் குழுவாக இருக்கலாகாது; இதனுடைய அறிக்கையோடு துறைகளிலிருந்து குழுவினருக்கு வந்த கடிதங் களும் அடங்கி இருக்க வேண்டும். சட்டப்படியிலான கட்டளை பற்றிய பிரச்சினையும் துறை சார்ந்த நினைவுக் குறிப்புகளையும் வரவேற்றதற்கான காரணங்களையும் இவ்வறிக்கை கொண்டிருக்க வேண்டும். [5]

திருச் சபைக்குரிய சட்ட ஆக்கம்

இடைக் காலத்தில் திருச் சபைக்கான சட்டங்களை குருமார் திருக் கூட்டத்தின் வாயிலாகக் குருமார்கள் இயற்றினார்கள். ஆனால் எட்டாம் ஹென்றி இங்கிலாந்தின் திருச் சபையின் மீயுயர்த் தலைவரான போது குருமார்கள் அரசரின் இசைவின்றித் திருச் சபைக்கான சட்டங்களை இயற்ற இயலாமையைத் தெரிவித் தனர். குருமார்களின் சட்டம் சாதாரன மக்களை கட்டுப்படுத்தா தென்பதையும் உணர்ந்தார்கள். சமய சீர்திருத்தக் காலத்தின் போது செய்யப்பட்ட திருச்சபைச் சட்டங்கள் அனைத்தும் பாராளு மன்றத்தால் இயற்றப்பட்டன. குருமார்களின் திருக் கூட்டம் இதில் பெரும் பங்கு பற்றவில்லை. 1717-ல் இருந்து 1850-

Report from the Select Committee on Delegated Legis-lation. (H. C . 310).

வரைக்கும் இக் கூட்டங்கள் சடங்கியல்பு வாய்ந்தவைகளாகவே இருந்தன. ஆனால் 1850-ல் குருமார் திருக் கூட்டம் மறுபடியும் திருச் சபைக்குரியவைகளை விவாதிக்கத் தொடங்கின. 1872-ல் பொது வழிபாடு பற்றிய தீர்மானத்தைக் குருமார் திருக் கூட்டம் ஏற்றுக் கொண்டது. பின்னர் இது சட்ட உருப் பெற்றது. திருச் சபைக் கூட்டத்தின் (1919) படி, குருமார் திருக் கூட்டங்களின் மேல் சபையும் கீழ் சபையும், சாதாரண மக்களின் சபையும் தேசியப் பேரவையாக அமைக்கப்பட்டது. இப் பேரவை, பாராளுமன்றத்தின் ஆராய்விற்கு குறிப்பிட்ட மசோதாக்களை எடுத்துரைக்கலாம். 1928-ல் திருத்தியமைக்கப்பட்ட ஒரு பிரார்த்தனை நூலை இப் பேரவை ஏற்றுக் கொண்டது. ஆனால் பொதுமக்கள் சபை இதை ஏற்க மறுத்து விட்டது. பிரார்த்தனைப் புத்தகம் பல திருச் சபைகளில் பயன்படுத்தப் பட்டாலும் இதை நிறுத்த எத்தகைய நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

### மேலும் படித்தற்குரிய நூல்கள்

Carr, sir ceil Thomas, 'Delegated Legislation', (1921).
Allen, C. K., 'Law and orders, ' 1957.
Hewart Gordon, 'The New Despotism',1945
Sydney D. Baily,'British Parliamentary Democracy',1958.

# 13. பதிவுகள், பத்திரிகைகள், பொதுமக்கள்

சபையின் பழமையான கையெழுத்து ஏடுகளைத் தவிர வரலாற்றுச் சிறப்பிற்குரிய பழைய பதிவுகள் எதையும் பொது மக்கள் சபை பெற்றிருக்கவில்லை. இவைகளில் மூன்று தொகுதிகளை 1621-ல் முதலாம் ஜேம்ஸ் கிழித்தெறிந்து விட்டார். 1641-ல் முதலாம் சார்லஸ் ஐந்து உறுப்பினர்களைக் கைது செய்யும் பொருட்டு சபைக்குச் சென்ற பொழுது பதிவு செய்யப் பெறாத பெயர்களோடும்; 1650-ல் கிராம்வெல் பாராளுமன்றத்தைக் கலைத்த பொழுது நீக்கப்பட்ட பதிவுகளோடும் இவைகள் இன்று காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. எஞ்சிய கையெழுத்துத் தொகுதிகள் பதிவகத்தில் இருக்கின்றன. பழங்காலத்திய அழைப் பாணைகள், பாராளுமன்றச் சட்டப் பதிவேடுகள், பழமையான மசோதாக்கள், சட்டங்கள் போன்றவைகள் பதிவகத்தில் அல்லது விக்டோரியா டவ்ரில் வைக்கப்பட்டிருக்கின்றன. இவைகள் அனைத்தும் பாராளுமன்றம் பற்றியவைகளே.

ஏழாம் ஹென்றியின் ஆட்சி கால இறுதி வரைக்கும் பாராளு மன்றத்தின் நடைமுறைகள் பற்றிய அலுவல் தொடர்புடைய தலையாய பதிவுகள் பாராளுமன்றத்தின் உறுப்பினர் பெயர்ப் பட்டியல்களேயாகும். இரு சபைகளின் அன்றாட நடவடிக்கைகள் பற்றிய ஏடுகள் பிற்காலத்திற்குரியவைகளே.

பாராளுமன்றம் பெயர்ப்பட்டியல் பதிவுகளின் அடக்கங்களை ஆறு தொகுதிகளில் காணலாம். 1767-ல் பெருமக்கள் சபையின் கட்டளையை யொட்டி இவைகள் அச்சிடப்பட்டன. 1832-ல் பொருளடக்க அட்டவணை யொன்று சேர்க்கப்பட்டது. இத் தொகுதிகளில் காணப்படும் பழமையான பதிவுகள் 1278ஆம் ஆண்டு பாராளுமன்றத்தைப் பற்றியதாகும். 1503ஆம் ஆண்டுப்

பாராளுமன்றம் பற்றிற பதிவுகள் பிற்பட்ட காலத்திற்குரியன வாகும். ஆனால் முதல் தொகுதியின் தொடக்கத்தில் சில இணைக்கப்பட்ட பதிவுகள் காணப்படுகின்றன. இவை 1513க்கும் 1553க்கும் இடைப்பட்ட காலத்திற்குரியவையாகும். பெருமக்கள் சபையின் பதிவேடுகளில் காணப்பெற்ற குறைபாடுகளை இவை நீக்குவதாக இருந்தன.

பாராளுமன்றப் பதிவேடுகளில் பெரும்பாலான பதிவுகள் விண்ணப்பங்கள் பற்றியவைகளாக இருந்தன. இவைகளுக்கான சுருக்க மருமொழிகளும் இவைகளில் காணப்பட்டன. இது நீதி மன்றமாகச் செயல்பட்ட பொழுது இது செய்த சில முடிவுகளும் இதில் காணப்படுகின்றன. பாராளுமன்றத்தின் துவக்க நடவடிக்கைகள் பற்றிய முறையான விவரிப்புகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. தொடக்கத்தில் சில முக்கியமான பாராளுமன்றச் செயற்பாடுகள் பதிவேடுகளில் இடம் பெற்றன. ஆனால் மூன்றும் ரிச்சர்டு காலம் வரையில் பாராளுமன்றத்தின் சட்டங்கள் ஒழுங்காகப் பதிவு செய்யப்படவில்லை.

பெருமக்கள் சபையின் பதிவேடுகள் 1509-ல் தொடங்கின. ஆனால் எட்டாம் ஹென்றியின் ஆட்சி காலப் பாராளுமன்ற நடவடிக்கைகளை முழுமையாகப் பதிவு செய்யவில்லை. இக் காலத்தில் பொதுமக்கள் சபைக்கு ஒரு நிலையான இடம் கிட்டவில்லை. பல்வேறு இடங்களில் மாறி மாறி இது கூடியது. ஆனால் 1547-ல் இச் சபை செயின்ட் ஸ்டீபன் திருக் கோயிலில் நிலையாகக் கூடிய காலம் வரையில் இச் சபைக்கான பதிவேடுகள் இல்லை. இச் சபையின் எழுத்தர் இதற்கு முன் சபையின் நிகழ்ச்சிகளை ஒரு நூலில் பதிவு செய்ததாகக் கேள்விப்பட்டாலும் இத்தகைய பதிவுகள் எல்லாம் காணமல் போய் விட்டன. 1581-முதல் 1603க்கு உட்பட்ட காலத்திற்கான பொதுமக்கள் சபையின் அன்றாட நிகழ்ச்சிப் பதிவேடுகளும் காணமல் போய்விட்டன. பதினேழாம் நூற்றாண்டின் இறுதியில் கையெழுத்துப் பிரதிகள் அச்சிடப்பட்டன. பெரும் புரட்சிக் காலத்தின் போது முதல் நிலைப் பிரதிகள் அழிக்கப்பட்டிருக்கலாமெனத் தெரிகிறது.

சபைகளின் தொடக்க நிலைப் பதிவேடுகள் சோதனை முறையில் தான் இருந்தன. சொந்தக் குறிப்புகளால் இவை சிறப்புப் பெற்றன. ஆனால் ஒரே மாதிரியான பதிவு முறை தோன்றியதும் இவைகளின் சிறப்பு மறைந்தது. எட்டாம் ஹென்றியின் ஆட்சிக் காலத்தின் போது பெருமக்கள் சபையின் முதல் பதிவேடுகளை டெய் ஜான்லர் வைத்திருந்தார். இவர் தம்மைப் பற்றியும் தம்

கருத்துகளைப் பற்றியும் இவைகளில் குறிப்பிடுகிறார். இவர் பாராளுமன்ற எழுத்தராக இருந்தவர். இவருடைய பதிவுகள் லத்தின் மொழியில் இருந்தனவென்றாலும் எப்பொழுதாவது ஆங்கிலத்திலும் எழுதுவதுண்டு.

பொதுமக்கள் சபையின் மிகப் பழமையான நிகழ்ச்சிப் பதிவேடுகள் சுருக்கமாகவும் சுவையின்றியும் இருந்தன. பல்வேறு மசோதாக்களின் அடுத்தடுத்து வரும் நிலைகளையுமே இவை குறிப்பிட்டன. ஒரு கூட்டத் தொடரின் துவக்கம் பற்றியும் இதன் முடிவுறுநிலை பற்றியும் பதிவேடுகள் முதலில் சுருக்கமாக விளக்கினாலும் போகப் போக இவ் விளக்கம் விரிவடைந்தது. மசோதாக்கள் பற்றிய வெறும் பதிவேடுகளாக மட்டும் இராமல் கூட்டத்தொடரின் நடைமுறைகளை இவை விரித்துரைப்பனவாகவுமிருந்தன. பொதுமக்கள் சபை அரசியாரைத் திருமணம் செய்து கொள்ளுமாறு கேட்டுக் கொண்டபொழுது, இதைப்பற்றி சபை மேலே தொடரவேண்டாமென்றும், பிரேரணைகளில் காலத்தை விரையமாக்க வேண்டாமென்றும் நீண்ட சொற்பொழிவுகள் தவிர்க்கப்பட வேண்டுமென்றும் எலிசபெத் சபாநாயகருக்குக் கட்டளையிட்டார். நடைமுறைகள் பற்றிய கட்டளைகள் அவ்வப்போது பிறப்பிக்கப்பட்டன. சிறப்புரிமைகள் பற்றிய பிரச்சினைகள் எழுந்தன. முதலாம் ஜேம்ஸ் காலத்தில் பொதுமக்கள் சபையின் பதிவுகள் அதிகரித்தன. செய்திகளை எழுதுகின்றவர்களின் சொந்தக் கருத்துகள் வெளிப்பட்டன. இவர்கள் சபையின் பல நிகழ்ச்சிகளை விரிவாகக் கூறியுள்ளனர். சொற்பொழிவுகளை அப்படியே குறித்துக் கொள்ள எழுத்தர் முயன்றார். ஆனால் சில மேற்கோள்களையும் லத்தின் மரபுச் சொற்களையும் மட்டுமே இவரால் எழுதிக் கொள்ள முடிந்தது. சொற்பொழிகளை இவ்வாறு குறித்துக் கொள்வது தடை செய்யப்பட்டது. பொது மக்கள் சபையின் அன்றாட நிகழ்ச்சிப் பதிவேடுகளைக் கொண்டு வந்து பார்வையிடும் ஒரு வழக்கம் முதலாம் ஜேம்ஸ் மன்னரிடமிருந்தது. ஒரு சமயம், இவரைத் தாக்கிய பதிவேட்டின் ஒரு பகுதியை இவரே கிழித்தெறிந்தார் என்பதையும் நாம் அறிகிறோம். சபையின் நடைமுறை நிகழ்ச்சிகள் வெளியாவது வன்மையாக எதிர்க்கப்பட்டது. இதன் விளைவாக, 1628-ல் நிறைவேறிய தீர்மானம் சொற்பொழிவுகள் பற்றிய எழுத்தரின் பதிவை அனுமதியற்றதாகச் செய்தது. குறுகிய காலப் பாராளுமன்றத்தின் மற்றொரு தீர்மானம், எழுத்தரின் உதவியாளராக அமர்த்தப்பட்டிருந்த திரு. ரஸ்வொர்த் (Rushworth) சபையின் முன்னிசைவின்றிக் குறிப்புகளை எடுக்கக் கூடாதென நெறிப்படுத்தியது. ஆனால் சபையின் கட்டளைகளையும் அறிக்கைகளையும் இவர் எழுதிக்

கொள்ளலாமென தீர்மானம் கூறியது. இதற்குப் பின், பொது மக்கள் சபையின் மேசையில் பதிவுகளைக் கொண்ட சபையின் பதிவேடுகள் வைக்கப்பட்டன. சொன்னவைகளைவிட செய்தவைகளையே இப்பதிவேடுகள் கொண்டிருந்தன. பாராளுமன்ற விவாதங்கள் பற்றிய அறிக்கைகள் இவைகளில் இடம் பெறவில்லை.

சொற்பொழிவுக் குறிப்புகளை தடை செய்ததால் பதிவேடுகளின் பரப்பெல்லை சுருங்கியதெனலாம். ஆனால் சபையின் அலுவல்கள் வளர்ச்சியடைந்ததால் பதிவேடுகளின் பரப்பெல்லை விரிவடையத் தொடங்கியது. மற்ற அலுவல் சார்புடைய பதிவுகளால் இது மேலும் விரிவடைந்தது.

பொதுமக்கள் சபை 1680-ல் ஒரு தீர்மானத்தால் சபையின் அன்றாட நிகழ்ச்சிகளையும் நடைமுறைகளையும் அச்சிட்டு உறுப்பினருக்கு அளிக்க அதிகாரமளித்தது. இதன்பின் இவ் வழக்கம் தொடர்ந்திருந்து வருகிறது. சபையின் கூட்டத் தொடரின் துவக்கத்தின்போது இப்படிப்பட்ட ஒரு கட்டளையால் இது இன்றும் நடைபெற்று வருகிறதெனலாம்.

பொதுமக்கள் சபையின் உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் கூட்டத்தொடரின் போது கொடுக்கப்படும், சபையின் நடவடிக்கைகள், முடிவுகள் பற்றிய பத்திரங்கள், அறிக்கைகள் ஆகியவற்றின் உருவளவும் வகையும் கணக்கில் அடங்கா. அந் நாளின் நிகழ்ச்சித் திட்டம், மசோதாக்கள், திருத்தங்கள் பற்றி அறிவிப்பு, கேள்விகள் பற்றிய அறிவிப்பு, வாக்கெடுப்புப் பட்டியல்கள் இன்னப் பிறவும் இவைகளில் அடங்கும்.

சபை ஒவ்வொன்றின் எழுத்தரால் எடுக்கப்படும் நடைமுறைச் சிறு குறிப்புகள் மறுநாள் அச்சிட்ட உருவில் உறுப்பினர்களுக்குக் கொடுக்கப்படுகின்றன. பிற்காலத்தில் இவைகளே சபையின் அதிகாரச் சார்புடைய பதிவேடுகளாக விரிவாக்கப்பட்டன. மிகப் பழங்காலந்தொட்டே சபைகளுக்குக் கொடுக்கப்படும் அறிக்கைகளும் பத்திரங்களும் அவ்வப்போது பதிவேடுகளில் செருகப்பட்டன. 17-ம் நூற்றாண்டில் இத்தகைய பத்திரங்கள் சபையின் கட்டளையால் அச்சிட்டு வெளியிடப்பட்டன. இத்தகைய பத்திரங்களின் எண்ணிக்கை 18ஆம் நூற்றாண்டில் பெருகிற்று. பதிவேடுகளில் இடம் பெறாத முக்கியமான குழு அறிக்கைகள் 1773-ல் தெரிவு செய்யப்பட்டன. இவைகள் வெளியிடப்பட்டன. 1803-ல் இவற்றோடு பதினொரு தொகுதிகள் இணைக்கப்பெற்றுப் பதினைந்து தொகுதிகளாயின. இதில் பெயர்ப்

பட்டித் தொகுதியொன்றும் அடங்கும். இவைகளில் இருந்து தான் இக் காலத்திய பாராளுமன்றப் பத்திரங்கள், அறிக்கைகள் ஆகியவை வளர்ச்சி பெற்றுள்ளன. பாராளுமன்றத்தின் இரு சபைகளின் நூலகங்களில் பெரும்பகுதி இடத்தை இவைகள் எடுத்துக் கொண்டுள்ளன. ஒரு மடிப்புடைய 7000க்கு அதிகமான தொகுதிகள் நூலகத்தில் இருக்கின்றன. 1908-ல் மட்டும் 126 தொகுதிகள் சேர்ந்தன. ஒவ்வொரு கூட்டத் தொடரின் முடிவில் இவைகள் நான்கு தலைப்புகளின் கீழ் வரிசைப் படுத்தப்பட்டுள்ளன. (1) பொது மசோதாக்கள்; (2) குழு அறிக்கைகள்; (3) ஆணைக் குழு அறிக்கைகள்; (3) கணக்குகளும், பத்திரங்களும். நான்காவது தலைப்பின் கீழ் உள்ளவைகள் பொதுமக்கள் சபையின் சிறப்புக் கட்டளைகளால் அல்லது பாராளுமன்றச் சட்டங்களுக் கிணங்க அனுப்பப்படுகிற எண்ணற்ற கணக்குகள் ஆகும். 1801-ல் இருந்து 1852-க்கும் இடைப்பட்ட காலத்திற்கும், 1852-க்கும் 1899-க்கும் இடைப்பட்ட காலத்திற்கும் உரிய பாராளுமன்றப் பத்திரங்களுக்கான அகர வரிசைத் தொகுப்பு அட்டவணைகளும் இருக்கின்றன. இத் தஸ்தாவேசுகள் வரலாற்று அறிஞர்களுக்கும் நிருவாகத் துறைகளுக்கும் சட்ட ஆக்கத்தில் ஈடுபட்டுள்ளவர்களுக்கும் ஆட்சி இயலுக்கும் இன்றியமையானெய வென்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

பொதுமக்கள் சபையின் எழுத்தர் குறிப்புகள் எடுப்பதைச் சபையின் 1628ஆம், 1640ஆம் ஆண்டுக் கட்டளைகள் தடை செய்ததால் பாராளுமன்ற நடைமுறைகளின் அதிகாரச் சார்புடைய பதிவுகளுக்கும் பாராளுமன்ற விவாதங்கள் பற்றிய பதிவுகளுக்கும் இடையில் பெருத்த மாறுதல்கள் காணப்பட்டன.

பொதுமக்கள் சபையின் பதிவேடுகளின் முதல் தொகுதி முடிவடையும். 1628-ல் இருந்து, பாராளுமன்ற அறிக்கைகளின் புதிய தொடர்கள் தொடங்கிய 1908-வரையில் பாராளுமன்றத்தில் நடந்தவைகளை அறிந்து கொள்வதற்கு நாம் அதிகாரச் சார்பில்லாத, தனிப்பட்ட அறிக்கைகளை நம்பி இருக்க வேண்டியிருக்கிது. பாராளுமன்றத்தின் கட்டளைகளை மீறி அல்லது தவிர்த்து மறைவாகத் தயாரிக்கப்பட்ட குறிப்புகளின் அடிப்படையில் இவ் வறிக்கைகள் இருந்தன. பின் பாராளுமன்ற நிருபர்களைப் பொதுமக்கள் சபை ஏற்றுக் கொள்ளத் தொடங்கியது. பாராளுமன்ற விவாதங்கள் வெளியிடுவதின் பயனைப் பாராளுமன்றம் முழுமையாக ஏற்றுக் கொண்டது. அறிக்கைகளைத் தயாரிக்க எல்லா வசதிகளையும் ஊக்குவிப்புகளையும் பாராளுமன்றம் இவர்களுக்கு அளித்துதவியது. இவைகளைத் தயாரிப்

பதற்கான செலவில் ஒரு பகுதியை அரசாங்கம் ஏற்று உதவிய தோடு அதிகாரச் சார்பில்லா அறிக்கை வரிசைகளுக்கு ஏற்பளித்தது.

பாராளுமன்ற விவாதங்கள் அல்லது நடைமுறைகளை வெளியிடுவதில் நீண்ட பாராளுமன்றக் காலத்தின் போது பொதுமக்கள் சபை பல இடர்களை உண்டாக்கியது. சிறப்பான நிகழ்வுகளில் குறிப்பிட்ட சொற்பொழிவுகள் சபையின் கட்டளையால் அச்சிடப் பட்டன. ஆனாலும் பாராளுமன்றத்தின் அனுமதியின்றி சொற் பொழிவுகளை அச்சிடுவது தடை செய்யப்பட்டதோடு சில நிகழ்வு களில் கடினமாகத் தண்டிக்கப்பட்டது. இரண்டாம் சார்லஸின் ஆட்சிக் காலத்திற்குப் பின்னும் இத் தடை நீடித்தது. இதன் விளைவாக, பாராளுமன்ற விவாதங்களைப் பற்றி நாம் அறிந்து கொண்டிருப்பது மிகச் சொற்பமே. எடுத்துக் காட்டாக, 1661ஆம் ஆண்டுப் பாராளுமன்ற நடவடிக்கைகளைப் பற்றியச் செய்திகள் எதுவும் நமக்குக் கிட்டவில்லை. சில கடிதங்கள், வாழ்க்கைக் குறிப்புகள் போன்றவைகளிலிருந்து மட்டுமே சில செய்திகள் நமக்குக் கிடைக்கின்றன. 17ஆம் நூற்றுண்டின் இறுதி யிலும் 18ஆம் நூற்றுண்டிலும் பாராளுமன்ற நடவடிக்கைகள் பற்றிய தகவலைப் பொதுமக்கள் அறிந்து கொள்ள பெரும் ஆர்வம் காட்டினார்கள். இத் தகவலைப் பொதுமக்களுக்குப் பாராளு மன்றம் எப்படியும் அளிக்க வேண்டிய தாயிற்று. ஆனால் தகவல் அளிப்பின் மீதான தடை தொடர்ந்திருந்து வந்ததையொட்டிப் பாராளுமன்றத்திற்கும் பத்திரிகைகளுக்கும் இடையில் பெருமோ தல்கள் ஏற்பட்டன. 1738-லும் 1771-லும் இம்மோதல்கள் ஏற்பட்டன. 1738-க்கு முன் இத்தகைய அறிக்கைகள் லண்டன், சென்டில்மென், ஸ்காட் பருவ இழல் (Magazines) களில் வெளி யாயின. பாராளுமன்றத்தின் கண்டனத்திலிருந்து தப்பக் கூட்டத் தொடர் முடிவிற்கு வந்த பின் வெளியீடுகள் வெளிவந்தன. பாராளுமன்ற விவாதங்கள் வெளியாயினும் விவாதங்களில் பங்கு பற்றியவர்களின் முழுப்பெயர் கொடுக்கப்படவில்லை. இவ் வெளி யீடுகள் பற்றிய உரிமை மீறல்கள் 1738-ல் கிளம்பின. பொதுமக்கள் சபையில் பெரும் விவாதங்கள் இவைகளையொட்டி நடைபெற்றன. பாராளுமன்ற நடவடிக்கைகள் பற்றிய விவாதங்களைச் சபை தடை செய்தது. பாராளுமன்றம் கூடி இருக்கும்போதும் இடை ஓய்வின் போதும் இத் தடை விதிப்பு இருந்து வந்தது. தடை மீறுபவர்களைக் கடுமையாகத் தண்டிக்கச் சபை வழி செய்தது. இத் தடைகளால் பயனில்லாது போகவே போராட்டம் தொடர்ந் தது. உட்கேட்டும் (Wood gate) மற்ற வெளியீட்டாளர்களும் அடிக்கடி கண்டனத்திற்குள்ளானார்கள். சபையின் சினத்திற்குள்

ளானவர்கள் தண்டிக்கப் பட்டார்கள். வெளியார்களை வெளியேற்ற கடுத்தமான நடவடிக்கைகள் மேற் கொள்ளப் பட்டன. 1768-74 ஆம் ஆண்டுப் பாராளுமன்றக் கூட்டத்தின் போது வெளியார் கடுமையாக அப்புறப் படுத்தப்பட்டனர். இப் பாராளுமன்ற நிகழ்ச்சிகள் எதுவும் வெளியாக வில்லை. இப் பாராளுமன்றத்தின் போது, பொதுமக்கள் சபையின் உரிமைகளின் சார்பில் கலோனல் ஆன்ஸ்லோ (Colonel Onslow) வும் அச்சகத் தாரின் சார்பில் ஜான் வில்க்ஸ்ம் (John Wilkes) மோதிக் கொண் டார்கள். வெளியீட்டாளர்களுக்கு லண்டன் மாநகரின் ஆதரவு கிடைத்தது.

இம் மோதலில் பாராளுமன்றம் பெயரளவில் வெற்றி பெற்ருலும் நடைமுறையில் இது சபைக்குத் தோல்வியாகத் தான் தோன்றியது. ஏனெனில் இதற்குப் பின் பாராளுமன்றத்தின் விவாதங்கள் தாராளமாக வெளியிடப் பட்டன. ஆனல் நீண்ட காலத்திற்குச் சபையின் விவாதங்கள் பற்றிய அறிக்கைகள் முழுமையாகவும் சரி நுட்பமாகவும் கொடுக்கப் படவில்லை. செய்தித்தாள் நிருபர்களை அனுமதிக்கப் போதிய விதிகள் இல்லை. ஒருவித வாடிக்கையாதரவு அடிப்படையில் வெளியார் சில கட்டுப் பாடுகளின் கீழ் அனுமதிக்கப்பட்டனர். சபையின் கட்டளைகளுக்கு உட்பட்டு அடிக்கடி இவர்கள் சபையிலிருந்து வெளியேற்றப் பட்டனர். எனவே, சில மிக முக்கியமான விவாதங்களும் மிகச் சிறந்த சொற்பொழிவுகளும் 18ஆம் நூற்ருண்டில் வெளியிடப் படவில்லை. ஆனல் இவைகளைப் பற்றிய அரைகுறையான முழுமை யற்ற, நிறைகுறையான குறிப்புகளிலிருந்து நாம் சில தகவலைப் பெறுகிருேம். 1834-வரையில் நிருபர்களுக்கு இடவசதி செய்து தரப்படவில்லை. 1888–வரையில் வெளியார்களை அனுமதிக்கவும் வெளியேற்றவும் ஏற்புடைய விதிகள் வகுக்கப் படவில்லை. பாராளுமன்றச் சீர்திருத்த சட்டத்திற்குப் (1832) பின் பாராளு மன்ற விவாதங்களை முழுமையாகவும் சரியான முறையிலும் வெளியிடுவதின் அவசியம் உணரப்பட்டது. பொது செய்தித்தாள் நிருபர்களுக்குப் போதிய இடவசதியும் மற்ற வசதிகளும் செய்து கொடுப்பதில் இப்பொழுது சபை அக்கறை காட்டியது.

கடந்த காலத்திய பாராளுமன்ற விவாதங்களைப் பற்றி இப்பொழுது அறிந்து கொள்ள வேண்டுமெனில் 'பாராளுமன்ற வரலாற்றையும்,' பிற்காலத்திய செய்திகளை அறிந்து கொள்ள "ஹான் சார்டு (Hansard) என்னும் வெளியீட்டையும் பார்க்க வேண்டும். பாராளுமன்றத்தின் 1660–வரையிலான வரலாறு 1751-ல் தொகுக்கப்பட்டது. பாராளுமன்றத்தின் 1066ஆம்

ஆண்டிலிருந்து 1803ஆம் ஆண்டு வரையிலான வரலாற்றை கோபெட் (Cobbett) என்பவர் எழுதினார். சபையின் விவாதங்கள் பற்றிய இவரது வெளியீடு 36 தொகுதிகளாக வெளியாயின. 1809-ல் கோபெட் மீது ஆட்சி எதிர்ப்புக் குற்றம் சாட்டப்பட்டு, குற்றம் மெய்ப்பிக்கப்பட்டு, மூன்று மாத சிறைதண்டனை அளிக்கப் பட்டது. இரண்டாண்டுகளுக்குப் பின் பொருளாதார இடருக் குள்ளான கோபெட் விவாதங்களின் வெளியீட்டுரிமையை ஹான் சார்டுக்கு விற்றார்.

1890-ல் பாராளுமன்ற விவாதங்களின் வெளியீட்டுரிமை ஹான் சார்டு குடும்பத்திலிருந்து மாறினாலும் இவ் வெளியீடுகள் ஹான் சார்டு என்னும் பெயரிலேயே தொடர்ந்து இருந்து வரு கின்றன. 1909-ல் வெளியீட்டுரிமையை அரசியாரின் எழுது பொருள் அலுவலகம் மேற் கொண்டது.

அதிகாரச் சார்பில்லாத வெளியீடுகளுக்கு நிதி உதவி அளிப் பதை 1908-ல் பாராளுமன்றத்தின் இரு சபைகளும் நிறுத்திக் கொண்டன. சபைகள் 1909-ல் இருந்து சொந்த நிருபர்களை அமர்த்திக் கொண்டதெனினும் இவர்கள் 'ஹான்சார்டு' என்ற பெயரிலேயே தொடர்ந்து செயல் பட்டனர். இப்போதைய ஏற்பாடுகளின் படி இரு சபைகளும் தனிப்பட்ட முறையில் நிருபர் களை அமர்த்திக் கொண்டுள்ளன. பொதுமக்கள் சபையின் அன்றாட விவாதங்கள் பற்றிய அறிக்கைகள் அடுத்த நாள் காலையில் உறுப்பினர்களுக்குக் கிடைக்கின்றன. பெருமக்கள் சபையினர் முதலில் சொற்பொழிவுகளின் தன்மை குறித்து சிறிது அஞ்சினர். இச் சொற்பொழிவுகளை மாற்றியமைத்துக் கொள்ளும் வாய்ப்புக் கிட்டும் வரை இவைகளை வெளியிட அனுமதி மறுத்தனர். இம் முறை நன்றாக செயல் பட்டது. அடுத்த நாள் கூட்டத்திற்குப் பயன்படக் கூடிய வகையில் முதல் நாளின் விவாதங்கள் பற்றிய அறிக்கைகள் வசதியாகப் பயன்பட்டன. 1919-ல் இருந்து நிலைக் குழுக்களின் விவாதங்கள் பற்றி அறிக்கைகள் வழக்கமாக வந்து கொண்டிருந்தன. ஆய்வுக் குழுக்களில் சான்று வழங்குவது பற்றிய அறிக்கைகளும் வழக்க மானவைகளே.

பாராளுமன்ற உறுப்பினர், அலுவலர் ஆகியோரன்றி மற்றவர்கள் மன்ற மரபுப்படி வெளியார்களே. அறிக்கை கொடுத்தல் குற்றமெனக் கருதப்பட்ட காலத்தில் நிருபர் ஒரு வெளியாராகவும் குறிப்புகளை எடுக்கக் கூடாதவராகவும் கருதப் பட்டார். இப்பொழுது அறிக்கையிடல் ஏற்றுக் கொள்ளப்பட்

டிருப்பதோடு இவர்களுக்கான இடங்கள் பொதுமக்கள் சபையில் ஒதுக்கப்பட்டுள்ளன. செய்தித் தாள்களின் பிரதிநிதிகளுக்கும் பிரிட்டிஷ் ஒலிபரப்புக் கூட்டு நிறுவனத்தார்களுக்கும் தனி இடங்கள் ஒதுக்கியளிக்கப்பட்டுள்ளன. சபாநாயகருக்கருகில் உள்ள நுழை மாடத்தில் இவ்விடங்கள் ஒதுக்கி யளிக்கப்பட்டுள்ளன. நுழை மாடத்தின் கீழ் லண்டன் நகராட்சியின் பிரதிநிதியும் சபாநாயகருக்குப் பின் உள்ள மேடையிடத்தில் துறைகளின் அலுவலர்களும் இட வசதி பெற்றனர்.

பெருமக்கள் சபையின் ஒரு பகுதியில் பார்வையாளர்களுக்கு இடவசதி செய்து கொடுக்கப்பட்டது. முன்னுளைய பொதுமக்கள் சபையில் அரசு தூதர்களுக்கும், வெளிநாட்டு அமைச்சர்களுக்கும் டொமினியன் பார்வையாளர்களுக்கும், புகழ்பெற்ற வெளியார்களுக்கும் நுழைமாடத்தில் தனி இடங்கள் ஒதுக்கப்பட்டிருந்தன. 1908-வரையில் பெண்களுக்கான நுழை மாடப் பகுதி தனியாக இருந்தது. இங்கு இடவசதி குறைவு. இப்பொழுது சபாநாயகரின் சிறிய நுழைமாடம் பெண்களுக்கென ஒதுக்கப்பட்டுள்ளது. இடம் எளிதாகக் கிட்டுமென தொகுதியினரும் பார்வையாளர்களும் நினைக்கலாகாது. நுழைமாடங்களில் மிகக் குறைவான இடவசதிதான் உண்டு. நிகழ்ச்சிகளைப் பார்க்க விரும்புவோர் சபாநாயகரின் முன்னிசைவு பெறவேண்டும். இதுவும் எளிதில் கிட்டுவதில்லை.

17ஆம் நூற்றுண்டின் பாராளுமன்றங்கள் அரசர்களின் தலையீட்டைத் தவிர்க்கும் பொருட்டு தனித்திருந்து செயல்பட விரும்பின. இரகசிய விவாதங்கள் தேவையில்லையென்றபொழுதும் பாராளுமன்றம் இரகசியக் காப்பை வலியுறுத்தின. 19ஆம் நூற்றுண்டில், பொதுமக்களுச்கும் பத்திரிகைகளுக்கும் எதிராகப் பாராளுமன்றம் சிறப்புரிமையென்னும் கருவியைப் பயன்படுத்தியது. முற்காலத்திய பாராளுமன்றங்கள் இவ் வுரிமையை அரசர்களின் தலையீட்டிலிருந்து தப்புவதற்குப் பயன்படுத்திக் கொண்டன. 19ஆம் நூற்றுண்டில் கூட, பாராளுமன்ற முறை அரசாங்கத்திற்கு விவாத விளம்பரம் ஓர் இன்றியமையாப் பண்பு என்பது ஏற்றுக் கொள்ளப்பட்டதாக இருப்பினும், பொதுமக்கள் சபை நடைமுறையைத் தளர்த்தியிருப்பினும் விதிகளை மாற்றியமைக்க மறுத்துவிட்டது. சபையின் அமர்வுகள் அன்றும் இன்றும் நடைமுறையில் வெளிப்படையானதாக இருப்பினும் கோட்பாட்டளவில் இவைகள் தனிமுறையானவைகளாகவே இருக்கின்றன. 1875-வரையில், வெளியார்களையும் பார்வையாளர்களையும் நிருபர்களையும் பொதுமக்கள் சபை உறுப்பினர் ஒருவர் வெளி

யேற்ற வற்புறுத்தலாம். இதற்குச் சபையினரின் பெரும்பான்மை ஆதரவு இருக்க வேண்டும். 1909-வரையில் இச் சபையின் விவாதங்கள் புற்றிய அதிகாரச் சார்புடைய அறிக்கைகள் இருக்க வில்லை.

1914-ல் தொடங்கியபோரின் போது இரகசியக் கூட்டங்கள் நடத்தும் முறை மேற்கொள்ளப்பட்டது. இக் கூட்டங்களுக்கு நிருபர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. இதே நடைமுறை 1939-ல் போர் தொடங்கிய போதும் செயல்படுத்தப்பட்டது. அறிக்கைகள் வெளியிடல் அல்லது சபையின் இரகசியக் கூட்ட நன்டமுறைகளை விவரித்தல் ஆகியவை பாதுகாப்பு ஒழுங்குமுறை (Defence Regulations)களால் தடை செய்யப்பட்டன. ஆனல் அதிகாரச் சார்புடைய வெளியீடுகளை சபாநாயகர் வெளியிட அனுமதிக்கப் பட்டது.

### பாராளுமன்றமும், பத்திரிக்கைகளும்

பெரும்பாலான மக்கள் பாராளுமன்றம் பற்றிய தகவலைச் செய்தித் தாள்களின் வழியாக அறிந்து கொள்ளுகிறுர்கள். பாராளுமன்றத்திற்காகச் செய்தித்தாள்களில் ஒதுக்கப்படும் இடமும் இதன் நிகழ்ச்சிகளைப் பற்றி எழுதுகின்ற முறையும் பத்திரிகைக்குப் பத்திரிகை மாறுபடலாம். டைம்ஸ் (The Times) என்னும் செய்தித்தாள் முழுமையான, மட்டான, நடுநிலை தவருத அறிக்கையிடுகிறது. உண்மை நிலையையும் கருத்தாய்வையும் தெளிவாக வெளியிடுகிறது. பெரிய செய்தித்தாள்கள் பாராளு மன்றச் செய்திகளுக்குக் குறைவான இடத்தை ஒதுககுகிறது; உண்மை நிலையையும் கருத்தையும் கலந்தளிக்க முற்படுகிறது. குறிப்பிடத் தக்க செய்திகளைவிடப் பரபரப்பான செய்திகளையே இவைகள் தெரிவு செய்து வெளியிடுகின்றன. பாராளுமன்றம் செய்திகளை வெளியிடுகையில் பல செய்தித்தாள்கள் தம் சொந்த விருப்பையே வெளிப்படுத்துகின்றன. சில செய்தித்தாள்கள் அரசியல் கட்சியின் சார்பில் செயல்படுகின்றன.

மான்செஸ்டர் கார்டியனை (Manchester Guardian)யும் சேர்த்துப் பத்து தேசியச் செய்தித்தாள்கள் இருக்கின்றன. நூற்றுக்குக் குறையாத மாநிலச் செய்தித்தாள்களும் பதினன்கு ஞாயிற்றுக்கிழமைப் (Sunday Papers) பத்திரிகைகளும், ஆயிரத் துக்கு மேல்பட்ட தல வாரப் பத்திரிகைகளும் இருக்கின்றன. இவைகளோடு ஆறு அரசியல் வார ஏடுகளும் எழுபதுக்கு குறை யாமல் குறிப்பிட்ட காலத்தில் வெளியாகும் ஏடுகளுமிருக்கின்றன இவைகள் பெரும்பாலும் அரசியல் சார்பில் இயங்குகின்றன.

ஒரு சில செய்தித்தாள்கள் மட்டுமே எல்லாச் சூழ்நிலைகளிலும் கட்சிக் கொள்கைகளைப் பற்றி நிற்கின்றனவெனினும், பொதுவான அரசியல் தோற்றத்திற்கேற்ப இவைகளைப் பரவலாக வகைப் படுத்தலாம். ஐந்து முதன்மையான செய்தித்தாள்கள், காலையில் வெளியாகும் செய்தித்தாள்களில் 22 சதவீதத்தையும், லண்டனின் மாலைச் செய்தித்தாள்களில் 33 சதவீதத்தையும், மாநில காலை, மாலைச் செய்தித்தாள்களையும் ஞாயிற்றுக்கிழமையில் வெளியாகும் பத்திரிகைகளில் 50 சதவீதத்தையும் கட்டுப்படுத்துகின்றன.[1]

பாராளுமன்றத்தில் நடப்பதை செய்தித் தாள்கள் மக்களுக்கு தெரியப்படுத்துகின்றன. பல செய்தித் தாள்கள் அரசியல் கட்சியைப் பற்றி நிற்பனவாம். எனவே, இதன் விளைவாகப் பொது விவகாரங்கள் கட்சி நோக்கில் தான் ஆராயப்படுகின்றன. எல்லாப் பத்திரிகைகளிலும் கட்சிச் சார்புடைமை சிறிதளவு இருக்கிறது. நிகழ்ச்சிகளை இவைகளுள் முழுமையாகவும் சரிநுட்ப மாகவும் படம் பிடித்துக் காட்டுவதில்லை.

### செய்தி ஒலிபரப்பு

ஆஸ்திரேலியா, நியுசிலாந்து போன்ற நாடுகளைப் போல் இங்கிலாந்து பாராளுமன்ற நடைமுறைகளை அப்படியே ஒலிபரப்பு வதில்லை. பாராளுமன்ற விவாதங்கள் ஒலிபரப்பப் படுவதில் சில நன்மைகள் இருந்தாலும் இடர்கள் இல்லாமலும் இல்லை. விவாதங் களின் தம்மை பாதிக்கப்படலாமென ஆங்கிலேயர்கள் அஞ்சு கிறுர்கள். பாராளுமன்ற உறுப்பினர்கள் வழக்கமாக விவாதங்களில் ஈடுபடுவதை விட்டு பிரச்சார நோக்கோடு சொற்பொழிவாற்றத் தொடங்கி விடுவார்கள் என அஞ்சப்படுகிறது. கட்சித் தலைமையையும் ஒழுங்கு முறையையும் ஒலிபரப்ப உறுதிப் படுத் தலாம். ஏனெனில் கட்சித் தலைவர்களும் கொறடாக்களும் வானொலியில் பேசுகிறவர்களுக்கும் நேரம் ஒதுக்கியளிக்கிறுர்கள். இதனுல் கட்சித் தலைவர்கள் ஒலிபரப்பு நேரத்தில் மிகச் சிறந்த நேரத்தைப் பிடித்துக் கொள்ளுகிறுர்கள்.[2]

குறைகள் நிறைகளை மிஞ்சுகின்றனவாயென்பதில் கருத்து வேறுபடலாம். 'பலர் அஞ்சியது போல் ஒலிபரப்பு, பாராளு மன்ற விவாதங்களின் தரத்தைக் குறைத்து விடவுமில்லை, தேர்ந்

---

[1] Report of the Royal Commission on the Press, H.M.S.O., 1949, P. 193.

[2] Alexander Brady, 'Parliamentary Government in the Commonwealth.' 1951, P. 8.

தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளின் மதிப்பைக் குறைத்துவிடவு மில்லை'யென நியுசிலாந்தின் பாராளுமன்ற உறுப்பினர் ஒருவர் குறிப்பிட்டார். நியுசிலாந்து மக்களின் வீடு நோக்கிப் பாராளு மன்றம் சென்றதெனவும் பெருந் தொகையின் மக்கள் ஒலி பரப்புகளைக் கேட்கிறார்களெனவும் கூறப்படுகிறது. பாராளுமன்ற நிகழ்ச்சி ஒலிபரப்பின் பயனாக விவாலங்களின் தரம் உறுதியாக உயரும் என்று எல். எஸ். எமெரி (L.S. Amery) கூறினார்.

பாராளுமன்ற ஒலிபரப்புகள் பல உருவில் வெளியாகின்றன பாராளுமன்றத்தின் நிகழ்ச்சிகள் உள்பட ஒழுங்காக செய்திகள் ஒலிபரப்பாகின்றன. அன்றாடச் செய்திகளை, 'சரியாகவும், நேர்மையாகவும், தெளிவாகவும், நடுநிலை பிறழாமலும்' தெரி விப்பதே இவ்வொலிபரப்புகளின் நோக்கமாகும். இந் நோக்கம் நிறைவேறியுள்ளதில் கருத்து வேறுபாடு இல்லை. இயல் நிலை தவறாமைக்கு B.B.C. இன் ஒலிபரப்புகள் மாதிரியாக அமை வதாகக் கருதப்படுகிறது.

பாராளுமன்றத்தோடு தொடர்புடைய இன்னும் இரண்டு நிகழ்ச்சிகள் இருக்கின்றன. 'பாராளுமன்றத்தில் இன்று' என்னும் நிகழ்ச்சி பாராளுமன்றக் கூட்டம் நடக்கும் ஒவ்வொரு நாள் மாலை யிலும் ஒலிபரப்பப் படுகிறது. அடுத்த நாள் காலையில் இது மறு படியும் ஒலிபரப்பாகிறது. இந் நிகழ்ச்சி 1945-ல் தொடங்கிய தாகும்.

இன்னொரு நிகழ்ச்சி, 'வெஸ்ட் மின்ஸ்டரில் இவ்வாரம்,' என்னும் நிகழ்ச்சியாகும். இது 1929-ல் தொடங்கியது. பாராளு மன்றத்தில் தாம் கண்டதையும் கேட்டதையும் எடுத்துரைக்குமாறு ஓர் உறுப்பினர் கேட்டுக் கொள்ளப் படுகிறார், இந் நிகழ்ச்சி, கட்சியின் கருத்துகளை வெளியிட அமைத்துக் கொடுக்கப் படுவ தில்லை. ஆனால் விளக்கத்தாலும் கருத்தாய்வாலும் இது உறுப் பினரின் சொந்தக் கூற்றாக அமைகிறது. இதில் பங்கு பற்று பவர்கள், வார நிகழ்ச்சிகளை நேர்மையாக எடுத்துரைக்கவும், நடு நிலை நின்று போற்றவும் தூற்றவும் கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

ஆண்டு முழுவதும், இடைவேளைகளுக்குப் பின், 'கட்சி அரசியல் ஒலிபரப்புகளு'க்கு வசதி செய்தி கொடுக்கப்படுகிறது. கடந்த தேர்தல் முடிவுகளையொட்டி கட்சி பலத்தின் அடிப் படையில் கட்சிகள் இவ் வாய்ப்பைப் பகிர்ந்து கொள்ளுகின்றன. பேச்சாளர்களையும், நாளையும் கட்சிகள் தெரிவு செய்து கொள்ளு கின்றன.

பொதுத் தேர்தலுக்கு முன், தேர்தல் களத்தில் ஈடுபட்டுள்ள வேட்பாளர்கள் தொலைக் காட்சி ஒலிபரப்புகளில் பெரும் அரசியல் கட்சிகள் பங்கு பற்ற வாய்ப்பளிக்கப்படுகிறது. இறுதியான பேச்சு ஒலிபரப்பிற்கும் தேர்தல் நாளுக்கும் இடைவெளிக் காலம் மூன்று நாட்களுக்குக் குறையாமல் இருக்க வேண்டும். இதனுல் வாக்காளர்கள் கடைசி நேர நெருக்குதலுக்கு உள்ளாகாமல் தடுக்கப் படுகிறது. இத் தேர்தல் ஒலிபரப்புகள் மக்களால் வர வேற்கப் படுகின்றன.

# 14. பாராளுமன்றமும் கூட்டு நிறுவன அமைப்புகளும்

ஒரு தொழிலை அல்லது சேவையைஅரசுடைமையாக்குவதற்குக் கூட்டு நிறுவனம் ஒரு கருவியாக இருக்கிறது. அமைச்சவையின் நேர்முகக் கட்டுப்பாட்டிலிருந்து இது சுயேச்சையாக இயங்க முடிகிறது. அன்றாட மேலாண்மை, செயற்பாடு போன்றவை களில் ஒரு வித சுயேச்சையை பொது உடைமையோடு இணைக்க மூன்று அரசியல் கட்சிகளும் கூட்டு நிறுவனத்தைப் பயன் படுத்திக் கொண்டிருக்கின்றன. இம் முறையை மனதிற் கொண்டு தனி யாருக்குச் சொந்தமான தொழிலை அரசாங்கத்திற்குச் சொந்த மான தொழிலிலிருந்து வேறு படுத்தப்படுகிறது.

அரசு புதிய தொழில் துணிவுகளை மேற்கொள்ளத் திட்டமிட் டால் அல்லது சில தொறிற் சாலைகளை அல்லது சேவைகளை பொது மக்களின் உடைமையாக்க முயன்றால், இவைகளை ஏற்றுச் செயல் படுத்த ஓர் அரசாங்கத் துறையை நிறுவுதல் முற்றிலும் இயல் பாகும். தொழில் துணிவுகளின் எல்லாச் செயற் பாடுகளையும் பாராளுமன்ற அல்லது அமைச்சவையின் கட்டுப்பாட்டிற்குட் படுத்த இம் முறை உறுதியளிக்கிறது. மேலும் ஓர் அலுவலரின் ஒரு செயல் குறித்து அத் துறையின் பொறுப்பேற்றுக் கொண்டுள்ள அமைச்சர் பாராளுமன்றத்தில் வினவப்படலாம். நாட்டின் தபால், தந்தி, தொலை பேசி, இவைகளைச் சேர்ந்த துணைப்பணிகள் ஆகியவற்றின் பொறுப்பை ஏற்றுக் கொண்டுள்ள மத்திய தபால் அலுவலகத்தின் இன்றைய நிலை இதுவேயாகும். துறையின் அரசியல் தலைவராக இருக்கும் (போஸ்டமாஸ்டர் ஜெனரல்) அஞ்சல் துறைத்தலைவர், காலம் தாழ்த்தி கடிதங்கள் பட்டுவாடா செய்வது பற்றியும், தொலை பேசி இணைப்பு கொடுப்பதில் ஏற்படும் தாமதம் பற்றியும் தந்திச் செலவுகள் பற்றியும் பாராளுமன்றத்தில் வினவப்படலாம்.

இருப்பினும், மிகத் திறமையான மேலாண்மையை இம்முறை எப்பொழுதும் அளிக்கிறதாவென்பது ஐயப்பாட்டிற்குரியதேயாகும். ஒரு பெரிய தனியுரிமை வணிகப் பணியை அஞ்சல் நிலையம் ஏற்றுச் செயல்படுத்துகிறது. பல வகைகளில் இது வணிக முறைகளில் நடத்தப்பட வேண்டும். அஞ்சல் துறைத் தலைவர் தம் கீழ்ப் பணியாற்றும் 300,000 பணியாள்களில் ஒவ்வொருவரும் செய்யும் தவற்றுக்குப் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையராதல் வேண்டுமெனும் கருத்து ஆட்சியில் நிதானத்தையும் அச்சத்தையும் உண்டாக்குகிற தெனலாம்.

தம் கடமையை நிறைவேற்றும் பொழுது அலுவலர்கள் செய்த எல்லாச் செயல்களுக்கும் அரசியலமைப்பு முறைப்படி அமைச்சர்கள் பொறுப்புடையராதல் வேண்டும். ஆனால், அலுவலர்களின் செயலுக்காக அமைச்சர்கள் தனி முறையில் பொறுப்பேற்க வேண்டியதில்லை.

நடைமுறையில், ஆயிரக்கணக்கான அலுவலர்களின் செயற்பாடுகள் அனைத்தையும் ஓர் அமைச்சர் தெரிந்துகொண்டிருக்க முடியாது. இருப்பினும் இவர்களின் அலுவல் தொடர்புடைய செயல்களுக்கு அமைச்சர் முறைப்படி பொறுப்புடையவராகிறார். இதன் விளைவாக, அமைச்சர் நிலையில் இருந்து கீழ்மட்டம் வரையில் ஒரு படிநிலை அமைப்பு ஏற்படுகிறது. ஒவ்வொரு சிவில் பணியாளரும் சரி நுட்பமாக வரையறை செய்யப்பட்ட வரம்பிற்குள்ளிருந்து முடிவெடுக்கலாம். இவ் வரம்பிற்கு வெளியே உள்ளவைகளைப் பற்றிய முடிவுகளை இவர் முதுநிலை அலுவலரிடம் விட்டுவிடுகிறார். ஒவ்வொரு நிலையிலுமுள்ள அலுவலர்களுக்கு விரிவான கட்டளைகளின் வாயிலாக இவர்கள் எப்படிச் செயல்பட வேண்டுமென்பது தெளிவாகக் குறிப்பிடப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் எந்த அளவு உசித அதிகாரத்தை இவர்கள் பயன்படுத்தலாமென்பதும் தெளிவாக்கப்பட்டுள்ளது.

'இவர்கள் எப்பொழுதும் சில அமைச்சர்களுக்குப் பதில் சொல்ல வேண்டியவர்களாக இருக்கிறார்கள். இவர்கள் போற்றப்படுதலும் தூற்றப்படுதலும் உண்டு. இவர்களுடைய வினைகளையும் எதிர்வினைகளையும் இது முடிவு செய்கிறது'. [1]

இவைகளால் தவிர்க்க இயலாத கால தாமதம் ஏற்படுகிறது. இக் குறைபாடு ஒரு கூட்டு நிறுவன அமைப்பால் அகற்றப்படலாம்.

---

[1] Bridges, Portrait of a Profession, p. 29.

வணிக இயல்புடைய ஒரு தொழிலை அரசு நடத்தத் தொடங்கும்பொழுது தொல்லைகள் எழுவதால், பொதுவுடைமையாக்கப்பட்ட தொழிலை நடத்துவதற்குப் பல்வேறு வகையான பொது நிறுவன முறைகள் சோதனைக்குள்ளாயின. 1945-க்கு முன், பல்வேறு வகையான பொது வாரியங்கள் (Public Boards) நிறுவப்பட்டன. இவைகளில், தலைநகர் நீர் வாரியம், லண்டன் துறைமுக நிறுவனம், மத்திய மின் வாரியம், பிரிட்டிஷ் ஒலிபரப்புக் கூட்டு நிறுவனம், லண்டன் பயணிகள் போக்குவரத்து வாரியம் ஆகியவை குறிப்பிடத் தக்கவைகளாகும்.

1945-க்கும் 1949-க்கும் இடைப்பட்ட காலத்தில் மேலும் பல தொழிற்சாலைகள் நாட்டுடைமையாக்கப்பட்டன. இவை: நிலக்கரி (1946), மின்சக்தி (1947), போக்குவரத்து (1947), வாயு (1948), இரும்பும் எஃகும் (1949), சிவில் விமானப் போக்குவரத்தின் நிர்வாகத்தை மேற்கொள்ளப் பொதுக் கூட்டு நிறுவனம் ஏற்படுத்தப்பட்டது. இங்கிலாந்தின் வங்கியையும், கடலடித் தந்தி, கம்பியில்லாத் தந்தி ஆகிய கம்பெனிகளையும் அரசாங்கம் எடுத்துகொண்டது.

இப் பொதுக் கூட்டு நிறுவனங்கள் செயல்முறையிலும் அமைப்பிலும் மாறுபட்டிருந்தன. ஆயினும் சில இயல்புகள் இவைகளுக்குப் பொதுவானவைகளாக இருந்தன. வாரிய உறுப்பினர்கள் அரசாங்கத்தால் அல்லது அமைச்சரால் அமர்த்தப்படுகிறார்கள். இவர்களின் பதவிக்காலம் வழக்கமாக ஐந்தாண்டாக இருக்கும். வாரியத் தலைவர்கள் முழுநேரப் பணிப் பொறுப்புடையவர்கள். உறுப்பினர்கள் சிலர் குறைநேரப் பணியாளர்களாக இருந்தனர். வாரிய உறுப்பினர் எண்ணிக்கை 6-ல் இருந்து 18வரை இருந்து வந்துள்ளது. தொழிற்றுறை அனுபவமும் தேர்ச்சியும் உள்ளவர்களை அமைச்சர்கள் உறுப்பினராக அமர்த்தினர்.

பொறுப்புடைய அமைச்சரின் அதிகாரங்கள் வாரியத்திற்கு வாரியம் மாறுபட்டிருந்தன. ஆனால், வாரியத்தைக் கலந்து கொண்டு அமைச்சர், நாட்டுநலனைப் பாதிக்கக்கூடியவைகளையொட்டி வாரியத்திற்குச்சில தூண்டுரைகள் அளிக்கலாம். நிலக்கரித் தொழில் நாட்டுடைமை ஆக்கச் சட்டம் (Coal Industry Nationalization Act) அமைச்சரின் அதிகாரங்களையும் குறிப்பிட்டுள்ளது. நடைமுறையில், அமைச்சர் வாரியத்தோடு இடையறாது, இயல்பாகத் தொடர்புகொண்டு இருப்பதால் முறையாக இவைகளுக்கு அறிவுரை அளிப்பது மிகக் குறைவேயாம்.

'முழுமையானதாக இல்லாவிடினும் அமைச்சர்கள் விரிவான அதிகாரங்களைப் பெற்றிருக்கிறார்கள். ஆனால், இவைகளைப் பயன் படுத்துவதில் இவர்கள் மிகக் கவனமாக இருக்கிறார்கள்'. [2]

இங்கிலாந்தின் வங்கியைத் தவிர மற்றெல்லா வாரியங்களும் ஆண்டறிக்கைகளையும் தணிக்கை செய்யப்பட்ட கணக்குகளையும் தயாரித்துப் பாராளுமன்றத்திற்கு அளிக்க வேண்டும்.

அமைச்சர் என்ன அதிகாரத்தைச் செயல்படுத்த வேண்டு மென்னும் பிரச்சினை கடினமானதேயாகும். சுயேச்சையாகப் பதில் சொல்லும் பொறுப்போடு கூட்டு நிறுவனம் இணைப்பது இதன் தனிச் சிறப்புப் பண்பாகும். அமைச்சரின் அதிகாரப் பெருக்கத் திற்கேற்பப் பாராளுமன்றத்திற்கு இவர் பெருமளவு பொறுப் புடையராதல் வேண்டுமாதலின், இதன் பயனாக வாரியத்தின் சுயேச்சையின் அளவும் குறையலாம்.

பொதுக் கூட்டு நிறுவனங்களைப் பாராளுமன்றம் மூன்று முதன்மையான முறைகளில் மேற்பார்வையிடுகிறது.

(1) **பாராளுமன்றக் கேள்விகள் :** பாராளுமன்ற வினாக்களின் பயனாகச் சில குறிப்பிட்ட நடைமுறை இடர்கள் தோன்றியுள்ளன. அமைச்சர்கள் பொறுப்பேற்றுக் கொண்டுள்ளவைகளில்தான் வினவப்படலாம். எடுத்துக்காட்டாக, பிரிட்டிஷ் போக்குவரத்துத் திட்டத்தின் வளர்ச்சியைப் பற்றி அமைச்சரைக் கேள்வி கேட்பது முற்றிலும் பொருத்தமாக இருக்கும். ஆனால், ஒரு குறிப்பிட்ட நாளில் ஒரு ரயில் நிலையத்திற்கு, ரயில் ஏன் சில நிமிடங்கள் தாமதித்து வந்ததெனக் கேட்பது முறையாகாது. ஆனால், பொது வான கொள்கை பற்றியவைகளில் அமைச்சர் பாராளுமன்றத் திற்குப் பொறுப்புடையவராகிறார். ஆட்சி விபரங்கள் பற்றிய வைகள் வாரியங்களைப் பொறுத்தவைகளாகும்.

பொதுக் கூட்டு நிறுவனங்களைப் பொறுத்தவரையில் கணிச மான அளவு அமைச்சர்கள் கேள்விகளுக்குப் பதில் சொல்ல வேண் டியவர்களாக இருக்கிறார்கள்.

அமைச்சருக்குப் பொறுப்பில்லாதவைகளைப்பற்றிக் கேள்வி கள் கேட்டால் இவர் பதில் கூற மறுக்கலாம் அல்லது வாரியங் களிடமிருந்து தேவையான தகவலைப் பெற்றுச் சபைக்குப் பதில்

[2] Action Society Trust, 'The Men on the Boards', 1951, pp. 7, 11—13.

